அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



“एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा”

श्री जगद्गुरुग्रन्थमाला

(२७, २८, २९, ३०)

# ॥ विवेकचूडामणिः ॥



ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

(27, 28, 29, 30)

# விவேகசூடாமணி

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம்.

1975

தபால்செலவு தனி] [விலை ரூ. 16/-


விஷயானுக்ரமணிகை



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरायतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# முகவுரை

ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு மஹாஸன்னிதானத்தின் அனுக்ரஹத்தின்கீழ் வெளிவரும் 'ஸ்ரீ ஜகத்குரு க்ரந்த மாலா' வின் 27 முதல் 30 பாகங்களாகிய புத்தகம் இது.

ஸ்ரீ ஆதிசங்கரபகவத்பாதாளின் பிரகரண கிரந்தங்களில் மிகவும் மேன்மை வாய்ந்தது இதில் அடங்கிய 'விவேகசூடாமணி' என்ற நூல். ஸூத்ரபாஷ்யம் உபநிஷத்பாஷ்யம், கீதாபாஷ்யம் இவைகளில் அடங்கி உள்ள விசேஷ வேதாந்த தத்துவங்களை சுருக்கமாகவும் தெளிவாகவும் ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இந்நூலில் எடுத்துக் காட்டியிருக்கிறார். இதைப் படித்தால் ஸ்ரீ சங்கரர் சொல்லியுள்ள அத்துவைத வேதாந்தத்தின் எல்லா அம்சங்களும் மனதில் தெளிவாகத் தோன்றும். இதிலுள்ள 582 சுலோகங்களில் எல்லா விவரங்களையும் (தத்துவங்கள், உதாஹரணங்கள்) காணலாம்.

இதைப் படிப்பதற்கு முன் வேதாந்தசாஸ்திரத்தின் அடிப்படைத் தத்துவங்களைப் புத்தக மூலமாகவோ அல்லது உபந்யாஸங்கள் மூலமாகவோ கேட்டு அறிந்திருந்தால் இந்தப் புத்தகத்திலுள்ள விஷயங்களை நன்கு அறிந்துகொள்ள முடியும்.

முதல் சுலோகத்தில் மனித ஜன்மாவின் விசேஷத்தையும், மனிதன் ஆத்மக்ஞானியாகக்கூடிய வழியையும் அவசியத்தையும் சுருங்கச்சொல்லிப் பின்னிட்டு அதன் பூர்ண விவரணத்தைக் கிரந்தத்தில் சொல்லியிருக்கிறார்.

நம்முடைய சாஸ்திரங்கள் எல்லாம் குருசிஷ்ய ஸம்வாதம், கேள்வி-பதில் என்ற முறையில் அமைந்

திருக்கின்றன. இதை உபநிஷத் கதைகளில் காண்கிறோம். அதேபோல் ஸ்ரீராமாயணம் ஸ்ரீமகாபாரதம் முதலிய இதிஹாஸங்களும் ஸ்ரீபகவத்கீதையும் உள்ளன.

ஸ்ரீமத் பாகவதம் முதலிய புராணங்களும் இதே ரீதியைக் கடைப்பிடிக்கின்றன. இது தான் உபதேசங்களின் வழி. அதே வழியில் விவேகசூடாமணியும் அமைக்கப்பட்டிருக்கிறது.

வேதாந்தம் அறிய விரும்பும் ஒவ்வொருவருக்கும் ஏற்படக்கூடிய சந்தேகங்களை இதில் குறிப்பாய் சொல்லி அதற்கு பதில்களையும் கொடுத்திருக்கிறார் பகவத்பாதாள்.

இதில் 51வது சுலோகத்தில் கீழ்கண்ட 7 கேள்விகளை குறிக்கிறார்:

1. பந்தம் என்பது எது ?
2. இந்த பந்தம் எப்படி வந்திருக்கிறது ?
3. இதன் இருப்பு எவ்விதம் ?
4. அதிலிருந்து விடுபடுவது எப்படி ?
5. ஆத்மா அல்லாதது எது ?
6. மேலான ஆத்மா என்பது எது ?
7. ஆத்மா, ஆத்மாவல்லாதது என்று இரண்டையும் பிரித்து அறிவது எப்படி ?

ஆத்மாவல்லாதது எது என்ற 5வது கேள்விக்கு முதலில் 71 முதல் 123 வரை சுலோகங்களில் பதில் அளிக்கிறார். ஸ்தூல சரீரம், சூக்ஷ்மசரீரம், காரண சரீரம், ஜகத்காரணமான அவ்யக்தம் ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் சப்தாதி விஷயங்கள் அவைகளை



கிரகிக்கும் இந்திரியங்கள், ஸுகதுக்க அனுபவங்கள் அந்த:கரணம், பஞ்சமகாபூதங்கள் ஆகிய ஜகத்திலுள்ள எல்லாவிதமான பதார்த்தங்களையும் எல்லாமே அனாத்மாவானவை என்று விளக்குகிறார்.

அடுத்தபடி மேலான ஆத்மா என்பது என்ன என்கிற 6-வது கேள்விக்கு சுலோகம் 126 முதல் 138 முடிய பதிலளித்திருக்கிறார். பரமாத்மா நம் சரீரத்தில் ஜீவாத்ம ரூபமாய் இருக்கிறார். அது விகாரமற்றது, சுத்தஞான ரூபமானது, மனஸ் அலையாமல் சுத்தமாக இருந்தால் புத்தி தெளிவடைந்து ஆத்மாவை அறியமுடியும் என்று கூறுகிறார்.

பந்தம் என்பது என்ன என்ற முதல் கேள்விக்கு 139-வது சுலோகத்தில் பதில் சொல்லுகிறார். பந்தம் அக்ஞானத்தால் ஏற்பட்டது. அது ஞானத்தால்தான் நீங்கும். பந்தம் என்பதும் பொய். ஆவரணமும் விக்ஷேபமும்தான் இந்தப் பொய்த் தோற்றத்திற்குக் காரணம் என்கிறார்.

இந்தப் பந்தம் எப்படி ஏற்பட்டது என்ற 2-வது கேள்விக்கு 141 முதல் 146 வரையுள்ள சுலோகங்களில் விளக்குகிறார். பதார்த்தத்தின் வாஸ்தவ ரூபம் மறைபட்டு வேறுவிதமான நினைப்பு வருவதால்தான் துன்பங்கள் ஏற்படுகிறது. காம, க்ரோத, லோபாதி தோஷங்கள்தான் இதற்குக் காரணம். அதுவே இவனை ஸம்ஸாரக் கடலில் மூழ்கி உழலும்படிச் செய்கிறது. உண்மையை மறைப்பதல்லாமல் பல துன்பங்களையும் உண்டுபண்ணுகிறது என்று விளக்குகிறார்.

பின்பு மேலேகண்ட மூன்றாவது கேள்வியான பந்தத்தின் இருப்பு எவ்விதம் என்பதை 147–148 சுலோகங்களில் விளக்குகிறார். தேஹத்தை ஆத்மா

வாக எண்ணுவது ராகத்வேஷங்கள். அதன்மூலம் வரும் புண்யபாப கர்மாக்கள், சரீர அபிமானம் இவைகளை உண்டுபண்ணி பந்தம் நிலைத்து நிற்கிறது என்கிறார்.

மேலே சொன்ன 4 வது கேள்வியாகிய பந்தத்தி லிருந்து விடுபடுவது எப்படி என்பதற்கு 149 முதல் 155 வரையுள்ள சுலோகங்களில் சொல்லுகிறார் இதற்கு வழி ஆத்மஸாக்ஷாத்காரம்தான் என்று சொல்லி அந்த ஆத்மக்ஞானம் ஏற்படுவதற்குள்ள படிகளை 153 முதல் 211 வரை வரிசையாகச் சொல் கிறார். ஆத்ம அனாத்ம விவேசன க்ஞானம் இதற்குத் தேவை என்கிறார். அதன்பின் அன்னமயம், ப்ராண மயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயமு மான ஐந்து கோசங்களையும் தனித்தனியே சொல்லி அவைகள் எப்படி ஆத்மாவாகாது என்பதை விளக்கு கிறார். இந்த ஆத்மா ஸ்வயம்ப்ரகாசமானவர் என்பதை 153, 212 சுலோகங்களில் காட்டுகிறார்.

எதுவும் ஆத்மாவல்லவென்றால், வித்வானால் அறியக்கூடிய வஸ்துதான் என்ன இருக்கிறது என்ற சிஷ்யனுடைய கேள்வியை 214-வது சுலோகத்தில் சொல்லி அதற்கு பதிலையும் கூறுகிறார். 215 முதல் 227 வரை உள்ளே இருக்கும் ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்றுதான் என்றும், 228 முதல் 238 வரை ஜகத்தும் ப்ரஹ்மத்தைத்தவிர வேறில்லை என்றும் விளக்கிவிட்டு, 239 முதல் 242 முடிய உள்ள சுலோகங்களில் அந்த ப்ரஹ்மத்தை வர்ணிக்கிறார்.

பின்பு, இதுவரை சொன்ன விஷயம் உபநிஷத்துக் களில் சொல்லப்பட்டதுதான் என்று பல நிருபணங்களை எடுத்துரைக்கிறார். பல மகாவாக்கியங்களையும் சொல்லி விளக்குகிறார். மகாவாக்கியத்தின் வாஸ்தவமான



பொருளை எப்படி அநுஸந்தானம் செய்வது என்றும் சொல்லுகிறார் (255—264).

இப்படி அறிந்த பின்பும் அநாதிகாலமாக வந்த சரீராதிகளின் 'நான்' என்ற எண்ணம் இருப்பதால் அதைத் தீர்க்க பிரயத்னம் செய்யவேண்டும். இதுதான் வாஸனா பந்தத்தைக் குறைப்பது என்கிறார் (268-287). இதற்கும் காரணம் சரீர அபிமானம்தான். ஆகவே அந்த அபிமானத்தைவிடச் சொல்கிறார். ஸ்தூலசரீரம், ஸூக்ஷ்ம சரீரம் இரண்டிலும் உள்ள நான் என்கிற எண்ணத்தை ஒழிக்கவேண்டும், (291-321) இதற்கு ஐகாக்ர்யம் அவசியம் என்கிறார் (310)

இந்த ஆத்ம நிலை நழுவாமல் இருக்கவேண்டும் (322—341). ஸமாதி மூலம் அந்த நிஷ்டையை ஸம்பாதிக்கவேண்டும் என்று 342 சுலோகத்தில் சொல்லி, நிர்விகல்ப ஸமாதியை 343 முதல் 368 வரை சுலோகங்களில் விஸ்தாரமாகச் சொல்லியிருக்கிறார்.

இந்த நிர்விகல்ப ஸமாதிக்கு ஸாதனங்களான ஏகாந்த வாஸம், பேச்சை அடக்குதல், நிராசை, வைராக்யம், முதலியவைகளின் அவசியத்தை 369 முதல் 379 வரை சுலோகங்களில் குறிப்பிடுகிறார். அப்படிப்பட்ட ஆத்மநிஷ்டை ஏற்பட்டால் பிரும்மானந்த அனுபவம் ஏற்படும் என்று 380வது சுலோகத்தில் சொல்லுகிறார். இது சாசுவதமாக இருப்பதற்கு மாயையை விலக்கவேண்டும் என்று சொல்லி இரண்டற்ற நிலையை 399 முதல் 406 வரை குறிப்பிடுகிறார். இப்படிச் சொன்னதற்கு யுக்தி மாத்திரமல்ல வேதமே பிரமாணம் என்று 407வது சுலோகம் முதல் கூறுகிறார். எல்லோரும் இதை அப்யஸிக்கலாம் என்று 413வது சுலோகத்தில் உபதேசிக்கிறார்.

ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்ட பின்னும் கர்ம சரீரம் இருக்கும். ஆனால் அது ஞானியை பாதிக்காது. இது எப்படி என்பதை 415 முதல் 429 வரை சொல்லி ஜீவன்முக்தரின் லக்ஷணம் அவருடைய அனுபவம் முதலியவைகளை 430 முதல் 443 முடிய விஸ்தரிக்கிறார். ஆத்மஞானிக்கு சரீர அபிமானமில்லாததால் அந்த சரீரத்தால் செய்யப்படும் காரியங்களின் பலனான புண்ணிய பாபங்கள் அவனை பாதிக்காது. ஸஞ்சிதம், ஆகாமி முதலிய கர்மாக்கள் இவனை கட்டுப்படுத்தாது. ஸுகம், துக்கம் என்பதே இவனுக்கு கிடையாது சரீரம் ஆரம்பிக்கப்பட்ட பிராரப்தம் இருக்கும்வரை சரீரம் இருக்கும். ஆனால் அதனாலும் ஞானி பாதிக்கப் படமாட்டார். (456-465)

பின்பு, 466 முதல் ஏழு சுலோகங்களில் வேதத்தில் சொல்லப்பட்ட பரதத்துவத்தை விளக்குகிறார். இவ்வழியைத்தான் நமக்கு முன்பு எல்லா க்ஞானிகளும் கையாண்டிருக்கிறார்கள். அதையே உனக்கும் நான் சொல்லுகிறேன் என்று 45-வது சுலோகத்தில் சொன்னதை சிஷ்யனுக்கு இப்போது ஞாபகப்படுத்தி 'அதேபோல் நீயும் அனுஸரித்துவந்தால் மோக்ஷம் அடையலாம்' என்று 474-வது சுலோகத்தில் ஆசீர்வதிக்கிறார்.

இப்படி உபதேசம் பெற்ற சிஷ்யன் எவ்விதம் ஆத்மக்ஞானியானான், அவனுடைய அனுபவம் என்ன என்பதை 481 முதல் உள்ள சுலோகங்களில் காட்டு கிறார். பின்னும், அந்த சிஷ்யனுக்கு விசேஷ உபதேசங்களை 522 முதல் 555 வரை சொல்கிறார். விதேஹமுக்தி நிலையை 556 முதல் மேலே உள்ள சுலோகங்களில் நன்கு விளக்குகிறார். இதைக் கேட்ட சிஷ்யன் முக்தனாக ஆனான் என்று முடிக்கிறார். முதல் சுலோகத்தில் கடைசி பாதத்தில் சொன்ன



'முக்தி' என்றதை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் எடுத்துக்காட்டியிருக்கிறார்.

இந்தப் பேருபகாரம் செய்த ஸ்ரீபகவத்பாதருக்கு நாம் என்ன கைம்மாறு செய்யமுடியும்? இந்தக் கிரந்தத்தை ஊன்றிப் படித்து அதில் கண்ட உபதேசங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக நம் அனுபவத்திற்குக் கொண்டுவருவதுதான் நம் கிருதக்ஞதையைத் தெரிவித்ததாக ஆகும் என்று எண்ணுகிறேன்.

இந்த முக்யமான கிரந்தத்திற்கு சிருங்கேரியில் 34-வது பீடாதிபதிகளாக அமைந்து அருள்பாலித்த ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகள் மிகவும் எளிய முறையில் ஸம்ஸ்கிருதத்தில் வியாக்யானம் எழுதி உள்ளார்கள். அதைப் படித்தால் பல சாஸ்திரங்களைப் படித்த ஞானம் ஏற்படும். அதை ஆதாரமாகக் கொண்டு ஸித்திங்கதாளான மஹான் ஸ்ரீ ஞானானந்த பாரதீ ஸ்வாமிகள் மிகவும் தெளிவாகவும், எளிய நடையிலும், பல மேற்கோள்களுடனும் நமக்குத் தமிழில் அனுவாதம் எழுதிக்கொடுத்து இப்புத்தகத்தை வெளிவரும்படிச் செய்ததற்கு நாம் அவரை நம் ஆயுள்வரை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு அவருக்கு வணக்கங்களைச் செலுத்தவேண்டும், 26-வது பாகம் வெளிவந்து சிலகாலமாகிவிட்டது. இந்தக் கிரந்தத்தை ஒரே இதழாகப் பிரசுரிக்க எண்ணியதால் தாமதம் ஏற்பட்டதற்கு சந்தாதாரர்களின் மன்னிப்பை வேண்டிக்கொள்கிறேன். இப்புத்தகம் வெளிவருவதற்கு எல்லா வழிகளிலும் உதவிபுரிந்த என் ஆப்த நண்பர் சென்னை, குருபக்தசிரோமணி, தர்மாத்மா, ஸ்ரீ வைத்ய ஸுப்ரமண்ய அய்யருக்கு என் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

இப்புத்தகத்தை அழகிய முறையில் அச்சிட்டுத் தந்த ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணீ விலாஸ் அச்சகத்தாருக்கும் புத்தகத்தை அச்சிடும்போது பரிசீலித்ததுடன் இதை நன்கு உபயோகிக்க உதவியாக இருக்கும் அட்டவணை, சுலோகானுகிரமணிகை இவைகளை எழுதிக் கொடுத்த வியாகரண வேதாந்த வித்வான் ஸ்ரீரங்கம் ஸ்ரீசங்கர குருகுலம் ஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகளுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இதற்கெல்லாம் மூலகாரணம் சிருங்கேரி ஸ்ரீஜகத்குரு அபிநவவித்யாதீர்த்த மகாஸந்நிதானத்தின் அனுக்கிரகம்தான். அவருடைய திவ்ய பாதாரவிந்தங்களில் இம்மலரை என் சாஷ்டாங்க பிரணாமங்களுடன் சமர்ப்பிக்கிறேன்.

ஸ்ரீரங்கம்,
12—10—75.

சிருங்கேரி தாஸன்,
K. V. சுப்பரத்னம்,
பொதுக்காரியதரிசி,
அகிலபாரத சங்கரஸேவா ஸமிதி.



ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு
ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகள்

|| श्रीः ||

|| श्रीगुरुभ्यो नमः ||

# || विवेकचूडामणिः ||

# விவேக சூடாமணி

## முன்னுரை

[ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசார்யாரவர்கள் இயற்றியுள்ள பிரகரணங்களுக்குள் விவேக சூடாமணி என்பது மிகவும் பிரஸித்தி பெற்றது. உபநிஷத்துக்களில் சிதறிக்கிடக்கும் உபதேச ரத்தினங்களை வெகு அழகாக இசைத்து இந்த சூடாமணி என்ற அத்புதமான ஆபரணம் செய்யப்பட்டிருக்கிறது. வேதாந்த சாஸ்திரத்தில் பரிசயம் செய்யவாரம்பிக்கும் வித்யார்த்திக்கும் இது மிகவும் முக்கியமாய் உபயோகப்படக் கூடியது; ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்த வித்வானுக்கும் பஹிர்முகமாயிருக்கும் ஸமயத்தில் அனுஸந்தானத்திற்கு மிகவும் உபயோகமுள்ளது. எவராலும் சிரஸா வஹிக்க வேண்டிய பெருமை பொருந்தியதினுலேயே இதற்கு சூடாமணி என்ற பெயர் மிகவும் பொருத்தமாயிருக்கிறது. இதற்கு ஜீவன் முக்தராய் விளங்கி வந்த ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரபாரதீ ஸ்வாமிகளவர்கள் மிகக் கருணையுடன் ஸாமான்ய வ்யுத்பத்தியுள்ளவர்களுக்குக்கூட வேதாந்த தத்வங்கள் மிகத் தெளிவாய் மனஸில் பதியும்படியான ரீதியில் [1] வியாக்யானம் செய்திருப்பது நம்முடைய விசேஷ பாக்கியமேயாகும். அவ் வியாக்யானத்தை கவனமாக வாசிப்போருக்கு மற்ற பிரகரணங்களையோ, பிரஸ்தானத்திரய பாஷ்யாதி வேதாந்த கிரந்தங்களையோ, வாசித்தாகவேண்டுமென்ற அவசியமே ஏற்படாது. கிருதார்த்தர்களாவதற்கு இது ஒன்றே போதுமென்று உணருவார்கள். இந்த கிரந்தத்திலுள்ள 581 சுலோகங்களில் 515-வது

---

1. இந்த விவேக சூடாமணி பாஷ்யம் சிருங்கேரி ஸ்ரீ மடத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது.

சுலோகம் பாதியில் வியாக்யானம் நின்றுவிடுகிறது. அத்வைத பிரஹ்மானந்தானுபவத்தை வர்ணித்து வருகையில் அதில் தானும் லயித்து மேல் எழுதவேண்டாமென்று ஸ்ரீமத் ஆசார்யார் நிறுத்திவிட்டாரோ என்று தோன்றுகிறது. அவர் வியாக்யானம் செய்யாத பாக்கியுள்ள 66 சுலோகங்களுக்கு வேறு யாரேனும் வியாக்யானம் எழுதி பூர்த்தி செய்வது உசிதமில்லை என்று அப்படியே விடப்பட்டிருக்கிறது. இந்த வியாக்யானத்தையே முக்கிய ஆதாரமாக வைத்துக்கொண்டு விவேக சூடாமணி என்ற கிரந்தத்தின் தாத்பர்யம் இங்கு தமிழில் காட்டப்படுகிறது.]

## 1. குரு வணக்கம்

(அ) கிரந்தத்தின் ஆரம்பத்தில் பெரியோர்களின் ஸம்பிரதாயப்படி குரு வணக்கம் செய்யும்போது ஸகுணமாயிருக்கும் ஈசுவரனுக்கும், நிர்குணமாயிருக்கும் பரபிரஹ்மத்திற்கும் குரு வேறுபட்டவரல்லர் என்பதையும், அவரை வணங்கி அவருடைய பிரஸாதத்தினால் உபநிஷத் பிரதிபாத்யமான ஆத்ம தத்வம் விளங்கி பரம புருஷார்த்தமான மோக்ஷம் கிட்டும் என்பதையும் முதல் சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் துலக்குகிறார் :—

**सर्ववेदान्तसिद्धान्तगोचरं तमगोचरम् ।**
**गोविन्दं परमानन्दं सद्गुरुं प्रणतोऽस्म्यहम् ॥ १ ॥**

**सर्व-वेदान्त-सिद्धान्त गोचरं** – எல்லா வேதங்களின் கடைசி பாகங்களாகிய உபநிஷத்துக்களில்-தீர்மானிக்கப்பட்டிருக்கிற ஸித்தாந்தத்தினாலேயே அறியக்கூடியவராயும், **अगोचरं**–(மற்ற எந்த பிரமாணத்தினாலும்) அறிய முடியாதவராயும், **परम-आनन्दं**–மேலான ஆனந்த ஸ்வரூபியாயும், **सद्गुरुं** – ஸத்பதார்த்தமாகிய பிரஹ்மமாயும் குருவாகவும் இருக்கும், **तं**-அந்த பிரஸித்தரான, **गोविन्दं**–வேதவாக்கியத்தினாலேயே அடையத்தக்க பரமாத்மாவை (கோவிந்த பகவத்பாதாசார்யாரை), **अहं**–நான், **प्रणतोऽस्मि**-நமஸ்காரம் செய்கிறேன். (1)



## 2. மனிதப்பிறவி அரிது

(அ) இந்த கிரந்தத்தில் பிரதிபாதிக்கப்போகும் எல்லா விஷயங்களையும் ஸங்கிரஹித்து அடுத்த சுலோகத்தில் காட்டுகிறார் :—

**जन्तूनां नरजन्म दुर्लभमतः पुंस्त्वं ततो विप्रता**
**तस्माद्वैदिकधर्ममार्गपरता विद्वत्त्वमस्मात्परम् ।**
**आत्मानात्मविवेचनं स्वनुभवो ब्रह्मात्मना संस्थितिः**
**मुक्तिर्नो शतकोटिजन्मसु कृतैः पुण्यैर्विना लभ्यते ॥ २ ॥**

**जन्तूनां** – பிறவியுள்ளவர்களுக்கு, **नर-जन्म** – மனிதப்பிறவி, **दुर्लभं**–சிரமப்பட்டு அடையத்தக்கது. **अतः**–அதையும் விட (அதில்), **पुंस्त्वं**–புருஷனாக இருக்கும் தன்மை, **ततः** – அதையும் விட (அதில்) **विप्रता**–பிராஹ்மணனாக இருக்கும் தன்மை (சிரமப்பட்டு அடையத்தக்கது). **तस्मात्**–ஆகையினால் (மனிதனாய், புருஷனாய், பிராஹ்மணனாய் பிறவி கிடைப்பது துர்லபமாயிருப்பதால்), **वैदिक धर्म-मार्ग-परता** – வேதத்தினால் விதிக்கப்பட்டிருக்கிற (வேதத்தினால் மட்டுமே அறியக்கூடிய) ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி தர்ம-வழியில்-ஈடுபடும் தன்மை (அவசியம்), **विद्वत्त्वं** – வித்வானாயிருக்கும் தன்மையும் (அவசியம்), **अस्मात्**-வித்வானாயிருக்கும் தன்மையை ஸம்பாதித்ததற்கு, **परं**–பிறகு, **आत्म अनात्म-विवेचनं**–ஆத்மாவையும் ஆத்மாவல்லாததையும் பிரித்தறிவது (வேண்டும்). **सु-अनुभवः**–நன்று ஸாக்ஷாத்கார அனுபவம் (ஏற்படவேண்டும்). **ब्रह्मात्मना** – பிரஹ்ம ஸ்வரூபமாகவே, **संस्थितिः** நன்கு நிலைத்து விடுவதாகிய, **मुक्तिः** – மோக்ஷநிலை, **शत-कोटि – जन्मसु** – நூறு-கோடிக் கணக்கான-ஜன்மாக்களில், **कृतैः**–செய்யப்பட்ட, **पुण्यैः विना** – புண்ணியங்களன்னியில், **नो लभ्यते** – கிடைக்கமாட்டாது.

ஒரு ஜீவனுக்கு கர்மானுஸாரமாகப் பல ஜன்மாக்கள் ஏற்படக்கூடியதாயிருப்பதாலும், பூர்வ ஜன்ம புண்ணியம் நன்கு இருந்தால்தான் மனுஷ்ய ஜன்மாவோ, புருஷ ஜன்மாவோ, பிராஹ்மண ஜன்மாவோ, கிடைக்குமென்று ஏற்படுவதாலும் எவ்வித ஜன்மாவும் ஜீவனின் ஸ்வரூபத்தில் சேர்ந்ததில்லை என்பதும், ஜீவனின் ஸ்வரூபம் ஜன்மமற்ற தன்மை என்பதும், இந்த சுலோகத்திலிருந்தே தெளிவாவதினால் அவ்வித ஜன்மமற்ற தன்மையை உணர்வதற்கு ஜன்மமுள்ளதாகிய சரீராதிகளிலிருந்து தன்னைப் பிரித்துப் பார்த்து அந்நிலையில் நின்றுவிட்டால் ஜீவனே பிரஹ்ம ஸ்வரூபமாய் விளங்குகிறான் என்ற உபநிஷத் ஸித்தாந்தத்தை இந்த சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் விளக்கியிருக்கிறார். அந்நிலையையடைவதற்கு ஸாதனங்களாகிய, சித்த சுத்தியை உண்டுபண்ணக்கூடிய நிஷ்காம கர்மானுஷ்டானத்தையும் நிவிருத்தி தர்மமான ஸந்யாஸத்தையும் “வைதிக தர்ம மார்க்கபரதா” என்ற சப்தத்தினாலும், ஸத்குருவை யடைந்து அவர் மூலம் வேதாந்த ஸித்தாந்தத்தை நன்கு கேட்டுத் தெரிந்துகொள்வதாகிய சிரவணத்தை “வித்வத்துவம்” என்ற பதத்தினாலும், கேட்டறிந்த விஷயத்தில் ஏற்படக்கூடிய ஸந்தேகங்களைப் போக்கித் தீர்மானம் செய்வதாகிய மனனத்தை “விவேசனம்” என்ற வார்த்தையினாலும், அவ்விதம் ஸந்தேஹமறத் தெரிந்திருப்பதை நேரில் ஸாக்ஷாத்காரம் செய்வதாகிய நிதித்யாஸனத்தை “ஸ்வனுபவம்” என்ற வார்த்தையினாலும் காட்டிவிட்டு கடைசியாய் ஏற்படக்கூடிய பிரஹ்ம நிஷ்டையே மோக்ஷ நிலையென்று சொல்கிறார். இங்கு ‘ஸ்வநுபவ:’ என்பதுவரை ‘சுபேச்சா, விசாரணா, தநுமாநஸா, ஸத்வாபத்தி’ என்ற நான்கு ஞான பூமிகைகளும் ‘ப்ரஹ்மாத்மநா ஸம்ஸ்திதி:’ என்பதால் அஸம்ஸக்தி, பதார்த்தாபாவனா, துர்யகா’ என்ற மூன்று பூமிகைகளும் காட்டப்பட்டுள்ளன. இதிலிருந்து ஸாமான்யமாய் உபாஸனையால் ஏற்படக்கூடிய ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம் என்று சொல்லப்படும் “முக்தி” கள் வாஸ்தவமாக பரம புருஷார்த்தமாகிய மோக்ஷம் ஆகாது என்பதையும் துலக்குகிறார். இந்த சுலோகத்தில் வைதிக தர்மங்களை மார்க்கமாக (வழியாக) கூறியதால் அவை முக்திக்கு பரம்பராஸாதனமே தவிர நேர் ஸாதனமல்ல என்பது தெரிகிறது. (2)



(அ) மனுஷ்ய ஜன்மாவை யடைந்து அதை வீண் போக்காமல் நன்கு உபயோகித்து ஆத்மஞானத்தை ஸம்பாதித்து முக்தியடையப் பிரயத்தினம் செய்யவேண்டியதே அவன் கடமை என்பதை மேலால் வற்புறுத்துகிறார்:—

दुर्लभं त्रयमेवैतत् दैवानुग्रहहेतुकम् ।
मनुष्यत्वं मुमुक्षुत्वं महापुरुषसंश्रयः ॥ ३ ॥

**मनुष्यत्वं**–மனிதத்தன்மை, **मुमुक्षुत्वं**–மோக்ஷத்தில் தீவ்ர இச்சையுள்ளவனாயிருத்தல், **महापुरुषसंश्रयः**–பெரியோர்களை ஆசிரயிப்பது ஆகிய, **एतत्**–இந்த, **त्रयं**–மூன்றும், **दुर्लभं एव**–வெகு சிரமப்பட்டுத்தான் கிடைக்கக்கூடியது, **दैवानुग्रह–हेतुकं**–தைவத்தின் (கடவுள் அல்லது பூர்வ புண்ணியம்) அனுக்ரஹமென்ற காரணம் இருந்தால் தான் கிடைக்கும். (3)

लब्ध्वा कथंचित् नरजन्म दुर्लभं
तत्रापि पुंस्त्वं श्रुतिपारदर्शनम् ।
यः स्वात्ममुक्त्यै न यतेत मूढधीः
स आत्महा स्वं विनिहन्त्यसद्ग्रहात् ॥ ४ ॥

**कथंचित्**–எப்படியோ சிரமப்பட்டு, **दुर्लभं**–கிடைப்பதற்கரியதான, **नर-जन्म**–மனிதப்பிறவியையும், **तत्रापि**–அதிலும், **पुंस्त्वं**–புருஷத்தன்மையையும், **श्रुति-पार दर्शनं**–வேதங்களின் கரையைக் காண்பதையும், **लब्ध्वा**–அடைந்து விட்டு, **यः**–எவனொருவன், **मूढधीः**–மோஹத்தை யடைந்த புத்தியுள்ளவனாயிருந்துகொண்டு, **स्व-आत्म-मुक्त्यै**–தன்னுடைய ஆத்மாவின் விடுதலைக்காக, **न यतेत**–பிரயத்தினம் செய்வதில்லையோ, **सः**–அவன், **आत्महा**–ஆத்ம ஹத்தி செய்தவனாக ஆகிறான். **स्वं**–தன்னை, **असद्-ग्रहात्**–அஸத்தாக (வாஸ்தவத் தன்மையை விட்டு வேறுவிதமாக) எண்ணிக்கொண்டிருப்பதால், **विनिहन्ति**–நன்கு கொன்றேவிடுகிறான். (4)

इतः कोऽन्वस्ति मूढात्मा यस्तु स्वार्थे प्रमाद्यति ।
दुर्लभं मानुषं देहं प्राप्य तत्रापि पौरुषम् ॥ ५ ॥

**दुर्लभं** – அடைவதற்கரிய, **मानुषं देहं** – மனித சரீரத்தையும், **तत्र अपि**–அதிலும், **पौरुषं**–புருஷத்தன்மையையும், **प्राप्य**–அடைந்துவிட்டு, **यः तु**–எவன், **स्वार्थे**–தன் விஷயத்திலேயே, **प्रमाद्यति**–தவறுகிறனே, **इतः**–இவனை விட, **मूढात्मा**–முட்டாளாக, **कः**–யாரேனும், **अस्ति नु**–இருக்க முடியுமா? (5)

## 3. ஞானமே முக்திக்கு ஸாதனம்

(அ) சிரவண மனனாதி ஸாதனங்களினால்தான் முக்தியடையவேண்டுமா? வைதிக கர்மானுஷ்டானத்தினாலாவது தேவதைகளை உபாஸிப்பதினாலாவது முக்தியடைய முடியாதா? என்று கேட்டால், தன் ஆத்மஸ்வரூபம் தெரியாமலிருப்பதே பந்தத்திற்குக் காரணமாயிருப்பதினால், அத்தெரியாத் தன்மையைப் போக்கடித்து ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்து முக்தி பெறுவதற்கு ஞானம் ஒன்றுதான் ஸாதனமாகும், வேறு எதுவும் ஸாதனமாகாது என்பதைச் சொல்லுகிறார் :—

पठन्तु शास्त्राणि यजन्तु देवान्
कुर्वन्तु कर्माणि भजन्तु देवताः ।
आत्मैक्यबोधेन विना विमुक्तिः
न सिध्यति ब्रह्मशतान्तरेऽपि ॥ ६ ॥

**शास्त्राणि**–சாஸ்திரங்களை, **पठन्तु**–படிக்கட்டும், **देवान्**–தேவர்களை யுத்தேசித்து, **यजन्तु**–யாகங்கள் செய்யட்டும், **कर्माणि**–கர்மாக்களை, **कुर्वन्तु**–அனுஷ்டிக்கட்டும், **देवताः**–தேவதைகளை, **भजन्तु**–உபாஸிக்கட்டும். (என்ன செய்தாலும்), **आत्मैक्य-बोधेन विना**–ஆத்மா ஒருவரேதான் என்ற அறிவைத் தவிர்த்து, **विमुक्तिः**–மோக்ஷமானது, **ब्रह्म-शत-अन्तरे अपि**–பிரஹ்ம கல்பங்கள் நூறு சென்றாலும் கூட, **न सिध्यति**– ஏற்படமாட்டாது. (6)



(அ) மோக்ஷநிலை என்பது ஆத்மாவின் ஸ்வபாவ நிலையாயிருப்பதால் அது எவ்வித கர்மாவினாலேயும் உண்டுபண்ணக் கூடியதில்லை, என்பதை வேதமே சொல்கிற தென்பதைக் காட்டுகிறார் :—

अमृतत्वस्य नाशाऽस्ति वित्तेनेत्येव हि श्रुतिः ।
ब्रवीति कर्मणो मुक्तेः अहेतुत्वं स्फुटं यतः ॥ ७ ॥

**वित्तेन**–வித்தத்தினால் (வித்த ஸாத்யமான கர்மாவினால்), **अमृतत्वस्य**–மரணமில்லாத் தன்மையை அடைவதற்கு, **न आशा अस्ति**–ஆசையே வேண்டாம், **इति एव**–என்றே, **श्रुतिः**–வேதமானது, **कर्मणः**–கர்மாவிற்கு, **मुक्तेः**–முக்தியின், **अहेतुत्वं**–காரணமாயிருக்கும் தன்மையில்லையென்று, **स्फुटं**–தெளிவாக, **यतः**–எதனால், **ब्रवीति हि**–சொல்கிறதோ. (ஆகையால் முக்திக்கு ஞானம் தவிர வேறு ஸாதனம் கிடையாது)

யாஜ்ஞவல்க்ய மஹர்ஷி ஸன்னியாஸம் வாங்கிக் கொள்ள நினைத்து தன் சொத்துக்களை தன் இரண்டு பார்யைகளாகிய மைத்ரேயிக்கும் காத்யாயனிக்கும் பிரித்துக்கொடுப்பதாகச் சொன்னபோது, மைத்ரேயி அந்த சொத்துஇருந்தால் மரணமற்றிருக்கும் தன்மை கிடைக்குமாவென்று கேட்க, கிடைக்கவே கிடைக்காது என்று சொல்கிறார். பிருஹதாரண்யக உபநிஷத் II 4 (2) IV-5 (3); சொத்தினால் கிடைக்கக்கூடிய ஐஹிக ஸெளகர்யங்களுக்குமேல் ஏற்படாது என்றும் சொல்கிறார். அவர் சாசுவதமான ஸுகத்தை உத்தேசித்து சொத்துக்களை தியாகம் செய்து ஸன்யாஸத்தில் நோக்கமாயிருந்ததால் மோக்ஷத்திற்கு வித்தம் ஸாதனமில்லையென்பதுடன் இடைஞ்சல் என்பதும் தெரிகிறது. மோக்ஷத்திற்கு ஸாதனம் சிரவண மனனாதி மூலமாய் ஆத்ம ஸாக்ஷாத்காரம் தான் என்பதும் அங்கு காட்டப்பட்டிருக்கிறது. (7)

(அ) விவேகியாயுள்ளவன் நித்யமான ஸுகத்தை யபேக்ஷித்தால் அநித்ய ஸுக ஸாதனமான எப்பதார்த்தத்திலும் ஆசையைத் துறந்து ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்திருக்கும் ஒரு குருவையண்டி அவருடைய அனுக்ரஹத்திற்குப் பாத்திரமாகி அவருடைய உபதேசத்தைக் கேட்டு அவர் காட்டும் வழியில்

பிரவிருத்தித்து ஞானத்தை ஸம்பாதித்தால்தான் மோக்ஷம் உண்டென்பதை சுருக்கமாக அடுத்த சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் காட்டுகிறார் :—

**अतो विमुक्त्यै प्रयतेत विद्वान् संन्यस्तबाह्यार्थसुखस्पृहः सन् ।**
**सन्तं महान्तं समुपेत्य देशिकं तेनोपदिष्टार्थसमाहितात्मा ॥ ८ ॥**

**अतो**-ஆகையினால், **विद्वान्**-விவேகியானவன், **संन्यस्त-बाह्य-अर्थ-सुख-स्पृहः सन्** - வெளியிலுள்ளவிஷயங்களிலிருந்து கிடைக்கக்கூடிய-ஸுகத்தில்-ஆசையை-நன்கு விட்டு விட்டவனாக-இருந்துகொண்டு, **सन्तं**-பிரஹ்ம நிலையை அடைந்தவராயுள்ள, **देशिकं**-உபதேசம் செய்யக்கூடிய குருவாகிய, **महान्तं** - பெரியோரை, **समुपेत्य**-நன்கு (விநயத்துடன் விதிப்படி) நெருங்கி, **तेन**-அவரால், **उपदिष्ट-अर्थ-समाहित आत्मा**-உபதேசம் செய்யப்பட்ட விஷயத்திலேயே - நிலைக்கச்செய்த-மனஸுடன் இருந்து கொண்டு, **विमुक्त्यै** - மோக்ஷத்தின்பொருட்டு, **प्रयतेत**-நன்கு பிரயத்தினம் செய்யவேண்டும்.

இந்த சுலோகத்தில் 'வித்வான்' என்பதால் நித்யா நித்யவஸ்து விவேகமும், 'ஸந்யஸ்த... ஸ்ப்ருஹ:' என்பதால் வைராக்யமும் சமாதி ஸம்பத்தும் 'விமுக்த்யை ப்ரயதேத' என்பதால் முமுக்ஷுத்வமும் குறிப்பிடப் பட்டுள்ளன. (8)

(அ) முன் சுலோகத்தில் காணப்படும் ஒவ்வொரு அம்சத்தையும் எடுத்துக்கொண்டு பின்வரும் ஏழு சுலோகங்களில் விஸ்தரிக்கிறார். முதலில் அவ்விதம் செய்யவேண்டிய பிரயத்தினத்தின் ஸ்வரூபத்தையும் அதனால் அடையக்கூடிய பலனையும் சொல்கிறார்:—

**उद्धरेदात्मनाऽऽत्मानं मग्नं संसारवारिधौ ।**
**योगारूढत्वमासाद्य सम्यग्दर्शननिष्ठया ॥ ९ ॥**

**सम्यग् दर्शन-निष्ठया** - நல்ல-அறிவில் - நிலைத்திருப்பது மூலமாய், **योग आरूढत्वं**-யோகம் (உபாயம்) என்ற



படிகளையெல்லாம் ஏறிவிட்ட தன்மையை, **आसाद्य**-அடைந்து, **संसार-वारिधौ** - ஸம்ஸாரமாகிற பிறவிக் கடலில், **मग्नं**-மூழ்கிக் கிடக்கிற, **आत्मानं**-தன்னை (மனஸுடன் கலந்து ஸுக துக்கங்களையனுபவிக்கும் தன்னை), **आत्मना**-தன்னாலேயே (சாஸ்திராசார்ய உபதேசத்தால் தெளிவடைந்த புத்தியினால்), **उद्धरेत्**-மேல் தூக்கி விடவேண்டும்.

இங்கு **सम्यग्दर्शनं** என்பது முக்திக்கு நேர் ஸாதனமான ஆத்மஞானம். **योगारूढत्वं** என்பது ஞான ஸாதனமான பரவைராக்யம். அநாத்மாவான சரீராதிகளில் ஆத்மாபிமானம் தான் ஸம்ஸாரஸாகரத்தில் மூழ்கியிருப்பது. ஆத்மாவின் உபாதியான அவிவேகியான மனதை விவேகமுள்ள மனதால் அநாத்மாக்களிலிருந்து திருப்பி ஆத்மாபிமுகமாகச் செய்து விட்டால் ஆத்மாவைக் கைதூக்கி விட்டதுபோலாகும். (9)

(அ) இந்த ப்ரயத்னம் கைகூடவேண்டுமானால் வேறு எவ்வித ப்ரயத்னத்தையும் விட்டுவிடவேண்டும் என்பதைக் குறிப்பிடுகிறார் :—

**संन्यस्य सर्वकर्माणि भवबन्धविमुक्तये ।**
**यत्यतां पण्डितैर्धीरैः आत्माभ्यास उपस्थितैः ॥ १० ॥**

**आत्माभ्यासे**-ஆத்ம விஷயமான அப்பியாஸத்தில், **उपस्थितैः**-இறங்கும், **धीरैः**-மனதை ஜயித்த, **पण्डितैः**-பரோக்ஷ ஞானமுள்ளவர்களால், **भवबन्धविमुक्तये**-ஸம்ஸாரமாகிற கட்டிலிருந்து விடுதலையடைவதற்காக (ஞான நிஷ்டையடைவதற்காக), **सर्व कर्माणि** - எல்லா-கர்மாக்களையும், **संन्यस्य**-நன்கு-தள்ளிவிட்டு, **यत्यतां**-பிரயத்னம் செய்யப்படட்டும். (10)

(அ) கர்மா எந்தமட்டில் பிரயோஜனப்படும், ஏன் அது ஞானத்திற்கு ஸாக்ஷாத் ஸாதனமாகாது என்பதை மூன்று சுலோகங்களால் விளக்குகிறார் :—

**चित्तस्य शुद्धये कर्म, न तु वस्तूपलब्धये ।**
**वस्तुसिद्धिर्विचारेण, न किंचित् कर्मकोटिभिः ॥ ११ ॥**

**कर्म**–கர்மா என்பது, **चित्तस्य**–மனதின், **शुद्धये**–சுத்தியின் பொருட்டு (தான்உபயோகம்). **वस्तु-उपलब्धये**–உள்ள வஸ்துவை-அறிவதற்கு, **न तु** பிரயோஜனப்படாது. **वस्तु-सिद्धिः**–வஸ்துவின் அறிவு ஏற்படுவது, **विचारेण**–நன்கு செய்யப்படும் விசாரத்தினுல் (தானேயொழிய (**न किंचित्-कर्म कोटिभिः**–கோடிக்கணக்கான கர்மாக்களைச் செய்தாலும் சிறிதும் ஏற்படாது.

முதலில் பற்றில்லாமல் கர்மாக்களைச் செய்து அதனுல் மனதிலுள்ள தோஷங்களெல்லாம் விலகிப் பரிசுத்தமாய் ஞானமடைவதில் தீவ்ரமான ஆவலுண்டானதும் கர்மாக்களை விட்டுவிட்டு ப்ரஹ்மவிசாரம் செய்யவேண்டும். (11)

**सम्यग्विचारतः सिद्धा रज्जुतत्त्वावधारणा ।**
**भ्रान्त्योदितमहासर्पभवदुःखविनाशिनी ॥ १२ ॥**

**भ्रान्त्या**–ப்ராந்தியினுல், **उदित**–உண்டான, **महासर्प**–பெரிய பாம்பினுல், **भव**–ஏற்படும், **दुःख** துக்கத்தை, **विनाशिनी**–நன்கு போக்கடிக்கக்கூடியதான, **रज्जु**–கயிற்றின், **तत्त्व**–உண்மைத் தன்மையை,, **अवधारणा**–தீர்மானமாய் அறிவதானது,, **सम्यक्**–நன்ருய், **विचारतः**–விசாரம் செய்வதனுல் (தான்), **सिद्धा**–ஏற்படுகிறது.

இதுபோல் ப்ராந்தியால் ஏற்பட்ட பிறவிமரண துக்கத்தைப் போக்கும் ஆத்மதத்வ ஞானம் நன்கு விசாரம் செய்வதால் தான் ஏற்படும். (12)

**अर्थस्य निश्चयो दृष्टो विचारेण हितोक्तितः ।**
**न स्नानेन न दानेन प्राणायामशतेन वा ॥ १३ ॥**

**अर्थस्य**–ஒரு பதார்த்தத்தைப்பற்றின, **निश्चयः**–தீர்மானமான அறிவு, **हित उक्तितः**–(அறிந்து சொல்லும்) ஆப்தனுடைய சொல்லின்பேரில் (செய்யப்படும்), **विचारेण**–விசாரணையினுல் (ஏற்படுவது), **दृष्टः**–பார்க்கப்பட்டிருக்கிறது. **स्नानेन**–ஸ்நானம் செய்வதினுல், **न**–ஏற்படாது.



**दानेन**–தானம் செய்வதினுல், **न**–ஏற்படாது. **प्राणायाम-शतेन वा**–நூறு பிராணுயாமங்கள் செய்தாலும் ஏற்படாது.

ஆப்தர்களான வேதாந்தம், ஆசார்யன் இவர்களின் உபதேசம்மூலம் ஆத்மவிசாரம் செய்பவனுக்குத்தான் ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும். (13)

(அ) அவ்விதம் விசாரம் செய்யவும், அவ்விசாரம் வாஸ்தவமான பிரயோஜனத்தைக் கொடுப்பதற்கும் விசாரம் செய்கிறவனிடம் ஏற்கனவே சில யோக்கியதைகள் இருக்க வேண்டும். அவ்வித யோக்கியதைகள் இல்லாத விஷயத்தில் விசாரமும் சரிவர நடக்காது. அது பலனையும் கொடுக்காது. அவ்வித யோக்கியதையுள்ளவரை ‘ அதிகாரி ’ என்பார்கள். அவருக்கு தேசம், காலம், நிமித்தம் முதலியவை பக்கபலமாய் இருந்து உதவும். தேசம் முதலியவை மாத்திரம் இருந்து யோக்கியதையில்லாத விஷயத்தில் அவை எவ்விதத்திலும் உபயோகப்படக்கூடியதில்லை. ஆகையால் யோக்கியதையை ஸம்பாதிக்கவேண்டியது மிகவும் அவசியமென்பதை ஸ்ரீமத் ஆசார்யார் வற்புறுத்திவிட்டு அந்த யோக்கியதையில் என்ன அம்சங்களெல்லாம் சேர்ந்தது என்பதை எடுத்துச் சொல்கிருர் :—

**अधिकारिणमाशास्ते फलसिद्धिर्विशेषतः ।**
**उपाया देशकालाद्याः सन्त्यस्यां सहकारिणः ॥ १४ ॥**

**फल-सिद्धिः**–பயன் ஏற்படுவதானது, **विशेषतः**–முக்யமாக, **अधिकारिणं**–(யோக்கியதையுள்ள) அதிகாரியை, **आशास्ते**–எதிர்பார்க்கிறது. **अस्यां**–பலன் ஏற்படுவதில், **देश कालाद्याः**–தேசம், காலம் முதலிய, **उपायाः**–உபாயங்கள் **सह-कारिणः**–கூடவிருந்து உதவக்கூடியவைகளாக, **सन्ति**–இருக்கின்றன.

உத்தமமாயும் மிகப்பரிசுத்தமாயுமுள்ள பிரஹ்மலோகத்தில் ஸாக்ஷாத் ப்ரஹ்மாவே குருவாயமைந்து உபதேசித்தும்கூட நிர்மலமான மனஸில்லாத அஸுரராஜனை விரோசனனுக்கு சரியானபடி ஆத்மதத்வஞானம் ஏற்படாததால் தேசகாலங்கள் முக்கிய ஸாதனமில்லையென்று தெரிகிறது. (14)

(அ) ஆரம்பத்திலேயே 3-வது சுலோகத்தில் குறிப்பிட்டிருக்கும் முமுக்ஷுத்வம், மஹாபுருஷ ஸம்சிரயம் இவை இரண்டும் அவசியம் வேண்டுமென்று காட்டுகிறார் :—

अतो विचारः कर्तव्यः जिज्ञासोरात्मवस्तुनः ।
समासाद्य दयासिन्धुं गुरुं ब्रह्मविदुत्तमम् ॥ १५ ॥

**अतः**—ஆகையினால் (வஸ்து ஸ்வரூபம் அறிவதற்கு விசாரமேதான் ஸாதனம் என்றிருப்பதால்), **जिज्ञासोः**—(ஆத்மவிஷயமான) ஞானத்தில் அவாவுள்ளவனுக்கு, **ब्रह्मवित्-उत्तमं**—ப்ரஹ்மத்தையறிந்தவர்களில் சிரேஷ்டராகவும், **दया-सिन्धुं**—கருணைக்கடலாகவும் இருக்கும், **गुरुं**—குருவை, **समासाद्य**—நன்கு அடைந்து, **आत्म-वस्तुनः**—ஆத்ம வஸ்து விஷயமாக, **विचारः**—விசாரம், **कर्तव्यः**—செய்ய வேண்டியது. (15)

## 4. சிஷ்ய லக்ஷணம்

(அ) விசாரம் செய்ய நினைப்பவன் எப்படி இருக்க வேண்டுமென்று கவனிக்கும்போது குரு உபதேசிப்பதை சரிவர கிரஹிப்பதற்கு வேண்டிய அஸ்திவாரமாகிய புத்தி சக்தி, கிரஹிப்பதை சரியானபடி ஆர்த்தம் செய்துகொள்ள அவசியமான வ்யுத்பத்தி, கிரஹித்ததை மறக்காமல் மனஸில் தரிக்கும் சக்தி, அதைப் பலவிதத்தில் ஆலோசித்து திடப்படுத்திக்கொள்ளக்கூடிய சக்தி முதலியவைகளும் இருக்க வேண்டுமென்று சொல்கிறார் :—

मेधावी पुरुषो विद्वान् ऊहापोहविचक्षणः ।
अधिकार्यात्मविद्यायां उक्तलक्षणलक्षितः ॥ १६ ॥

**मेधावी**—(கேட்பதை மறக்காமல் மனஸில் வாங்கி வைத்துக்கொள்ளும் சக்தியாகிய) மேதையுள்ளவனாகவும், **विद्वान्**—(காவியம், கோசம், வ்யாகரணம் முதலியவைகளை) கற்றவனாகவும், **ऊह अपोह-विचक्षणः**—எப்படிச் சேர்த்துக்கொள்ளவேண்டும்-எப்படி விட்டுவிட வேண்டும் என்று தெரிந்து செய்வதற்கு ஸாமர்த்தியமுள்ளவனாகவும், **उक्त लक्षण लक्षितः**—(8 முதல் 15 வரையுள்ள சுலோகங்களில்) சொல்லப்பட்டிருக்கும் லக்ஷணங்களுடன் கூடியவனாகவும் இருக்கிற, **पुरुषः**—புருஷன், **आत्मविद्यायां**—ஆத்மாவை அறிந்துகொள்வதில் **अधिकारी**—அதிகாரமுள்ளவனாவான். (ஆத்மவித்யா பலனான மோக்ஷத்தை அநுபவிக்கத் தகுதியுள்ளவனாகிறான்.)



இந்த சுலோகத்தில் 'विद्वान्' என்பதால் 'पदं' எனும் வ்யாகரண சாஸ்திரத்தையும் 'ऊहापोहविचक्षणः' என்பதால் 'वाक्यं' என்னும் மீமாம்ஸா சாஸ்திரத்தையும் 'प्रमाणं' என்னும் ந்யாய சாஸ்திரத்தையும் அறிந்தவன் என்று காட்டப்பட்டது. பத வாக்ய ப்ரமாணஜ்ஞனாக இருக்கவேண்டும். (16)

(அ) "முன் சொல்லப்பட்ட லக்ஷணங்கள்" என்பதை விவரித்துத் தெளிவாக அடுத்த சுலோகத்தில் சொல்கிறார் :—

विवेकिनो विरक्तस्य शमादिगुणशालिनः ।
मुमुक्षोरेव हि ब्रह्मजिज्ञासायोग्यता मता ॥ १७ ॥

**विवेकिनः**—விவேகமுள்ளவனாய், **विरक्तस्य**—விரக்தனாய், **शमादि-गुण शालिनः**—சமம் முதலான குணங்களில் நன்கு ஈடுபட்டவனாய், **मुमुक्षोरेव हि**-மோக்ஷத்தில் அவா உள்ளவனாய் இருப்பவனுக்குத் தானேயல்லவா, **ब्रह्म जिज्ञासा-योग्यता** - ப்ரம்மத்தை அறியவேண்டுமென்ற ஆசை ஏற்படுவதற்குள்ள யோக்கியதை (உண்டென்று), **मता**—கருதப்பட்டிருக்கிறது. (17)

(அ) இந்த நான்கு லக்ஷணங்களும் இருந்தால்தான் ப்ரஹ்மத்தைஅறிய ஆசையும், ப்ரஹ்மத்தில் நிலைத்திருப்பதும் ஸித்திக்கும். இவை இல்லையானால் அவை ஸித்திக்காது என்ற காரணத்தினால் இந்த நான்கு லக்ஷணங்களுக்கும் 'ஸாதனங்கள்' என்ற வ்யவஹாரம் ஏற்பட்டிருக்கிறது என்பதைச் சொல்கிறார் :—

साधनान्यत्र चत्वारि कथितानि मनीषिभिः ।
येषु सत्स्वेव सन्निष्ठा यदभावे न सिध्यति ॥ १८ ॥

**येषु**-எவைகள், **सत्सु एव**-இருந்தால்தான், **सत् निष्ठा**-ஸத் வஸ்துவான ப்ரம்மத்தில் நிலைத்திருப்பது (ஏற்படுமோ), **यत् अभावे**-எவை இல்லையானால், **न सिध्यति**-ஏற்படாதோ (அவ்வித), **साधनानि** - ஸாதனங்கள் **अत्र**-இவ்விஷயத்தில், **चत्वारि**-நான்கு, **मनीषिभिः**-வேதத்தின் தாத்பர்யம் அறிந்தவர்களால், **कथितानि**-சொல்லப்பட்டிருக்கின்றன. (18)

(அ) அவை நான்கையும் சொல்வதுடன் அவைகளில் முன்னால் சொன்னது பின்னால் சொல்லப்படுவதற்கு காரணமாயிருக்கும் தன்மையுடையதானதினால் அவைகளில் காணப்படும் வரிசைக்கும் தாத்பர்யம் உண்டென்பதை ஸூசிக்கிறார் :-

**आदौ नित्यानित्यवस्तुविवेकः परिगण्यते ।**
**इहामुत्रफलभोगविरागः तदनन्तरम् ॥**
**शमादिषट्कसंपत्तिः मुमुक्षुत्वं इति स्फुटम् ॥ १९ ॥**

**आदौ**-முதலில், **नित्य अनित्य वस्तु-विवेकः**-நித்யமான வஸ்து, அநித்யமான வஸ்து, இவைகளைப் பிரித்து அறிதல், **परिगण्यते**-கணக்கிடப்படுகிறது. **तत् अनन्तरं**-அதற்கு அடுத்ததாக, **इह-अमुत्र फल-भोग-विरागः**-இம்மையிலும் மறுமையிலும் (ஏற்படக்கூடிய கர்ம) பலனாகிய போகங்களில் ஆசையற்றிருத்தல், (அதற்குமேல்) **शमादि षट्क संपत्तिः**-சமம் முதலிய ஆறை ஸம்பாதித்தல், (அதன் பலனாக), **मुमुक्षुत्वं**-மோக்ஷத்தில் அவாவுள்ள தன்மை, **इति स्फुटम्**-என்று தெளிவு.

இது உண்மை, இது பொய் என்று பிரித்து அறிந்தவனுக்குத்தான் பொய்யான பொருளில் வைராக்யம் ஏற்படும். ஆகவே விவேகம் வைராக்யத்திற்குக் காரணம் என்பதால் முதலில் கூறப்பட்டது. இதுபோலவே ஆசையில்லாதவன் தான் உள், வெளிப் புலன்களையடக்கமுடியும். அதிலும் முதலில் மன அடக்கம் பிறகு வெளி இந்திரியங்களின் அடக்கம், உபரதி (ஸந்யாஸம்), பொறுமை, சிரத்தை ப்ரஹ்மத்தில் புத்தி



நிலைத்தல் இவைகளும், இதனால் தீவ்ர முமுக்ஷையும் ஏற்படும். இவ்வாறு பின் சொல்லப்பட்டதற்கு முன் சொல்லியவை காரணம் ஆகிறது. (19)

(அ) இந்த நான்கு ஸாதனங்களையும் ஒவ்வொன்றாக எடுத்துக்கொண்டு அவைகளின் லக்ஷணங்களை எடுத்துச் சொல்கிறார் :—

**ब्रह्म सत्यं जगन्मिथ्येत्येवंरूपो विनिश्चयः ।**
**सोऽयं नित्यानित्यवस्तुविवेकः समुदाहृतः ॥ २० ॥**

**ब्रह्म**-பிரஹ்மம், **सत्यं**-உண்மை, **जगत्**-ஜகத், **मिथ्या**-பொய், **इति**-என்று, **एवंरूपः**-இவ்வித ரூபமாக ஏற்படும் **विनिश्चयः**-நன்கு (ஸந்தேஹமன்னியில் உள்ள) தீர்மானம் எதுவோ, **सः**-அந்த, **अयं**-இது, **नित्यानित्य-वस्तु-विवेकः**-நித்யவஸ்து அநித்யவஸ்து என்று பிரித்தறிதல் என்று, **समुदाहृतः**-தெளிவாய் சொல்லப்பட்டிருக்கிறது.

ஜகத்தை அநித்யம் என்று மாத்திரம் சொன்னால் தீவ்ரமான வைராக்யம் ஏற்படக்கூடியதில்லை என்ற காரணத்தினால் ஜகத்தை மித்யை, பொய்யான தோற்றம் என்றே ஸ்ரீமத் ஆசார்யார் சொல்லியிருப்பது கவனிக்கத்தக்கது. (20)

(அ) விவேகத்தினால் ஏற்படும் வைராக்யம் என்ற இரண்டாவது ஸாதனத்தின் தன்மையை அடுத்து வர்ணிக்கிறார் :—

**तद्वैराग्यं जुगुप्सा या दर्शनश्रवणादिभिः ।**
**देहादिब्रह्मपर्यन्ते ह्यनित्ये भोग्यवस्तुनि ॥ २१ ॥**

**देहादि**-தேஹம் முதல், **ब्रह्मपर्यन्ते**-ப்ரஹ்மாவரையிலுமுள்ள, **अनित्ये**-அநித்யமான, **भोग्यवस्तुनि**-போக்கியமான வஸ்துவில், **दर्शन-श्रवण-आदिभिः**-பார்ப்பதினாலும் கேட்பதினாலும் மற்றும் (அனுமானம் முதலான) விதத்திலும், (அநித்யமல்லவாவென்று தெரிந்து கொள்வதினால் ஏற்படும்) **या**-எந்த, **जुगुप्सा**-வெறுப்பு உண்டோ, **तत्**-அது, **वैराग्यं**-வைராக்யம் எனப்படும். (21)

(அ) மூன்றுவது ஸாதனமாகிய சமாதி ஷட்கத்தில் அடங்கிய சமம், தமம் உபரதி, திதிக்ஷை, சிரத்தை, ஸமாதானம் ஆகிய ஆறின் தன்மைகளையும் தனித்தனியே விளக்குகிருர் :—

विरज्य विषयव्रातात् दोषदृष्ट्या मुहुर्मुहुः ।
स्वलक्ष्ये नियतावस्था मनसः शम उच्यते ॥ २२ ॥

मुहुः मुहुः-அடிக்கடி, दोषदृष्ट्या-தோஷத்தைப் பார்ப்பதினுல, विषय-व्रातात्-விஷயங்களின் கூட்டத்திலிருந்து, विरज्य-வைராக்யத்தை அடைந்து, मनसः-மனஸின், स्व-लक्ष्ये-தன் குறியான (ஸகுணமோ நிர்குணமோவான) ப்ரஹ்மத்தில், नियत-अवस्था-கட்டுப்பட்டு இருத்தல் शमः-சமம் என்று, उच्यते-சொல்லப்படுகிறது. (22)

विषयेभ्यः परावर्त्य स्थापनं स्वस्वगोलके ।
उभयेषामिन्द्रियाणां स दमः परिकीर्तितः ॥ २३ ॥

उभयेषां-(ஞானேந்திரியம், கர்மேந்திரியம் என்ற) இரண்டுவித, इन्द्रियाणां-இந்திரியங்களையும், विषयेभ्यः-விஷயங்களிலிருந்து, परावर्त्य-திருப்பி, स्वस्वगोलके-அதன் அதன் ஸ்தானத்தில், स्थापनं-இருந்துவிடச் செய்வது எதுவோ, सः-அது, दमः-தமம் என்று, परिकीर्तितः-சொல்லப்பட்டிருக்கிறது. (23)

बाह्यानालम्बनं वृत्तेरेषोपरतिरुत्तमा ॥ २४ ॥

वृत्तेः-மனோவ்ருத்திக்கு, बाह्य-अनालम्बनं एव-வெளி விஷயங்களின் பிடிப்பு இல்லாத் தன்மை ஏற்படுவது தான், उत्तमा-மேலான, उपरतिः-உபரதியாகும். (24)

सहनं सर्वदुःखानां अप्रतीकारपूर्वकम् ।
चिन्ताविलापरहितं सा तितिक्षा निगद्यते ॥



अप्रतीकारपूर्वकं-பரிஹாரம் செய்யும் பிரயத்னம் முன்னதாக இல்லாமலும், चिन्ताविलापरहितं-கவலையோ, புலம்பலோ அன்னியிலும், सर्वदुःखानां-எல்லாவித துக்கங்களையும், सहनं-பொறுத்துக்கொள்வது எதுவோ, सा-அது, तितिक्षा-திதிக்ஷை யென்று, निगद्यते சொல்லப்படுகிறது.

शास्त्रस्य गुरुवाक्यस्य सत्यबुद्ध्यावधारणा ।
सा श्रद्धा कथिता सद्भिर्यया वस्तूपलभ्यते ॥ २६ ॥

यया-எதனுல், वस्तु-வாஸ்தவமான பதார்த்தம், उपलभ्यते-அறியப்படுகிறதோ, सा-அந்த, शास्त्रस्य சாஸ்திரமும், गुरुवाक्यस्य-குருவின் உபதேசமும், सत्यबुद्ध्या-ஸத்யம் தான் என்ற எண்ணத்தினுல் ஏற்படும், अवधारणा-திடமான நம்பிக்கை, श्रद्धा-சிரத்தை என்று, सद्भिः ஸாதுக்களால், कथिता-சொல்லப்பட்டிருக்கிறது. (26)

सम्यगास्थापनं बुद्धेः शुद्धे ब्रह्मणि सर्वदा ।
तत्समाधानमित्युक्तं न तु चित्तस्य लालनम् ॥ २७ ॥

शुद्धे-சுத்தமான (நிர்குணமான), ब्रह्मणि-பிரஹ்மத்தினிடத்தில், बुद्धेः புத்தியை, सर्वदा-எப்பொழுதும், सम्यक् நன்ருக, आस्थापनं-நிலை நிறுத்தல் எதுவோ, तत्-அது, समाधानं-ஸமாதானம், इति-என்று, उक्तं-சொல்லப்பட்டிருக்கிறது. चित्तस्य சித்தத்தை, लालनं तु-லாளனம் செய்வதோவெனில் (போக்குப்படி விடுவது), न-(ஸமாதானம்) ஆகாது.

சமம் என்பது பிரயத்தின—அவஸ்தையாயிருப்பதால், அதைப் பற்றிச் சொல்லும்போது சஞ்சலமான "மனஸ்" என்றும், "அடிக்கடி" என்றும், லக்ஷ்யம் ஸகுணமோ நிர்குணமோ இருக்கலாமென்றும் சொல்லப்பட்டது. ஸமாதான நிலை பலன் ரூபமாயிருப்பதால், நிச்சய ஸ்வரூபமான "புத்தி" என்றும், "எப்பொழுதும்" என்றும், "சுத்தப் பிரஹ்மத்தில" என்றும் வித்யாஸப்படுத்தி சொல்லியிருப்பதை கவனிக்கவும்

ஆகவே சமம் ஸாதனமாகவும் ஸமாதானம் பலனாகவும் இருப்பதால் இரண்டுக்கும் வேற்றுமையுள்ளது. லாளனம் சாலனம் இரண்டும் சமத்திற்குத் தேவை. இங்கு அப்படியல்ல. (27)

अहंकारादिदेहान्तान्बन्धानज्ञानकल्पितान् ।
स्वस्वरूपावबोधेन मोक्तुमिच्छा मुमुक्षुता ॥ २८ ॥

अज्ञानकल्पितान्-அக்ஞானத்தினால் கல்பிக்கப்பட்டிருக்கிற, अहङ्कारादिदेहान्तान्-அஹங்காரம் முதல் தேஹம் முடியதான, बन्धान् கட்டுகளை, स्व-स्वरूप-अवबोधेन-தன்னுடைய ஸ்வரூபத்தை நன்றாக அறிவதினால், मोक्तुं-விலக்கிவிட வேண்டுமென்ற, इच्छा-அவா, मुमुक्षुता-முமுக்ஷுத்வம்.

(அ) இவ்விதம் நான்கு ஸாதனங்களையும் சொல்லிவிட்டு அவைகளுக்குள் வைராக்கியமும் முமுக்ஷுத்வமும் மிகவும் முக்கியமென்பதை மூன்று சுலோகங்களில் வற்புறுத்திக்காட்டுகிறார். வைராக்யமேற்பட்டால்தான் விவேகம் வாஸ்தவமாய் இருக்கிறதென்று காட்டும். வைராக்யமிருந்தால்தான் சமாதி ஷட்கம் நிலைத்திருக்கும். முமுக்ஷுத்வம் நன்கு இருந்தால் தான் முன்னுள்ள மூன்று ஸாதனங்களும் சரியான பலனைக் கொடுக்கும். விவேகத்தினால் ஸாமான்யமான வைராக்ய மேற்பட்டாலும் சமதமாதிகளின் அனுஷ்டானத்தினால் அவ் வைராக்யம் திடப்பட்டு முமுக்ஷுத்வத்துடன் சேர்ந்து பரம புருஷார்த்தத்தையடைவிக்கச் செய்யுமென்று தாத்பர்யம்:—

मन्दमध्यमरूपापि वैराग्येण शमादिना ।
प्रसादेन गुरोः सेयं प्रवृद्धा सूयते फलम् ॥ २९ ॥

सा-அந்த முமுக்ஷுத்வம், मन्द-मध्यम-रूपाऽपि-மந்தமாயும் மத்யமமாயுமுள்ள தன்மையுடன் இருந்தாலும், वैराग्येण-வைராக்யத்தினாலும், शमादिना-சமம் முதலானவைகளாலும், गुरोः-குருநாதருடைய, प्रसादेन-அனுக்ரஹத்தினாலும், इयं-இது, प्रवृद्धा-நன்கு விருத்தியடைந்து, फलं பலனை, सूयते-கொடுக்கும்.



முமுக்ஷை — மோக்ஷமடைவதில் ஆவல் — மூன்றுவிதம். மந்தம், மத்யமம், ப்ரவ்ருத்தம். மந்தமும் மத்யமமும் பலனைத் தராது. ப்ரவ்ருத்தமாக ஆனால்தான் பலன் ஏற்படும் (29)

वैराग्यं च मुमुक्षुत्वं तीव्रं यस्य तु विद्यते ।
तस्मिन्नेवार्थवन्तः स्युः फलवन्तः शमादयः ॥ ३० ॥

यस्य-எவனுக்கு, वैराग्यं च-வைராக்யமும், मुमुक्षुत्वं-முமுக்ஷுத்வமும், तीव्रं तु-தீவிரமாகவே, विद्यते-இருக்கிறதோ, तस्मिन् एव-அவனிடத்தில் தான், शमादयः-சமம் முதலான சொற்கள், अर्थवन्तः-பொருள் பதிந்தவைகளாகவும், फलवन्तः-பலனைக் கொடுக்கக்கூடியவைகளாகவும், स्युः-இருக்கும்.

சமாதி ஷட்கத்திற்கு ஸாதனம் தீவ்ர வைராக்யம், பலன் தீவ்ரமுமுக்ஷுத்வம் ஆகவே தீவ்ர வைராக்யமும் தீவ்ர முமுக்ஷுத்வமும் யாரிடம் உள்ளதோ அவனிடம் சமாதிகள் இருப்பதாகத் தீர்மானிக்கலாம். ஒருவனிடம் தீவ்ர வைராக்யமிருக்குமானால் அதன் பலனான சமாதிகளும் இருக்கும். தீவ்ர முமுக்ஷுத்வம் இருக்குமானால் இதன் ஸாதனமான சமாதிகள் இருக்கும். ஆகவே ஸாதனமான தீவ்ர வைராக்யம் எவனிடம் உள்ளதோ அவனைத்தான் சாந்தன், தாந்தன் என்று சொல்லலாம். இந்தச் சொல்தான் பொருள்படைத்தது. தீவ்ர வைராக்யமில்லாதவனை சாந்தன் என்று சொன்னால் அது வெறும் பெயராகுமேதவிற இதற்குப் பொருள் இல்லை. தீவ்ர முமுக்ஷுத்வம் யாரிடமுள்ளதோ அவனிடம்தான் சமாதிகள் பயனுள்ளவை. (30)

एतयोर्मन्दता यत्र विरक्तत्वमुमुक्षयोः ।
मरौ सलिलवत्तत्र शमादेर्भानमात्रता ॥ ३१ ॥

यत्र-எவனிடத்தில், एतयोः-இந்த, विरक्तत्व-मुमुक्षयोः-வைராக்யத்திலும் முமுக்ஷுத்வத்திலும், मन्दता-மந்தத் தன்மையிருக்கிறதோ, तत्र-அவனிடத்தில் இருப்பதாகத் தெரியும், शमादेः-சமம் முதலானவைகளுக்கு, मरौ-பாலை

வனத்தில் தோன்றும், सलिलवत्-கானல் ஜலம் போல, भानमात्रता-வெறும் தோற்றமாயிருக்கும் தன்மை தான். (அது பலனைக்கொடுக்காது). (31)

(அ) ஆத்மவிஷயமான விசாரத்தில் இறங்குபவனுக்கு என்ன என்ன ஸாதனங்கள் இருக்கவேண்டுமென்று இதுவரை சொல்லிவிட்டு, அந்த விசாரத்தினால் ஏற்பட்டு, ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு நேர் ஸாதனமாயிருக்கும் பக்தி என்பதின் ஸ்வரூபத்தை விளக்குகிறார்:—

मोक्षकारणसामग्र्यां भक्तिरेव गरीयसी ।
स्वस्वरूपानुसंधानं भक्तिरित्यभिधीयते ॥ ३२ ॥

मोक्षकारणसामग्र्यां – மோக்ஷத்திற்கு காரணமான ஞானத்தை உண்டுபண்ணக்கூடிய ஸாதனங்களில், भक्तिः एव-பக்தி யென்பது தான், गरीयसी-மிகவும் முக்கிய மானது. स्व-स्वरूप-अनुसन्धानं-தன்னுடைய ஸ்வருபமான பிரம்மமாயிருக்கும் தன்மையை இடைவிடாமல் அனுஸந்தானம் செய்வது, भक्तिः-பக்தி, इति-என்று, अभिधीयते-சொல்லப்படுகிறது. (32)

(அ) பக்தி யென்பதற்கு சிலர் வேறு விதமாக அர்த்தம் சொல்கிறார்களென்பதையும் காட்டுகிறார்:—

स्वात्मतत्त्वानुसन्धानं भक्तिरित्यपरे जगुः ।

स्व-आत्म-तत्त्व-अनुसंधानं – தன்னுடைய ஆத்மாவான ஜீவனுக்கு "தத்" பிரஹ்மமாயிருக்கும் தன்மையை இடைவிடாமல் பாவனை செய்வது, भक्तिः-பக்தி, इति-என்று, अपरे-வேறு சிலர், जगुः-சொல்கிறார்கள்.

முன் சொன்ன லக்ஷணத்தில் பக்தியென்பது ஞானத்திற்கு நேரிடை ஸாதனமாகிய நிதித்யாஸனமாகும். பின்சொன்ன லக்ஷணத்தில் பிரஹ்மமாக பாவனை செய்வது. இதில் பேதம் தோன்றிக்கொண்டிருக்கும் ஆனாலும் அபேதமாக உபாஸனம் செய்வது அஹங்க்ரஹோபாஸனம் இது ஞானமாக ஆகாது; ஆகையால் இது கீழ்பட்டதென்று தாத்பர்யம்.



## 5. குருவை அண்டுதல்

(அ) 8வது சுலோகத்தில் ஆத்மவிசாரத்திற்கு வேண்டிய யோக்கியதையுள்ளவன் குருவிடம் சென்று உபதேசம் பெற வேண்டுமென்று சொன்னதை விஸ்தரித்து, அவ்விதம் செல்வதினால் ஏற்படும் பிரயோஜனத்தையும், அக்குருவிற்கு இருக்கவேண்டிய லக்ஷணங்களையும், அவரிடம் எவ்விதம் போகவேண்டுமென்பதையும், அவரிடம் சென்று பிரார்த்திக்க வேண்டிய முறையையும் எடுத்துச் சொல்கிறார்:—

उक्तसाधनसंपन्नस्तत्त्वजिज्ञासुरात्मनः ॥ ३३ ॥
उपसीदेद्गुरुं प्राज्ञं यस्माद्बन्धविमोक्षणम् ।

उक्त-साधन-संपन्नः-முன் சொல்லிய ஸாதனங்களோடு நன்கு கூடினவனாய், आत्मनः-தன்னுடைய, तत्त्व-जिज्ञासुः-வாஸ்தவமான ஸ்வருபத்தை அறிய விரும்புகிறவன், यस्मात्-எவரிடமிருந்து, बन्ध-विमोक्षणम् – பந்தத்திலிருந்து நன்கு விடுதலை ஏற்படுமோ அவ்வித, प्राज्ञं-(ஆத்ம தத்வ ஸாக்ஷாத்காரமடைந்த) அறிவாளியான, गुरुं-குருவை, उपसीदेत्-நெருங்கவேண்டும் (சரணமடையவேண்டும்)

श्रोत्रियोऽवृजिनोऽकामहतो यो ब्रह्मवित्तमः ॥ ३४ ॥
ब्रह्मण्युपरतः शान्तो निरिन्धन इवानलः ।
अहेतुकदयासिन्धुर्बन्धुरानमतां सताम् ॥ ३५ ॥

यः – எவர், श्रोत्रियः – வேதாத்யயனம் செய்து உபநிஷத்துக்களின் அர்த்தத்தை நன்கு விசாரணை செய்து அறிந்தவராயும், अवृजिनः-எவ்வித பாபமுமற்றவராயும், अकामहतः-எவ்வித ஆசையினாலும் பாதிக்கப்படாதவராயும், ब्रह्मवित्तमः – பிரஹ்மத்தை அறிந்தவர்களில் மேலானவராயும், ब्रह्मणि-பிரஹ்மத்தினிடத்தில், उपरतः-மனஸ் லயித்தவராயும், निरिन्धनः – எரிதுரும்பில்லாத, अनलः इव-நெருப்புபோல, शान्तः-அடங்கினவராயும், अहेतुक-

दया-सिन्धुः-(சிஷ்யனுக்கு உபதேசிப்பதினால் கிருதகிருத்யராயுள்ள தனக்கு ஆகவேண்டியதொன்றுமில்லாமையால்) காரணமன்னியில் (சிஷ்யனும் க்ஷேமத்தையடையட்டும் என்ற) கருணைக்கடலாயும், आनमतां-(தன்னிடம் வந்து) பக்தியுடன் வணங்கும், सतां - ஸாதுக்களான சிஷ்யர்களுக்கு, बन्धुः-பந்துவாகவும் (துக்கத்தைப் போக்கடித்து க்ஷேமத்தைச் செய்பவராகவும் இருக்கிறரோ அவ்வித குருவை அடையவேண்டும்.) (35)

तमाराध्य गुरुं भक्त्या प्रह्वः प्रश्रयसेवनैः ।
प्रसन्नं तमनुप्राप्य पृच्छेज्ज्ञातव्यमात्मनः ॥ ३६ ॥

भक्त्या - பக்தியினால், प्रह्वः-மிகவும் வணக்கத்துடனிருந்துகொண்டு, प्रश्रयसेवनैः-விநயமான வார்த்தைகளாலும், நமஸ்காராதி ஸேவைகளாலும், तं-அவ்வித, गुरुं-குருவை, आराध्य-ஆராதித்து அதனால், प्रसन्नं-பிரஸன்னமாயிருக்கும், तं- அவரை, अनुप्राप्य - ஸமீபத்தில் போய், आत्मनः-தனக்கு, ज्ञातव्यं-தெரிந்து கொள்ளவேண்டிய விஷயத்தை, पृच्छेत्-கேட்கவேண்டும்.

இங்கு भक्त्या என்பதால் மனதிலும் प्रह्वः सेवनैः என்பதால் சரீரத்திலும் प्रश्रय என்பதால் வாக்கிலும் சுத்தி இருக்கவேண்டுமென்பது கூறப்பட்டது. (36)

स्वामिन्नमस्ते नतलोकबन्धो
कारुण्यसिन्धो पतितं भवाब्धौ ।
मामुद्धरात्मीयकटाक्षदृष्ट्या
ऋज्व्यातिकारुण्यसुधाभिवृष्ट्या ॥ ३७ ॥

नत-लोक-बन्धो-வணங்கும் ஜனங்களுக்கு பந்துவாயும், कारुण्यसिन्धो - தயாசமுத்திரமாயுமுள்ள, स्वामिन्-பிரபோ, ते-உங்களுக்கு, नमः-நமஸ்காரம். भव-अब्धौ - ஸம்ஸாரமாகிற கடலில், पतितं-விழுந்திருக்கிற, मां-என்னை, अति-



कारुण्य-सुधा-अभिवृष्ट्या-மிகுந்த கருணையாகிற அமிர்தத்தை நாலா பக்கத்திலும் வர்ஷிக்கக்கூடிய ऋज्व्या-ஸரளமான, आत्मीय-कटाक्ष-दृष्ट्या-தங்களுடைய கடைக்கண் பார்வையினால், उद्धर-மேலே தூக்கிவிடுங்கள்.

குருதேவதாஸந்நிதிகளில் அவர்களின் கடாக்ஷம் தன் மேல்படும்படியாக ஓரமாக நிற்கவேண்டுமே தவிர நேர் எதிரில் நிற்கக்கூடாது. (37)

दुर्वारसंसारदवाग्नितप्तं
दोधूयमानं दुरदृष्टवातैः ।
भीतं प्रपन्नं परिपाहि मृत्योः
शरण्यमन्यं यदहं न जाने ॥ ३८ ॥

दुर्वार-संसार-दवाग्नि-तप्तं - (தங்கள் உபதேசத்தினால் ஏற்படக்கூடிய ஞானத்தைத்தவிர வேறு வழியில்) விலக்கமுடியாத ஸம்ஸாரமாகிற காட்டுத் தீயினால் வாட்டப்பட்டும், दुरदृष्ट-वातैः (முன் செய்து இப்பொழுது) தென்படாமலிருக்கும் தீவினைகளாகிற காற்றுகளினால், दोधूयमानं-பலவிதமாய் அலைக்கப்பட்டும், मृत्योः-மரணத்திலிருந்து, भीतं-பயந்தவனாய், प्रपन्नं-(தங்களை) சரணமடைந்தும், இருக்கிற என்னை, यत्-எந்தக் காரணத்தினால், अन्यं-வேறு, शरण्यं-சரணமடையத்தகுந்தவரை, अहं-நான், न जाने-அறியவில்லையோ அதனால், परिपाहि-நன்கு காப்பாற்றுங்கள். (மரணத்திலிருந்து காப்பாற்றுங்கள்). (38)

शान्ता महान्तो निवसन्ति सन्तो
वसन्तवल्लोकहितं चरन्तः ।
तीर्णाः स्वयं भीमभवार्णवं जना-
नहेतुनाऽन्यानपि तारयन्तः ॥ ३९ ॥

वसन्तवत्-வஸந்தருதுவைப்போல, लोक-हितं-உலகத்திற்கு ஹிதத்தை, चरन्तः-செய்துகொண்டு, स्वयं-தாங்கள், तीर्णाः-கடந்தவர்களாயிருந்துகொண்டு, अहेतुना-காரணமன்னியிலேயே, अन्यान्-மற்ற, जनान् अपि-ஜனங்களையும்கூட, भीम-भवार्णवं-பயங்கரமான ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தை, तारयन्तः-தாண்டி வைத்துக்கொண்டு, सन्तः-ஸாதுக் शान्ताः-சாந்தஸ்வபாவமுள்ளவர்களாய், निवसन्ति-களாய், महान्तः-பெரியோர்கள் (உலகத்தில்), வஸித்து வருகிறார்கள். (39)

अयं स्वभावः स्वत एव यत्पर-
श्रमापनोदप्रवणं महात्मनाम् ।
सुधांशुरेष स्वयमर्ककर्कश-
प्रभाभितप्तामवति क्षितिं किल ॥ ४० ॥

महात्मनां - பெரியோர்களுக்கு, पर-श्रम-अपनोद-प्रवणं-பிறரின் சிரமத்தை நீக்குவதில் நோக்கமுள்ள தன்மை என்பது, यत्-எதுவோ, अयं-இது, स्वत एव-தானாகவே அவர்களிடமுள்ள, स्वभावः-ஸ்வபாவம். अर्क-कर्कश-प्रभा-अभितप्तां-சூர்யனுடைய கடுமையான வெய்யிலினால் நன்கு சுட்டிருக்கும், क्षितिं பூமியை, एषः-இந்த, सुधांशुः-அமிருத மயமான கிரணங்களோடுகூடிய சந்திரன், स्वयं-தானாகவே, अवति-ரக்ஷிக்கிறான், किल-அல்லவா? (40)

ब्रह्मानन्दरसानुभूतिकलितैः पूतैः सुशीतैः सितै-
र्युष्मद्वाक्कलशोज्झितैः श्रुतिसुखैर्वाक्यामृतैः सेचय ।
संतप्तं भवतापदावदहनज्वालाभिरेनं प्रभो
धन्यास्ते भवदीक्षणक्षणगतेः पात्रीकृताः स्वीकृताः ॥

प्रभो - ஹே பிரபோ, भव-ताप-दाव दहन-ज्वालाभिः-ஸம்ஸார தாபமாகிற காட்டுத்தீயின் ஜ்வாலைகளினால், संतप्तं-மிகவும் பொசுக்கப்பட்டிருக்கும், एनं-இவனை



(என்னை), ब्रह्म-आनन्द-रस-अनुभूति-कलितैः-பிரஹ்மானந்த ரஸத்தை அனுபவிப்பதினால் ஏற்பட்டு, पूतैः-பரிசுத்தமாய், सुशीतैः-நன்கு குளிர்ந்ததாய், सितैः-நிர்மலமாய், श्रुति सुखैः-காதுக்கு ஸௌகத்தைக் கொடுக்கக்கூடியதாய் உள்ள, युष्मत्-वाक् कलश-उज्झितैः - தங்களுடைய வாக் ஆகிற கலசத்திலிருந்து வெளிவிடப்படும், वाक्य-अमृतैः-வார்த்தைகளாகிய அமிருதங்களால், सेचय-அபிஷேகம் செய்யும், भवत्-ईक्षण-क्षणगतेः-தங்களுடைய பார்வை ஒரு க்ஷணம் விழுவதற்கு, पात्रीकृताः-தகுந்த பாத்திரமாகி (தங்களால்), स्वीकृताः - தங்களுடையவர்களென்று ஏற்றுக்கொள்ளப்படும், ते-அவர்கள், धन्याः-பாக்கியசாலிகள். (41)

(அ) இவ்விதமாக குருநாதரின் மஹிமையைச் சொல்லி தன்னை காப்பாற்றவேண்டுமென்று பொதுவாக பிரார்த்தித்து விட்டு ஸம்ஸாரதுக்கத்திலிருந்து விடுதலை அடைவதற்கு வழியுண்டா, அவ்வழி எது, என்று குறிப்பிட்டு சிஷ்யன் கேட்கிறான்:—

कथं तरेयं भवसिन्धुमेतं का वा गतिर्मे कतमोऽस्त्युपायः ।
जाने न किञ्चित्कृपयाव मां प्रभो संसारदुःखक्षतिमातनुष्व ॥ ४२ ॥

एतं-இந்த (துக்கம் நிறைந்த), भवसिन्धुं-ஸம்ஸாரமாகிற கடலை, कथं-எப்படி, तरेयं-தாண்டுவேன்? (நான் இப்படியேயிருந்தால்), मे-எனக்கு, का वा-என்னதான், गतिः-போக்கு? (ஆகையால்) उपायः-(அக்கடலைத் தாண்டுவதற்கு) உபாயம், कतमः-ஏதேனும், अस्ति-இருக்கிறதா? किञ्चित्-எதையும், न जाने-நான் அறியேன். हे प्रभो-ஹே பிரபோ, कृपया-கிருபையினால், मां-என்னை, अव-ரக்ஷியும், संसारदुःखक्षतिं-ஸம்ஸாரத்தினால் ஏற்படும் துக்கத்தின் நாசத்தை, आतनुष्व-நன்கு (அது மறுபடியும் ஏற்படாமலிருக்கும்படி) செய்து கொடுங்கள் (42)

## 6. குருவின் அபயப்பிரதானம்

(அ) இவ்விதம் மிகவும் ஆதங்கத்துடன் கேட்கும் சிஷ்யனுக்கு உபாயத்தை உபதேசிப்பதற்கு முன்னாலேயே முதலில் ''பயப்படவேண்டாம்'' என்று குரு தைர்யம் சொல்ல வேண்டியது என்பதை ஸ்ரீமத் ஆசார்யார் காட்டுகிறார்:—

**तथा वदन्तं शरणागतं स्वं संसारदावानलतापतप्तम् ।**
**निरीक्ष्य कारुण्यरसार्द्रदृष्ट्या दद्यादभीतिं सहसा महात्मा ॥ ४३ ॥**

संसारदावानलतापतप्तं-ஸம்ஸாரமாகிற காட்டுத் தீயின் தாபத்தினால் தபிக்கிறவனாய், स्वं-தன்னை, शरणागतं-சரணமாக அடைந்து, तथा-அவ்விதம், वदन्तं-சொல்கிற சிஷ்யனை, महात्मा-மஹாத்மாவான குரு, सहसा-உடனே, कारुण्यरसार्द्रदृष्ट्या-தயா ரஸத்தினால் நனைந்த பார்வையினால், निरीक्ष्य-பார்வையிட்டு, अभीतिं-அபயத்தை, दद्यात्-கொடுக்கவேண்டும். (43)

(அ) அந்த சிஷ்யன் தன்னிடம் உபதேசம் பெறுவதற்கு வேண்டிய யோக்கியதையுடன் இருக்கிறானென்பதையும், உபதேசிக்கிறபடி அவன் குறைவன்னியில் அனுஷ்டிப்பான் என்பதையும் அவன் வார்த்தையின் மூலம் தெரிந்து உறுதிப் படுத்திக்கொண்டு அவனுக்கு குரு தத்வத்தை உபதேசிக்க வேண்டும் என்கிறார்:—

**विद्वान्स तस्मा उपसत्तिमीयुषे मुमुक्षवे साधु यथोक्तकारिणे ।**
**प्रशान्तचित्ताय शमान्विताय तत्त्वोपदेशं कृपयैव कुर्यात् ॥ ४४ ॥**

सः-அந்த, विद्वान्-தத்வம் அறிந்த குருவானவர், उपसत्तिं ईयुषे-அண்டி வந்திருக்கும், मुमुक्षवे-மோக்ஷத்தில் அவாவுள்ளவனாகவும், साधु-நன்றாக, यथोक्तकारिणे-சாஸ்திரத்தில் சொல்லியபடி செய்யும் தன்மையுள்ளவனாகவும், प्रशान्तचित्ताय-(வெளி விஷயங்களிலிருந்து வைராக்யத்தினால்) நன்கு அடங்கின சித்தத்துடன் கூடினவனும், शमान्विताय-வெளிப் புலன்களையடக்கின வனும் உள்ள, तस्मै-அந்த சிஷ்யனுக்கு, कृपया-கிருபையினால், तत्त्वोपदेशं தத்வ உபதேசத்தை, कुर्यात् एव-செய்யத்தான் வேண்டும்.

உத்தமாதிகாரியான ஒருவன் தன்னிடம் வந்து பிரார்த்திப் பானேயானால் அவனை சிஷ்யனாக ஏற்றுக்கொண்டு அவனுக்கு அவசியம் ப்ரஹ்ம உபதேசம் செய்யவேண்டியது குருவின் கடமையாகும். இதன் மூலம் அந்த சிஷ்யன் கடைத்தேறுவ துடன் அவன் மூலம் பரம்பரையாக ப்ரஹ்மவித்யை பிரசாரம் அடைந்து பலர் மோக்ஷம் அடைவார்கள். (44)

(அ) சிஷ்யனுக்கு ''பயப்பட வேண்டாம். ஸம்ஸார ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்கு உபாயம் இருக்கிறது. நான் காட்டுகிறேன்'' என்று குரு தைர்யம் சொல்லவேண்டிய முறையையும் காட்டுகிறார்:—

**मा भैष्ट विद्वंस्तव नास्त्यपायः संसारसिन्धोस्तरणेऽस्त्युपायः ।**
**येनैव याता यतयोऽस्य पारं तमेव मार्गं तव निर्दिशामि ॥ ४५ ॥**

विद्वन्-அறிவாளியே, मा भैष्ट-பயப்படாதே. तव-உனக்கு, अपायः-கெடுதல், न अस्ति-ஏற்படாது. संसार-सिन्धोः-ஸம்ஸாரமாகிற கடலை, तरणे-தாண்டுவதில், उपायः-உபாயம், अस्ति-இருக்கிறது. येन एव-எதைக் கொண்டே, यतयः-பிரயத்தினம் செய்தவர்கள், अस्य-இந்தக் கடலின் पारं-அக்கரையை, याताः-அடைந் திருக்கிறார்களோ, तं एव-அதே, मार्गं-வழியை, तव-உனக்கு, निर्दिशामि-எடுத்துச்சொல்கிறேன். (45)

**अस्त्युपायो महान्कश्चित् संसारभयनाशनः ।**
**तेन तीर्त्वा भवाम्भोधिं परमानन्दमाप्स्यसि ॥ ४६ ॥**

संसारभयनाशनः-ஸம்ஸாரத்தினால் ஏற்படும் பயத்தை நாசம் செய்யக்கூடியதாய், महान्-பெரியதாய், कश्चित्-ஒரு, उपायः-உபாயம், अस्ति-இருக்கிறது. तेन-அதைக் கொண்டு, भवाम्भोधिं-ஸம்ஸார ஸாகரத்தை, तीर्त्वा-

தாண்டி (அத்துடன் நிற்காமல் மேலால்), परमानन्दं- உத்தமமான ஆனந்தத்தையும், आप्स्यसि- அடைவாய்.

நீ விரும்பியது துக்க நிவிருத்திதான். நான் சொல்லும் உபாயத்தை யனுஷ்டித்தால் துக்கம் அடியோடு விலகுவதோடு பரமானந்தமும் கிடைக்கும். (46)

(அ) அந்த உபாயம் ஆத்ம ஞானம் என்றும், அது வேதாந்த விசாரத்தினால் ஏற்படுமென்பதையும் சொல்கிறார் :—

वेदान्तार्थविचारेण जायते ज्ञानमुत्तमम् ।
तेनात्यन्तिकसंसारदुःखनाशो भवत्यनु ॥ ४७ ॥

वेदान्तार्थविचारेण–உபநிஷத்துக்களின் தாத்பர்யத்தை விசாரிப்பதினால், उत्तमं–சிறந்த, ज्ञानं–அறிவு, जायते– ஏற்படும். तेन·அந்த ஞானத்தினால், अनु–உடனேயே, आत्यन्तिकसंसारदुःखनाशः–ஸம்ஸாரத்தினால் ஏற்படும் துக்கம் முழுவதற்கும் (திரும்பிவாராதபடி) அடியோடு நாசம், भवति–ஏற்பட்டுவிடும். (47)

(அ) அந்த ஞானமேற்படுவதற்கு என்ன ஸாதனங்கள் தேவை என்பதற்கு, கைவல்ய உபநிஷத்தில் கண்டபடி சிரத்தை, பக்தி, தியானம், யோகம் என்ற நான்கும் என்று குறிப்பிடுகிறார் :—

श्रद्धाभक्तिध्यानयोगान् मुमुक्षोः मुक्तेर्हेतून् वक्ति साक्षाच्छ्रुतेर्गीः ।
यो वा एतेष्वेव तिष्ठत्यमुष्य मोक्षोऽविद्याकल्पिताद्देहबन्धात् ॥ ४८ ॥

मुमुक्षोः மோக்ஷத்தில் ஆசையுள்ளவனுக்கு, मुक्तेः– மோக்ஷத்திற்கு, हेतून्·காரணங்களாக, श्रद्धाभक्तिध्यान- योगान्-(குருவேதாந்த வாக்கியங்களில் திடமான விசுவா ஸம், (முன் 32வது சுலோகத்தில் கண்ட ஸ்வஸ்வரூப அனுஸந்தானமாகிற) பக்தி, (சுத்தபிரஹ்மத்திலேயே மனதை நிறுத்துவதான) தியானம், (ஸகல சித்த விருத்திகளை அடக்குவதான) யோகம், இவைகளை श्रुतेः–



வேதத்தின், गीः-வாக்கு, साक्षात् நேராகவே, वक्ति- சொல்கிறது. यः-எவன், एतेषु एव–இவைகளிலேயே, तिष्ठति – நிலைத்திருக்கிறானோ, अमुष्य– அவனுக்கு, अविद्याकल्पितात् ·அவித்யையினால் கல்பிக்கப்பட்டிருக்கும், देहबन्धात्–சரீரமாகிற கட்டிலிருந்து, मोक्षः–விடுதலை, वै– நிச்சயமாய் ஏற்படும்.

இங்கு கூறப்பட்ட நான்கு ஸாதனங்களில் சிரத்தை எல்லாவற்றிற்கும் ஸாதனம். மற்ற மூன்றில் பக்திக்கு த்யானமும்; த்யானத்திற்கு யோகமும் ஸாதனம். மனோவிருத்திகளை அடக்கினால்தான் ஒரே இடத்தில் நிலைநிறுத்துவதாகிய த்யானம் ஸித்திக்கும். த்யானத்தால்தான் ஸ்வஸ்வரூபானு ஸந்தானம் ஸித்திக்கும். (48)

(அ) ஆத்மாவின் வாஸ்தவ ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ளாமல் ஆத்மாவல்லாத சரீராதிகளில் 'நான்' என்ற எண்ணம் வந்ததினால்தான் ஸம்ஸார துக்கமேற்படுவதினால், அவ்வறியாமையை ஞானத்தினால் போக்கடித்துவிட்டால் அறியாமையால் ஏற்பட்டிருக்கும் துக்கமும் நிவிருத்தியாகிவிடும் என்பதைச் சொல்கிறார் :—

अज्ञानयोगात्परमात्मनस्तव ह्यनात्मबन्धस्तत एव संसृतिः ।
तयोर्विवेकोदितबोधवह्निरज्ञानकार्यं प्रदहेत्समूलम् ॥ ४९ ॥

परमात्मनः–உத்தமமான ஆத்மாவாக இருக்கிற, तव– உனக்கு, अज्ञानयोगात्–அறியாமையின் சேர்க்கையால், हि–அல்லவா, अनात्मबन्धः–ஆத்மாவல்லாத சரீராதிகளு டன் சேர்த்து கட்டுப்படல், ततः एव–அவ்விதம் கட்டுப் பட்டதினாலேயே, संसृतिः–ஸம்ஸாரம் (ஆகிய துக்கம் ஏற்பட்டிருக்கிறது) तयोः-(ஆத்மா, ஆத்மாவல்லாதது ஆகிய) அவ்விரண்டையும், विवेकोदितबोधवह्निः–பிரித்தறிவ தினால் ஏற்படும் ஞானமாகிற அக்னி, अज्ञानकार्यं–அறியா மையினால் ஏற்பட்டிருக்கும் துக்கம் முதலியவை எல்லா வற்றையும், समूलं-(அறியாமையாகிற) வேருள்பட, प्रदहेत्-நன்கு எரித்துவிடும். (49)

## 7. சிஷ்யனின் கேள்விகள்

(அ) இவ்விதம் குருவானவர் சுருக்கமாக ஸம்ஸார பந்தத்தையும் அதன் காரணத்தையும் அவைகளை நீக்கிக் கொள்ள உபாயமான ஞானத்தையும் அதன் பலனான மோக்ஷத்தையும் சொன்னவுடன், இவ்விஷயங்களை தெளிவாய் விஸ்தாரமாய் அறிந்துகொள்ளக்கருதி சிஷ்யன் கேட்கிறான் :—

शिष्य उवाच —

कृपया श्रूयतां स्वामिन् प्रश्नोऽयं क्रियते मया ।
यदुत्तरमहं श्रुत्वा कृतार्थः स्यां भवन्मुखात् ॥ ५० ॥

स्वामिन्-ஹே பிரபோ, कृपया-தயவுசெய்து, श्रूयतां-காதுகொடுத்துக் கேட்கவேண்டும். मया-என்னால், अयं-இந்த, प्रश्नः-கேள்வி, क्रियते- கேட்கப்படுகிறது, यदुत्तरं-எதற்குள்ள பதிலை, भवन्मुखात् தங்கள் முகம் மூலமாய், अहं-நான், श्रुत्वा-கேட்டறிந்துகொண்டு, कृतार्थः-கிருதார்த்தனாக, स्यां-ஆவேனோ. (50)

को नाम बन्धः कथमेष आगतः कथं प्रतिष्ठाऽस्य कथं विमोक्षः ।
कोऽसावनात्मा परमः क आत्मा तयोर्विवेकः कथमेतदुच्यताम् ॥५१॥

1. बन्धः-பந்தம் (கட்டு) என்பது, को नाम-எதுதான்?
2. एषः இந்தக் கட்டு, कथं-எவ்விதம், आगतः-வந்திருக்கிறது?
3. अस्य-இதன், प्रतिष्ठा-இருப்பு, कथं-எவ்விதம்?
4. विमोक्षः-அதிலிருந்து நன்குவிடுபடுவது, कथं-எப்படி?
5. असौ-அந்த, अनात्मा-ஆத்மாவல்லாதது என்பது, कः-எது?
6. परमः-மேலான, आत्मा-ஆத்மா என்பது, कः-எது?
7. तयोः-ஆத்மா, ஆத்மாவல்லாதது இரண்டையும், विवेकः-பிரித்தறிவது, कथं-எப்படி?

एतत्-இதையெல்லாம், उच्यताम्-சொல்லவேண்டும். (51)



## 8. தன் முயற்சி அசியவம்

(அ) இவ்விதம் கேள்வி கேட்ட சிஷ்யனுக்கு பதில்சொல்வதற்கு முன்னால், இவ்விதம் கேள்வி கேட்க வேண்டுமென்று அவன் மனதில் தோன்றினபடியால் அந்த சிஷ்யனை பலவாறாக குரு சிலாகிக்கிறார் :—

श्रीगुरुरुवाच —

धन्योऽसि कृतकृत्योऽसि पावितं ते कुलं त्वया ।
यदविद्याबन्धमुक्त्या ब्रह्मीभवितुमिच्छसि ॥ ५२ ॥

यत्-எதினால், अविद्याबन्धमुक्त्या-அவித்யையின் பந்தத்திலிருந்து விடுவித்துக்கொண்டு, ब्रह्मीभवितुं-பிரஹ்மமாக ஆகிவிட, इच्छसि நினைக்கிறாயோ (அதினாலேயே), धन्यः-மிகவும் பாக்யசாலியாக, असि-நீ இருக்கிறாய், कृतकृत्यः-செய்யவேண்டியதையெல்லாம் செய்தவனாக, असि-இருக்கிறாய், ते-உன்னுடைய, कुलं-குலமே, त्वया-உன்னால், पावितं-பரிசுத்தப்படுத்தப் பட்டுவிட்டது. (52)

ऋणमोचनकर्तारः पितुः सन्ति सुतादयः ।
बन्धमोचनकर्ता तु स्वस्मादन्यो न कश्चन ॥ ५३ ॥

पितुः-தகப்பனுக்கு, ऋणमोचनकर्तारः-(சாஸ்திரீயமானதோ, லௌகிகமானதோ) கடன்களிலிருந்து விடுதலை செய்விப்பவர்களாக, सुतादयः-புத்திரன் முதலானவர்கள், सन्ति-இருக்கிறார்கள். तु-ஆனால், बन्धमोचनकर्ता-(அவித்யையின்) கட்டிலிருந்து விடுதலை செய்விப்பவன், स्वस्मात्-தன்னைத் தவிர, अन्यः-வேறு, कश्चन-யாரும், न கிடையாது. (53)

मस्तकन्यस्तभारादेर्दुःखमन्यैर्निवार्यते ।
क्षुधादिकृतदुःखं तु विना स्वेन न केनचित् ॥ ५४ ॥

मस्तकन्यस्तभारादेः-தலையில் வைக்கப்பட்டிருக்கும்
சுமை முதலானதினால் ஏற்படும் दुःखं-துக்கம், अन्यैः-
மற்றவர்களால், निवार्यते-விலக்கப்படுகிறது. क्षुधादिकृत-
दुःखं तु-பசி முதலானதினால் ஏற்படும் துக்கம் மாத்திரம்,
स्वेन विना-தன்னைத் தவிர, केनचित्-(வேறு) யாராலேயும்,
न-விலக்கமுடியாது. (54)

पथ्यमौषधसेवा च क्रियते येन रोगिणा ।
आरोग्यसिद्धिर्दृष्टास्य नान्यानुष्ठितकर्मणा ॥ ५५ ॥

येन-எந்த, रोगिणा-வியாதிஸ்தனால், पथ्यं-பத்திய
மாயிருப்பதும், औषधसेवा च-மருந்து ஸேவிப்பதும்,
क्रियते-செய்யப்படுகிறதோ, अस्य-இவனுக்கு, आरोग्य-
सिद्धिः-ஆரோக்யம் ஏற்படுவது, दृष्टा-காணப்படுகிறது.
अन्यानुष्ठितकर्मणा-இன்னொருவன் செய்யும் கார்யத்தினால்,
न-ஏற்படுவதில்லை. (55)

वस्तुस्वरूपं स्फुटबोधचक्षुषा स्वेनैव वेद्यं न तु पण्डितेन ।
चन्द्रस्वरूपं निजचक्षुषैव ज्ञातव्यमन्यैरवगम्यते किम् ॥ ५६ ॥

स्फुटबोधचक्षुषा-நிர்மலமான ஞானமாகிற கண்ணால்,
स्वेन एव தன்னாலேயே, वस्तुस्वरूपं-(ஆத்ம) வஸ்துவின்
ஸ்வரூபம், वेद्यं-அறியவேண்டியது. पण्डितेन (வேறு
ஒரு) வித்வானைக்கொண்டு, न तु-அறியக்கூடியதில்லை.
चन्द्रस्वरूपं-சந்திரனுடைய ஸ்வரூபம், निजचक्षुषा एव-தன்
கண்ணால் தான், ज्ञातव्यं-அறியக்கூடியது. अन्यैः-வேறு
மனுஷ்யர்கள் மூலமாய் (அல்லது கண்ணில்லாத மற்ற
வர்களால்) अवगम्यते किं-அறியப்படுமா? (56)

अविद्याकामकर्मादिपाशबन्धं विमोचितुम् ।
कः शक्नुयाद्विनात्मानं कल्पकोटिशतैरपि ॥ ५७ ॥

अविद्याकामकर्मादिपाशबन्धं-(தன் வாஸ்தவ ஸ்வரூபத்
தைத் தெரிந்துகொள்ளாததான) அவித்யை, (அதினால்



தன்னைவிட்டு தானல்லாத வெளிவிஷயங்களில்) ஆசை,
(அவ்வாசையை பூர்த்தி செய்வதற்காக ஏற்படும்
புண்ணிய பாபமென்கிற) கர்மாக்கள், (அவைகளால்
ஏற்படும் ஸுகதுக்க அனுபவங்கள்) முதலானவை
களாகிய கயிறுகளால் ஏற்பட்டிருக்கும் கட்டை (அத்யா
ஸத்தை) विमोचितुं-விலக்கிவிட, कल्पकोटिशतैः अपि-நூறு
கோடி பிரஹ்மகல்பங்களாலும் கூட, आत्मानं विना-தன்னை
தவிர்த்து, (ஆத்ம ஸாக்ஷாத்காரமில்லாமல்) कः-எவன்,
शक्नुयात्-சக்தியுள்ளவனாக இருப்பான்? (57)

(அ) இவ்விதமாக ஸம்ஸார பந்தத்திலிருந்து தன்னை,
தானே தான் விடுவித்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லி
விட்டு, அவ்விதம் விடுவித்துக்கொள்வதற்கும் ஆத்மாவின்
தத்வத்தை ஸாக்ஷாத்கரிப்பதைத்தவிர வேறு உபாயம்
கிடையாதென்பதை தெளிவுபடுத்துகிறார் :—

न योगेन न सांख्येन कर्मणा नो न विद्यया ।
ब्रह्मात्मैकत्वबोधेन मोक्षः सिध्यति नान्यथा ॥ ५८ ॥

ब्रह्म आत्म एकत्व बोधेन-பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்று
என்ற ஞானத்தினால் (தான்), मोक्षः-மோக்ஷம்,
सिध्यति-ஸித்திக்கும். अन्यथा-வேறு எந்தப் பிரகாரத்
தினாலும், न-ஸித்திக்காது. योगेन-யோகத்தை அனுஷ்
டிப்பதினால், न-ஏற்படாது, सांख्येन-ஸாங்கிய சாஸ்திரத்
தினால் ஏற்படும் அறிவினால், न-ஏற்படாது,
नो कर्मणा-(பலவித) கர்மாக்களைச் செய்வதினால், नो-
ஏற்படாது, विद्यया-(உபநிஷத் முதலியவைகளிலேயே
சொல்லப்பட்டிருக்கும்) உபாஸனைகளை செய்வதினாலும்,
न-ஏற்படாது.

மோக்ஷமானது ஆத்மாவின் ஸ்வரூப நிலையானபடியால்
அதை அறிந்துகொள்ளாமலிருக்கும் தன்மையை விலக்கிக்
கொள்ள ஸ்வரூப ஸாக்ஷாத்காரம்தான் உபயோகப்படுமே
தவிர, மற்ற ஸாதனங்கள் எவையும் பிரயோஜனப்படாது.
யோக சாஸ்திரத்திலேயோ, ஸாங்கிய சாஸ்திரத்திலேயோ,

தீர்மானித்திருப்பதால், ஆத்மா ஆத்மாக்கள் பலவென்று ஒப்புக்கொள்ளாததினால் அந்த என்பது ஒன்றுதான் என்று அவைகளையனுஸரித்து சாஸ்திரங்களினால் ஏற்படும் ஞானமும் ஆத்மதத்வத்தை செய்யப்படும் முறைகளும் வாஸ்தவமான கர்மாவோ தெரிவிக்கச் சக்தியற்றவைகள். வேதவிஹிதமான வேறு என்ற உபாஸனையோ இரண்டுமே பகவான் வேறு நாம் ஸ்வரூப அடிப்படையைக் கொண்டிருப்பதினால் அவைகளும் கர்ம ஸாக்ஷாத்காரத்திற்கு உதவாது. மேலும் இரண்டுமே பலன் ரூபமாயிருப்பதினால் அவைகளினால் அடையக்கூடிய அடையக்கூடியது உண்டுபண்ணக்கூடியது (உத்பாத்யம்), (ஸம்ஸ்கார்யம்), மாறக் (ஆப்யம்), சுத்தம் செய்யத்தக்கது ஒன்ருகத் கூடியது (விகார்யம்), என்ற நான்குவகைக்குள் நித்யஸித்தமாயிருப் தான் இருக்கும். ஆத்மஸ்வருபமோ ஸ்வருபமாகவே பதினால் உண்டுபண்ணக்கூடியதில்லை, தன் இருப்பதால் வேறு இடம் போய்த் தேடி அடையக்கூடியதில்லை. நித்ய நிர்மலமாயிருப்பதனால் சுத்தம் செய்யத்தக்கதுமில்லை. எப்பொழுதும் ஒரே நிலையிலிருப்பதால் மாறுதலடையக் கூடியதுமில்லை. ஆகையால் அதை ஸாக்ஷாத்கரிக்க அறியாமையை விலக்கக்கூடிய ஞானம் ஒன்றுதான் தேவை.

(அ) அந்த ஞானமும் அனுபவஞானமாயிருக்க வேண்டுமேதவிர, வெறும் கேள்வி ஞானமாயிருந்தால் பிரயோஜனமில்லையென்பதை மேலால் விளக்குகிருர் :—

वीणाया रूपसौन्दर्यं तन्त्रीवादनसौष्ठवम् ।
प्रजारञ्जनमात्रं तन्न साम्राज्याय कल्पते ॥ ५९ ॥

वीणायाः—வீணையினுடைய, रूप सौन्दर्यं—ரூபத்தின் அழகோ, तन्त्री वादन सौष्ठवं (அதிலுள்ள) தந்திகளை மீட்டுவதில், நல்ல இனிமையோ, तत्—அது, प्रजा रञ्जन मात्रं—ஜனங்களை ரஞ்ஜனம் செய்வதற்கு மாத்திரம் (உபயோகப்படுமேதவிர வீணை வாசிக்கிறவனுக்கு), साम्राज्याय—உத்தமமான ராஜபதவியைக் கொடுப்பதற்கு, न कल्पते—சக்தியற்றது.

பிரஜைகளை ஸந்தோஷமாகக் காப்பாற்றி ரஞ்ஜனம் பண்ணுவதால் அரசனுக்கு ராஜா என்று பெயர். இந்த



வைணிகனும் ரஞ்ஜனம் பண்ணுவதால் ராஜாவாக ஆகிவிட முடியுமா? என்று தாத்பர்யம். அவன் ராஜாவாக ஆகாதபோனாலும் ரஞ்ஜனம் செய்கிருனென்பது வாஸ்தவம் தானேயென்ருல், அந்த ரஞ்ஜனம் அவனுக்கு ஏதோவித ஸம்பாத்யத்திற்கு உபயோகப்படுமேதவிர, ராஜ பதவியைக் கொடுத்துவிடாது. (59)

(அ) சப்தத்தால் பிறர் மனதை ஸந்தோஷப்படுத்துகிறவர்களைப்பற்றிக் கூறிவிட்டு, சப்தத்தின் பொருளால் ஸந்தோஷப்படுத்துகிறவர்களுக்கும் அதே கதிதான் என்று கூறுகிருர் :—

वाग्वैखरी शब्दझरी शास्त्रव्याख्यानकौशलम् ।
वैदुष्यं विदुषां तद्वद्भुक्तये न तु मुक्तये ॥ ६० ॥

वाग् वैखरी—ஸரளமாகப் பேசும் தன்மை, शब्दझरी—தடையன்னியில் அருவிபோல சப்தங்களை உபயோகிக்கும் யோக்கியதை, शास्त्र व्याख्यान कौशलं—சாஸ்திரங்களை நன்கு விஸ்தரித்து பிரவசனம் செய்யக்கூடிய ஸாமர்த்தியம், (இவ்விதமான), विदुषां—அறிவாளிகளின், वैदुष्यं—அறிவுத்திறமையும், तद्वत्—அதைப்போலவே (வீணை வாசிப்பது போலவே) भुक्तये—(கியாதி, பணம், முதலிய) போகத்தையடைய (உபயோகப்படுமேதவிர), मुक्तये—ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலையடைவதற்கு, न तु—கொஞ்சமேனும் பிரயோஜனப்படாது. (60)

(அ) சாஸ்திரங்களை வாசித்தும்கூட அதன் முக்கிய பிரயோஜனமான ஆத்மதத்வ ஸாக்ஷாத்காரம் ஏற்படாவிட்டால் அவ்வாசிப்பு பிரயோஜனமற்றதுதான். அந்த ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டுவிட்டாலும் அதன்பிறகு அதற்கு ஸாதனமான சாஸ்திராப்பியாஸம் அவசியமில்லை என்பதும் வாஸ்தவம் என்கிருர் :—

अविज्ञाते परे तत्त्वे शास्त्राधीतिस्तु निष्फला ।
विज्ञातेऽपि परे तत्त्वे शास्त्राधीतिस्तु निष्फला ॥ ६१ ॥

परे-மிகவும் உத்கிருஷ்டமான, तत्त्वे-(ஸத்ய ஞானனந்தரூபமான) ஆத்மதத்வம், अविज्ञाते-அறியப்படவில்லையானல், शास्त्राधीतिस्तु-அர்த்த ஞானத்துடன் சாஸ்திரத்தை அத்யயனம் செய்ததுவோ, निष्फला-பிரயோஜனமற்றதாக ஆகும். परे-அந்த உத்கிருஷ்டமான, तत्त्वे-ஆத்மதத்வம், विज्ञातेऽपि-ஸாக்ஷாத்கரிக்கப்பட்டுவிட்டாலும் (அப்பொழுது இனித்தேவையில்லாததினல்), शास्त्राधीतिः तु-சாஸ்திர அத்யயனமோ, निष्फला-பிரயோஜனமற்றதுதான். (61)

(அ) சாஸ்திராப்பியாஸமில்லாமல் ஆத்ம ஞானம் ஏற்படாதென்பது வாஸ்தவமானலும் அந்த சாஸ்திரத்திலேயே உழன்றுகொண்டிருந்துவிடக்கூடாது. அவசியமாய்த் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயத்தில் மாத்திரம் கருத்துடனிருந்துகொண்டு பெரியோர்களிடமிருந்து தெரிந்துகொள்ளவேண்டும் என்கிருர் :—

शब्दजालं महारण्यं चित्तभ्रमणकारणम् ।
अतः प्रयत्नात् ज्ञातव्यं तत्त्वज्ञात् तत्त्वमात्मनः ॥ ६२ ॥

शब्दजालं-சப்தக் கூட்டமாகிற சாஸ்திரம், महारण्यं-பெரிய காடு. (அதில் புகுந்துவிட்டால்), चित्तभ्रमणकारणं-புத்தியை பிரமிக்கச்செய்யக் காரணமாயிருக்கும். अतः-ஆகையினல், प्रयत्नात्-மிகவும் பிரயாஸை எடுத்துக்கொண்டு, तत्त्वज्ञात्-ஆத்மதத்வ ஸாக்ஷாத்காரமடைந்த பெரியோரிடமிருந்து, आत्मनः-ஆத்மாவினுடைய (தன்னுடைய), तत्त्वं வாஸ்தவமான தன்மையை, ज्ञातव्यं-கேட்டறிந்துகொள்ளவேண்டும்.

காட்டு வழியாகப் போகவேண்டியவன் வழி தெரிந்தவரிடம் கேட்டுத் தெரிந்துகொண்டு அவ்வழியாகச் சென்று காட்டைக் கடக்கவேண்டும். அப்படியில்லாமல் தன் மனம் போனபடி சென்ருல் காட்டிலேயே சுற்றிக்கொண்டிருக்க வேண்டியதுதான். வெளியே செல்லமுடியாது. அதுபோல் ஆசார்ய உபதேசம்மூலம் ஆத்மதத்வத்தை அறிவதற்குத்தான்



சாஸ்திரம் ஸாதனமாகுமேதவிற, சாஸ்திர விசாரத்திலேயே எப்பொழுதும் ஈடுபடக்கூடாது.

लोकवासनया जन्तोः शास्त्रवासनयापि च ।
देहवासनया ज्ञानं यथावन्नैव जायते ॥

லோக வாஸனை, தேஹ வாஸனைபோல் சாஸ்திர வாஸனையும் ஞானத்திற்குப் பிரதிபந்தகம். (62)

अज्ञानसर्पदष्टस्य ब्रह्मज्ञानौषधं विना ।
किमु वेदैश्च शास्त्रैश्च किमु मन्त्रैः किमौषधैः ॥ ६३ ॥

अज्ञानसर्पदष्टस्य-அக்ஞானமாகிற ஸர்ப்பத்தினல் கடிக்கப்பட்டிருக்கிறவனுக்கு, ब्रह्मज्ञान औषधं विना பிரஹ்மத்தை அறிவதாகிய மருந்தை விட்டு, वेदैश्च வேதங்களினலேயும், शास्त्रैश्च சாஸ்திரங்களினலேயும், किमु-என்ன தான் பிரயோஜனம்? मन्त्रैः-மந்திரங்களினல், किमु-என்ன தான் பிரயோஜனம்? औषधैः-மருந்துகளினல், किं-என்ன பிரயோஜனம்?

न गच्छति विना पानं व्याधिः औषधशब्दतः ।
विनाऽपरोक्षानुभवं ब्रह्मशब्दैर्न मुच्यते ॥ ६४ ॥

व्याधिः-வியாதியானது, पानं विना-(மருந்து) அருந்துவதை தவிர்த்து, औषधशब्दतः மருந்து மருந்து என்ற சப்தத்தை உச்சரிப்பதினல், न गच्छति-போய்விடாது. (அப்படியே), अपरोक्षानुभवं विना-(பிரஹ்மத்தை) ஸாக்ஷாத்தாக அனுபவிப்பதை தவிர்த்து, ब्रह्मशब्दैः-பிரஹ்மம், பிரஹ்மம் என்று சப்தங்களை சொல்வதினல், न मुच्यते-(ஸம்ஸார பந்தத்திலிருந்து) விடுபடமாட்டான்.

अकृत्वा दृश्यविलयं अज्ञात्वा तत्त्वं आत्मनः ।
ब्रह्मशब्दैः कुतो मुक्तिः उक्तिमात्रफलैः नृणाम् ॥ ६५ ॥

दृश्यविलयं-அறிவிற்கு விஷயமாகிற ஜடமான எல்லா திருச்யவஸ்துக்களுடைய மறைவுதலை, अकृत्वा-செய்யா மல், आत्मनः-ஆத்மாவினுடைய, तत्त्वं-வாஸ்தவ ஸ்வ ரூபத்தை, अज्ञात्वा-அறிந்துகொள்ளாமல், उक्तिमात्रफलैः-உச்சரிப்பதை மாத்திரம் பிரயோஜனமாயுள்ள, बाह्यशब्दैः-வெளி சப்தங்களினால், नृणां-மனிதர்களுக்கு, मुक्तिः-மோக்ஷம், कुतः-எப்படி ஏற்படும்? (65)

अकृत्वा शत्रुसंहारं अगत्वाऽखिलभूश्रियम् ।
राजाऽहं इति शब्दान्नो राजा भवितुमर्हति ॥ ६६ ॥

शत्रुसंहारं சத்ருக்களுடைய ஸம்ஹாரத்தை, अकृत्वा-செய்யாமலும், अखिलभूश्रियं-எல்லா பூமிஸம்பந்தமான ஐசுவர்யத்தை; अगत्वा-அடையாமலும், अहं-நான், राजा-அரசன், इति-என்று, शब्दात्-சொல்லிக்கொள்வதினால் (மாத்திரம்), राजा-அரசனாக, भवितुं-ஆகிவிட, नो अर्हति-யோக்கியதையுள்ளவனாகமாட்டான். (66)

(அ) நமக்குள்ளேயே பதிந்து மறைந்திருக்கும் ஆத்ம தத்வத்தை வெளிப்படுத்தி நேரில் அனுபவிப்பது பூமியில் புதைத்துவைத்திருக்கும் புதையலை எடுப்பதுபோலவே மிகவும் சிரமப்பட்டு ஸாதிக்கவேண்டிய காரியம், வெறும் பேச்சு பிரயோஜனம் இல்லை என்பதை விஸ்தாரமாகச் சொல்கிறார் :—

आप्तोक्तिं खननं तथोपरिशिलाद्युत्कर्षणं स्वीकृतिं
निक्षेपः समपेक्षते न हि बहिः शब्दैस्तु निर्गच्छति ।
तद्वद् ब्रह्मविदोपदेशमननध्यानादिभिः लभ्यते
मायाकार्यतिरोहितं स्वममलं तत्त्वं न दुर्युक्तिभिः ॥ ६७ ॥

आप्तोक्तिं-(அறிவாளியாயும் நம்மிடத்தில் ஹிதபுத்தியுடன் கூடினவனாயும் இருக்கும்) நண்பனுடைய சொல்லையும், (அதன் பிறகு), खननं-பூமியைத் தோண்டுதலையும், तथा-அப்படியே, उपरिशिला अपाकर्षणं-மேலே மூடியிருக்கும் கல்லை அப்புறப்படுத்துதலையும் (பிறகு), स्वीकृतिं-எடுத்து தனக்கு ஸ்வாதீனமாக்கிகொள்வதையும், निक्षेपः-புதையல், समपेक्षते-நன்கு எதிர்பார்க்கிறது. बहिः शब्दैः-வெளியிலிருந்து (புதையல், புதையல் என்று) சப்தங்களைச் சொல்வதினால், न हि तु निर्गच्छति-(அதுவாக) வெளியில் வந்துவிடாது என்பது பிரஸித்தம். तद्वत्-அதுபோலவே, मायाकार्यतिरोहितं-மாயையினாலும் அதினால் ஏற்பட்டிருப்பவைகளாலும் மறைக்கப்பட்டிருக்கும், स्वं-தன்னுடைய, अमलं-நிர்மலமான, तत्त्वं வாஸ்தவமான ஸ்வரூபம், ब्रह्मविदोपदेशमननध्यानादिभिः-பிரஹ்மத்தையறிந்த குருவினிடமிருந்து, நன்கு உபதேசம் பெற்று அதை மனனம் செய்வது தியானம் செய்வது முதலான ஸாதனங்களினால் (தான்), लभ्यते-அடையப்படும், दुर्युक्तिभिः-(வேதத்தை அனுஸரிக்காத) வீண் யுக்தி வாதங்களினால், न-அடையமுடியாது.



இங்கு "न दुर्युक्तिभिः" என்ற வார்த்தையால், வேத விருத்தமான வீண் யுக்தி வாதங்களால் ப்ரஹ்மஞானத்தைப் பெறமுடியாது என்று கூறப்பட்டது. ஆகவே வேதானுஸாரியான ஸத்யுக்திகள் ப்ரஹ்மஞானத்திற்கு உபகாரகம் என்று தெரிகிறது. ஸத்யுக்திகளைக்கொண்டு ஆத்ம ஸ்வரூபத்தை விசாரிப்பதுதான் மனனம் என்பது,

'दुस्तर्कात्सुविरम्यतां श्रुतिमतस्तर्कोऽनुसन्धीयतां'

என்று உபதேசபஞ்சகத்தில் பகவத்பாதர் கூறியிருக்கிறார். (67)

तस्मात् सर्वप्रयत्नेन भवबन्धविमुक्तये ।
स्वैरेव यत्नः कर्तव्यो रोगादेरिव पण्डितैः ॥ ६८ ॥

तस्मात्-ஆகையால், भवबन्धविमुक्तये-ஸம்ஸாரமாகிற கட்டிலிருந்து விடுபடுவதற்கு, रोगादेः इव-வியாதி முதலானதுகளிலிருந்து விடுபடுவதற்குப் போலவே, स्वैर एव-தன்னாலேயே, पण्डितैः-அறிவுள்ளவர்களால், सर्वप्रयत्नेन-எல்லாவித முயற்சியினாலும், यत्नः-பிரயத்தினம், कर्तव्यः-செய்யவேண்டியது. (68)

## 9. மோக்ஷ ஸாதனங்கள்

*(அ) சிஷ்யன் ஆத்மதத்வத்தைத் தெரிந்துகொள்ளப் பிரயத்தினம் செய்து கேள்வி கேட்டதை மெச்சி அப் பிரயத்தினம் மிகவும் அவசியம் என்பதை இதுவரை விஸ்தார மாக எடுத்துச்சொல்லிவிட்டு, இனி கேள்வி கேட்ட முறையும் மிகவும் சிலாக்கியமாயிருக்கிறதென்பதைக் குறிப்பிட்டுவிட்டு, தான் சொல்லும் பதிலை வெகு கவனமாகக் கேட்கவேண்டும் என்று சொல்கிறார் :—*

यस्त्वयाऽद्य कृतः प्रश्नो वरीयान् शास्त्रविन्मतः ।
सूत्रप्रायो निगूढार्थो ज्ञातव्यश्च मुमुक्षुभिः ॥ ६९ ॥

अद्य-இப்பொழுது, त्वया-உன்னால், यः-எந்த, प्रश्नः-கேள்வி, कृतः-கேட்கப்பட்டிருக்கிறதோ (அது), वरीयान्-மிகவும் சிலாக்யமானது, शास्त्रविन्मतः-சாஸ்திரத்தை யறிந்தவர்களால் ஒப்புக்கொள்ளக் கூடியது, सूत्रप्रायः-ஸூத்திரம் மாதிரி மிகச் சுருக்கமாயிருக்கிறது, (ஸூத்திரம் போலவே), निगूढार्थः-பல விஷயங்களை அடக்கிக் கொண்டிருக்கிறது, मुमुक्षुभिः-மோக்ஷத்தில் ஆசையுள்ளவர்களால் (அவசியம்), ज्ञातव्यः च தெரிந்துகொள்ள வேண்டியதும் கூட. (69)

शृणुष्वावहितो विद्वन् यन्मया समुदीर्यते ।
तदेतच्छ्रवणात् सद्यो भवबन्धाद् विमोक्ष्यसे ॥ ७० ॥

विद्वन्-அறிவாளியே, यत्-எது, मया-என்னால், समुदीर्यते-நன்கு சொல்லப்படுகிறதோ (அதை), अवहितः-கவனமாக, शृणु-கேள். तदेतच्छ्रवणात्-நான் சொல்லப் போகிற இதைக்கேட்டறிவதினால், सद्यः-உடனே (தாமதமன்றியில்), भवबन्धात्-ஸம்ஸாரமாகிற பந்தத்தி லிருந்து, विमोक्ष्यसे-நன்கு விடுபட்டுவிடுவாய். (70)

*(அ) இவ்விதம் விஸ்தாரமான பீடிகையுடன் சிஷ்யனை தான் சொல்வதை மிகக் கவனத்துடன் கேட்கும்படிச்செய்து*



*அவன் 51-வது சுலோகத்தில் கேட்ட கேள்விகளுக்குக் குருநாதர் பதில் சொல்ல ஆரம்பிக்கிறார். அவன் மொத்தம் 7 கேள்விகள் கேட்டிருந்தபோதிலும், அவன் அதற்கு முன்பே ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட வழியிருக்கிறதா என்று 42-வது சுலோகத்தில் கேட்டதற்கு, உபாயம் இருக்கிறதென்று குருவும் 46-வது சுலோகத்தில் சுருக்கமாக சொல்லி அவனுக்குத் தைர்யம் கொடுத்திருப்பதால் அவ்வுபாயத்தையே விரிவாகச் சொல்வதுதான் நியாயமென்று நினைத்து அவனுடைய 4-வது கேள்வியான "மோக்ஷம் எப்படி ஏற்படும்?" என்பதற்குப் பதில் சொல்ல ஆரம்பிக்கிறார். பாக்கி கேள்விகளெல்லாம் இதிலேயே உள்ளடங்கியவை என்பதும் தாத்பர்யம்:—*

मोक्षस्य हेतुः प्रथमो निगद्यते वैराग्यमत्यन्तं अनित्यवस्तुषु ।
ततः शमश्चापि दमस्तितिक्षा न्यासः प्रसक्ताखिलकर्मणां भृशम् ॥

ततः श्रुतिस्तन्मननं सतत्त्वध्यानं चिरं नित्यनिरन्तरं मुनेः ।
ततोऽविकल्पं परमेत्य विद्वान् इहैव निर्वाणसुखं समृच्छति ॥ ७२ ॥

मोक्षस्य-மோக்ஷத்திற்கு, प्रथमः-முதலாவது, हेतुः-காரணம், अनित्य वस्तुषु-அநித்யமான ஸகல வஸ்துக்களிலும், अत्यन्तं-எல்லையற்று, वैराग्यं-ஆசையற்றிருத்தல் (என்று) निगद्यते-சொல்லப்படுகிறது, ततः-அதன் பிறகு, शमश्च சமமும், अपि-மேலும், दमः-இந்திரிய நிக்ரஹம், तितिक्षा-எல்லா துக்கங்களையும் ஸஹித்தல், प्रसक्त अखिल-कर्मणां-(சித்த சுத்திக்கு ஸாதனமாய் முன்னால்) செய்ய வேண்டியதாய் ஏற்பட்டிருந்த எல்லா கர்மாக்களையும், भृशं-அறவே, न्यासः-விட்டுவிடுவது (ஸந்யாஸம்), ततः அதன் பின், श्रुतिः-(குருவைத் தேடியடைந்து அவர் மூலமாய் தத்வத்தை) கேட்டுத் தெரிந்து கொள்வது, तन्मननं-அதை ஸந்தேஹமற மனனினால் பரிசீலனை செய்வது, मुनेः-மனனம் செய்கிறவனுக்கு (பிறகு), चिरं-வெகுகாலம், नित्य निरन्तरं-எப்பொழுதும் இடைவிடாமல், सतत्त्वध्यानं-(அவ்விதம் கேட்டு ஸ்திரப்பட்டி

ருக்கும்) தத்வத்தையே திருப்பித் திருப்பி அனுஸந்தானம் செய்வது. ततः-அதன் பின், अविकल्पं-விகல்பமற்ற, परं-உத்தமமான நிலையை, एत्य-அடைந்து, विद्वान्-பிரஹ்ம ஸாக்ஷாத்காரமடைந்தவன், इह एव-இங்கேயே, निर्वाण सुखं-மோக்ஷ ஆனந்தத்தை, समृच्छति-தடங்கலன்னியில் அடைகிருர்.

இந்த சுலோகத்தில் முதலில் வைராக்யம், பிறகு சமம், தமம் என்று கூறியிருந்தாலும் எல்லா ஸாதனங்களும் ஞான காலத்தில் இருக்கவேண்டும் என்பதை 'च अपि' என்ற சொற்களால் காட்டுகிருர். முன்னுல் சித்தசுத்தியும் வைராக்யமும் ஏற்படுவதற்காக பலனை த்யாகம் செய்து கர்மாக்களை அனுஷ்டிக்கவேண்டும். பூர்ண வைராக்யம் ஏற்பட்டபின் ஸந்யாஸத்தைக் கைக்கொண்டு எல்லாக் கர்மாக்களையும் த்யாகம் செய்யவேண்டும். சிரவண மனனங்களுக்குப்பின் நிதித்யாஸனத்தை இடைவிடாது தொடர்ந்து சிரகாலம் அனுஷ்டிக்கவேண்டும். வேதங்கள் மொத்தம் நான்குதான் என்பதைத் தெரிந்துகொண்ட ஒருவன் நான்கு வேதங்களையும் அத்யயனம் செய்வதற்கு தன் பையனை வேதபாடசாலைக்கு அனுப்பினுன். 5 நாட்கள் ஆகிவிட்டன. தந்தை எண்ணினுன் 'மொத்தம் வேதங்கள் நான்குதானே. என் பையன் பாடசாலைக்குப்போய் 5 நாட்கள் ஆகிவிட்டனவே! இன்னும் பையன் அத்யயனத்தை முடித்துக்கொண்டு திரும்பி வரவில்லையே' என்று. இதுபோலவேதான் நிதித்யாஸனத்தை சிறிது காலம் மட்டும் அனுஷ்டிப்பவனும் விட்டுவிட்டு அனுஷ்டிப்பவனும் பலனையடையமாட்டார்கள். (71-72)

## 10. ஸ்தூல சரீரம்

(அ) 71வது சுலோகத்தினுல் மோக்ஷமடைவதற்கு பஹிரங்க ஸாதனங்களாகிய ஸாதன சதுஷ்டயம் என்கிற விவேகம், வைராக்யம், சமாதிகள், முமுக்ஷுத்வம் இவைகளையும், 72வது சுலோகத்தினுல் அந்தரங்க ஸாதனங்களாகிற சிரவணம், மனனம், நிதித்யாஸனம், ஸவிகல்பக ஸமாதி, நிர்விகல்பக ஸமாதி, இவைகளையும் பொதுவாக சொல்லி விட்டு, இனிமேல் அந்த ஸாதனங்களை ஒவ்வொன்ருக எடுத்துக் கொண்டு விஸ்தாரமாகச் சொல்கிருர். முதலாவ்தாக விவேகம்



என்பதாகிய ஆத்மாவிற்கும் அனாத்மாவிற்கும் உள்ள வேற்றுமையை உணர்ந்து அவ்விரண்டையும் பிரித்து அறிதலென்ற ஆத்ம-அனாத்ம விவேசனத்தைப்பற்றி சொல்ல ஆரம்பிக்கிருர். அதிலும் ஆத்மஸ்வரூபம் மிகவும் ஸூக்ஷ்மமாகவும் துரூஹமாகவும் இருப்பதால் எது ஆத்மாவல்லவென்று தெரிவதன்மூலமாகவே ஆத்மாவை அறியவேண்டியிருப்பதால் ஆத்மா அல்லாதது எவையெல்லாம் என்று சொல்லும்படி ஏற்படுகிறது. எல்லோராலும் எளிதில் அறியக்கூடியதான ஸ்தூல சரீரத்தை முதலில் எடுத்துக்கொள்கிருர்:—

यद् बोद्धव्यं तवेदानीं आत्मानात्मविवेचनम् ।
तदुच्यते मया सम्यक् श्रुत्वाऽऽत्मन्यवधारय ॥ ७३ ॥

तव உனக்கு, इदानीं-இப்பொழுது (முதலில்) यत्-எது, बोद्धव्यं-தெரியவேண்டியதோ, तत्-அந்த, आत्म-अनात्म विवेचनं-ஆத்மா அனாத்மா இவைகளைப் பிரித்து அறிவது, मया-என்னால், सम्यक्-தெளிவாக, उच्यते-சொல்லப்படுகிறது. (அதை), (सम्यक्-நன்ருக), श्रुत्वा-கேட்டுக்கொண்டு, आत्मनि-மனஸில், अवधारय-நிச்சயப் படுத்திக்கொள். (73)

मज्जास्थिमेदःपलरक्तचर्मत्वगाह्वयैः धातुभिरेभिरन्वितम् ।
पादोरुवक्षोभुजपृष्ठमस्तकैः अङ्गैरुपाङ्गैरुपयुक्तमेतत् ॥ ७४ ॥

अहं ममेति प्रथितं शरीरं मोहास्पदं स्थूलमितीर्यते बुधैः ।

मज्जा-अस्थि-मेदः-पल रक्त चर्म-त्वक्-आह्वयैः-மஜ்ஜை-எலும்பு-கொழுப்பு-மாம்ஸம்-ரக்தம்-வெளித்தோல்-உள் தோல்-என்றபெயர்களையுடைய, एभिः-இந்த, धातुभिः-தாதுக்களுடன், अन्वितं-கூடினதும், पाद-ऊरु-वक्षो-भुज-पृष्ठ-मस्तकैः-கால்-துடை-மார்பு-கை-முதுகு-தலையென்ற, अङ्गैः-அங்கங்களுடனும், उपाङ्गैः-அவைகளை யொட்டின அங்கங்களுடனும், उपयुक्तं-சேர்ந்திருப்பதும், अहं-நான், मम-என்னுடையது, इति-என்று, प्रथितं-பிரஸித்தமா

யிருப்பதும், मोह आस्पदं-(அதுவே தான் ஆத்மாவென்று எண்ணுவதாகிய) மோஹத்திற்கு விஷயமாயிருப்பது மான, एतत्-இந்த (எல்லாருக்கும் ப்ரத்யக்ஷமாயிருக்கும்), शरीरं-சரீரம், बुधैः-அறிவுள்ளவர்களால், स्थूलं-ஸ்தூலம், इति-என்று, ईर्यते-சொல்லப்படுகிறது.

பல பொருள்கள் சேர்ந்து ஓரிடத்தில் இருப்பதைத்தான் ஸ்தூல சரீரம் என்கிறோம். இவை பலவாக இருப்பதாலேயே இவைகளால் பயன்பெறும் யஜமானன் - ஆத்மா இவைகளைக்காட்டிலும் வேறானவன். இவைகளே ஆத்மா அல்ல என்பதை நாம் தீர்மானிக்கலாம். சுவர், தூண் முதலான பல வஸ்துக்கள் நிறைந்த வீடு பிறருக்காக ஏற்பட்டது. "संहतानां परार्थत्वात्" என்பது நியாயம்.

(அ) இச்சரீரத்திற்கு ஸ்தூலம் என்று ஏன் பெயர் வந்தது என்றால் ஸூக்ஷ்மமாயுள்ள ஐந்து மஹாபூதங்களாகிற ஆகாசம், வாயு, தேஜஸ், அப்பு, ப்ருதிவீ இவைகள் பஞ்சீகரணம் என்ற முறைப்படி கலந்து ஏற்பட்ட ஸ்தூலமான ஐந்து மஹாபூதங்களால் செய்யப்பட்டிருப்பதால் என்று சொல்கிறார். சரீரம் உண்டாகி அழிவதாலும் இது நித்யமான ஆத்மாவாக இருக்கமுடியாது என்பதை இதன் மூலம் காட்டுகிறார்:—

नभोनभस्वद्दहनाम्बुभूमयः, सूक्ष्माणि भूतानि भवन्ति तानि ॥
परस्परांशैर्मिलितानि भूत्वा स्थूलानि च स्थूलशरीरहेतवः ।

नभो नभस्वत् दहन-अम्बु-भूमयः-ஆகாசம்-வாயு-தேஜஸ்-ஜலம்-பூமி-இவை, सूक्ष्माणि-ஸூக்ஷ்மமான, भूतानि-பூதங்களாக, भवन्ति-இருக்கின்றன, तानि-அவைகள், परस्पर अंशैः-ஒவ்வொன்றும் மற்றவைகளின் அம்சங்களுடன், मिलितानि-சேர்ந்தவைகளாகி, स्थूलानि-ஸ்தூலமாக, भूत्वा-ஏற்பட்டு, स्थूल-शरीर-हेतवः-ஸ்தூல-சரீரத்திற்கு-காரணங்களாகவும் இருக்கின்றன.

ஒவ்வொரு ஸ்தூல ஆகாசத்திலும் பாதிபாகம் ஸூக்ஷ்ம ஆகாசம், அரைக்கால் பாகம் வாயு, அரைக்கால் பாகம்



தேஜஸ், அரைக்கால் பாகம் ஜலம், அரைக்கால் பாகம் பூமி என்றிருக்கின்றதென்றும், அவ்விதமே மற்ற ஸ்தூல பூதங்களிலும் தன் சொந்த ஸூக்ஷ்மபூதத்தின் அம்சம் பாதி, இதர ஸூக்ஷ்மபூதங்களின் அரைக்கால் அரைக்கால் பாகங்களும், சேர்ந்திருக்கின்றன என்றும் சொல்லப்படுகிறது. இவ்விதமாக ஒவ்வொரு ஸ்தூலபூதத்திலும் ஐந்து பூதங்களின் ஸூக்ஷ்மாம்சமும் இருப்பதால் இவ்வித சேர்க்கையை பஞ்சீகரணம் என்று வியவஹரிக்கப்படுகிறது. இவைகள் இவ்விதம் கலந்து ஏற்படும் ஸ்தூலபூதங்களாலேயே இந்த சரீரம் செய்யப்பட்டிருப்பதால் இதற்கு ஸ்தூலம் என்று பெயர். (75)

(அ) இதைப்பற்றி மேலால் 89-வது சுலோகத்திலிருந்து சொல்லப்போகிறபோதிலும் இதற்கு முந்தின சுலோகத்தில் இதை மோஹத்திற்கு ஆஸ்பதம் என்று சொல்லியிருப்பதை இங்கு கொஞ்சம் விஸ்தரிக்கிறார். இது மோஹத்திற்குக் காரணமாயிருப்பது அவ்வைந்து பூதங்களும் நம்முடைய இந்திரியங்களை இழுத்து ஸம்ஸாரத்தில் உழலும்படிச் செய்வதினால் தான் என்பதையும் விளக்குகிறார்:—

मात्रास्तदीया विषया भवन्ति शब्दादयः पञ्च सुखाय भोक्तुः ॥७६॥

तदीयाः-அவைகளுடையதான, मात्राः-ஸாரமாய் அனுபவிக்கக்கூடிய, पञ्च-ஐந்து, शब्दादयः-சப்தம் முதலான, विषयाः-விஷயங்கள், भोक्तुः-அனுபவிக்கிற ஜீவனுக்கு, सुखाय-(விஷய ஸம்பந்தமான அநித்ய) ஸுகத்தின் பொருட்டு भवन्ति-ஏற்படுகின்றன.

ஆகாசத்திலிருந்து சப்தம், வாயுவிலிருந்து ஸ்பர்சம், தேஜஸ்ஸிலிருந்து ரூபம், ஜலத்திலிருந்து ரஸம், ப்ருதிவீயிலிருந்து கந்தம் என்று முறையே எடுத்துக்கொள்ளவேண்டும்.

य एषु मूढा विषयेषु बद्धाः रागोरुपाशेन सुदुर्दमेन ।
आयान्ति निर्यान्त्यध ऊर्ध्वमुच्चैः स्वकर्मदूतेन जवेन नीताः ॥

ये-எவர்கள், एषु-இந்த, विषयेषु-விஷயங்களில், मूढाः-மோஹத்தையடைந்தவர்களாய், सुदुर्दमेन-மிகவும் அறுக்க முடியாத, राग-उरु-पाशेन-ஆசையாகிற கெட்டி

யான கயிற்றினுல், बद्धाः - கட்டுப்பட்டிருக்கிறுர்களோ (அவர்கள்), स्व-कर्म-दूतेन - தன்னுடைய கர்மாவான தூதனுல், अधः-கீழேயும், ऊर्ध्वं-மேலேயும், उच्चैः-உயரவும், जवेन-வேகமாய், नीताः-கொண்டுபோகப்பட்டவர்களாக, आयान्ति-வருகிறுர்கள், निर्यान्ति-போகிறுர்கள்.

ந்யாயஸ்தலத்தில் விசாரிக்கப்படவேண்டிய குற்றவாளிகளை மேல்கட்டடத்திற்கும் கீழ்கட்டடத்திற்கும் அழைத்துச் செல்வதுபோல் விஷயபோகங்களில் ஈடுபட்ட ராகிகளை புண்ய பாப கர்மாக்கள் மேல்பிறவியையும் கீழ்பிறவியையும் அடையும்படி செய்கின்றன. (77)

(அ) இந்த ஐந்துவித விஷயங்களுக்கு இடம் கொடுத்து விட்டால் ஆபத்துதான் என்பதற்கு உதாஹரணங்களைக் காட்டுகிறுர் :—

शब्दादिभिः पञ्चभिरेव पञ्च पञ्चत्वमापुः स्वगुणेन बद्धाः ।
कुरङ्गमातङ्गपतङ्गमीनभृङ्गाः नरः पञ्चभिरञ्चितः किम् ॥ ७८ ॥

पञ्चभिः-ஐந்து, शब्दादिभिः-சப்தம் முதலானதுகளால், स्वगुणेन एव-அததன் குணம் ஒன்றினுல் மாத்திரமே, बद्धाः-கட்டுப்பட்ட, पञ्च ஐந்து பிராணிகளாகிய, कुरङ्ग-(சப்தத்தில் ஈடுபட்டு) மான், मातङ्ग-(பெண் யானையின் ஸ்பர்சத்தில் ஆசைவைத்து) யானை, पतङ्ग-(விளக்கின் ருபத்தினுல் ஏமாந்து) விட்டில் பூச்சி, मीन-(தூண்டிலில் இருக்கும் ஆஹாரத்திலுள்ள ரஸத்தினுல் இழுக்கப்பட்டு) மீன், भृङ्गाः-(புஷ்பத்திலுள்ள வாஸனையில் மோஹம் கொண்டு) வண்டு, இவை, पञ्चत्वं-மரணத்தையே, आपुः அடைந்தன. पञ्चभिः - ஐந்துடனும், अञ्चितः - சேர்ந்து இருக்கும், नरः-மனிதன், किं-என்ன ? (ஆவானென்று சொல்லவேண்டுமா ?) (78)

(அ) இந்த ஐந்து பிராணிகளும் விஷயங்களை அனுபவிக்கப்போய் மரணமடைந்தன. ஆனுலும் அவைகளுக்கு பாபம் ஏற்படாது மனிதனுக்கோ அதுவும் ஏற்படும். தவிரவும்,



வாஸ்தவத்தில் விஷயங்களை அனுபவித்தால் தான் ஆபத்து என்று நினைக்கவேண்டாம், அவைகளைப் பார்த்தாலே ஆபத்துண்டு என்கிருர் :—

दोषेण तीव्रो विषयः कृष्णसर्पविषादपि ।
विषं निहन्ति भोक्तारं द्रष्टारं चक्षुषाऽप्ययम् ॥ ७९ ॥

विषयः-விஷயமானது, कृष्ण-सर्प-विषादपि-கருநாகத்தின் விஷத்தைக் காட்டிலும்கூட, दोषेण - தோஷமுள்ள அம்சத்தில், तीव्रः-கடுமையானது, विषं विஷம், भोक्तारं-உட்கொள்பவனை, निहन्ति - கொல்லுகிறது. अयं - இது (விஷயம்). चक्षुषा கண்ணுல், द्रष्टारमपि-பார்க்கிறவனைக் கூட(கொன்று விடுகிறது.)

கை, கால் முதலிய அவயவங்களில் பாம்பு கடித்தால்கூட உடனே தக்க சிகித்ஸை செய்து விஷத்தைக் கட்டி நாடிகளில் பரவாமல் செய்தால் பிழைத்துவிடுவான். விஷத்தைக் குடித்தவன் பிழைக்கமாட்டான். விஷமானது குடித்தவனைக் கொன்று அவனை இல்லாமற் செய்துவிடுகிறது. ரூபம் முதலான விஷயங்களோ பார்த்தவனைக்கூட இல்லாமல் செய்துவிடுகிறது. அதாவது அழகிய பெண்களின் உருவத்தைப் பார்த்து ஒருவருக்கொருவர் சண்டையிட்டு அழிந்துவிடுகிறுர்கள். ஒருவேளை சண்டை ஏற்படாமல் சாகாவிட்டாலும் விஷயத்தைக் கண்டவனுக்கு ஆத்மஸ்வரூபம் ஒருக்காலும் விளங்காது. (79)

विषयाशामहापाशात् यो विमुक्तः सुदुस्त्यजात् ।
स एव कल्पते मुक्त्यै नान्यः षट्छास्त्रवेद्यपि ॥ ८० ॥

यः-எவன், सुदुस्त्यजात्-மிகவும் விலக்க முடியாததான, विषय-आशा-महा पाशात्-விஷயத்திலுள்ள ஆசையென்கிற பெரிய கயிற்றிலிருந்து, विमुक्तः-நன்கு விடுபட்டவனுகிருனே, सः एव- அவன் தான், मुक्त्यै-மோக்ஷத்தை அடைவதற்கு, कल्पते-சக்தியுள்ளவன் ஆவான். षट्-शास्त्रवेदी अपि-ஆறு சாஸ்திரங்களை

அறிந்தவனாய் இருந்தாலும்கூட, अन्यः-வேறு யாரும், न-சக்தியுள்ளவனாகமாட்டான். (80)

(அ) வைராக்யம் திடமாயில்லாதபக்ஷத்தில் ஆத்மஞானத்தை யடையமுடியாதென்பது மாத்திரமல்ல. ஆபத்தில் கொண்டுவிடுமென்று திருஷ்டாந்தம் மூலமாய் தெளிவுபடுத்துகிறார் :—

आपातवैराग्यवतो मुमुक्षून् भवाब्धिपारं प्रतियातुमुद्यतान् ।
आशाग्रहो मज्जयतेऽन्तराले निगृह्य कण्ठे विनिवर्त्य वेगात् ॥ ८१ ॥

मुमुक्षून्-மோக்ஷத்தில் இச்சையுள்ளவர்களாய் இருந்தும், भव अब्धि पारं-ஸம்ஸார ஸமுத்திரத்தின் கரையை, प्रतियातुं-அடைவதற்கு, उद्यतान्-பிரயத்தினம் செய்பவர்களாயிருந்தும், आपात वैराग्यवतः-மேலுக்கு மாத்திரம் வைராக்கியம் உள்ளவர்களாயிருப்பவர்களை, आशा-ग्रहः-ஆசையென்ற முதலை, कण्ठे-கழுத்தில், निगृह्य-நன்கு பிடித்துக்கொண்டு, वेगात्-(அக்கரைக்குப்போகவேண்டுமென்ற) ஆர்வத்திலிருந்து, विनिवर्त्य-நன்கு தடுத்துத் திருப்பி, अन्तराले நடு மத்தியில் (அந்த ஸமுத்திர மத்தியில்), मज्जयते-மூழ்கடித்துவிடுகிறது.

தீவ்ரவைராக்யமுள்ளவன் புலன்களையும் மனதையும் அடக்கி ஸத்குருவையடைந்து ஞானம் பெற்று முக்தி அடைகிறான். உறுதியான வைராக்யமில்லாதவன் ஞானத்தை யடைய முயற்சித்தபோதிலும் புலன்களையும், மனதையும் அடக்காததால் ஆசையால் இழுக்கப்பட்டு பிறவிக் கடலில் அமிழ்ந்து துன்புறுகிறான். ஞானத்தையும் முக்தியையும் அடைவதில்லை. (81)

विषयाख्यग्रहो येन सुविरक्त्यसिना हतः ।
स गच्छति भवाम्भोधेः पारं प्रत्यूहवर्जितः ॥ ८२ ॥

विषयाख्य ग्रहः-விஷயம் என்கிற முதலை, येन எவனால், सुविरक्ति असिना தீவிரமான வைராக்யமாகிற வாளினால், हतः-கொல்லப்படுகிறதோ, सः-அவன் (தான்), प्रत्यूह-वर्जितः-இடைஞ்சல் இல்லாமல், भवाम्भोधेः-ஸம்ஸாரக் கடலின், पारं-அக்கரையை, गच्छति-அடைகிறான். (82)



(அ) வைராக்கியத்துடன் ஸத்குருவை அடைந்து அவருடைய உபதேசத்தைப்பெற்று, தானும் நன்கு ஆலோசனை செய்து அனுபவத்திற்கு கொண்டுவந்தால்தான் உத்தேசிக்கிற பலன் கிடைக்கும் என்கிறார் :—

विषमविषयमार्गे गच्छतोऽनच्छबुद्धेः
प्रतिपदमभिघातो मृत्युरप्येष सिद्धः ।
हितसुजनगुरूक्त्या गच्छतः स्वस्य युक्त्या
प्रभवति फलसिद्धिः सत्यमित्येव विद्धि ॥ ८३ ॥

विषम-विषय-मार्गे-மிகவும் இடைஞ்சலுள்ள விஷயங்களின் வழியே, गच्छतः-போகிற, अनच्छबुद्धेः-சுத்தமில்லாத மனஸுடையவனுக்கு, प्रतिपदं-ஒவ்வொரு கால் அடியிலும், अभिघातः-தடங்கலும், मृत्युः अपि-நாசமும் கூட (ஏற்படும்). एषः-இது, सिद्धः-(எல்லாராலும் அனுபவத்தினால்) தெரிந்துகொண்ட தீர்மானம், हित-सुजन गुरु-उक्त्या-ஹிதமாயுள்ள ஸத்புருஷர்களாலும், குருவினாலும் உபதேசிக்கப்பட்டிருக்கிறபடியும், स्वस्य-தன்னுடைய, युक्त्या-யுக்தியைக்கொண்டும், गच्छतः-போகிறவனுக்கு, फल सिद्धिः-பலன் கிட்டுவதானது, प्रभवति-நன்கு ஏற்படும். (இது), सत्यं-உண்மை, इति एव-என்றே, विद्धि-அறிந்துகொள். (83)

(அ) ஆகையால் விஷயங்களிலுள்ள ஆசையை நன்கு துறந்துவிட்டு ஆத்மஞான ஸாதனங்களாகிய உத்தம குணங்களை ஸம்பாதித்துக்கொள்ள வேண்டுமென்கிறார் :—

मोक्षस्य काङ्क्षा यदि वै तवास्ति
त्यजातिदूराद् विषयान् विषं यथा ।

पीयूषवत् तोषदयाक्षमार्जव-
प्रशान्तिदान्तीः भज नित्यमादरात् ॥ ८४ ॥

तव-உனக்கு, मोक्षस्य वै-மோக்ஷத்திலேயே, काङ्क्षा-ஆசை, यदि अस्ति-இருக்குமேயானல், विषयान्-விஷயங்களை, विषं यथा-விஷத்தைப்போலவே, अतिदूरात्-வெகு தூரத்திலேயே, त्यज-விட்டுவிடு, तोष दया क्षमा आर्जव प्रशान्ति दान्तीः-ஸந்தோஷம் (திருப்தி), தயை, பொறுமை, நேர்மை, திடமான மனச்சாந்தி, இந்திரிய நிக்ரஹம் இவைகளை, पीयूषवत्-அமிருதத்தைப் போல, नित्यं-எப்பொழுதும், आदरात्-ஆதரவுடன், भज-ஸேவி. (84)

(அ) இவ்வாறு மோக்ஷத்திற்கு ஸாதனமாக விஷய வைராக்யத்தைக்கூறிவிட்டு விஷயங்களில் ஆசைக்குக்காரணம் ஸ்தூல சரீராபிமானம். ஆகையால் சரீராபிமானத்தைவிட்டு விட்டால் தானகவே வைராக்யம் நிலைபெறும் என்ற கருத்துடன் தேஹாபிமானி அழிந்து போகிருன் என்பதைக் கூறுகிருர்.

अनुक्षणं यत् परिहृत्य कृत्यं अनाद्यविद्याकृतबन्धमोक्षणम् ।
देहः परार्थोऽयममुष्य पोषणे यः सज्जते स स्वमनेन हन्ति ॥८५॥

यत्-எதை, परिहृत्य-(தான் அல்லவென்று) விலக்கி விட்டு, अनादि अविद्या कृत बन्ध मोक्षणं-அநாதியான அவித்யையினல் செய்யப்பட்டிருக்கிற பந்தத்திலிருந்து விடுவித்துக் கொள்வதானது, अनुक्षणं-ஒவ்வொரு க்ஷணமும் (எப்பொழுதும்), कृत्यं-செய்யவேண்டியதாயிருக்கிறதோ, अयं-இந்த, देहः-தேஹம், परार्थः-(ஜடமாய் பல சேர்ந்து உண்டாயிருப்பதினல்) வேருருவரின் (ஆத்மாவின்) பிரயோஜனத்திற்காக இருக்கிறது. यः-எவன், अमुष्य-இதனுடைய, पोषणे-போஷணம் செய்வதிலேயே, सज्जते-ஈடுபடுகிருனே, सः-அவன், स्वं-தன்னை (ஆத்மாவை), अनेन-இதினல் (சரீரத்தினல்), हन्ति-கொல்கிருன் (தெரிய வொட்டாமல் செய்து விடுகிருன்).



शरीरपोषणार्थी सन् य आत्मानं दिदृक्षते ।
ग्राहं दारुधिया धृत्वा नदीं तर्तुं स इच्छति ॥ ८६ ॥

यः-எவன், शरीर-पोषण-अर्थी-சரீரத்தைப் போஷிப்பதிலேயே ஈடுபட்டவனாக, सन्-இருந்துகொண்டு, आत्मानं-ஆத்மாவை, दिदृक्षते-பார்த்துவிட எண்ணுகிருனே, सः-அவன், ग्राहं-முதலையை, दारुधिया-தெப்பக் கட்டையென்ற எண்ணத்துடன், धृत्वा-பிடித்துக் கொண்டு, नदीं நதியை, तर्तुं-தாண்டிவிட, इच्छति-நினைக்கிருன். (86)

मोह एव महामृत्युः मुमुक्षोर्वपुरादिषु ।
मोहो विनिर्जितो येन स मुक्तिपदमर्हति ॥ ८७ ॥

मुमुक्षोः-மோக்ஷத்தில் ஆசையுள்ளவனுக்கு, वपुरादिषु சரீரம் முதலானவைகளில், मोहः एव (நான் என்றும், என்னுடையது என்றுமுள்ள), மோஹம்தான், महामृत्युः பெரிய மிருத்யு, येन-எவனல், मोहः-மோஹமானது, विनिर्जितः-நன்கு ஜயிக்கப்பட்டு விடுகிறதோ, सः-அவன் (தான்), मुक्तिपदं-மோக்ஷமாகிற நிலையை அடைய, अर्हति-உரியவனகிருன். (87)

मोहं जहि महामृत्युं देहदारसुतादिषु ।
यं जित्वा मुनयो यान्ति तद्विष्णोः परमं पदम् ॥ ८८ ॥

(ஆகையால்), देह-दार-सुतादिषु-சரீரம், பத்னி, புத்திரன் முதலானவர்களிடம் வைத்திருக்கும், मोहं-மோஹமாகிற, महामृत्युं-பெரிய மிருத்யுவை, जहि-தொலைத்துவிடு, यं-எதை, जित्वा-ஜயித்து, मुनयः-முனிவர்கள், विष्णोः-பரமாத்மாவின், परमं-உத்தமமான, तत्-அந்த, पदं-ஸ்தானத்தை, यान्ति-அடைகிருர்களோ.

(அ) சரீராதிகளில் வைத்திருக்கும் மோஹத்தை விலக்க வேண்டியதின் அவசியத்தைக் காட்டிவிட்டு சரீரத்தை 'தான்'

என்று நினைப்பது கொஞ்சமேனும் நியாயமில்லை. அதில் அடங்கிய வஸ்துக்களை கவனித்தால் மிகவும் வெறுக்கத்தக்கதே என்பது தெரியவரும் என்பதை ஞாபகப்படுத்துகிறார்:—

त्वङ्मांसरुधिरस्नायुमेदोमज्जास्थिसंकुलम् ।
पूर्णं मूत्रपुरीषाभ्यां स्थूलं निन्द्यमिदं वपुः ॥ ८९ ॥

त्वक्-मांस-रुधिर स्नायु मेदः-मज्जा-अस्थि-संकुलं — தோல்—மாம்ஸம்—ரக்தம்—நரம்பு—கொழுப்பு—மஜ்ஜை — எலும்பு இவைகளின் கூட்டமாயும், मूत्र-पुरीषाभ्यां-மூத்ரம், மலம் இவைகளால், पूर्णं-நிரம்பியதாகவும் இருக்கும், इदं-இந்த स्थूलं वपुः-ஸ்தூலசரீரம், निन्द्यं — நிந்திக்கத் தகுந்தது.

(அ) இந்த சரீரம் எவைகளைக்கொண்டு செய்யப்பட்டிருக்கிறது. அது ஏற்படுவதற்கு என்ன காரணம். இப்பொழுது அதற்கு என்ன ப்ரயோஜனம் என்பதை விவரிக்கிறார்:—

पञ्चीकृतेभ्यो भूतेभ्यः स्थूलेभ्यः पूर्वकर्मणा ।
समुत्पन्नमिदं स्थूलं भोगायतनमात्मनः ॥ ९० ॥

इदं-இந்த, स्थूलं-ஸ்தூல சரீரம், पञ्चीकृतेभ्यः-(முன் 76வது சுலோகத்தில் கண்டபடி) பஞ்சீகரணம் செய்யப்பட்ட, स्थूलेभ्यः-ஸ்தூலமான, भूतेभ्यः-(ஆகாசம் முதலிய ஐந்து) பூதங்களிலிருந்து, पूर्वकर्मणा-முன் (ஜன்மாக்களில் செய்த புண்ணிய பாபரூபமான) கர்மாவினால், समुत्पन्नं-ஏற்பட்டதாய், आत्मनः-ஆத்மாவிற்கு, भोग-आयतनं-போகங்களை (ஸுகதுக்கங்களை) அனுபவிக்க இருப்பிடமாயிருக்கிறது. (90)

(அ) வெளிப்பதார்த்தங்களை அனுபவிப்பதற்காகவே இந்த சரீரம் ஏற்பட்டிருப்பதால், ஸ்வப்னத்தில் உள்ளே தோன்றும் பதார்த்தங்களை அனுபவிக்கும் சரீரம் வெறும் வாஸனாமயமேயானதினாலும், ஸுஷுப்தியில் எந்த பதார்த்தத்திற்கும் அனுபவமேயில்லாததினாலும், ஸ்தூல சரீரம் இருப்பதாகத் தெரிந்துகொண்டு வியவஹார யோக்கியமாயிருப்பது ஜாக்ரத் அவஸ்தையில்தான் என்று விளக்குகிறார்:—



अवस्था जागरस्तस्य स्थूलार्थानुभवो यतः ॥ ९१ ॥

यतः-எதினால், स्थूल अर्थ अनुभवः- ஸ்தூலமான பதார்த்தங்களின்—அனுபவம் ஏற்படுகிறதோ, तस्य-அந்த ஸ்தூல சரீரத்திற்குஏற்பட்ட, अवस्था-அவஸ்தை, जागरः-ஜாக்கிரத் ஆகும். (91)

(அ) அந்த அனுபவத்தின் ஸ்வரூபத்தைத் தெளிவுபடுத்துகிறார்:—

बाह्येन्द्रियैः स्थूलपदार्थसेवां स्रक्चन्दनस्त्र्यादिविचित्ररूपाम् ।
करोति जीवः स्वयमेतदात्मना तस्मात् प्रशस्तिः वपुषोऽस्य जागरे ॥

जीवः ஜீவனானவன், स्वयं தானே, एतद्-आत्मना- இந்த ஸ்தூல சரீரரூபமாய் இருந்துகொண்டு, बाह्येन्द्रियैः-(கர்மேந்திரிய, ஞானேந்திரியங்களாகிய) வெளி இந்திரியங்களைக் கொண்டு, स्रक्-चन्दन-स्त्री-आदि-विचित्र-रूपां-மாலை—சந்தனம்—ஸ்திரீ முதலிய பலவித ரூபங்களாயுள்ள, स्थूल-पदार्थ-सेवां - ஸ்தூலமான பதார்த்தங்களுடைய ஸேவையை, करोति செய்கிறான். तस्मात्-ஆகையினால், अस्य இந்த, वपुषः-(ஸ்தூல) சரீரத்திற்கு, जागरे-விழிப்பு ஸமயத்தில், प्रशस्तिः-முக்கியத்தன்மை. (92)

(அ) வெளி பதார்த்தங்களின் சேர்க்கையினால் ஏற்படும் ஸுக துக்க அனுபவமே ஸம்ஸாரம் எனப்படுவதால் ஸம்ஸாரம் இந்த சரீரத்தையொட்டியே இருக்கிறது. எப்படி வீட்டில் இருப்பவன் கிருஹஸ்தன் எனப்படுகிறானோ அப்படியே இந்த சரீரத்தில் ஜீவன் இருந்துகொண்டு ஸம்ஸாரியாவதால் இதை அவனுக்கு போகத்திற்கு வேண்டியுள்ள ஆயதனம் என்று சொல்லப்படுகிறது. வீடு என்பது எப்படி கிருஹஸ்தனைவிட வேறாகவிருப்பதால் கிருஹஸ்தனாகவே ஆகமாட்டாதோ அப்படியே இந்த சரீரம் ஆத்மாவைவிட வேறாக இருப்பதால் ஆத்மாவாக ஆகிவிடாது என்பதையும் ஸூசிப்பிக்கிறார்:—

सर्वोऽपि बाह्यः संसारः पुरुषस्य यदाश्रयः ।
विद्धि देहमिदं स्थूलं गृहवद् गृहमेधिनः ॥ ९३ ॥

यद् आश्रयः-எதை ஆசிரயமாகக்கொண்டு, पुरुषस्य-புருஷனுக்கு, सर्वोऽपि-எல்லா, बाह्यः-வெளி, संसारः-ஸம்ஸாரமானது (ஏற்படுகிறதோ), इदं-இந்த, स्थूलं-ஸ்தூலமான, देहं-சரீரத்தை, गृहमेधिनः-கிருஹஸ்தனுக்கு, गृहवत्-கிருஹத்தைப் போல, विद्धि-அறிந்துகொள். (93)

(அ) அந்த ஸம்ஸாரமென்பது எவ்விதமுள்ளதென்பதை அடுத்த சுலோகத்தில் விவரித்துச் சொல்கிறார்:—

स्थूलस्य संभवजरामरणानि धर्माः
स्थौल्यादयो बहुविधाः शिशुताद्यवस्थाः ।
वर्णाश्रमादिनियमाः बहुधाऽऽमयाः स्युः
पूजावमानबहुमानमुखा विशेषाः ॥ ९४ ॥

स्थूलस्य-(இந்த) ஸ்தூல சரீரத்திற்கு (த்தான்), संभव जरा-मरणानि-பிறப்பு, மூப்பு, இறப்பு இவைகளும், बहुविधाः-பல விதங்களான, स्थौल्य-आदयः-பருமனுயிருத்தல், (இளைத்திருத்தல்) முதலான, धर्माः-குணங்களும், शिशुता-आदि अवस्थाः-பால்யம் முதலான பருவங்களும், वर्ण-आश्रम-आदि-नियमाः-ஜாதி, ஆசிரமம் முதலனதையொட்டிய நியமங்களும், बहुधा-பலவிதமாய், आमयाः-வியாதிகளும், पूजा-अवमान-बहुमानमुखाः-பூஜை, அவமானம், பகுமானம் முதலான, विशेषाः-விசேஷங்களும், स्युः-ஏற்படும். (94)

## 11. ஸூக்ஷ்ம சரீரம்

(ஆ) 74வது சுலோகத்திலிருந்து இதுவரை ஸ்தூல சரீரத்தின் தன்மையை விவரித்துவிட்டு இனி இந்த சரீரத்தை சேஷ்டிக்கும்படி செய்கிற ஸூக்ஷ்ம சரீரத்தைப்பற்றி சொல்ல ஆரம்பிக்கிறார். அதில் அடங்கிய ஞானேந்திரியங்களையும் கர்மேந்திரியங்களையும் முதலில் கணக்கிடுகிறார்:—

बुद्धीन्द्रियाणि श्रवणं त्वगक्षि घ्राणं च जिह्वा विषयावबोधनात् ।
वाक्पाणिपादा गुदमप्युपस्थं कर्मेन्द्रियाणि प्रवणानि कर्मसु ॥ ९५ ॥



श्रवणं-கேட்குமிந்திரியம், त्वक्-தொடுவதை உணரும் இந்திரியம், अक्षि-பார்க்குமிந்திரியம், घ्राणं-முகருமிந்திரியம், जिह्वा-ரஸமறியுமிந்திரியம், च-எல்லாம், विषय-अवबोधनात्-வெளியிலுள்ள விஷயங்களை அறிவதினுல், बुद्धि-इन्द्रियाणि-ஞானேந்திரியங்கள் (எனப்படுகின்றன.) कर्मसु வேலை செய்வதில், प्रवणानि-ஈடுபடும், कर्म-इन्द्रियाणि-கர்மேந்திரியங்கள், वाक्पाणिपादाः-பேசும் இந்திரியம், எடுக்கும் இந்திரியம், சலிக்குமிந்திரியம், गुदं-குதம், उपस्थं अपि உபஸ்தமும்.

இந்த சுலோகத்தில் இந்திரியங்கள் ஸாமான்யமாக இருந்துகொண்டு வியவஹரிக்கும் ஸ்தூலசரீரப் பிரதேசங்களின் பெயர்களால் குறிப்பிட்டிருந்தபோதிலும், அந்த ஸ்தூல பிரதேசங்கள் வாஸ்தவமாக ஸூக்ஷ்மமாயுள்ள இந்திரியங்கள் ஆகா என்பது குறிப்பிடத்தக்கது. (95)

(அ) இந்த இந்திரியங்களையும் சேஷ்டிக்கவைக்கும் உள் இந்திரியமான அந்தக்கரணத்தை அதன் விருத்திகளிலுள்ள வித்தியாஸத்தினுல் நான்காகப் பிரித்துக்கூறுகிறார்:—

निगद्यतेऽन्तःकरणं मनो धीः अहंकृतिः चित्तं इति स्ववृत्तिभिः ।
मनस्तु सङ्कल्पविकल्पनादिभिः बुद्धिः पदार्थाध्यवसायधर्मतः ॥
अत्राभिमानात् अहमित्यहंकृतिः स्वार्थानुसन्धानगुणेन चित्तम् ॥ ९६ ॥

अन्तःकरणं-(உள் இந்திரியமாகிய) அந்தக்கரணம் என்பது, स्ववृत्तिभिः-தன்னுடைய, (வெவ்வேறு) விருத்திகளால் (செயல்களால்), मनः-மனஸ், धीः-புத்தி, अहंकृतिः-அஹங்காரம், चित्तं-சித்தம், इति-என்று (நான்கு பிரிவுகளாக), निगद्यते-சொல்லப்படுகிறது. मनः तु-மனஸ் என்பதோ, संकल्प-विकल्पन-आदिभिः-(நல்லது கெட்டது என்று) எண்ணுதல், (அப்படியோ, இப்படியோ என்று பலவிதமாய்) ஸந்தேஹப்படுதல் முதலான விருத்திகளினுல் (அப்பெயர் அடைந்திருக்கிறது.) पदार्थ-अध्यवसाय-धर्मतः-பதார்த்தம் இவ்விதம் தான் என்று

தீர்மானிக்கும் தன்மையினுல், बुद्धिः-புத்தி (எனப்படுகிறது). अत्र-இந்த ஸ்தூல சரீரத்தில், अहं-நான், इति-என்று, अभिमानात्-அபிமானம் வைப்பதினுல், अहंकृतिः-அஹங்காரம் (ஆகிறது). स्व-अर्थ-अनुसंधानगुणेन-தன்னிடமுள்ள விஷயத்தை திரும்ப ஞாபகப்படுத்திப் பார்த்தல் என்ற குணத்தினுல், चित्तं-சித்தம் என்று சொல்லப்படுகிறது. (96)

(அ) இந்திரியங்களையும் அந்தஃகரணத்தையும் சொல்லிவிட்டு ஸூக்ஷ்ம சரீரத்தில் அடங்கிய இன்னொரு அம்சமாகிய ப்ராணனைச் சொல்லும்போது அதுவும் விருத்திகளின் பேதத்தினுல் ஐந்துவிதமாக இருக்கிறதென்று காட்டுகிருர்:—

प्राणापानव्यानोदानसमाना भवत्यसौ प्राणः ।
स्वयमेव वृत्तिभेदाद् विकृतिभेदात् सुवर्णसलिलमिव ॥ ९७ ॥

असौ-இந்த, प्राणः-பிராணன், स्वयं एव-தானே, वृत्ति-भेदात्-விருத்திகளின் வித்யாஸத்தினுல், सुवर्ण-सलिलं-தங்கமும் ஜலமும், विकृतेः-அவைகளில் ஏற்படும் கார்யங்களின் (காப்பு, சங்கிலி, மோதிரம் முதலியது, அலை, பனிக்கட்டி முதலியது என்ற), भेदात्-பேதத்தினுல், इव-போல, प्राण-अपान-व्यान-उदान-समानाः-பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்று, भवति-ஆகிறது. (97)

वागादि पञ्च श्रवणादि पञ्च प्राणादि पञ्चाभ्रमुखानि पञ्च ।
बुद्ध्याद्यविद्यापि च कामकर्मणी पुर्यष्टकं सूक्ष्मशरीरमाहुः ॥ ९८ ॥

1. वागादि (கர்மேந்திரியங்களாகிய வாக், கை, கால், குதம், உபஸ்தம் ஆகிய) வாக் முதலான, पञ्च-ஐந்து, 2. श्रवणादि (ஞானேந்திரியங்களாகிய காது, த்வக், கண், நாக்கு, மூக்கு ஆகிய) சிரவணம் முதலான पञ्च-ஐந்து, 3. प्राणादि (பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் ஆகிய) பிராணன் முதலான पञ्च-ஐந்து, 4. अभ्रमुखानि (ஆகாசம், வாயு தேஜஸ், அப்பு, ப்ருத்வீ ஆகிய ஸூக்ஷ்ம பூதங்கள்) ஆகாசம் முதலான, पञ्च ஐந்து, 5. बुद्ध्यादि (புத்தி, மனஸ், அஹங்காரம், சித்தம் ஆகிய அந்தஃகரணம்) புத்தி முதலானவை (நான்கு), 6. अविद्या-அவித்யை (ஆத்மாவல்லாததில் ஆத்மாவென்று தோன்றும் அத்யாஸம்) 7. कामः-காமம் (அவித்யையினுல் வெளிப் பதார்த்தங்களில் ஏற்படும் ஆசை) 8. कर्मणी-கர்மா (ஆசையினுல் ஏற்படும் தர்மா தர்மருபமான பிரவிருத்தி), இவை, पुर्यष्टकम्-எட்டு கூட்டங்களும் சேர்ந்திருப்பதை, सूक्ष्म-शरीरं-ஸூக்ஷ்ம சரீரம் என்று, आहुः-சொல்கிருர்கள்.

இரண்டுவித இந்திரியங்கள், அந்தஃகரணம், பிராணன், இவைகளுடன் அவித்யா, காமம், கர்மாக்களையும் ஸூக்ஷ்ம பூதங்களையும் சேர்த்துக்கணக்கிட்டால் ஸூக்ஷ்ம சரீரத்தில் 8 கூட்டங்கள் இருப்பதாகத் தெரிகிறது. (98)

(அ) இந்த சரீரம் எந்த பதார்த்தங்களால் செய்யப்பட்டு இருக்கிறது, இதன் ஸ்வருபம் என்ன, இதினுல் என்ன ப்ரயோஜனம் என்பதை மேலால் விளக்குகிருர்:—

इदं शरीरं शृणु सूक्ष्मसंज्ञितं लिङ्गं त्वपञ्चीकृतभूतसंभवम् ।
सवासनं कर्मफलानुभावकं स्वाज्ञानतोऽनादिरुपाधिरात्मनः ॥ ९९ ॥

शृणु-கேள், सूक्ष्मसंज्ञितं-ஸூக்ஷ்மமென்று பெயர் பெற்றிருக்கும், अपञ्चीकृत-भूत-संभवं-பஞ்சீகரணம் செய்யப்படாத (ஸூக்ஷ்ம) பூதங்களால் ஏற்பட்ட, इदं शरीरं तु-இந்த சரீரமோவெனில், लिङ्गं-லிங்கமாக (அடையாளமாக) இருக்கிறது. सवासनं-(முன்னுள்ள கர்மயோக) வாஸனைகளுடன் கூடியது. कर्म-फल-अनुभावकं-(முன் செய்துள்ள புண்ணியபாப) கர்மாக்களின் பலனை அனுபவிக்க உதவுவது. आत्मनः-ஆத்மாவிற்கு, स्व-अज्ञानतः-தன்னை அறியாத காரணத்தினுல், अनादि-ஆதியற்ற, उपाधिः-உபாதி (மோக்ஷமடையும வரை விட்டுப்பிரியாமல் கூடவே ஒட்டிக்கொண்டிருக்கும் தன்மையுடையது.

ஸ்தூல சரீரம் வெறும் ஜடமாயிருப்பதினாலும் காரண சரீரத்தில் எவ்வித ஞானமும் துலங்காததினாலும் அவ்விரண்டு சரீரங்களிலிருந்து ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்துகொள்வது சிரமம். இந்த ஸூக்ஷ்ம சரீரம்தான் வேறு எவ்வித பிரகாசமும் இல்லாதபோது ஆத்மபிரகாசத்தை வாங்கிக்கொண்டு ஸ்வப்ன காலத்தில் ஸுக துக்காதி அனுபவங்களைக் கொடுப்பதால் ஆத்மாவைக் காட்டிக்கொடுக்க வல்லமையுள்ளது. இதனால் இதற்கு 'லிங்க சரீரம்' என்று பெயர். ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து உண்டானதால் ஸூக்ஷ்ம சரீரம் என்றும் பெயர். உற்பத்தியடைவதாலும் இது ஆத்மாவல்ல. (99)

(அ) இப்படியொரு சரீரம் இருப்பதை நன்கு தெரியப்படுத்தும் அவஸ்தை ஸ்வப்னம். அதில்தான் இந்த சரீரத்தில் அடங்கியுள்ள வாஸனைகள் வெளிப்பட்டு வெளிப்பதார்த்தங்கள் யாதொன்றும் இல்லாதபோது வெளியில் இருப்பதுபோல் பதார்த்தங்களையும், எல்லா இந்திரியங்களும் ஓய்வடைந்து இருக்கும்போது வேறு இந்திரியங்களிருப்பது போலும், அனுபவிக்கவேண்டிய ஸ்தூல சரீரம் ஜடமாய் சேஷ்டையோ அறிவோயில்லாமலிருக்கும் ஸமயத்தில் சேஷ்டித்து ஸுகதுக்கங்களையனுபவிக்க புதிதாக ஒரு சரீரத்தையும் ஸ்ருஷ்டி செய்துகொண்டு ஸகலவித வியவஹாரங்களும் நடப்பதாகத் தோன்றுகிறது. அவ்வெல்லா வியவஹாரங்களும் நடப்பதற்கு அனுகூலமாய் ஸூர்யன் முதலான பிரகாசங்கள் இல்லாதபோது ஸ்வயம்பிரகாசரூபமான ஆத்மாதான் பிரகாசத்தைக் கொடுக்கிறார் என்று தெரிகிறது என்று இந்த சரீரத்திற்கேற்பட்ட தனிப்பெருமையை விளக்கிக் காட்டுகிறார்:—

स्वप्नो भवत्यस्य विभक्त्यवस्था स्वमात्रशेषेण विभाति यत्र ।
स्वप्ने तु बुद्धिः स्वयमेव जाग्रत्कालीननानाविधवासनाभिः ।
कर्त्रादिभावं प्रतिपद्य राजते यत्र स्वयंज्योतिरयं परात्मा ॥ १०० ॥

यत्र-எங்கு, स्वमात्रशेषेण - (ஸ்தூல சரீராபிமானத்தை விட்டு) ஸூக்ஷ்மசரீரத்தில்மட்டும் அபிமானமுள்ளவனாக (ஆத்மா), विभाति - விளங்குகிறானோ अस्य-இந்த ஸூக்ஷ்ம சரீரத்தை, विभक्त्यवस्था-பிரித்து அறியக்கூடிய நிலை, स्वप्नो भवति - ஸ்வப்னமாக ஆகிறது. स्वप्ने तु - ஸ்வப்னத்தில் தானே, बुद्धिः - (வாஸனைகளுக்கு ஆசிரயமான) புத்தியானது, जाग्रत्-कालीन-नानाविध वासनाभिः - ஜாக்ரத் காலத்தில் ஏற்பட்ட பலவித வாஸனைகளைக் கொண்டு, स्वयं एव - தானே, कर्तृ-आदि-भावं - (அனுபவிக்கிறவன், கருவியான இந்திரியங்கள், மனஸ், அனுபவிக்கப்படும் விஷயங்கள், அனுபவம் ஆகிய) கர்த்தா முதலான தன்மையை, प्रतिपद्य - அடைந்து, राजते-பிரகாசிக்கிறது. यत्र-எந்த அவஸ்தையில், अयं - இந்த, पर-आत्मा - சுத்தமான ஆத்மா, स्वयंज्योतिः - தானே பிரகாச ஸ்வரூபமாகத் தெரிகிறதோ. (100)



(அ) அப்பொழுது ஏற்படும் ஸுகதுக்காதி அனுபவங்களினால் ஆத்மாவிற்கு எவ்வித பாதகமுமில்லை யென்பதை மறந்துவிடக்கூடாதென்பதை ஞாபகப்படுத்துகிறார்:—

धीमात्रकोपाधिरशेषसाक्षी न लिप्यते तत्कृतकर्मलेपैः ।
यस्मादसङ्गस्तत एव कर्मभिः न लिप्यते किञ्चिदुपाधिना कृतैः ॥

(அப்பொழுது ஆத்மா) धी-मात्रक-उपाधिः - புத்தியை மாத்திரம் உபாதியாய் வைத்துக்கொண்டு, अशेष-साक्षी - எல்லாவற்றையும் ஸாக்ஷியாக மட்டும் பார்த்துக்கொண்டிருப்பவர், तत्-कृत - அதினால் (உபாதியினால்) செய்யப்படும், कर्मलेपैः - கர்மாக்களால் ஏற்படும் (குணதோஷ) பூச்சுகளால், न लिप्यते-பூசப்படுவதில்லை. यस्मात्-எதினால் (அவர்), असङ्गः-எவ்வித ஒட்டுதலுமற்றவரோ, तत एव - அதினாலேயே, उपाधिना - உபாதியினால், कृतैः - செய்யப்படும், कर्मभिः-கர்மாக்களினால், किञ्चित् - கொஞ்சமும், न लिप्यते-ஒட்டப்படுவதில்லை. (101)

வெளிச்சத்தைக்கொடுத்து எல்லா பிராணிகளையும் அவரவருடைய காரியங்களில் ஈடுபடுத்துகிற ஸூரியனிடம் அந்த பிராணிகள் செய்யும் கர்மா எப்படி ஒட்டுவதில்லையோ அதுபோல் புத்தியின் கார்யங்கள் ஆத்மாவிடம் ஒட்டுவதில்லை.

(அ) அனுபவத்திற்கு உபயோகப்படும் கருவியாகவே இந்த சரீரம் இருப்பதினால் அதை உபயோகப்படுத்தும் ஆத்மா வேறு என்பதும் தெளிவாகிறதென்று காட்டுகிறார் :—

सर्वव्यापृतिकरणं लिङ्गमिदं स्यात् चिदात्मनः पुंसः ।
वास्यादिकमिव तक्ष्णः तेनैवात्मा भवत्यसङ्गोऽयम् ॥ १०२ ॥

इदं-இந்த, लिङ्ग லிங்க சரீரம், चित्-आत्मनः-சைதன்ய ஸ்வரூபனான, पुंसः - ஆத்மாவிற்கு, सर्व-व्यापृति-करणं - ஸகலவித வியாபாரம் செய்வதற்கும் கருவியாக, स्यात् - இருக்கும், तक्ष्णः - தச்சனுக்கு, वास्यादिकं-வாச்சி முதலானது, इव-போல. तेन एव - அந்தக்காரணத்தினாலேயே, अयं आत्मा - இந்த ஆத்மா, असङ्गः - பற்றில்லாதவராக, भवति-இருக்கிறார். (102)

(அ) ஆத்மாவிற்கு எவ்வித ஸம்பந்தமும் கிடையாது என்றால் உலகத்தில் நான் செவிடு, நான் ஊமை, நான் செய்கிறேன், நான் ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறேன் என்றெல்லாம் வியவஹாரம் இருக்கிறதேயென்றால், இவை எல்லாம் உபாதியான ஸூக்ஷ்ம சரீரத்தையே சேர்ந்தது என்பதைக் குறிப்பிடுகிறார் :—

अन्धत्वमन्दत्वपटुत्वधर्माः सौगुण्यवैगुण्यवशाद्धि चक्षुषः ।
बाधिर्यमूकत्वमुखास्तथैव श्रोत्रादिधर्मा न तु वेत्तुरात्मनः ॥ १०३ ॥

अन्धत्व मन्दत्व-पटुत्व-धर्माः - குருட்டுத்தனம், மங்கியிருத்தல், நன்றாயிருத்தல் ஆகிய குணங்கள், चक्षुषः - கண்ணினுடைய, सौगुण्य-वैगुण्य-वशात्-நல்ல தன்மையுடனிருத்தல், கெட்ட தன்மையுடனிருத்தல் ஆகிய காரணங்களால் என்பது, हि-பிரஸித்தம். तथा एव-அப்படியே, बाधिर्य-मूकत्व मुखाः-செவிட்டுத்தனம், ஊமைத்தனம் முதலியவைகள், श्रोत्रादिधर्माः-காது முதலியவைகளின், தர்மங்களேயாகும். वेत्तुः- அறிகிற (இந்திரியங்களை கருவியாக உபயோகித்துவரும்), आत्मनः तु - ஆத்மாவிற்கோ न-தர்மங்கள் ஆகமாட்டா. (103)



(அ) அப்படியே மூச்சு விடுகிறது, பசி, தாஹம் முதலியவை பிராணனைச் சேர்ந்ததே தவிர, ஆத்மாவைச் சேர்ந்ததல்ல என்பதை நிருபிக்கிறார் :—

उच्छ्वासनिःश्वासविजृम्भणक्षुत्प्रस्पन्दनाद्युत्क्रमणादिकाः क्रियाः ।
प्राणादिकर्माणि वदन्ति तज्ज्ञाः प्राणस्य धर्मावशनापिपासे ॥ १०४ ॥

उच्छ्वास-निश्वास-विजृम्भण क्षुत-प्रस्पन्दनादि-மூச்சுவிடுவது மூச்சு இழுப்பது, கொட்டாவி, தும்மல், நடுக்கம் முதலானதுகளும், उत्क्रमणादिकाः · வெளிக்கிளம்புதல் முதலானதுகளுமான, क्रियाः - கார்யங்கள், प्राणादि-कर्माणि - பிராணன் முதலியவைகளுடைய (பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்ற பிரதான வாயுக்கள், நாகன், தேவதத்தன், தனஞ்ஜயன், க்ருகரன், கூர்மன் என்ற உபவாயுக்கள்) வேலைகளென்று, तज्ज्ञाः - அதையறிந்தவர்கள், वदन्ति - சொல்கிறார்கள். अशना-पिपासे-பசியும் தாகமும், प्राणस्य-பிராணனுடைய, धर्मौ-தர்மங்களே. (104)

(அ) இந்த தர்மங்களெல்லாம் ஆத்மாவல்லாத பிராணன் இந்திரியம் முதலியவைகளுடையதானால் ஆத்மாவைச்சேர்ந்ததாக ஏன் தோன்றுகிறது என்றால் ஆத்மா எத்தன்மையுள்ளது, அனுத்மா எத்தன்மையுள்ளது என்று பகுத்தறியாமல் சரீரத்திலும் இந்திரியாதிகளிலும் 'நான்' என்ற எண்ணத்துடன் இருந்து வருவதினால்தான் என்கிறார் :—

अन्तःकरणमेतेषु चक्षुरादिषु वर्ष्मणि ।
अहमित्यभिमानेन तिष्ठत्याभासतेजसा ॥ १०५ ॥

एतेषु-இந்த, चक्षुरादिषु-கண் முதலானவைகளிலும் (ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள், பிராணன் முதலியவை), वर्ष्मणि-ஸ்தூல சரீரத்திலும், अन्तःकरणं-அந்தக்கரணமானது, आभास तेजसा சைதன்யத்தின் தோற்றமான பிரகாசத்தினால், अहं ‘நான்’ इति-என்று, अभिमानेन-அபிமானத்துடன், तिष्ठति-இருந்துவருகிறது.

(அ) இவ்விதம் சரீராதிகளை 'நான்' என்று அபிமானிக்கும் அந்தःகரணத்திற்கு அஹங்காரம் என்று பெயர். அதுதான் கர்த்தா (செய்கிறவன்) போக்தா (அனுபவிக்கிறவன்) ஸுகி துக்கியே தவிர ஆத்மா அல்ல என்பதைக் காட்டுகிறார்:—

अहंकारः स विज्ञेयः कर्ता भोक्ताभिमान्ययम् ।
सत्त्वादिगुणयोगेनावस्थात्रितयमश्नुते ॥ १०६ ॥

सः-சரீராதிகளில் நான் என்ற அபிமானத்துடன் இருக்கும் அந்த அந்தக்கரணம் अहंकारः - அஹங்காரமாக विज्ञेयः - அறியத்தக்கது अयं-இது, कर्ता-(புண்ணியபாபம் முதலியதுகளை) செய்கிறதாகவும், भोक्ता-(அவைகளின் பலனாகிய ஸுகதுக்கங்களை) அனுபவிக்கிறதாகவும், अभिमानी - அபிமானமுள்ளது, सत्त्वादि - गुणयोगेन-ஸத்வம் முதலிய (ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற) குணங்களின் சேர்க்கையினால், अवस्थात्रितयं -(ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற) அவஸ்தைகள் மூன்றையும் (ஸத்வத்தினால் ஸ்வப்னத்தையும், ரஜஸ்ஸினால் ஜாக்ரத்தையும், தமஸ்ஸினால் ஸுஷுப்தியையும்), अश्नुते-அடைகிறது.

विषयाणामानुकूल्ये सुखी दुःखी विपर्यये ।
सुखं दुःखं च तद्धर्मः सदानन्दस्य नात्मनः ॥ १०७ ॥

(அப்படியே அந்த அஹங்காரம்), विषयाणां-விஷயங்கள்-आनुकूल्ये - அனுகூலமாயிருந்தால், सुखी - ஸுகமுள்ளதாக ஆகிறது. विपर्यये-(விஷயங்கள்) மாறுதலாய் (பிரதிகூலமாய்) இருந்தால், दुःखी - துக்கமுள்ளதாக ஆகிறது. (ஆகையால்), सुखं-ஸுகமும், दुःखं च-துக்கமும், तत्-धर्मः-அந்த அஹங்காரத்தின் தர்மமே. सदा-आनन्दस्य-எப்பொழுதும் ஆனந்த ஸ்வரூபியாயுள்ள, आत्मनः-ஆத்மாவின் (தர்மம்), न-இல்லை.

ஒரு காலத்தில் ஸுகத்தைக் கொடுத்த அதே பொருள் மற்றொரு காலத்தில் துக்கத்தைக் கொடுக்கிறது. ஒருவனுக்கு ஸுகத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கும்போதே அதே



சமயத்தில் அதே பொருள் வேறொருவனுக்குத் துன்பத்தைக் கொடுக்கிறது. இந்த மாறுதலுக்கு விஷயங்களோ, காலமோ காரணமில்லை, ஆகவே இதற்கு மனஸ்தான் காரணம். மனஸ் விஷயத்தை அனுகூலமாக நினைக்கும்பொழுது ஸுகத்தைத்தருகிறது. பிரதிகூலமாக நினைக்கும்பொழுது துன்பத்தைத் தருகிறது. (107

(அ) ஆத்மா எப்பொழுதும் ஆனந்த ஸ்வரூபியென்று சொன்னது எல்லா பிரமாணங்களினாலும் ஸித்தமான உண்மை என்பதை எடுத்துக்காட்டுகிறார்:—

आत्मार्थत्वेन हि प्रेयान्विषयो न स्वतः प्रियः ।
स्वत एव हि सर्वेषामात्मा प्रियतमो यतः ॥ १०८ ॥

तत आत्मा सदानन्दो नास्य दुःखं कदाचन ।

विषयः - (சப்தம் முதலிய) விஷயம், आत्मार्थत्वेन - ஆத்மாவிற்கு பிரயோஜனப்படுவதால், हि - அல்லவா, प्रेयान् - பிரீதிக்கு விஷயமாகிறது! स्वतः - தானாகவே (ஆத்மாவிற்கு ஸம்பந்தப்படாமலிருக்கையில்), न प्रियः- பிரியமாகிறதில்லை. (ஆனால்), सर्वेषां-எல்லாப் பிராணிகளுக்கும், आत्मा-ஆத்மா, यतः -எந்த காரணத்தினால், स्वत एव-தானாகவே, प्रियतमः -மேலான பிரிய பதார்த்தம் என்பது, हि-பிரஸித்தமோ, ततः -அதிலிருந்து, आत्मा-ஆத்மாவானது, सदा-आनन्दः - எப்பொழுதும் ஆனந்த ஸ்வரூபி (என்று ஏற்படுகிறது). अस्य-இந்த ஆத்மாவிற்கு, कदाचन- எப்பொழுதும் கூட, न दुःखं - துக்கம் கிடையாது. (108)

यत्सुषुप्तौ निर्विषय आत्मानन्दोऽनुभूयते ।
श्रुतिः प्रत्यक्षमैतिह्यमनुमानं च जाग्रति ॥ १०९ ॥

सुषुप्तौ - நல்ல தூக்கத்தில், निर्विषयः -(ஸுகத்தை உண்டுபண்ணுவதாக ஸாமான்யமாய் நினைக்கப்படும் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் ஆகிய) விஷயங்

களேயில்லாத, आत्मानन्दः-ஆத்மாவின் ஆனந்தம், अनुभूयते அனுபவிக்கப்படுகிறது यत्-எதினலோ (அதினலேயே ஆத்மா ஆனந்த ஸ்வரூபன் என்று தெரிகிறது). (இவ்விஷயத்தில்), श्रुतिः-(தைத்திரீயம், பிருஹதாரண்யகம் முதலிய) வேதமும், प्रत्यक्षं-(ஸகல ஜனங்களாலும் நல்ல தூக்கத்தில் அனுபவிக்கப்படுகிறதான) பிரத்யக்ஷமும், ऐतिह्यं (ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைந்த பெரியோர்கள் இவ்விதம் இருக்கிறதென்று சொல்லும்) ஐதிஹ்யமும், अनुमानं च-(முன் காட்டியுள்ள) அனுமானமும், जाग्रति-பிரமாணங்களாயிருக்கின்றன.

விஷயங்கள் தாளுகவே பிரியமாயிருந்தால் எப்பொழுதும் பிரியமாக இருக்கவேண்டும் அப்படி இல்லை. தனக்கு பிரியம் என்று சேகரித்த பொருள்களைக்கூட சில சமயம் வெறுப்பினுல் விலக்கிவிடுகிருர்கள். விரதோபவாஸங்களால் சரீரத்திற்கு கிலேசத்தை தானே உண்டுபண்ணுகிருர்கள். யோகிகள் பிராணனை அடக்குகிருர்கள். மனம் அடங்கும் தூக்கத்தைத் தானே விரும்புகிருர்கள். தூக்கத்தில் கிடைக்கும் ஸ்வரூபானந்தம் துன்பக்கலப்பில்லாதது. அதனுல்தான் எல்லா போகங்களும் நிறைந்த சக்ரவர்த்தியும் அவைகளை விட்டுவிட்டு தூக்கத்தையே விரும்புகிருன். (109)

## 12. மாயையும் அதன் கார்யங்களும்

(அ) இதுவரை அனுத்மா என்ற பிரிவில் சேர்ந்த ஸ்தூல சரீரம், ஸூக்ஷ்ம சரீரம், அவைகளையொட்டிய விஷயங்கள், இவைகளைப்பற்றி சொல்லிவிட்டு, இவைகளைவிட ஸூக்ஷ்மமாய் உள்ளதும் காரணமாயுள்ளதுமான காரண சரீரத்தைப்பற்றி சொல்வதற்கு ஆரம்பிக்கும்போது, எல்லாவற்றிற்கும் ஆதி காரணமாயுள்ள மாயையைப்பற்றி முதலில் சொல்கிருர் :—

अव्यक्तनाम्नी परमेशशक्तिरनाद्यविद्या त्रिगुणात्मिका परा ।
कार्यानुमेया सुधियैव माया यया जगत्सर्वमिदं प्रसूयते ॥ ११० ॥

इदं=இந்த, जगत् सर्वं-உலகமெல்லாம், यया-எதனுல், प्रसूयते-உண்டாக்கப்படுகிறதோ அந்த, माया-மாயை என்பது, अव्यक्तनाम्नी-(வ்யக்தமாகத் தெரியாததனுல்) அவ்யக்தம் என்ற பெயருள்ளது, परमेश-शक्तिः-பரமேசுவரனுடைய சக்தியாயுள்ளது, अनादि-अविद्या-ஆதியற்றதாயும், ஆனுல் ஒரு காலத்திலும் வாஸ்தவமாய் இல்லாததாயுமுள்ளது, त्रिगुणात्मिका-(ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற) மூன்று குணங்களை ஸ்வரூபமாயுளளது, परा-(எல்லாவற்றிற்கும் காரணமாயிருப்பதால்) மேலாக உள்ளது, सुधिया एव-நல்ல பரிசுத்தமான புத்தியுள்ளவரால்மாத்திரம், कार्य-अनुमेया-அதன் கார்யங்களிலிருந்து ஊஹிக்கக்கூடியது. (110)



(அ) இதன் ஸ்வரூபம் எவ்விதமென்று எடுத்துச் சொல்ல முடியாது என்பதே இதன் ஸ்வரூபம் என்று சொல்கிருர் :—

सन्नाप्यसन्नाप्युभयात्मिका नो भिन्नाप्यभिन्नाप्युभयात्मिका नो ।
साङ्गाप्यनङ्गाप्युभयात्मिका नो महाद्भुताऽनिर्वचनीयरूपा ॥ १११ ॥

(இருக்கிறது என்று ஒரு பதார்த்தத்தைச் சொல்ல வேண்டுமானுல் அது எப்பொழுதும் இருக்கவேண்டும். எந்தக் காலத்திலும் இல்லாமல் போகக்கூடாது. இந்த மாயை ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டவுடன் இல்லாமல் போய்விடுவதால் இது) सत् अपि-இருக்கிற வஸ்துவாகவும், न-இல்லை. (இல்லாமலேயிருக்கும் முயல் கொம்புபோலுள்ளவைகள் ஒருகாலத்திலும் தெரியக் கூடாது. இது தோன்றிக்கொண்டு இருப்பதுடன் ஸம்ஸாரத்திற்குக் காரணமாயுமிருப்பதால் இது), असत् अपि-இல்லாததாகவும், न இல்லை. (இருக்கும் தன்மை இல்லாத்தன்மை இரண்டும பரஸ்பர விரோதமாயிருப்பதால் ஒரே வஸ்துவில் இருக்கமுடியாததினுல் இது) उभयात्मिका-இருவிதமாயுமுள்ள ஸ்வபாவமுள்ளதாகவும், नो-இல்லை. (பிரஹ்மம் ஒரே வஸ்துதான் வாஸ்தவமாய் உள்ளதால் இது அதற்கு), भिन्ना अपि-வேருகவோ, (பிரஹ்மம் நித்யமாய் அழிவற்றதாயிருக்கையில் இது ஞானதசையில் அழிந்துவிடுவதால் இது அதற்கு) अभिन्ना(

अपि-வேறல்லவென்றோ, (வேருகவும்வேறு அல்லாமலும் ஒரே வஸ்து இருக்கமுடியாததினால் இது) उभयात्मिका-இருவிதத்தன்மையுள்ளதென்றோ, नो-ஆகாது. (இதற்கு ஆதியில்லாததால்), साङ्गा अपि-அவயவங்களுள்ளது என்றோ, (இதிலிருந்து கார்யங்கள் ஏற்படுவதினால்), अनङ्गा अपि-அவயவங்களற்றதென்றோ, (அவயவங்கள் உள்ளதாகவும் இல்லாததாகவும் ஒரே வஸ்து இருக்க முடியாததினால்) उभयात्मिका-இருவிதத் தன்மை உள்ளதாகவோ, नो-ஆகாது. (ஆகையால் இது), महाद्भुता-பெரிய ஆச்சர்யமான வஸ்து, अनिर्वचनीय रूपा-(இவ்விதமென்று) எடுத்துச் சொல்ல முடியாத ஸ்வரூபத்தை யுடையது. (111)

(அ) இதுதான் காரண சரீரம் என்று 122வது சுலோகத்தில் தான் சொல்லப்போகிறார். இதன் மத்தியில் மாயை மூன்று குணங்களுடன் கூடியது, அதன் கார்யங்களினால் ஊஹித்தறிய வேண்டியது, அதற்கு நாசமுண்டு, என்று சொன்னதை விஸ்தரித்து அக்குணங்களையும் அவைகளின் தன்மைகளையும் அக்கார்யங்களையும் விவரமாக எடுத்துச் சொல்கிறார் :—

शुद्धाद्वयब्रह्मविबोधनाश्या सर्पभ्रमो रज्जुविवेकतो यथा ।
रजस्तमः सत्त्वमिति प्रसिद्धा गुणास्तदीयाः प्रथितैः स्वकार्यैः ॥ ११२ ॥

सर्प-भ्रमः-பாம்பு என்கிற பொய் தோற்றமானது, यथा-எப்படி, रज्जु-विवेकतः-(அதற்கு அதிஷ்டானமான) கயிற்றை பிரித்தறிவதினால் (நாசத்தை யடைந்து விடுகிறதோ, அப்படியே), शुद्ध अद्वय-ब्रह्म विबोध-नाश्या-சுத்தமான இரண்டற்ற பிரஹ்மத்தை நன்கு அறிவதினால் நாசமடையக் கூடியது (இந்த மாயை). तदीयाः-அதைச் சேர்ந்த, गुणाः-குணங்கள், प्रथितैः-நன்கு தெரிகிற, स्व-कार्यैः-அததன் கார்யங்களினால், प्रसिद्धाः-பிரஸித்தமாயிருக்கும், रजः तमः सत्त्वं इति-ரஜஸ், தமஸ், ஸத்வம் என்பவை. (112)



(அ) மாயையில் விக்ஷேப சக்தி, ஆவரண சக்தி, ஞான சக்தி என்று மூன்று சக்திகள் உள்ளன. இவற்றில் முதல் இரண்டும் பந்தத்திற்குக் காரணம். மூன்ருவது மோக்ஷ காரணம். இதில் ரஜோகுணத்தின் கார்யமான விக்ஷேப சக்தியைப்பற்றி இரண்டு சுலோகங்களாலும் (பின்னால் வரும் 117வது சுலோகத்தாலும்) வர்ணிக்கிறார். தமோகுணத்தின் கார்யமான ஆவரண சக்தியை இவைகளுக்குப்பின் வரும் சுலோகங்களில் சொல்கிறார் :—

विक्षेपशक्ती रजसः क्रियात्मिका यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ।
रागादयोऽस्याः प्रभवन्ति नित्यं दुःखादयो ये मनसो विकाराः ॥

रजसः-ரஜோகுணத்தின், क्रियात्मिका-கார்யரூபமாயுள்ளது, विक्षेपशक्तिः-விக்ஷேப (உலைத்துவிடக்கூடிய) சக்தி, यतः-எதிலிருந்து (தான்), पुराणी-அநாதி காலம் முதற்கொண்டு, प्रवृत्तिः-(ஸம்ஸாரத்திற்குக் காரணமான) பிரவிருத்தியானது, प्रसृता-தொடர்ந்து வந்திருக்கிறதோ, अस्याः-இந்த விக்ஷேப சக்தியிலிருந்துதான், रागादयः-ஆசை முதலானவைகளும், ये எவை, मनसः-மனஸினுடைய, विकाराः-மாறுதல்களாயிருக்கிற, दुःखादयः-துக்கம் முதலானவைகளோ அவைகளும், नित्यं-எப்பொழுதும் தொடர்ந்து, प्रभवन्ति-ஏற்படுகின்றன.

ஈசுவரனுடைய உபாதியான மாயை ரஜஸ் தமோ குணங்களால் தாக்கப்படாத சுத்தமான ஸத்வ குணத்தை பிரதானமாக உடையது. இது ஈசுவரனுக்குக் கட்டுப்பட்டது. ஆதலால் ஈசுவரனுக்கு பந்தமில்லை. ஜீவனுடைய உபாதியான அவித்யை மலினமான ஸத்வ குணத்தைக்கொண்டது. ரஜஸ் தமோ குணங்களால் ஞான சக்தி தாக்கப்பட்டது. அவித்யைக்குக்கட்டுப்பட்டவன் ஜீவன். இதனால் பந்தமுண்டு. துக்கம் முதலியவை மனதின் விகாரம் என்று சொன்னதால் இவை ஒருக்காலும் நிர்விகாரமான ஆத்மாவுக்கு இல்லை என்று காட்டப்பட்டது. (113)

(அ) ரஜோகுணத்திலிருந்து ஆசை முதலானவை உண்டாகின்றன என்று சொன்னதையே கொஞ்சம்

விஸ்தரித்து, அவைகளால் ஏற்படும் பிரவிருத்தி தான் ஸம்ஸார பந்தத்திற்குக் காரணம் என்பதைச் சொல்கிறார் :—

कामः क्रोधो लोभदम्भाभ्यसूयाहंकारेर्ष्यामत्सराद्यास्तु घोराः ।
धर्मा एते राजसाः पुंप्रवृत्तिर्यस्मादेतत्तद्रजो बन्धहेतुः ॥ ११४ ॥

कामः—ஆசை, क्रोधः—கோபம், लोभ-லோபம், दम्भ-டம்பம், अभ्यसूया—அஸூயை, अहंकार—அஹங்காரம், ईर्ष्या—ஈர்ஷ்யை, मत्सर—மாத்ஸர்யம், आद्याः—முதலானவை, घोराः तु-மிகவும் கெட்டவை. एते-இந்த, धर्माः—குணங்கள், राजसाः—ரஜோ குணத்தினால் ஏற்படுபவை. यस्मात्-எதிலிருந்து, पुंप्रवृत्तिः-ஜீவர்களுக்கு பிரவிருத்தியானது ஏற்படுகிறதோ, एतत्-இந்த (எல்லாருக்கும் தெரிந்த), तत्-அந்த (மாயாகுணமாக சொல்லப்பட்ட), रजः—ரஜோகுணமானது, बन्ध-हेतुः—ஸம்ஸார பந்தத்திற்கு காரணமாயிருக்கிறது.

தான் ஆசைப்பட்ட பொருள் தனக்குக் கிடைக்காமல் தடங்கல் ஏற்படும்பொழுது கோபம் ஏற்படும். தனக்குக் கிடைத்த வஸ்து தன்னிடமே இருக்கவேண்டும், பிறரிடம் போகக்கூடாது என்ற எண்ணம் லோபம். பிறரின் உயர்வைக் கண்டு மனம் தாங்காமல் இருப்பது அஸூயை. பிறரின் குணங்களையே தோஷமாக எடுத்துக் கூறுவது ஈர்ஷ்யை. குறைவற்று வற்றாமல் நிறைந்திருந்தபோதிலும் அதைப் பிறர் அனுபவிக்க மனம் வராமை மாத்ஸர்யம். ராஜாவுக்குச் சொந்தமான வற்றாத நீர் நிறைந்த குளத்திலிருந்துகூட ஜலம் குடிக்கக்கூடாது என்று தடுத்தல். (114)

(அ) ஸம்ஸாரத்திற்கு மூலகாரணமான, ரஜோ குண கார்யமான விக்ஷேப சக்திக்கும் காரணமாயிருக்கும் ஆவரண சக்தி தமோ குணத்தினால் ஏற்படுகிறதென்பதைக் குறிப்பிடுகிறார் :—

एषावृतिर्नाम तमोगुणस्य शक्तिर्यया वस्त्ववभासतेऽन्यथा ।
सैषा निदानं पुरुषस्य संसृतेर्विक्षेपशक्तेः प्रसरस्य हेतुः ॥ ११५ ॥



यया-எதினால், वस्तु-(ஸத், சித், ஆனந்தமாயிருக்கும்) வஸ்துவாகிய ஆத்மா, अन्यथा-(சரீரம் முதலானதாக) வேறுவிதமாக, अवभासते—தோன்றுகிறதோ, एषा-இது, तमो गुणस्य-தமோகுணத்தைச் சேர்ந்த, शक्तिः—சக்தியாகும், आवृतिः नाम—ஆவரணம் என்று பிரஸித்தம். विक्षेप-शक्तेः—விக்ஷேப சக்தியினுடைய, प्रसरस्य—வெளிக்கிளம்புதலுக்கு, हेतुः—காரணமாய் இருந்துகொண்டு, सा—அந்த, एषा-இந்த ஆவரண சக்தி, पुरुषस्य-புருஷனுடைய, संसृतेः-ஸம்ஸாரத்திற்கு, निदानं-(விக்ஷேபசக்தி மூலமாய்) காரணமாயிருக்கிறது.

ஸந்தேஹமோ, விபரீதஞானமோ ஒருவனுக்கு இருந்தால் தான் விக்ஷேபத்தால் மனம் கலங்கும். நிச்சயஞானம் ஏற்பட்டு விட்டால் மனம் கலங்காது. ஞானிக்கு ஆவரணம் நீங்கி விட்டதால் பிராரப்த கர்மாவினால் விக்ஷேபம் இருந்தாலும் பந்தத்தைக் கொடுக்காது. (115)

(அ) இவ்விரண்டு சக்திகளுக்குள் ஆவரண சக்தியே அதிக பலமுள்ளதென்பதை விவரித்துக் காட்டுகிறார் :—

प्रज्ञावानपि पण्डितोऽपि चतुरोऽप्यत्यन्तसूक्ष्मार्थदृक्
व्यालीढस्तमसा न वेत्ति बहुधा संबोधितोऽपि स्फुटम् ।
भ्रान्त्यारोपितमेव साधु कलयत्यालम्बते तद्गुणान्
हन्तासौ प्रबला दुरन्ततमसः शक्तिर्महत्यावृतिः ॥ ११६ ॥

प्रज्ञावान् अपि—நல்ல புத்திசாலியாய் இருந்தாலும், पण्डितः अपि-சாஸ்திர ஞானமுள்ளவனாய் இருந்தாலும், चतुरः अपि-ஸாமர்த்தியமுள்ளவனாய் இருந்தாலும், अत्यन्त-सूक्ष्म-अर्थ-दृक्—வெகு ஸூக்ஷ்மமான விஷயங்களையும் அறியக்கூடியவனாயிருந்தாலும், बहुधा-பலவிதமாய், स्फुटं—தெளிவாக, संबोधितः अपि நன்கு அறிவூட்டப்பட்டவனாயிருந்தாலும், तमसा—தமோகுணத்தினால், व्यालीढः—நன்கு மூடப்பட்டவனாகிவிட்டால், न वेत्ति-(தத்வத்தை) அறிவதில்லை. भ्रान्त्या-பிராந்தியினால், आरोपित एव-

கல்பிக்கப்படும் வஸ்துவையே, साधु-சரியென்று, कलयति-எண்ணுகிருன். तद्-गणान्-அதன் குணங்களையே, आलम्बते-தழுவுகிருன். हन्त மிகவும் பரிதாபம்! दुरन्त-तमसः-போக்கடிப்பதற்கு மிகவும் சிரமமான தமோ குணத்தின், शक्तिः-சக்தியான, असौ-இந்த, आवृतिः-ஆவரணம் என்பது, महती-பெரிது, प्रबला-மிகவும் பலமுள்ளது. (உபநிஷத்துக்களின் மூலம் ஆசார்ய உபதேசத்தால் ஆத்மாவைத்தவிர மற்றவை எல்லாம் பொய் என்று நன்கு அறிந்தபோதிலும் பிராந்தி விலகுவதில்லை என்பதை அநுபவத்தில் காண்கிறேமல்லவா)

(அ) ஆவரண சக்தி என்னவெல்லாம் செய்கிறதென்பதையும் அதற்கு உள்பட்டவனை விக்ஷேப சக்தி நன்கு கெடுத்துவிடுமென்பதையும் காட்டுகிருர் :—

अभावना वा विपरीतभावना संभावना विप्रतिपत्तिरस्याः ।
संसर्गयुक्तं न विमुञ्चति ध्रुवं विक्षेपशक्तिः क्षपयत्यजस्रम् ॥ ११७ ॥

अस्याः-இந்த ஆவரண சக்தியின், संसर्ग युक्तं-சேர்க்கையுள்ளவனை, अभावना-(சாஸ்திரத்தில் உபதேசிக்கப்படும் தத்வம்) இருக்காது என்றோ இல்லையென்றோ தோன்றுதல், विपरीत भावना-நேர்மாறுதலாக (வேறு ஒன்றை தத்வமென்று) எண்ணுதல், विप्रतिपत्तिः-(விருத்தமான குணங்களோடு கூடியிருக்கும் அதுவோ இதுவோ என்று) பலவாருக எண்ணுவதான, संभावना-ஸம்சயம், (ஆக இம்மூன்றும்), ध्रुवं-நிச்சயமாக, न विमुञ्चति-விட்டுவிலகாது. (அவனை), विक्षेप शक्तिः-விக்ஷேபசக்தியானது, अजस्रं-இடைவிடாமல், क्षपयति-கெடுத்துவிடும்.

ஆவரண சக்தியானது ஜீவப்ரஹ்மைக்யம் பொருந்தாது என்ற அஸம்பாவனையையும், அநாத்மாவான சரீராதிகளில் விபரீத ஆத்மபாவனையையும், உபநிஷத்துக்களிலும் குரு வாக்யத்திலும் ஸம்சயபாவனையையும் உண்டுபண்ணி பலவிதமாக மனதில் விக்ஷேபத்தைக் கொடுத்து ஆத்மஸ்வரூபத்தை



விளங்காதபடி செய்து புருஷனையழித்துவிடுகிறது. இதில் சிரவணத்தால் ஸம்சயபாவனையும் மனனத்தால் அஸம்பாவனையும் நிதித்யாஸனத்தால் விபரீத பாவனையும் நீங்கியவுடன் ஞானம் ஏற்பட்டு அக்ஞானவரணம் அழிந்து விக்ஷேபமும் நீங்கிவிடுகிறது. (117)

(அ) விக்ஷேப சக்தியினுல் காமம், க்ரோதம் முதலியது ஏற்படுவதுபோல ஆவரணத்தினுல் ஏற்படுகிறவைகளை எடுத்துச் சொல்கிருர் :—.

अज्ञानमालस्यजडत्वनिद्राप्रमादमूढत्वमुखास्तमोगुणाः ।
एतैः प्रयुक्तो न हि वेत्ति किंचिन्निद्रालुवत्स्तम्भवदेव तिष्ठति ॥ ११८ ॥

अज्ञानं-அறிந்துகொள்ளாமை, आलस्यं-சோம்பல், जडत्व-ஸாமர்த்தியமின்மை, निद्रा-தூக்கம், प्रमाद கவனக்குறைவு, मूढत्वं-முட்டாள்தனம், मुखाः-முதலானவைகள், तमो-गुणाः-தமஸின் குணங்கள். एतैः-இவைகளுடன், प्रयुक्तः-நன்கு சேர்ந்தவன், किंचित्-எதையும், न हि वेत्ति-அறியமாட்டான் என்பது ப்ரஸித்தம். (அவன்), निद्रालुवत्-தூங்குகிறவனைப் போலவும், स्तम्भवत्-தூணைப் போலவும், एव-தான், तिष्ठति-இருப்பான்.

பிறர் சொல்லியும்கூட அறியாமலிருப்பது அக்ஞானம் அல்லது கீதையில் சொன்ன பிரகாரம் மானித்வம் (தற்பெருமை) முதலியவை அக்ஞானம். முயற்சிக்காமலிருப்பது சோம்பல். செய்யவேண்டிய காரியத்தைச் செய்ய சக்தி இருந்தும் செய்யாமலிருப்பது ப்ரமாதம். உள்ளது உள்ளபடி அறியாமலிருப்பது மௌட்யம். அவசியம் அறியவேண்டியதை அறியாமலிருப்பது ப்ரமாதம். அவசியம் செய்யவேண்டிய காரியத்தை செய்யாமலிருப்பது ஆலஸ்யம். (118)

(அ) ரஜோ குணத்திற்கும் தமோ குணத்திற்கும் இடம் கொடுத்துவிட்டால் மிகவும் கெடுதல் ஏற்படுமானதால் விலக்குவதற்காக அவைகளைப்பற்றி இதுவரை சொல்லிவிட்டு வாஸ்தவமாய் அவலம்பிக்க வேண்டியதாயுள்ள ஸத்வ குணத்தைப்பற்றி சொல்லவாரம்பிக்கிருர். முன் 110வது சுலோகத்தில் மூன்று குணங்களும் அடங்கிய மாயையே ஜகத்

காரணம் என்று சொல்லியிருப்பதையனுஸரித்து ஸம்ஸார தசையிலும் ஸத்வத்தின் கலப்பு இல்லாதபோனால் அனுபவமே ஏற்படாது. ஆனால் அவ்விதம் கலப்பதில் தமஸை கூடிய மட்டும் விலக்கி கொஞ்சம் ரஜோ குணமிருக்கும்வரை ஞான மார்க்கத்தில் போவதற்கு வேண்டிய யோக்கியதை ஏற்படுமென்றும், அவ்விரண்டையுமே விலக்கி சுத்தமான ஸத்வ குணத்தில் நிலைத்திருந்தால் ஞானமே ஸித்திக்கும் என்றும் எடுத்துக்காட்டுகிறார்:—

सत्त्वं विशुद्धं जलवत्तथापि ताभ्यां मिलित्वा सरणाय कल्पते ।
यत्रात्मबिम्बः प्रतिबिम्बितः सन्प्रकाशयत्यर्क इवाखिलं जडम् ॥११९॥

यत्र–எதனிடத்தில், आत्म-बिम्बः–ஆத்மாவாகிற பிம்பமானது, प्रतिबिम्बितः–பிரதிபிம்பமடைந்ததாக, सन्–இருந்துகொண்டு, अर्कः इव–ஸூர்யன் போல, अखिलं–எல்லா, जडं–ஜடபதார்த்தத்தையும், प्रकाशयति விளங்கச் செய்கிறதோ (அந்த), सत्त्वं–ஸத்வகுணம், जलवत् ஜலம் போல, विशुद्धं–நன்கு சுத்தமாயுள்ளது. तथा अपि–அப்படியிருந்தபோதிலும், ताभ्यां–(ரஜோகுணம் தமோகுணம் ஆகிய) அவ்விரண்டுடன். मिलित्वा–கலந்துகொண்டு, सरणाय–ஸம்ஸாரத்தின் பொருட்டு, कल्पते–ஏற்பட்டுவிடுகிறது. (119)

(அ) ரஜோகுண தமோகுணங்களிருந்தாலும் அவைகளால் அடக்கப்படாத ஸத்வ குணத்தின் காரியங்களைக் கூறுகிறார்:—

मिश्रस्य सत्त्वस्य भवन्ति धर्मास्त्वमानिताद्या नियमा यमाद्याः ।
श्रद्धा च भक्तिश्च मुमुक्षुता च दैवी च संपत्तिरसन्निवृत्तिः ॥ १२० ॥

अमानिताद्याः–அமானித்வம் முதலான ஞானஸாதனங்கள், नियमाः–நியமங்கள், यमाद्याः–யமங்கள் முதலான எட்டு யோகாங்கங்கள், श्रद्धा च–விசுவாசம், भक्तिः च–(ஸாதனபக்தி, ஸாத்யபக்தி என்றுள்ள இரண்டுவித) பக்தி, मुमुक्षुता च–ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபட



வேண்டுமென்ற ஆவல், दैवी च संपत्तिः–தைவீ ஸம்பத்து, असन्निवृत्तिः–கெட்ட காரியங்களிலிருந்து விலகிக்கொள்ளல் (ஆகிய இவையெல்லாம்) मिश्रस्य–(கொஞ்சம்) கலப்புள்ள, सत्त्वस्य–ஸத்வகுணத்தினுடைய, धर्माः–தர்மங்களாக, भवन्ति–இருக்கின்றன.

பகவத்கீதை 13வது அத்யாயத்தில் 'அமானித்வம்' முதலியவை (20) ஞானஸாதனமாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றில்:—

தன்னிடம் உள்ளதும் இல்லாததுமான குணங்களைக் கொண்டு தானே தன்னைப் புகழ்ந்துகொள்வது மானித்வம், இதை விலக்குவது அமானித்வம்.

புகழ், லாபம், மதிப்பு இவற்றிற்காகவே தர்மங்களைச் செய்வதுடன் இதை உலகில் பிரகடனம் செய்வது தம்பம். இதை விலக்குவது அதம்பித்வம்.

மனம், வாக்கு, உடல் என்னும் முக்கரணங்களாலும் பிறரைத் துன்புறுத்தாமலிருப்பது அஹிம்ஸை.

தன்னைப் பிறர் அவமதித்தபோதிலும் மனம் கலங்காமல் இருப்பது க்ஷாந்தி (பொறுமை.)

மனம், வாக்கு, காயம் மூன்றும் ஒரேமாதிரி இருப்பது ஆர்ஜவம் (நேர்மை).

நமஸ்காரம், ஸேவை, பிரச்னம் இவைகள்மூலம் குருவை அண்டியிருப்பது ஆசார்யோபாஸனம்.

மண், தீர்த்தம் இவைகளால் சரீரத்தில் வெளியிலுள்ள அழுக்கையும், நட்பு முதலான நல் வாஸனைகளாலும், உலக விஷயங்களின் தோஷங்களைச் சிந்திப்பதாலும் உள் அழுக்கான ஆசை முதலியவைகளையும் போக்குவது சௌசம் (தூய்மை).

மோக்ஷ உபாயங்களைக் கடைப்பிடிக்கும்பொழுது எத்தனை இடைஞ்சல்கள் வந்த போதிலும் அவைகளை லக்ஷ்யம் செய்யாமல் திரும்பத் திரும்ப முயற்சிப்பது ஸ்தைர்யம் (நிலை நிறுத்தல்)

தேஹம் இந்திரியம் முதலியவைகள் முக்திக்கு எதிரான வழியில் செல்வதைத் தடுத்து முக்திக்கு அனுகூலமான வழியில் போகும்படி செய்வது ஆத்மவிநிக்ரஹம் (தேஹேந்திரியாதிகளை அடக்குவது)

கண், காது முதலான புலன்களுக்கு விஷயமான, நேரில் பார்த்தும் கேட்டும் உள்ள ரூபம், சப்தம் முதலானவைகளில் பற்றின்மை வைராக்யம்.

நானே எல்லாவற்றிலும் பெரியவன் என்ற கர்வமில்லாமலிருப்பது அநஹங்காரம்.

கர்பத்தில் வஸித்து யோனி வழியாக வெளியே வருவது பிறப்பு, எல்லா மர்மஸ்தானங்களும் துண்டிக்கப்படுவது மரணம் புத்தி, பலம் சக்தி எல்லாம் அழிந்து எல்லோராலும் அவமதிக்கப்படும் நிலை மூப்பு, ஜ்வரம் முதலான வியாதிகள், வெறுக்கப்படும் பொருள் நம்மையடைவதாலும் விரும்பிய பொருள் நம்மை விட்டுப்பிரிந்து செல்வதாலும் ஏற்படும் ஆத்யாத்மிகம் முதலான துன்பங்கள், வாத-பித்த ச்லேஷ்மங்களும் மலம், மூத்ரம் முதலான துர்நாற்றப்பொருள்களும் சரீரத்திலுள்ள தோஷங்கள், பிறவி முதல் தோஷம் வரையுள்ளவைகளில் தீமைகளை அடிக்கடி சிந்தித்தல்.

புத்ரன் முதலானவர்களில் பற்றை நீக்குதல் அஸக்தி.

புத்ரன் முதலானவர்கள் இன்பமடையும்பொழுது தானே இன்பமடைவதாகவும், அவர்கள் துன்பப்படும்பொழுது தானே துன்பப்படுவதாகவும் எண்ணாமலிருப்பது அநபிஷ்வங்கம்.

நமக்கு இஷ்டமான போகப்பொருள் கிடைத்தபொழுது ஸந்தோஷமும், இஷ்டமில்லாத வஸ்து கிடைத்தபொழுது துன்பமும் அடையாமல் எப்பொழுதும் மனதை ஸமமான நிலையில் வைத்திருத்தல்.

ஈசுவரனைத் தன்னைக்காட்டிலும் வேறாக நினைக்காமல் தனது ஆத்ம ஸ்வரூபமாக எண்ணி 'நானே பகவான் வாஸுதேவன்' என்ற தீர்மானத்துடன் மாறாத நிலையான பக்தி கொள்ளல்.

பரிசுத்தமான, மனதிற்கு தெளிவை உண்டாக்கும் இடத்தில் வஸிப்பது.



உலக போகங்களில் ஈடுபடும் ஜனக்கூட்டத்துடன் சேர்ந்து வாழ்வதில் பிரீதியில்லாமை.

ஆத்மாவைக் குறித்ததான அதாவது ஆத்மா வேறு, அநாத்மா வேறு என்று பிரித்தறிவது அத்யாத்ம ஞானம். அதிலேயே நிலைத்திருத்தல். த்வம் பதார்த்தமான ஜீவாத்ம ஸ்வரூபத்தை சோதித்தல்.

மஹாவாக்யார்த்த ஞானம் என்ற தத்வ ஞானத்தின் பலனான மோக்ஷத்தைப்பற்றி ஆலோசித்தல்.

சௌசம், ஸந்தோஷம், தபஸ், ஸ்வாத்யாயம், ஈசுவர ப்ரணிதானம் இவ்வைந்தும் பிறவிக்குக் காரணமான காம்ய கர்மாக்களை விலக்கி மோக்ஷத்திற்குக் காரணமான நிஷ்காம கர்மாவில் ஈடுபடும்படி நியமனம் செய்வதால் நியமங்கள் எனப்படும். இவற்றில் சௌசம் முன்னால் விவரிக்கப்பட்டது. கிடைத்ததில் திருப்தியடைவது ஸந்தோஷம். கிருச்ரம், சாந்த்ராயணம் முதலான விரதோபவாஸாதிகளால் சரீரத்தை கிலேசப்படுத்துவது தவம். பிரணவம், காயத்ரீ முதலான மந்திரங்களை ஜபிப்பது ஸ்வாத்யாயம். தான் செய்யும் எல்லா கர்மாக்களையும் பலனை விரும்பாமல் ஈசுவரனிடம் அர்ப்பணம் செய்வது ஈசுவரப்ரணிதானம்.

அஹிம்ஸை, ஸத்யம், அஸ்தேயம், ப்ரஹ்மசர்யம், அபரிக்ரஹம் இந்த ஐந்தும் யமங்கள். இவற்றில் அஹிம்ஸை முன்னால் விவரிக்கப்பட்டது. பொய் பேசாதிருத்தல் ஸத்யம், பிறர்பொருளை அபஹரிக்காமை அஸ்தேயம் எட்டுவிதமான ஸ்த்ரீ ஸம்பந்தத்தை விலக்குதல் ப்ரஹ்மசர்யம் சரீரம் ஜீவிப்பதற்கு அவசியமாக வேண்டியதைத் தவிர மற்ற போகப் பொருள்களை சேகரிக்காமை அபரிக்ரஹம். யமநியமங்கள் தவிர ஆஸனம், ப்ராணாயாமம் ப்ரத்யாஹாரம், தாரணை, த்யானம், ஸமாதி என்னும் யோகாங்கங்களையும் ஆதிபதத்தால் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

ஆஸ்திக்ய புத்தி சிரத்தை, சிரவணம் முதலான ஒன்பதும் அபரபக்தி. இது பரம பிரேமை என்னும் பரபக்திக்கு ஸாதனம். ஸ்வஸ்வரூப ஸாக்ஷாத்காரத்தால் பந்தத்திலிருந்து விடுதலை அடையுவேணுமென்ற தீவிரமான விருப்பம் முமுக்ஷுத்வம்.

பகவத்கீதையில் 16வது அத்யாயத்தில் கூறப்பட்ட அபயம் முதலான 26ம் தைவ ஸம்பத்தாகும். அவற்றில் தன்னிடமிருந்து தனக்கு இஷ்டமான பொருள் பிரிந்து போவதையும் அநிஷ்டமான பொருள் வருவதையும் முன்னுடியே காட்டக்கூடிய சூழ்நிலை ஏற்பட்டாலும் அதைக்கண்டு துக்கமோ பயமோ அடையாமலிருப்பது அபயமாகும். அல்லது ஸந்தேகப்படாமல் சாஸ்திரத்தில் கூறப்பட்ட காரியங்களைச் செய்வதில் ஈடுபடுவது அபயம்.

மனதில் சிறிதும் அழுக்கில்லாமல் பகவத் தத்வம் நன்கு விளங்கும்படி சுத்தமாக வைத்துக்கொள்வது ஸத்வஸம்சுத்தி. சாஸ்திரம் மூலமாகவும், ஆசார்யர் மூலமாகவும் ஆத்ம தத்வத்தை அறிவது ஞானம். மன ஒருமைப்பாடுடன் அறிந்த விஷயத்தை அனுபவத்திற்குக் கொண்டுவருவது யோகம். இவ்விரண்டிலேயே எப்பொழுதும் ஈடுபடுவது ஞானயோக வ்யவஸ்திதி.

தன் சக்திக்குத் தக்கபடி ஸத்பாத்ரத்திற்குத் தன் பொருளை கொடுப்பது தானம். வெளிப்புலன்களை அடக்குவது தமம். வேதத்தில் சொல்லப்பட்ட அக்னிஹோத்ரம், தர்ச பூர்ண மாஸம் முதலியவைகளும் ஸ்மிருதியில் கூறப்பட்ட தேவயஜ்ஞம் பித்ரு யஜ்ஞம், பூதயஜ்ஞம், மனுஷ்ய யஜ்ஞம் இவைகளும் யஜ்ஞமாகும். அத்ருஷ்டார்த்தமாக வேதாத்யயன ரூபமான ப்ரஹ்மயஜ்ஞம் ஸ்வாத்யாயம்.

தவம் சாரீரம், வாசிகம், மானஸம்என்று மூன்றுவிதம். தேவதை, பிராமணர், ஆசார்யர், வித்வான் இவர்களைப் பூஜிப்பது, தூய்மை, நேர்மை, ப்ரஹ்மசர்யம், அஹிம்ஸை இவை சாரீரமான தவம்.

பிறர் மனதிற்கு பயத்தைக்கொடுக்காதபடி உண்மையாகவும், பிரியமானதும், ஹிதமானதுமான வார்த்தைகளைப் பேசுவதும், வேதாப்யாஸமும் வாசிக தவம்.

மனதில் தெளிவு, ஸுமுகமாக இருத்தல், மௌனம், மனதை அடக்குதல், சித்தசுத்தி இவை மானஸமான தவம்.

மனம், வாக்கு, சரீரம் மூன்றிலும் ஒரே மாதிரியாக நடத்தல், நேர்மை—ஆர்ஜவமாகும். பிறரைத் துன்புறுத்தாமல் இருப்பது அஹிம்ஸை. தான் நேரில் கண்டதையே பேசுவது



ஸத்யம். பிறர் திட்டினாலும் அடித்தாலும் உடனே தன் மனதில் ஏற்படும் கோபத்தை அந்த சமயத்தில் அடக்குவது அக்ரோதம். துக்கத்தின் ஸங்கத்தை விலக்குவது த்யாகம். உட்புலனான மனதையடக்குவது சாந்தி.

பிறரின் தோஷங்களை வெளிப்படுத்தாமலிருப்பது அபைசுநம். பிறர் துன்பப்படுவதைக்கண்டு மனம் பொறுக்காமலிருப்பது தயை. போகப்பொருள்கள் அருகிலிருந்தபோதிலும் அதைக்கண்டு மனதில் விகாரம் ஏற்படாமலிருப்பது அலோலுபத்வம். ஸாது ஜனங்களுடன் சேர்ந்து பழகுவதற்கு உள்ள தகுதி மார்தவம். கெட்ட காரியம் செய்வதில் வெட்கம், வீணான சேஷ்டைகளைச் செய்யாமலிருப்பது அசாபலம். பெண்கள், சிறுவர்கள், முட்டாள்கள் இவர்களால் அவமதிக்கப்படாமலிருப்பது தேஜஸ்.

தன்னையவமதித்தவர்களை அடக்குவதற்கு ஸாமர்த்யம் இருந்தபோதிலும் அவர்கள் விஷயமாக மனதில் கோபம் ஏற்படாமலிருப்பது க்ஷமை (பொறுமை) (மனதில் தோன்றிய கோபத்தை உடனேயடக்குவது அக்ரோதம்) துன்பம் ஏற்படும் பொழுது கலங்கும் மனதைக் கட்டுப்படுத்தி நிலைநிறுத்துதல் த்ருதி. உள்ளும் வெளியும் தூய்மை சௌசம். பிறரை அடிக்க ஆயுதங்களை எடுக்காமலிருப்பது அத்ரோஹம். தன்னை எல்லோரும் கொண்டாட வேணும் என்ற எண்ணம் அதிகமாக இருப்பது அதிமானிதா. இது இல்லாமல் பெரியோர்களை வணங்குவது நாதிமானிதா.

பிறக்கும்பொழுது தேவர்களுக்குத் தக்கதான ஸாத்விகமான நல்ல வாஸனை யாருக்கு வெளிப்படுகிறதோ, அவர்களிடம் அபயம் முதலான இந்த 26 குணங்களும் விளங்கும்.

கெட்ட காரியங்களை—பாபங்களை—விலக்குவது அல்லது ப்ரஹ்ம வ்யதிரிக்தமான எல்லாவற்றையும் விலக்குவது அஸந்நிவிருத்தி. (120)

विशुद्धसत्त्वस्य गुणाः प्रसादः स्वात्मानुभूतिः परमा प्रशान्तिः ।
तृप्तिः प्रहर्षः परमात्मनिष्ठा यया सदानन्दरसं समृच्छति ॥ १२१ ॥

विशुद्ध-सत्त्वस्य-நன்கு (ரஜஸ் தமஸ் கலப்பில்லாமல்) சுத்தமாயுள்ள ஸத்வ குணத்தினுடைய, गुणाः —

குணங்கள் :— प्रसादः-மனஸின் தெளிவு, स्व-आत्म-अनुभूति-தன் ஆத்மாவின் ஸாக்ஷாத்காரம், परमा-உத்தமமான, प्रशान्तिः-நல்ல சாந்தி, तृप्तिः-திருப்தி, प्रहर्षः-ஆனந்தம், यया-எதினால், सदानन्द-रसं-எப்பொழுதும் ஆனந்த ரஸத்தை, समृच्छति நன்றாக அடைகிறானோ, அவ்வித परम-आत्म निष्ठा-ஸர்வோத்க்ருஷ்டமான ஆத்மாவினிடத்திலேயே நிலைத்திருத்தல் (ஆகிய இவைகள்). (121)

## 13. காரண சரீரம்

(அ) 110வது சுலோகம் முதல் இதுவரை முக்குணங்கள் உள்ள மாயை என்றும் அவ்யக்தம் என்றும் சொல்லிவந்தது தான் காரண சரீரம் எனப்படும். ஸ்தூலம் ஸூக்ஷ்மம் முதலான ஸகல கார்யங்களுக்கும் காரணமாயிருப்பதாலும் ஞானத்தால் அழிந்துபோவதாலும் இதற்கு காரண சரீரம் என்று பெயர். அது தனித்துத் தெரியக்கூடிய அவஸ்தை ஸுஷுப்தி என்கிறார் :—

अव्यक्तमेतत्त्रिगुणैर्निरुक्तं तत्कारणं नाम शरीरमात्मनः ।
सुषुप्तिरेतस्य विभक्त्यवस्था प्रलीनसर्वेन्द्रियबुद्धिवृत्तिः ॥ १२२ ॥

त्रि-गुणैः-மூன்று குணங்களுடன் கூடியதாக, निरुक्तं-நிர்வசனம் செய்யப்பட்ட, एतत्-இந்த, अव्यक्तं-அவ்யக்தம் என்கிற, तत्-அது, आत्मनः-ஆத்மாவிற்கு, कारणं शरीरं नाम-காரணசரீரம் என்று (சாஸ்திரங்களில்) பிரஸித்தம். एतस्य-இதன், विभक्ति अवस्था-பிரித்து அறியக்கூடிய அவஸ்தை, प्रलीन-सर्व-इन्द्रिय-बुद्धि-वृत्तिः-எல்லா இந்திரியங்களுடையவும், [புத்தியினுடையவும் விருத்திகள் லயம் அடைந்திருப்பதான, सुषुप्तिः-நல்ல தூக்கம்.

(அ) அந்த ஸமயத்தில் புத்திகூட அவ்யக்தத்தில் பீஜ ஸ்வரூபமாய் அடங்கியேயிருக்கிறதென்றும் அதினால்தான் அப்பொழுது எவ்வித அறிவும் தெரிகிறதில்லை யென்றும் விளக்குகிறார் :—



सर्वप्रकारप्रमितिप्रशान्तिर्बीजात्मनावस्थितिरेव बुद्धेः ।
सुषुप्तिरत्रास्य किल प्रतीतिः किंचिन्न वेद्मीति जगत्प्रसिद्धेः ॥ १२३ ॥

सर्व-प्रकार प्रमिति-प्रशान्तिः-எல்லாவிதமான (பிரத்யக்ஷம், அனுமானம் முதலான) அறிவுகளும் நன்கு அடங்கி, बुद्धेः-புத்தியின், बीज-आत्मना-பீஜரூபமாக, अवस्थितिरेव-இருக்கும் தன்மைதான், सुषुप्तिः-ஸுஷுப்தி (நல்ல தூக்கம்) என்பது. अत्र-இவ்விஷயத்தில், किल-அல்லவா, अस्य-(தூங்கி எழுந்திருக்கும்) இவனுக்கு, किंचित्-எதையும், न वेद्मि-நான் அறிவதில்லை, इति-என்று, प्रतीतिः-ஞானமுண்டாகிறது என்று, जगत्प्रसिद्धेः-உலகம் பூராவும் பிரஸித்தியிருப்பதால் (ஸுஷுப்தியை மறுக்கமுடியாது). (123)

(அ) இவ்விதம் 74-வது சுலோகத்தில் ஸ்தூல சரீரத்தை சொல்லவாரம்பித்து, முன் சுலோகத்தில் காரண சரீரத்தில் முடித்து, மத்தியில் ஜகத் காரணமான அவ்யக்தம், மூன்று குணங்கள், சப்தம் முதலிய விஷயங்கள், அவைகளை கிரஹிக்கும் இந்திரியங்கள், அந்தஃகரணம், ஸுகதுக்க அனுபவங்கள், பஞ்சமஹாபூதங்கள் முதலிய ஜகத்திலுள்ள ஸகல பதார்த்தங்களையும் சொல்லிவிட்டு, இப்பொழுது இவையெல்லாமே அனாத்மா, ஆத்மாவல்லாதது, என்று 'அனாத்மா எது?' என்று சிஷ்யன் 51-வது சுலோகத்தில் கேட்ட 5-வது கேள்விக்கு பதில் சொல்லி முடிக்கிறார் :—

देहेन्द्रियप्राणमनोऽहमादयः सर्वे विकारा विषयाः सुखादयः ।
व्योमादिभूतान्यखिलं च विश्वमव्यक्तपर्यन्तमिदं ह्यनात्मा ॥ १२४ ॥

देह-इन्द्रिय-प्राण-मनो-अहं-आदयः-சரீரம், இந்திரியம், பிராணன், மனஸ், அஹங்காரம் முதலியவைகளும், सर्वे-எல்லா, विकाराः-மாறுபாடுகளும், विषयाः-(சப்த ஸ்பர்சாதி) விஷயங்களும், सुख-आदयः-ஸுகம் (துக்கம், காமம், குரோதம்) முதலியவைகளும், व्योम-आदि-ஆகாசம் முதலான, भूतानि-பூதங்களும், अखिलं-எல்லா,

विश्वं च-ஜகத்தும், अव्यक्तपर्यन्तं-(மூலகாரணமாயிருக்கும்) அவ்யக்தம் (என்ற மாயை) முடியவுள்ள, इदं-இது (எல்லாம்), अनात्मा हि-அனாத்மாதான். (124)

(அ) தேஹம் முதல் மாயை முடிய எல்லாம் அனாத்மாவென்று சொன்னதையே திரும்ப திருஷ்டாந்தத்துடன் சொல்கிறார் :—

मायामायाकार्यं सर्वं महदादि देहपर्यन्तम् ।
असदिदमनात्मतत्त्वं विद्धि त्वं मरुमरीचिकाकल्पम् ॥ १२५ ॥

माया-மாயை, महत्-आदि-மஹத் தத்வம் முதல், देह-पर्यन्तं-தேஹம் முடியவுள்ள, माया-कार्यं-மாயையினால் ஏற்பட்டிருப்பது ஆகிய, इदं-இந்த, सर्वं-எல்லாம், असत्-வாஸ்தவமில்லாததாயும், मरु-मरीचिका-कल्पं-பொட்டல் பூமியில் தோன்றும் கானல்போலுள்ளதாயுமுள்ள, अनात्म-तत्त्वं-அனாத்மத் தன்மையுடையதென்று, त्वं-நீ, विद्धि-அறிந்துகொள். (125)

## 14. ஆத்ம ஸ்வரூபம்

(அ) 51-வது சுலோகத்திலேயே ஆத்மா யார் என்று 6-வது கேள்வியாகக் கேட்டதற்கு குருநாதர் பதில் சொல்லவாரம்பிக்கிறார் :—

अथ ते संप्रवक्ष्यामि स्वरूपं परमात्मनः ।
यद्विज्ञाय नरो बन्धान्मुक्तः कैवल्यमश्नुते ॥ १२६ ॥

अथ-(அனாத்மாவைப் பற்றி சொல்லியானபிறகு) இனி, नरः-மனுஷ்யன், यत्-எதை, विज्ञाय-நன்கு அறிந்து, बन्धात्-ஸம்ஸாரபந்தத்திலிருந்து, मुक्तः-விடுபட்டு, कैवल्यं-தனித்து (ஸச்சிதாநந்தரூபமாய் ஏகமாய்) இருக்கும் தன்மையை, अश्नुते-அடைவானோ (அந்த), परमात्मनः-மேலான ஆத்மாவினுடைய, स्वरूपं-ஸ்வரூபத்தை, ते-உனக்கு, संप्रवक्ष्यामि-தெளிவாய் விஸ்தாரமாய் சொல்லுகிறேன். (126)



(அ) அறிவிற்கு விஷயமாகாத ஒரு பதார்த்தத்தின் தன்மையைப் பற்றி சொல்வதென்றால், எற்கனவே அனுபவத்திற்கு விஷயமாயுள்ளதை எடுத்துக்கொண்டு அதன் மூலமாகவே உபதேசித்தால் தான் அத்தன்மை ஒருவாறு தெரிய வரும். இந்த நியாயத்தை அனுசரித்தே ஆத்மாவின் தன்மையைச் சொல்கிறார். எல்லாப் பிராணிகளாலும் ஏகோபித்து ‘நான்’ ‘நான்’ என்று, இன்னொருவர் சொல்லித் தெரிவதற்கு அவசியமில்லாமல், தானே உணர்ந்துவரும் தத்வமே ஆத்மா. விழிப்பு, கனவு, தூக்கம் இம்மூன்று நிலைகளிலும் தான் வேறுபடாமலிருந்துகொண்டு அவைகளைப் பார்த்துக் கொண்டிருப்பவர் ஆத்மா. சரீரம், பிராணன், மனஸ், புத்தி முதலியவைகளின் இருப்பையும், அவைகளின் வியாபாரங்களையும், அவைகளின் மறைவையும் அறிந்து கொண்டேயிருக்கும் தத்வம் ஆத்மா என்கிறார் :—

अस्ति कश्चित्स्वयं नित्यमहंप्रत्ययलम्बनः ।
अवस्थात्रयसाक्षी सन्पञ्चकोशविलक्षणः ॥ १२७ ॥

स्वयं-தானாகவே (வேறு எதையும் எதிர்பார்க்காமல்) नित्यं-எப்பொழுதும், अहं-प्रत्यय-लम्बनः-‘நான்’ என்கிற எண்ணத்திற்கு ஆச்ரயமாய், अवस्था-त्रय-साक्षी-(ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தியென்ற) அவஸ்தைகள் மூன்றுக்கும் ஸாக்ஷியாய், पञ्च-कोश विलक्षणः-(அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம் என்கிற) ஐந்து கோசங்களுக்கு விருத்தமான லக்ஷணத்துடன் வேறுபட்டதாய், सन्-இருக்கிற, कश्चित्-ஒரு பதார்த்தம், अस्ति-இருக்கிறது. (அதுவே ஆத்மா). (127)

(அ) ஆத்மா அவஸ்தாத்ரயஸாக்ஷி என்பதைக் காட்டுகிறார் :—

यो विजानाति सकलं जाग्रत्स्वप्नसुषुप्तिषु ।
बुद्धितद्वृत्तिसद्भावमभावमहमित्ययम् ॥ १२८ ॥

यः - எது, जाग्रत्-स्वप्न-सुषुप्तिषु-ஜாக்கிரத் (விழிப்பு), ஸ்வப்னம் (கனவு), ஸுஷுப்தி (நல்ல தூக்கம்) (ஆகிற மூன்று அவஸ்தை) களிலும், स्फुटं-(விழிப்பில் வெளியுலகத்திலுள்ள பதார்த்தங்கள், கனவில் வாஸனைகளால் கல்பிக்கப்பட்டு உள்ளேயிருப்பதாய் தோன்றும் பதார்த்தங்கள், நல்ல தூக்கத்தில் ஒன்றையும் தெரியவொட்டாமலடிக்கும் அஞ்ஞானம் ஆகிய இவை) எல்லாவற்றையும், बुद्धि-तद्वृत्ति-सद्भावं-(விழிப்பிலும் கனவிலும்) புத்தியினுடையவும் அதன் வியாபாரங்களுடையவும் இருக்கும் தன்மையையும்), अभावं-(நல்ல தூக்கத்தில் அவைகள்) லயத்தையடைந்திருக்கும் தன்மையையும், अहं-'நான்' इति-என்று (இருந்துகொண்டு), विजानाति-நன்கு அறிகிறதோ, अयं-இது (ஆத்மா). (128)

(அ) இந்த ஞானஸ்வரூபமான ஆத்மா எல்லாவற்றையும் அறியுமே தவிர தான் மட்டும் வேறு எதினாலும் அறியப்படக்கூடியதில்லை. இது எல்லா பதார்த்தங்களிலும் ஊடுருவி வியாபித்திருக்குமே தவிர தான் மட்டும் வேறு எதினாலும் வியாபிக்கப்படுவதில்லை. இது எல்லா பதார்த்தங்களையும் பிரகாசிக்கச்செய்யுமே தவிர தான் மட்டும் வேறு எதினாலும் பிரகாசிக்கப்படுவதில்லை என்கிறார்:—

यः पश्यति स्वयं सर्वं यं न पश्यति किंचन ।
यश्चेतयति बुद्ध्यादि न तद्यं चेतयत्ययम् ॥ १२९ ॥

यः - எவர், स्वयं-தானே (எவ்வித ஸஹாயமோ, கருவியோ இல்லாமல்), सर्वं-எல்லாவற்றையும், पश्यति-பார்க்கிறாரோ (அறிகிறாரோ), यं-எவரை, किंचन-எதுவும், न पश्यति-பார்ப்பது கிடையாதோ, यः-எவர், बुद्ध्यादि-புத்தி (மனஸ், பிராணன், இந்திரியங்கள், சரீரம்) முதலானவைகளை, चेतयति-அறிவுள்ளதுபோல் செய்கிறாரோ, यं-எவரை, तत्-அவைகளில் யாதொன்றும், चेतयति-அறிவுள்ளதாகச் செய்ய, न-முடியாதோ, अयं-இவர் (ஆத்மா). (129)



येन विश्वमिदं व्याप्तं यं न व्याप्नोति किंचन ।
अभारूपमिदं सर्वं यं भान्तमनुभात्ययम् ॥ १३० ॥

येन-எவரால், इदं-இந்த, विश्वं ஜகத், व्याप्तं-வியாபிக்கப்பட்டிருக்கிறதோ, यं-எவரை, किंचन-எதுவும், न व्याप्नोति-வியாபிக்கிறதில்லையோ, अभा-रूपं-பிரகாசத்தன்மையற்ற, इदं இது, सर्वं-எல்லாம், भान्तं-பிரகாசித்துக்கொண்டிருக்கிற, यं-எவரை, अनु-भाति தழுவிப் பிரகாசிக்கிறதோ, अयं-இவர் (ஆத்மா). (130)

(அ) புத்தி முதலானதுகளை அறிவுள்ளவைபோல சேஷ்டிக்கச் செய்வதில் அவைகளை யஜமானன் வேலைக்காரர்களை ஏவுகிறதுபோல் அல்ல, தன்னுடைய இருப்பினாலேயே அவைகள் வேலை செய்கின்றன என்கிறார்:—

यस्य संनिधिमात्रेण देहेन्द्रियमनोधियः ।
विषयेषु स्वकीयेषु वर्तन्ते प्रेरिता इव ॥ १३१ ॥

देह-इन्द्रिय-मनः-धियः-சரீரம், இந்திரியங்கள், மனஸ், புத்தி இவைகள், यस्य-எவருடைய, संनिधि-मात्रेण-ஸன்னிதி (முன் இருப்பு) மாத்திரத்தால், स्वकीयेषु-தங்கள் தங்களுக்கு உரிய, विषयेषु-விஷயங்களில், प्रेरिता इव - ஏவப்பட்டவைகள்போல, वर्तन्ते-ஈடுபட்டுக்கொண்டிருக்கின்றனவோ (அவர் ஆத்மா). (131)

अहंकारादिदेहान्ता विषयाश्च सुखादयः ।
वेद्यन्ते घटवद्येन नित्यबोधस्वरूपिणा ॥ १३२ ॥

अहंकारादि देहान्ताः-அஹங்காரம் முதல் தேஹம் வரை (ஐந்து கோசங்கள்) யாவும், विषयाः च-(சப்தம், ஸ்பர்சம் முதலிய) விஷயங்களும், सुखादयः-ஸுகம் (துக்கம், காமம், குரோதம்) முதலியவைகளும், नित्य-बोध-स्वरूपिणा-நித்யமாயுள்ள அறிவு ஸ்வரூபமாயிருக்கும், येन-எவரால், घटवत्-(வெளியிலுள்ள ஜடமான) குடம் போலவே, वेद्यन्ते-அறியப்படுகின்றனவோ, (அவர் ஆத்மா). (132)

एषोऽन्तरात्मा पुरुषः पुराणो निरन्तराखण्डसुखानुभूतिः ।
सदैकरूपः प्रतिबोधमात्रो येनेषिता वागसवश्चरन्ति ॥ १३३ ॥

येन-எவரால், इषिताः-இச்சிக்கப்பட்டு, वाक्-வாக்கு (முதலான இந்திரியங்கள்), असवः-(பிராணன், அபானன் முதலான) பிராணன்கள், चरन्ति-சேஷ்டிக்கின்றனவோ, एषः-இவர் (தான்), अन्तः-आत्मा-(ஐந்து கோசங்களுக்கும்) உள்ளேயிருக்கும் ஆத்மா. (அவர்), पुरुषः-(சரீராதிகளான) நகரத்தில் இருப்பவர், पुराणः-எப்பொழுதும் இருந்துவருகிறவர், निरन्तर-अखण्ड-सुख-अनुभूतिः-இடைவெளியன்னியில் பரிபூர்ணமான ஆனந்த அனுபவ ஸ்வரூபமாயுள்ளவர், सदा-எப்பொழுதும், एक-रूपः-ஒரே (மாறுதலன்னியிலுள்ள) ஸ்வரூபமுள்ளவர், प्रतिबोध-मात्रः-ஒவ்வொரு சிறு அறிவிலும் அறிவு ரூபமாய் அறியத்தகுந்தவர் (அல்லது அக்ஞானமாகிய தூக்கத்திலிருந்து விழித்தவுடன் அறியத்தகுந்தவர்). (133)

(அ) அவரைத் தேடுவதற்கு எங்கேயும் போகவேண்டாம் நமக்குள்ளேயேயிருக்கிறார். ஏனெனில் பரமாத்மாதான் நம் சரீரத்தில் ஜீவாத்ம ரூபமாக விளங்குகிறார். ஜீவஸ்வருபத்தை நன்கு சோதித்துப் பார்த்தால் அதுவே தத்பதார்த்தமான பரமாத்மா என்கிறார் :—

अत्रैव सत्त्वात्मनि धीगुहायामव्याकृताकाश उरुप्रकाशः ।
आकाश उच्चै रविवत्प्रकाशते स्वतेजसा विश्वमिदं प्रकाशयन् ॥१३४॥

अत्र एव-இங்கேயே (இந்த ஸ்தூல சரீரத்திற்கு உள்ளேயே), सत्त्वात्मनि-ஸத்வகுணப் பிரதானமாயிருக்கிற, धी गुहायां-புத்தியாகிற குஹைக்குள் (ஸூக்ஷ்ம சரீரத்திற்கும் உள்ளே), अव्याकृत-आकाशे, (அவ்விரண்டு சரீரங்களுக்கும் காரணமாயிருக்கும்) அவ்யாகிருதமாகிய (அவ்யக்தம், மாயை, அவித்யை என்று சொல்லப்படும்) வெட்டவெளியில் (காரண சரீரத்திற்கும் உள்ளே), उरु प्रकाशः-வெகு பிரகாசமுள்ளவராய், आकाशः-எங்கும் (ஞானத்தினால் வியாபித்து) பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஆத்மா, स्वतेजसा-தன்னுடைய தேஜஸினால், इदं-இந்த, विश्वं-ஜகத்தை, प्रकाशयन्-பிரகாசிக்கும்படிச் செய்துகொண்டு, उच्चैः-மேலானதாக, रविवत्-ஸூர்யனைப் போல, प्रकाशते-பிரகாசிக்கிறார்.

ஸூர்யன் உயரவிருப்பதினாலேயே பதார்த்தங்கள் தானாகவே விளங்குகின்றனவே தவிர, அவைகளை விளக்குவதற்காக ஸூர்யன் எவ்வித பிரவிருத்தியும் செய்வது கிடையாது. விளக்கப்படும் பதார்த்தங்களில் ஏற்படும் மாறுதலும் ஸூர்யனை மாறுதலடையச் செய்யாது என்று தாத்பர்யம். (134)



(அ) அதே விஷயத்தை அக்னியை திருஷ்டாந்தமாகக் கூறி, ஆத்மாவிற்கு எவ்வித விகாரமும் கிடையாதென்பதை தெளிவுபடுத்துகிறார் :—

ज्ञाता मनोहंकृतिविक्रियाणां देहेन्द्रियप्राणकृतक्रियाणाम् ।
अयोऽग्निवत्ताननु वर्तमानो न चेष्टते नो विकरोति किंचन ॥ १३५ ॥

मनः-अहंकृति-विक्रियाणां-மனஸ், அஹங்காரம் இவைகளின் மாறுதல்களையும், देह-इन्द्रिय-प्राण-कृत-क्रियाणां-தேஹம், இந்திரியங்கள், பிராணன் இவை செய்யும் வியாபாரங்களையும், ज्ञाता-(ஸாக்ஷியாய் இருந்து கொண்டு) அறிகிறவராய், तान्-(மனஸ், தேஹம் முதலிய) அவைகளை, अनु-ஒட்டி, वर्तमानः-இருந்து கொண்டு, अयोऽग्निवत्-இரும்பில் தோன்றும் அக்னியைப் போலவே, न चेष्टते எவ்வித வியாபாரமும் செய்வதில்லை, किंचन-வேறு எதையும், नो विकरोति-மாறுதலடையச் செய்வதுமில்லை.

இரும்புக்கம்பியை பழுக்கப் பழுக்கக் காய்ச்சினால் அதில் தோன்றும் அக்னி அந்த கம்பி வளைவாயிருந்தால் வளைவாகவும் வட்டமாகவிருந்தால் வட்டமாகவும், தோன்றினபோதிலும் இவ்வித ரூபங்கள் வாஸ்தவத்தில் அக்னியிடத்தில் கிடையாது. அதேபோல தேஹாதிகளின் ஸம்பந்தத்தால் அவைகளிலுள்ள

குணங்களும் ஆத்மாவிடத்தில் தோன்றினபோதிலும் அவை ஆத்மாவைச் சேர்ந்ததல்ல. (135)

(அ) மாறுதல்கள் எல்லாம் ஆத்மாவல்லாததற்குத் தான் உண்டே தவிர ஆத்மாவிற்குக் கிடையாது என்கிறார்:—

न जायते नो म्रियते न वर्धते न क्षीयते नो विकरोति नित्यः ।
विलीयमानेऽपि वपुष्यमुष्मिन्न लीयते कुम्भ इवाम्बरं स्वयम् ॥ १३६ ॥

(இந்த ஆத்மா) नित्यः-நித்யமாயிருப்பவர் (என்றைக்கும் ஒரே மாதிரியாயிருப்பவர்). न जायते-அவர் பிறப்பதில்லை, नो म्रियते இறப்பதில்லை, न वर्धते-வளர்வதில்லை, न क्षीयते-குறைவதில்லை, नो विकरोति-மாறுபடுவதில்லை. अमुष्मिन्-இந்த, वपुषि சரீரம். विलीयमाने अपि-நன்கு நாசமடைந்தாலும்கூட, कुम्भे-குடம் (நாசமடையும்போது) (அதிலுள்ள) अम्बरं-ஆகாசம் (எப்படி நாசமடைவதில்லையோ) इव-அதைப்போலவே, (ஆத்மாவும்) स्वयं-தான் न लीयते-நாசமடைவது கிடையாது. (136)

(அ) அவர் சுத்தஞானஸ்வரூபர் என்பதைச் சொல்கிறார்:—

प्रकृतिविकृतिभिन्नः शुद्धबोधस्वभावः
सदसदिदमशेषं भासयन्निर्विशेषः ।
विलसति परमात्मा जाग्रदादिष्ववस्था-
स्वहमहमिति साक्षात्साक्षिरूपेण बुद्धेः ॥ १३७ ॥

परमात्मा-உத்தமமான ஆத்மாவானவர், प्रकृति विकृति-भिन्नः-காரணம், காரியம் இரண்டிற்கும் வேறுபட்டவராய், शुद्ध-बोध-स्वभावः-சுத்தமான அறிவையே ஸ்வரூபமாயுள்ளவராய், सत्-வியக்தமாய் தெரியக்கூடிய தேஜஸ், ஜலம், பிருதிவீ, असत्-வியக்தமாய் தெரியக்கூடாததாயிருக்கிற ஆகாசம், வாயு முதலிய, इदं-இது, अशेषं-பாக்கியன்னியில் எல்லாவற்றையும், भासयन्-



விளங்கும்படிச்செய்கிறவராய், (ஆனால் தான் மாத்திரம்) निर्विशेषः-எவ்வித குணமுமன்னியில் இருப்பவராய், (இருந்துகொண்டு), जाग्रदादिषु-ஜாக்ரத் (ஸ்வப்னம், ஸுஷுப்தி) முதலான, अवस्थासु அவஸ்தைகளில், साक्षात्-நேரிடையாய், अहं अहं इति 'நான்' 'நான்' என்று, बुद्धेः-புத்திக்கு, साक्षि रूपेण-(எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருக்கிற) ஸாக்ஷியென்ற ரூபத்துடன், विलसति-நன்கு விளங்குகிறார். (137)

(அ) மனஸ் அலையற்று நின்று புத்தி தெளிவடையுமானால் இவ்வாத்மாவை நேரில் ஸாக்ஷாத்கரித்து ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டு விடலாமென்று குரு சிஷ்யனுக்கு போதிக்கிறார்:—

नियमितमनसामुं त्वं स्वमात्मानमात्म-
न्ययमहमिति साक्षाद्विद्धि बुद्धिप्रसादात् ।
जनिमरणतरङ्गापारसंसारसिन्धुं
प्रतर भव कृतार्थो ब्रह्मरूपेण संस्थः ॥ १३८ ॥

त्वं-நீ, अमुं-இந்த, स्वं-உன்னுடைய, आत्मानं-ஆத்மாவை, आत्मनि-தன்னிடத்திலேயே, नियमित-मनसा-நன்கு கட்டுப்படுத்தப்பட்ட மனஸினால், बुद्धि प्रसादात्-(ஸம்சயம் முதலிய எவ்வித கலக்கமுமன்னியில்) புத்தி தெளிவடைந்துவிட்டால், अयं 'இவர்' 'अहं' நான், इति-என்று. साक्षात्-நேரிடையாய், विद्धि-அறிந்துகொள். (அவ்விதம் ஏற்படும் ஆத்மக்ஞானத்தினால்) जनि-मरण-तरङ्ग-अपार-संसार-सिन्धुं-பிறப்பு, இறப்பு ஆகிய அலைகளுடன் கூடிய, கரையற்ற ஸம்ஸாரமாகிற கடலை, प्रतर-நன்கு தாண்டிவிடு. कृतार्थः-செய்யவேண்டியதையெல்லாம் செய்தவனாக (வேறு எதையும் அடையவேண்டாதவனாக) भव-ஆகிவிடு. ब्रह्म-रूपेण-சுத்த சைதன்யமான ப்ரஹ்மஸ்வரூபமாகவே, संस्थः-நன்கு நிலையுற்றவனாக, भव-இருந்துவிடு). (138)

## 15. பந்த ஸ்வரூபம்

(அ) 127வது சுலோகம் முதல் இதுவரை ஆத்மா யார் என்று சிஷ்யன் 51வது சுலோகத்தில் கேட்டிருந்த 6வது கேள்விக்கு குரு பதில் சொல்லிவிட்டு அவனுடைய முதல் கேள்வியான பந்தம் என்பது என்னவென்பதற்கு பதில் சொல்லவாரம்பிக்கிறார்:—

अत्रानात्मन्यहमिति मतिर्बन्ध एषोऽस्य पुंसः
प्राप्तोऽज्ञानाज्जननमरणक्लेशसंपातहेतुः ।
येनैवायं वपुरिदमसत्सत्यमित्यात्मबुद्ध्या
पुष्यत्युक्षत्यवति विषयैस्तन्तुभिः कोशकृद्वत् ॥ १३९ ॥

अत्र-இந்த अनात्मनि-ஆத்மாவல்லாத சரீராதிகளில் अहं-'நான்' इति-என்கிற मतिः-எண்ணம் (தான்) अस्य-இந்த पुंसः-புருஷனுக்கு बन्धः-பந்தம் என்கிற एषः-இது. (இது) अज्ञानात् (ஆத்ம ஸ்வரூபத்தை) அறியாததினால் प्राप्तः-அடையப்பட்டிருக்கிறது. (இதுதான்) जनन-मरण क्लेश संपात-हेतुः-பிறப்பு, இறப்பு, துன்பங்கள் இவைகளில் நன்கு விழுவதற்குக் காரணம். येन एव-எதினாலேயே अयं-இவன் असत्-வாஸ்தவமில்லாத इदं-இந்த वपुः-சரீரத்தை सत्यं इति-ஸத்யம் என்று आत्म-बुद्ध्या-'நான்' என்ற எண்ணத்துடன் पुष्यति-போஷணம் செய்கிறான் उक्षति-ஜலம் தெளித்து வளர்க்கிறான், अवति-காப்பாற்றி வருகிறான் कोशकृद्वत् நூலால் கூடு கட்டும் பூச்சி எப்படி तन्तुभिः-(தன் வாய் எச்சிலினால் செய்யப்படும்) நூலைக்கொண்டே (கூடு கட்டிக்கொண்டு அதற்குள் அகப்பட்டுக்கொண்டு வெளியில் வரமுடியாமல் மடிகிறதோ) அதேபோல் विषयैः-சப்தம், ஸ்பர்சம் முதலான) விஷயங்களை தானே ஏற்படுத்திக்கொண்டு அவைகளாலேயே (தன்னை பந்தப்படுத்திக்கொள்கிறான்.)



பந்தம் அக்ஞானத்தால் ஏற்பட்டது என்று சொன்னதால் அக்ஞானம் விலகியவுடன் பந்தம் விலகிவிடும் என்று தெரிகிறது. அக்ஞானம் ஞானத்தால்தான் நீங்கும். ஆகவே ஞானத்தால் அக்ஞான மூலகமான பந்தம் நிவிருத்தியாகிறது. இதனால் பந்தம் பொய் என்பது தெரிகிறது. உண்மைப்பொருள் ஞானத்தால்மட்டும் அழியாது. கர்மாவால்தான் அழியும். (189)

(அ) அறியாமையினால் ஏற்பட்டது என்பதினால் ஆவரணத்தையும், ஆத்மாவல்லாததில் ஆத்ம புத்தியென்பதினால் விக்ஷேபத்தையும் சொல்லியிருப்பதை திருஷ்டாந்தத்தினால் விளக்குகிறார். இவ்விரண்டும் சேர்ந்து பந்தத்தை உண்டுபண்ணுவதினால் ஸகலவிதமான அனர்த்தங்களும் ஏற்படுகின்றனவென்றும் காட்டுகிறார்:—

अतस्मिंस्तद्बुद्धिः प्रभवति विमूढस्य तमसा
विवेकाभावाद्वै स्फुरति भुजगे रज्जुधिषणा ।
ततोऽनर्थव्रातो निपतति समादातुरधिक-
स्ततो योऽसद्ग्राहः स हि भवति बन्धः शृणु सखे ॥

तमसा-இருட்டினால் (அறியாமையால்) विमूढस्य-நன்கு (பகுத்தறிய சக்தியற்று) மோஹத்தையடைந்திருப்பவனுக்கு अतस्मिन्-'அது' அல்லாததில் तद्-बुद्धिः-'அது' என்கிற எண்ணம் प्रभवति-ஏற்படுகிறது. विवेक-अभावात् वै-பகுத்தறிவு இல்லாததினால்தான் स्फुरति-முன்னால் தென்படுகிற भुजगे-ஸர்ப்பத்தினிடத்தில் रज्जु-धिषणा-கயிறு என்கிற எண்ணம் (ஏற்படுகிறது). ततः-அதிலிருந்து (கயிறாக எண்ணுவதிலிருந்து) समादातुः-அதை எடுப்பவனுக்கு अधिकः-அதிகமான अनर्थव्रातः-பலவித அனர்த்தங்களின் கூட்டம் निपतति-ஏற்பட்டுவிடுகிறது. ततः-ஆகையினால் असद्-ग्राहः-வாஸ்தவமல்லாததை (வாஸ்தவமென்று) எடுத்துக்கொள்கிறது என்பது यः-எதுவோ स हि-அதுவே बन्धः-பந்தமாக भवति-இருக்கிறது. सखे-ஹே ஸ்நேஹிதனே! शृणु-நன்கு கேட்டு ஞாபகத்தில் வைத்துக்கொள்.

ஸாதாரணமாக பிரமத்திற்கு திருஷ்டாந்தமாக பாதி
இருட்டில் கிடக்கும் கயிற்றைப்பார்த்து பாம்பு என்று பயப்படு
வதைச் சொல்வதே வழக்கம். இங்கு ஸ்ரீமத் ஆசார்யார் அதை
மாற்றி வாஸ்தவமாக இருக்கும் பாம்பை கயிறு என்று எடுக்கப்
போனால் பயத்துடன் நிற்காது மரணமே ஏற்பட்டுவிடும் என்று
காட்டுகிறார். ஆத்மாவை அஸத் (கிடையவே கிடையாது)
அசித் (வெறும் ஜடம் அறிவற்றது), அநாநந்தம் (ஆனந்த
மற்றது) என்று நினைத்துவிட்டால்கூட அவ்வளவு பாதகமில்லை.
தேஹாதிகளை ஸத் (சாசுவதமானது) சித் (அறிவுள்ளது),
ஆனந்தம் (ஸுகத்தைக் கொடுப்பது) என்றெல்லாம் எண்ணி
விட்டால் ஏமாந்து போவதுடன், அவைகளில் சிக்கிக்கொண்டு
ஒருநாளும் க்ஷேமத்தையடைவதற்கு வழியில்லாமலே மேல்
மேல் ஜனன மரண பிரவாஹத்தில் மூழ்கிக்கொண்டு துக்கங்
களையே அனுபவிக்கும்படி ஏற்படும் என்பதை இந்த
திருஷ்டாந்தத்தினால் நன்கு எடுத்துக் காட்டியிருக்கிறார்.
அதிஷ்டானமான பாம்பையும் அதில் ஆரோபிதமான கயிறை
யும் பிரித்துத் தெரிந்துவிட்டால் அனர்த்தம் ஏற்படாது.
ஆகவே உண்மைப்பொருளான பாம்பை அறியாமை என்ற
அக்ஞானம் பாம்புக்கும் கயிறுக்கும் உள்ள விவேகத்தை
மறைத்து அவிவேகத்தை உண்டுபண்ணி அதன்மூலம் பந்தத்
திற்குக் காரணமாகிறது. (140)

(அ) இந்த பந்தம் எப்படி ஏற்பட்டதென்று 51வது
சுலோகத்தில் கேட்ட இரண்டாவது கேள்விக்கு ஒருவாறு
முன்னாலேயே 'அக்ஞானத்தினால்' என்றும் 'ஆவரணம்
விக்ஷேபம் இவைகளினால்' என்றும் பதில் சொல்லியிருந்த
போதிலும் மேல்வரும் எட்டு சுலோகங்களில் இன்னமும் தெளிவு
படுத்துகிறார்:—

अखण्डनित्याद्वयबोधशक्त्या स्फुरन्तमात्मानमनन्तवैभवम् ।
समावृणोत्यावृतिशक्तिरेषा तमोमयी राहुरिवार्कबिम्बम् ॥ १४१ ॥

अखण्ड-नित्य-अद्वय-बोध-शक्त्या – பரிபூர்ணமாய், நித்ய
மாய், இரண்டற்றதாய், அறிவாய் இருக்கும் சக்தியுடன்
स्फुरन्तं-பிரகாசித்துக்கொண்டிருப்பதும் अनन्तवैभवं-எல்லை
யற்ற வைபவங்களுடையதுமான आत्मानं-ஆத்மாவை
एषा இந்த तमोमयी-தமோ (இருட்டு) ரூபமான आवृति-



शक्तिः-ஆவரண (மறைக்கும்) சக்தியானது अर्क-बिम्बं-
ஸூர்யனுடைய பிம்பத்தை राहुः-ராகு (மறைப்பது)
इव-போல समावृणोति நன்கு மறைக்கிறது.

மஹாப்ரகாசத்துடன் கூடிய ஸூரியனைக்கூட ராஹு
மறைத்து பிரகாசம் தெரியாதபடி செய்துவிடுகிறான். இது
போல் நித்யமான ஸ்வயம் ஜோதியான ஆத்மாவை
அக்ஞானம் மறைத்து அதன் பிரகாசம் தெரியாதபடி செய்து
விடுகிறது. (141)

(அ) பதார்த்தத்தின் வாஸ்தவ ஸ்வரூபம் மறைபட்டதும்
அதை வேறு விதமாக நினைப்பதால் தான் துன்பங்கள் ஏற்படு
கின்றன என்ற தத்வத்தை ஆத்மா விஷயத்தில் எடுத்துக்
காட்டுகிறார்:—

तिरोभूते स्वात्मन्यमलतरतेजोवति पुमान्
अनात्मानं मोहादहमिति शरीरं कलयति ।
ततः कामक्रोधप्रभृतिभिरमुं बन्धकगुणैः
परं विक्षेपाख्या रजस उरुशक्तिर्व्यथयति ॥ १४२ ॥

अमलतर तेजोवति-மிகவும் நிர்மலமான பிரகாசத்தை
யுடைய स्व-आत्मनि-தன் ஆத்மஸ்வரூபம் तिरोभूते-மறை
பட்டவுடன் पुमान्-புருஷன் अनात्मानं-ஆத்மாவல்லாத
शरीरं-சரீரத்தை मोहात्-மோஹத்தினால் अहं-'நான்'
इति-என்று कलयति-எண்ணுகிறான். ततः-அதன் பிறகு
रजसः-ரஜோகுணத்தின் उरु-शक्तिः-பிரபலமான சக்தி
யாகிய विक्षेप-आख्या-விக்ஷேபம் என்று பெயருள்ளது
अमुं-இந்த புருஷனை काम क्रोध-प्रभृतिभिः-காமம், குரோதம்
முதலான बन्धक-गुणैः-கட்டுவிக்கும் குணங்களால் परं-
மிகவும் व्यथयति-துன்பப்படுத்துகிறது.

சரீராபிமானம் உள்ளவனுக்குத்தான் சரீரத்திற்கு அநுகூல
மான விஷயங்களில் ஆசையும், அது கிடைக்காவிட்டால்
கோபமும், அது கிடைத்துவிட்டால் லோபமும் ஏற்படுகிறது.
காம-க்ரோத-லோபங்கள் தான் எல்லாத் துன்பங்களுக்கும்
காரணம் என்பது கீதையில் கூறப்பட்டுள்ளது. (142)

(அ) அவ்விதம் கட்டி ஸம்ஸாரமாகிற கடலில் மூழ்க வடித்து உழலும்படி செய்கிறதென்பதையும் விளக்குகிறார்:—

महामोहग्राहग्रसनगलितात्मावगमनो
धियो नानावस्थाः स्वयमभिनयंस्तद्गुणतया ।
अपारे संसारे विषयविषपूरे जलनिधौ
निमज्ज्योन्मज्ज्यायं भ्रमति कुमतिः कुत्सितगतिः ॥ १४३ ॥

महा-मोह-ग्राह-ग्रसन-गलित-आत्मा-अवगमनः- பெரிதான மோகமாகிய முதலையால் பிடிக்கப்பட்டதினால் நழுவிப் போன ஆத்ம ஸ்வரூபத்தின் ஞானமுள்ளவனாய் अयं- இவன் धियः -புத்தியினுடைய नाना-பலவித अवस्थाः- அவஸ்தைகளை तद्-गुणतया-அந்த புத்தியின் குணங்களை யுடையவனாக स्वयं-தானும் अभिनयन्-எண்ணி நடந்து கொண்டு विषय-विष-पूरे -விஷயங்களாகிற விஷம் நிறைந்து अपारे-கரையற்றதாயிருக்கும் संसारे-ஸம்ஸார மென்ற जलनिधौ-ஸமுத்திரத்தில் निमज्ज्य-நன்கு மூழ்கி उन्मज्ज्य- கிளம்பி (மூழ்கி, கிளம்பி இவ்விதமாக) कुमतिः- மதிகெட்டவனாய் कुत्सित-गतिः - நிந்திக்கக் கூடிய அறிவுள்ளவனாய் அல்லது, (நரகம் முதலான கீழான கதியை யடைபவனாய்) भ्रमति-பிரமத்தை யடைகிறான் (சுழன்றுகொண்டிருக்கிறான்). (143)

(அ) ஆத்மாவின் இருப்பையும் பிரகாசத்தையும் ஒட்டியே அஹங்காரம் முதலியவை இருந்து பிரகாசிக்கும்போது, அவைகள் ஆத்மாவை மறைக்குமாவென்ற ஸந்தேஹத்தை மேக திருஷ்டாந்தத்தினால் நிவிருத்தி செய்கிறார்:—

भानुप्रभासंजनिताभ्रपङ्क्तिर्भानुं तिरोधाय यथा विजृम्भते ।
आत्मोदिताहंकृतिरात्मतत्त्वं तथा तिरोधाय विजृम्भते स्वयम् ॥

भानु-प्रभा-संजनित-अभ्र-पङ्क्तिः-ஸூர்யனுடைய கிரணங்களால் ஏற்படும் மேக வரிசை भानुं - ஸூர்யனையே तिरोधाय-மறைத்துக்கொண்டு यथा -எப்படி विजृम्भते-(முன்



நின்றுகொண்டு) நன்றாகக் தோன்றுகிறதோ तथा- அப்படியே आत्म-उदित-अहंकृतिः-ஆத்மாவிலிருந்து- ஏற்பட்ட அஹங்காரமானது आत्मतत्त्वं - ஆத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை तिरोधाय-மறைத்து க்கொண்டு स्वयं-தானே विजृम्भते (முன் நின்றுகொண்டு) விளங்கி வருகிறது.

கோடை காலத்தில் ஸூரிய கிரணத்தால் கடலிலுள்ள ஜலம் ஆவியாக மேலே போய் ஆகாயத்தில் மேகமாக ஆகிவிடு கிறது. ஆகவே ஸூரியனால் ஏற்பட்டது மேகம். அப்படி யிருந்தாலும் மேகம் தன்னை உண்டு பண்ணின ஸூரியனை மறைத்து தான் முன்னால் நிற்கிறது. இதுபோல் ஆத்மாவி லிருந்து ஏற்பட்ட, அதாவது ஆத்ம ப்ரகாசத்தாலேயே விளங்குகிற அஹங்காரம் ஆத்மாவை மறைத்து தன்னையே காட்டிக்கொள்கிறது. (144)

(அ) மறைப்பதுடன் இல்லாமல் அதற்குமேல் பலவித துக்கங்களையும் உண்டாக்கிவிடுகிறதென்கிறார்:—

कवलितदिननाथे दुर्दिने सान्द्रमेघै-
र्व्यथयति हिमझञ्झावायुरुग्रो यथैतान् ।
अविरततमसात्मन्यावृते मूढबुद्धिं
क्षपयति बहुदुःखैस्तीव्रविक्षेपशक्तिः ॥ १४५ ॥

सान्द्र मेघैः-அடர்த்தியான மேகங்களால் कवलित- दिननाथे - மறைக்கப்பட்ட ஸூர்யனோடு கூடிய दुर्दिने- வெளிச்சமில்லாத நாளில் उग्रः-மிகவும் கடுமையான हिम- झञ्झा वायुः-பனி மழை கலந்த புயல் காற்று यथा-எப்படி एतान् -(அதில் அகப்பட்டுக்கொண்ட) இவர்களை व्यथयति-துன்பப்படுத்துமோ, (அப்படியே) अविरत तमसा- இடைவெளியில்லாத (நிற்காமல் இருந்துகொண்டே இருக்கிற) தமோகுணத்தினால் (அறியாமையாகிற ஆவரண சக்தியினால்) आत्मनि-ஆத்மா आवृते-மறைக்கப் பட்டிருக்கும்போது मूढ बुद्धिं-மோஹமடைந்த புத்தி

யுடன் கூடியவளை तीव्रविक्षेपशक्तिः- பலம் வாய்ந்த விக்ஷேப சக்தியானது बहु दुःखैः-வெகு துக்கங்களைக் கொண்டு क्षपयति-கெடுத்துவிடுகிறது (145)

एताभ्यामेव शक्तिभ्यां बन्धः पुंसः समागतः ।
याभ्यां विमोहितो देहं मत्वात्मानं भ्रमत्ययम् ॥ १४६ ॥

अयं-இவன் याभ्यां-எவைகளால் विमोहितः-மோஹத்தை யடைந்து देहं-சரீரத்தை आत्मानं-ஆத்மாவாக मत्वा-நினைத்து भ्रमति-சுழலுகிருனே, एताभ्यां - இவ்விரண்டு शक्तिभ्यां - (ஆவரணம் விக்ஷேபம் என்ற) சக்திகளினுல் एव-தான் पुंसः-புருஷனுக்கு बन्धः-பந்தம் समागतः-வந்திருக்கிறது. (146)

(அ) இவ்வித்மாக ஸம்ஸாரபந்தம் ஏற்பட்ட காரணத்தை சொல்லிவிட்டு, அந்த பந்தம் எப்படி, ஏன் நிலைத்திருக்கிறது என்று 51வது சுலோகத்தில் கேட்ட 9வது கேள்விக்கு குரு உத்தரம் சொல்கிருர். இதில் ஸம்ஸாரத்தை விருக்ஷமாகக் காட்டுகிருர்:—

बीजं संसृतिभूमिजस्य तु तमो देहात्मधीरङ्कुरो
रागः पल्लवमम्बु कर्म तु वपुः स्कन्धोऽसवः शाखिकाः ।
अग्राणीन्द्रियसंहतिश्च विषयाः पुष्पाणि दुःखं फलं
नानाकर्मसमुद्भवं बहुविधं भोक्तात्र जीवः खगः ॥ १४७ ॥

संसृति भूमिजस्य-ஸம்ஸாரமாகிற விருக்ஷத்திற்கு तमः तु-அக்ஞானம் தான் बीजं விதை, देह आत्मधीः சரீரத்தில் ஆத்மாவென்கிற எண்ணம் अङ्कुरः-முளை, रागः-ஆசை पल्लवं-துளிர் कर्म तु-(புண்ணிய பாபரூபமான) கர்மாதான் अम्बु-ஜலம், वपुः-(இந்த ஸ்தூல) சரீரம் स्कन्धः- நடு மரம், असवः-(பிராணன் அபானன் முதலான ஐந்து) பிராணன்களும் शाखिकाः- கிளைகள், अग्राणि - (அக்கிளைகளின்) நுனிகள் इन्द्रिय संहतिः च - இந்திரியங்களின் ஸமுதாயமே, पुष्पाणि - (அந்த நுனிகளிலுள்ள) புஷ்பங்கள் विषयाः - (சப்தம் ஸ்பர்சம் முதலிய) விஷயங்கள், फलं - (இவ்விருக்ஷத்தில் ஏற்படும்) பழம் नाना-कर्म-समुद्भवं பலவித கர்மாக்களால் ஏற்படுகிற बहु-विधं-பல விதமான दुःखं-துக்கம் (விஷய ஸுகங்களும் வாஸ்தவத்தில், ஏற்படுவதற்கு முன்பும், இருக்கும் போதும், தீர்ந்தபிறகும், துக்கத்தையே கொடுப்பதால் அவைகளையும் துக்கமாக பாவிக்கப்பட்டிருக்கிறது), अत्र-இந்த மரத்தில் भोक्ता-( பழுக்கும் பழங்களை ) அனுபவித்துக்கொண்டிருக்கும் खगः-பக்ஷி जीवः-ஜீவன்.



இந்த ச்லோகத்தில் 'कर्म' என்ற சொல் புண்யம், பாபம் இரண்டையும் குறிக்கும். ஆகவே புண்யகாரியமான ஸுகமும் பலன்தான். துக்கத்தை மட்டும் எப்படி பலனுகச் சொல்லலாம் என்று ஸந்தேஹம் ஏற்படலாம். ஆனுல் ஆசார்யாள் விஷயம் மூலமாக ஏற்படும் ஸுகத்தையும் துக்கமாகவே எண்ணுகிருர். விஷயங்களை சம்பாதிக்கும்போதும், அவை நம்மை விட்டு விலகும்போதும் துக்கம்தான் ஏற்படுகிறது. 'விஷயத்தின் சேர்க்கையால் ஏற்படும் போகம் துக்கத்திற்குக் காரணம்' என்று கீதையில் பகவான் கூறுகிருர். ந்யாய சாஸ்திரத்தில் 21 துக்கங்களில் விஷய ஸுகத்தையும் துக்கமாகவே கணக்கிடப்பட்டிருக்கிறது. தேஹத்தை ஆத்மாவாக எண்ணுவதாகிற பந்தமானது ராகத்வேஷங்களையும் அதன்மூலம் புண்ய பாபகர்மாக்களையும் அதன் பயனுக தொடர்ந்து சரீரத்தையும் அதில் அபிமானத்தையும் உண்டுபண்ணிக்கொண்டு நிலைத்து நிற்கிறது என்று கூறி 9வது கேள்விக்கு ஸமாதானம் கூறினுர். (147)

(அ) இவ்விதம் ஸம்சாரபந்தத்தை ஒரு பெரிய விருக்ஷத்திற்கு ஸமானமாக வர்ணித்துவிட்டு அவ்விஷயத்தையே ரூபகமன்னியில் தெளிவாய் எடுத்துச்சொல்கிருர்:—

अज्ञानमूलोऽयमनात्मबन्धो नैसर्गिकोऽनादिरनन्त ईरितः ।
जन्माप्ययव्याधिजरादिदुःखप्रवाहतापं जनयत्यमुष्य ॥ १४८ ॥

अयं - இந்த अनात्म-बन्धः - ஆத்மாவல்லாததில் ஏற்படும் (ஸம்ஸாரமென்கிற) நான் என்னும் அபிமான

மாகிற கட்டு अज्ञानमूलः-தன் ஸ்வரூபத்தை அறியாததால் ஏற்பட்டது नैसर्गिकः-ஸ்வபாவஸித்தம், अनादिः-(அநாதியான அக்ஞானத்தினால் ஏற்பட்டிருப்பதினால் இதுவும்) அநாதி, अनन्तः-(ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்படாதவரை) முடிவற்றது, (என்று பெரியோர்களால்) ईरितः-சொல்லப்பட்டு இருக்கிறது. (இது) अमुष्य-இந்த ஜீவனுக்கு जन्म-अप्यय-व्याधि-जरा-आदि-दुःख-प्रवाह तापं-பிறப்பு இறப்பு பிணி மூப்பு முதலிய துக்க பிரவாஹமாகிற தாபத்தை जनयति-உண்டுபண்ணுகிறது. 'प्रवाहपातं' என்ற பாடத்தில் துன்பப்பிரவாஹத்தில் விழும்படி செய்கிறது என்று பொருள். (148)

## 16. ஆத்மாநாத்ம விவேசனம்

(அ) இதுவரை ஸம்ஸார பந்தத்தின் ஸ்வரூபத்தை எடுத்துக்காட்டிவிட்டு 51வது சுலோகத்தில் கேட்ட 4வது கேள்வியான அந்த பந்தத்திலிருந்து எவ்விதம் விடுதலை யடைவது என்ற முக்கியமான விஷயத்திற்கு பதில் ஆத்ம ஸாக்ஷாத்காரம் தான் ஸாதனமே தவிர வேறு எவ்வித வழியும் கிடையாது என்று சொல்கிறார் :—

नास्त्रैर्न शस्त्रैरनिलेन वह्निना
छेत्तुं न शक्यो न च कर्मकोटिभिः ।
विवेकविज्ञानमहासिना विना
धातुः प्रसादेन शितेन मञ्जुना ॥ १४९ ॥

(இந்த ஸம்ஸார பந்தமானது) धातुः-ஈசுவரனுடைய प्रसादेन-அனுக்ரஹத்தினால் (ஏற்படும்) शितेन-கூர்மையான मञ्जुना-ரமணீயமான विवेकविज्ञानमहा-असिना विना-(ஆத்மா அனாத்மா இரண்டையும் பிரித்தறிவதாகிய) விவேகத்தினால் உண்டாகும் (ஆத்ம ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்காரம் செய்வதாகிய) அனுபவ ஞானமாகிற பெரிய வாளினால் தவிர अस्त्रैः-(ஆக்நேயம் முதலிய) அஸ்திரங்களினால் न-(விலக்கிவிட) முடியாது. शस्त्रैः-(பாணம் முதலிய) ஆயுதங்களால் न-முடியாது. अनिलेन-காற்றினால் (தூக்கி எறியவோ உலர்த்தி நாசம் செய்யவோ), वह्निना-நெருப்பினால் (எரித்து சாம்பல் ஆக்கவோ எவ்விதத்திலும்), छेत्तुं-போக்கடிக்க न शक्यः-முடியாது. कर्मकोटिभिः च-(வேத விஹிதமான) கர்மாக்களின் கோடிகளை செய்வதினாலும்கூட न-முடியாது. ஈசுவரானுக்ரஹத்தால் கிடைக்கும் ஜீவப்ரஹ்மைக்ய ஸாக்ஷாத்காரத்தால்தான் பந்தம் விலகும்) (149)

(அ) இந்த ஆத்மஞானம் ஏற்படுவதற்குள்ள படிகளை வரிசையாகச் சொல்கிறார். வேதத்தில் திடமான விசுவாஸம் ஏற்பட்டு அதில் சொல்லியிருக்கிறபடி தனக்கு விதிக்கப்பட்ட தர்மங்களை சரிவர அனுஷ்டித்து வந்து அதன் மூலமாய் சித்தத்திலுள்ள ஸகலவித தோஷங்களும் நிவிருத்தியாகி நன்கு பரிசுத்தமாயுள்ள சித்தத்தில் ஆத்மதத்வம் ஸாக்ஷாத்கரிக்கப் படும், அதினாலேதான் ஸம்ஸாரபந்தம் விலகும் என்று விளக்குகிறார் :—

श्रुतिप्रमाणैकमतेः स्वधर्मनिष्ठा तयैवात्मविशुद्धिरस्य ।
विशुद्धबुद्धेः परमात्मवेदनं तेनैव संसारसमूलनाशः ॥ १५० ॥

श्रुतिप्रमाणैकमतेः-வேதம் தான் பிரமாணம் என்ற ஒரே தீர்மானமான எண்ணமுள்ளவனுக்கு (அதில் விதிக்கப் பட்டிருக்கும்) स्वधर्मनिष्ठा-ஸ்வதர்மானுஷ்டானத்திலேயே ஈடுபட்டிருத்தல் (ஸித்திக்கும்). अस्य இவனுக்கு तया एव-அதினாலே (ஸ்வதர்மநிஷ்டையினால்) தான் आत्मविशुद्धिः சித்தம் நன்கு தெளிவு அடையும். विशुद्धबुद्धेः-நன்கு பரிசுத்தமான புத்தியையுடையவனுக்கு परमात्मवेदनं-உத்தமமான ஆத்மாவின் ஸாக்ஷாத்காரம் (ஏற்படும்). तेनैव-அந்த ஸாக்ஷாத்காரத்தினால் தான் संसारसमूल-नाशः-ஸம்ஸாரபந்தத்திற்கு அதின் காரணமான அக்ஞானமுள்பட நாசமானது (ஏற்படும்).

**न च कर्मकोटिभिः** என்று முன் சுலோகத்தில் கோடிக் கணக்கான கர்மாக்களாலும் பந்தம்விலகாது என்று கூறியதால் வைதிக கர்மாக்களுக்கு உபயோகமில்லாததால் எல்லோரும் அவைகளை விட்டுவிடலாம் என்று எண்ணிவிடக்கூடாது என்பதற்காக கர்மாக்களுக்கு முக்தியில் உபயோகமில்லா விட்டாலும் அவை சித்த சுத்தியைக் கொடுப்பதன் மூலம் ஞானம் ஏற்பட உபகாரப்படுகிறது என்பதைக்கூறி முன் நிலையில் கட்டாயம் ஸ்வதர்மத்தை விடாமல் அனுஷ்டிக்க வேண்டும் என்பதை இந்த சுலோகத்தில் காட்டுகிறார். (150)

(அ) இவ்வித பரம புருஷார்த்த ஸாதனமான ஆத்ம க்ஞானம் ஆத்மானாத்ம விவேகத்தினால் ஏற்படுகிறதென்று முந்தின சுலோகத்தில் சொன்னதை திருஷ்டாந்தத்தினால் விளக்கிக்காட்டுகிறார். ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களை முன்னால் விளக்கி இவை எல்லாம் அநாத்மா என்று கூறினதால் சுருக்கமாக ஆத்மாநாத்ம விவேகம் சொல்லப்பட்டது. அதையே மிக விஸ்தாரமாகக் கூறுகிறார்:—

कोशैरन्नमयाद्यैः पञ्चभिरात्मा न संवृतो भाति ।
निजशक्तिसमुत्पन्नैः शैवलपटलैरिवाम्बु वापीस्थम् ॥ १५१ ॥

अन्नमयाद्यैः—அன்னமயம் முதலான पञ्चभिः—ஐந்து कोशैः—கோசங்களினால் संवृतः—மூடப்பட்டவராக (இருப் பதால்) आत्मा—ஆத்மா न भाति—பிரகாசிக்கவில்லை. वापीस्थं—குளத்திலுள்ள अम्बु—ஜலம் निजशक्तिसमुत्पन्नैः—தன்னுடைய சக்தியினாலேயே ஏற்பட்டிருக்கும शैवलपटलैः इव—பாசி யின் வரிசைகளால் (எப்படி மறைக்கப்படுகிறதோ அதைப்) போல. (151)

तच्छैवालापनये सम्यक्सलिलं प्रतीयते शुद्धम् ।
तृष्णासंतापहरं सद्यः सौख्यप्रदं परं पुंसः ॥ १५२ ॥

तच्छैवालापनये—அந்த பாசியை விலக்கிவிட்டால் सद्यः—உடனேயே पुंसः—மனிதனுக்கு तृष्णासंतापहरं—தாஹத் தினால் ஏற்படும் சிரமத்தை போக்கடிக்கக்கூடியதும் सौख्य-प्रदं—ஸௌக்கியத்தைக் கொடுக்கக்கூடியதும் परं—



உத்கிருஷ்டமானதும் शुद्धं சுத்தமானதுமான सलिलं—ஜலம் सम्यक्—நன்றாய் (எவ்வித மறைவு மன்னியில்) प्रतीयते—தெரியும். (152)

पञ्चानामपि कोशानामपवादे विभात्ययं शुद्धः ।
नित्यानन्दैकरसः प्रत्यग्रूपः परः स्वयंज्योतिः ॥ १५३ ॥

அதே மாதிரி पञ्चानां—ஐந்து कोशानां अपि கோசங் களையும் अपवादे—விலக்கிவிட்டால் अयं—இந்த परः—உத்கிருஷ்டமாயும் नित्य-आनन्द-एक-रसः—நித்யமான ஆனந்தம் தானே ரஸமாயுள்ளதும் प्रत्यग्-रूपः—உள்ளே யிருக்கும் ஆத்ம ஸ்வரூபமாயுள்ளதும் स्वयं-ज्योतिः—(வேறு எதையும் எதிர்பாராமல்) தானே பிரகாச (ஞான) ஸ்வரூபமாயுள்ளதுமான தத்வம் शुद्धः—தெளிவாக (எவ்வித மறைவு மன்னியில்) विभाति—நன்கு பிரகா சிக்கும். (153)

आत्मानात्मविवेकः कर्तव्यो बन्धमुक्तये विदुषा ।
तेनैवानन्दी भवति स्वं विज्ञाय सच्चिदानन्दम् ॥ १५४ ॥

(ஆகையால்) विदुषा—அறிவுள்ளவனால் बन्ध-मुक्तये—ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடவேண்டியதற்காக आत्म-अनात्म-विवेकः—ஆத்மா அநாத்மா இரண்டையும் பிரித்து அறிவது कर्तव्यः—செய்யவேண்டியதாகும் तेनैव—அதினால் தான் स्वं—தன்னை सत्-चित्-आनन्दं—(என்று மிருக்கும்) ஸத் ஞானம் ஆனந்தம் என்று विज्ञाय—நன்கு அறிந்துகொண்டு आनन्दी—(எல்லையற்ற) ஆனந்த முள்ளவனாக भवति—ஆகிறான். (154)

(அ) பாசியை விலக்கும் திருஷ்டாந்தம் சொன்னதுடன் வேறு திருஷ்டாந்தத்தையும்கூறி விவேசனத்துக்குப்பின் முக்தி யடைவதற்குச் செய்யவேண்டிய காரியத்தைச் சொல்கிறார்:—

मुञ्जादिषीकामिव दृश्यवर्गात्प्रत्यञ्चमात्मानमसङ्गमक्रियम् ।
विविच्य तत्र प्रविलाप्य सर्वं तदात्मना तिष्ठति यः स मुक्तः ॥

मुञ्जात्-முஞ்ஜம் என்கிற புல்லிலிருந்து इषीकां-(அதன் மத்தியில் நெட்டிபோல் உள்ள) இஷிகையை इव-(உருவி எடுப்பது) போல असङ्गं-எவ்வித பற்றுதலுமில்லாததாயும் अक्रियं-எவ்வித கிரியா ஸம்பந்தமுமில்லாததாயும் प्रत्यञ्चं-உள்ளேயிருப்பதாயுமுள்ள आत्मानं-ஆத்மாவை दृश्यवर्गात्-ஞானத்திற்கு விஷயமாகிற (எல்லா அநாத்ம) பதார்த்த கூட்டத்திலிருந்து विविच्य-தனியாகப் பிரித்து அறிந்து तत्र-அந்த ஆத்மாவினிடத்திலேயே सर्वं-(அப்பதார்த்தங்கள்) எல்லாவற்றையும் प्रविलाप्य-(ஆத்மாவைத்தவிர அவை வேறில்லையென்று ஏற்படும்படி) நன்கு லயம் அடையும்படிச் செய்து तद्-आत्मना-அந்த ஆத்ம-ஸ்வரூபமாகவே यः-எவன் तिष्ठति-நிலைத்து விடுகிறானோ सः-அவன் मुक्तः-(ஸம்ஸாரபந்தத்திலிருந்து) விடுதலையடைந்தவனாகிறான்.

இவ்விதம் விவேகத்தினால் ஆத்மா வேறு அனாத்மா வேறு என்று தெரிந்துகொண்ட பிறகு அவ்வனாத்மாவிற்கு தனியாக ஸத்தை கிடையாதென்று உணர்ந்து அதையும் ஆத்மாவிடத்திலேயே லயம் செய்துவிட்டால் ஆத்மா இரண்டற்றதாய் ஸ்வயம் பிரகாசமாய் விளங்குவதால், இரண்டாவது பதார்த்தமிருப்பதாய் நினைத்து அதினால் ஏற்பட்டிருக்கும் ஸகலவித துன்பங்களும் நிவிருத்தியாகி நிரதிசயமான ஆனந்தரூபியாய் இருந்து வருவான் என்று கருத்து. (155)

## 17. அன்னமய கோசம்

(அ) இனி அனாத்மாவான ஐந்து கோசங்களையும் தனித் தனியே எடுத்துக்கொண்டு அவை ஏன் ஆத்மாவாகாது என்பதை நிர்வசனம் செய்து காட்டுகிறார். அவ்வைந்திலும் எல்லாருக்கும் தெரிந்ததாய் ஸ்தூலமாயிருக்கும் இந்த மாம்ஸமயமான சரீரத்திலிருந்து ஆரம்பிக்கிறார்:—

देहोऽयमन्नभवनोऽन्नमयस्तु कोशो
ह्यन्नेन जीवति विनश्यति तद्विहीनः ।



त्वक्चर्ममांसरुधिरास्थिपुरीषराशि-
र्नायं स्वयं भवितुमर्हति नित्यशुद्धः ॥ १५६ ॥

अन्नमयः-அன்னமயம் என்கிற कोशः तु-கோசமோ (அதாவது) अयं-இந்த देहः-ஸ்தூல சரீரம் अन्न-भवनः-அன்னத்தினால் (பெற்றோர்களால் புஜிக்கப்பட்ட அன்னத்தின் ரஸமாகிய சுக்லசோணிதத்தினால்) உண்டானது. अन्नेन हि அன்னத்தினாலல்லவா जीवति-ஜீவித்திருக்கிறது? तद्-विहीनः-அன்னம் இல்லையானால் विनश्यति-நாசத்தை அடைந்துவிடுகிறது. त्वक्-चर्म-मांस-रुधिर अस्थि-पुरीष-राशिः-உள்தோல், வெளித்தோல், மாம்ஸம், ரக்தம், எலும்பு, மலம் இவைகளின் கூட்டமாயிருக்கின்றது. अयं-இந்த சரீரம் स्वयं-தானே नित्य-शुद्धः-நித்யமாய் (உண்டாகாததாயும் நாசமில்லாததாயும் எப்பொழுதுமிருப்பதாயும்) சுத்தமானதாக (எவ்வித தோஷமுமன்னியில் நிர்மலமாயும் இருக்கும் ஆத்மாவாக) भवितुं-இருப்பதற்கு न अर्हति-யோக்கியதையற்றது.

(அ) சரீரம் அநித்யமாயிருப்பதுடன், பலவாகவும், அறிவற்றதாகவும், அறியப்படும் தன்மையுள்ளதாகவும், இருப்பதால், எல்லாவற்றையும் அறியும் தன்மையுள்ளதும் இரண்டற்றதுமான ஆத்மாவாகாது என்கிறார்:—

पूर्वं जनेरपि मृतेरथ नायमस्ति
जातक्षणक्षणगुणोऽनियतस्वभावः ।
नैको जडश्च घटवत्परिदृश्यमानः
स्वात्मा कथं भवति भावविकारवेत्ता ॥ १५७ ॥

अयं-இந்த சரீரம் जनेः-பிறப்பதற்கு पूर्वं अपि-முன்னும் मृतेः-இறப்பதற்கு अथ-பின்னும் न अस्ति-இருப்பதில்லை. जात क्षण-क्षण गुणः க்ஷணத்திற்கு க்ஷணம் (விருத்தி, மாறுதல், க்ஷயம் ஆகிய) உண்டாகும் குணத்துடன் கூடியது. अनियत-स्वभावः-(இப்படித்தானிருக்கும் என்று)

தீர்மானமில்லாத ஸ்வபாவத்துடன் கூடியது न एकः- (பால்யம், யௌவனம் வார்த்தக்யம் என்று) பலவிதமா யிருக்கிறது. घटवत् (வெளியிலுள்ள) குடம் போலவே परिदृश्यमानः-அறியப்படுவதாகவும் जडः च - ஜடமாகவும் இருக்கிறது. (இது) भाव-विकार-वेत्ता-(சரீரம் ஸ்தூலமா யிருக்கிறது மெலிந்திருக்கிறது என்று) நிலைகளின் மாறுதல்களையெல்லாம் அறிந்துகொண்டிருக்கிற स्व-आत्मा-தன் ஆத்மாவாக कथं-எப்படி भवति-ஆகும்.?

(அ) பல அங்கங்கள் சேர்ந்து சரீரம். அவ்வங்கங்களில் ஏதேனும் குறைந்தாலும் ஆத்மா குறைவதில்லை, வேறு ஸாதனங்களைக்கொண்டு அவ்விதம் இல்லாத அங்கத்தின் கார்யத்தை செய்துகொள்ள வல்லமையுள்ளவனுயிருக்கிறுன். எல்லா அங்கங்களுமுள்ள சரீரத்தை ஏவும் தன்மை வாய்ந்த வனுயிருக்கிறுன். இந்தக் காரணங்களினுலும் சரீரம் ஆத்மா வாகாது என்கிறுர்:—

पाणिपादादिमान्देहो नात्मा व्यङ्गेऽपि जीवनात् ।
तत्तच्छक्तेरनाशाच्च न नियम्यो नियामकः ॥ १५८ ॥

व्यङ्गेऽपि-அங்கஹீனனுய் இருந்தாலும் கூட जीवनात्-ஜீவித்திருப்பதினுலும் तत्-तत्-शक्तेः-அந்த அந்த அங்கங்களின் சக்தி अनाशात् च-நாசமடையாததினுலும் पाणि-पादादिमान् கை கால் முதலியவைகளுடன் கூடியிருக்கும் देहः-சரீரம் आत्मा न-ஆத்மா ஆகாது. नियम्यः-ஏவப்படக் கூடியது नियामकः-ஏவுகிறவனுக न இருக்கமுடியாது.

(அ) 157-வது சுலோகத்தில் ஆத்மா எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருப்பவர் என்று சொன்னதையே அடுத்த சுலோகத்தில் கொஞ்சம் விஸ்தரித்து, இந்தக் காரணம் ஒன்றே போதும் சரீரம் ஆத்மாவாகாது என்பதற்கு என்று குறிப்பிடுகிறுர்:—

देहतद्धर्मतत्कर्मतदवस्थादिसाक्षिणः ।
सत एव स्वतः सिद्धं तद्वैलक्षण्यमात्मनः ॥ १५९ ॥



देह-तद्धर्म-तत्कर्म-तदवस्थादि-साक्षिणः-தேஹம் (கருப்பு சிவப்பு உயரம் குட்டை முதலிய) அதன் தர்மங்கள் (போதல் வருதல் முதலிய) அதன் கார்யங்கள், (உட்கார்ந்திருப்பது நிற்பது படுத்திருத்தல் முதலிய) அதன் நிலைகள் முதலானவைகளையெல்லாம் ஸாக்ஷியா யிருந்து பார்த்துக்கொண்டு सत एव-(முக்காலத்திலும்) இருந்துகொண்டேயிருக்கிற आत्मनः-ஆத்மாவிற்கு तत्-वैलक्षण्यं-அந்த சரீரத்தின் லக்ஷணங்களுக்கு வேறுபட்டு இருக்கும் லக்ஷணமுடைய தன்மையானது स्वतः-தானுகவே सिद्धं-ஸித்தமாகிறது. (159)

(அ) 156-வது சுலோகத்தில் ஆத்மா சுத்தர் என்று சொன்னதை அனுஸரித்து ஆத்மாவிற்கு நேர் விரோதமாக சரீரம் மிகவும் அசுத்தமாயிருப்பதால் அது ஆத்மாவல்ல என்பதை விளக்குகிறுர்:—

शल्यराशिर्मांसलिप्तो मलपूर्णोऽतिकश्मलः ।
कथं भवेदयं वेत्ता स्वयमेतद्विलक्षणः ॥ १६० ॥

शल्य-राशिः-எலும்பு குவியலாய் मांस-लिप्तः-மாம்ஸத்தினுல் பூசப்பட்டதாய் मल-पूर्णः-மலம்நிறைந்ததாய் अति-कश्मलः-(வியர்வை, நாற்றம் முதலியதினுல்) வெகு அசுத்தமாயுள்ள अयं-இந்த சரீரம் कथं-எப்படி स्वयं-தன் ஸ்வரூபத்திலேயே एतद् विलक्षणः-இந்த சரீரத்திற்கு விபரீதமான லக்ஷணத்தையுடைய वेत्ता-அறிகிறவனுகிய ஆத்மாவாக भवेत्-இருக்கமுடியும்? (160)

(அ) ஆகையால் இந்த அசுத்தமான சரீரத்தில் 'நான்' என்கிற எண்ணம் மிகவும் பிசகு என்கிறுர்:—

त्वङ्मांसमेदोऽस्थिपुरीषराशावहंमतिं मूढजनः करोति ।
विलक्षणं वेत्ति विचारशीलो निजस्वरूपं परमार्थभूतम् ॥ १६१ ॥

त्वङ्-मांस-मेदो-अस्थि-पुरीष-राशौ- தோல், மாம்ஸம் கொழுப்பு, எலும்பு, மலம் இவைகளின் கூட்டமான

இந்த சரீரத்தில் मूढ-जनः-மோஹத்தையடைந்திருக்கும் ஜனம் (தான்) अहं-मतिं-நான் என்கிற எண்ணத்தை करोति-செய்வான். विचार-शीलः - தத்வத்தை விசாரிப்பதில் ஈடுபட்டவன் विलक्षणं - சரீரத்திற்கு வேறான லக்ஷணமுடைய निज-स्वरूपं-தன்னுடைய ஸ்வருபத்தை परमार्थभूतम्-எப்பொழுதும் மாறுதலடையாமல் நித்யமாயிருக்கும் வஸ்துவாக वेत्ति-அறிகிறான். (161)

(அ) பாமரன் தேஹத்தையே நான் என்று எண்ணுகிறான் தேஹம் தவிர வேறென்றும் அவனுக்குத் தெரியாது. சாஸ்திரம் படித்தவன் லௌகிக வியவஹாரங்களில் மூடனைப் போலவும், வைதிக கர்மாக்களை அனுஷ்டிக்கும்போது தேஹத்திலிருந்து வேறாகிய ஜீவனிடத்தில் 'நான்' என்ற எண்ணமுள்ளவனாயும் இருப்பான், நன்கு விசாரம் செய்து ஆத்மக்ஞானம் ஏற்படும்போதுதான் நானே பிரஹ்மம் என்ற அறிவு ஏற்படும் என்கிறார்:—

देहोऽहमित्येव जडस्य बुद्धिर्देहे च जीवे विदुषस्त्वहंधीः ।
विवेकविज्ञानवतो महात्मनो ब्रह्माहमित्येव मतिः सदात्मनि ॥ १६२ ॥

देहः-சரீரம் अहं-நான் इति एव-என்றே जडस्य-அறிவற்றவனுடைய बुद्धिः-எண்ணம். विदुषः तु-படிப்புள்ளவனுக்கோ देहे-தேஹத்தினிடத்திலும் जीवे च-ஜீவனிடத்திலும் अहं धीः-'நான்' என்கிற எண்ணம். विवेक-विज्ञानवतः-விவேகத்தினால் ஏற்படும் அனுபவ ஞானமுள்ள महात्मनः-மஹாத்மாவிற்கு सदा-எப்பொழுதும் आत्मनि-தன்னிடத்தில் अहं-நான் ब्रह्म-பிரஹ்மம் इति एव-என்றுதான் मतिः எண்ணம் (இருக்கும்). (162)

(அ) ஆகையால் சரீரத்தில் நான் என்ற எண்ணத்தை விட்டுவிடவேண்டுமென்று சிஷ்யனுக்கு உபதேசம் செய்கிறார்:—

अत्रात्मबुद्धिं त्यज मूढबुद्धे त्वङ्मांसमेदोऽस्थिपुरीषराशौ ।
सर्वात्मनि ब्रह्मणि निर्विकल्पे कुरुष्व शान्तिं परमां भजस्व ॥ १६३ ॥



मूढ बुद्धे-மூடர்களால் (நான் என்று) எண்ணப்பட்டு இருக்கிற त्वङ्-मांस-मेदो-अस्थि-पुरीष-राशौ - தோல் மாம்ஸம், கொழுப்பு, எலும்பு, மலம் இவைகளின் குவியலான अत्र-இந்த சரீரத்தில் आत्म बुद्धिं-ஆத்மாவென்கிற எண்ணத்தை त्यज-விட்டுவிடு सर्व-आत्मनि-எல்லாவற்றிற்கும் ஆத்மாவாய் निर्विकल्पे - எவ்வித கல்பனைகளுக்கும் இடம் கொடுக்காத ब्रह्मणि-பிரஹ்மத்தினிடத்தில் (ஆத்ம புத்தியை) कुरुष्व-செய். (அவ்விதம் செய்வதால்) परमां - உத்தமமான शान्तिं - சாந்தியை भजस्व- அடைவாயாக! (मूढबुद्धे-என்பதை ஸம்போதனமாகக்கொண்டு மோஹத்தால ஆத்மாநாத்ம விவேகம் இல்லாத புத்தியுள்ளவனே! என்றும் அர்த்தம் சொல்லலாம்.) (163

(அ) சாஸ்திரங்களை வாசித்து அறிவுபெற்றபோதிலும் தேஹாதிகளில் நான் என்ற எண்ணம் நீங்காவிட்டால் முக்தி ஏற்படாது என்கிறார்:—

देहेन्द्रियादावसति भ्रमोदितां विद्वानहन्तां न जहाति यावत् ।
तावन्न तस्यास्ति विमुक्तिवार्ताप्यस्त्वेष वेदान्तनयान्तदर्शी ॥ १६४ ॥

असति - வாஸ்தவமில்லாத देहेन्द्रियादौ - தேஹம் இந்திரியம் முதலியதில் भ्रम-उदितां-பிராந்தியினால் ஏற்பட்டிருக்கும் अहंतां-நான் என்ற எண்ணத்தை विद्वान्-அறிவாளி यावत्-எதுவரை न जहाति-விடுகிறதில்லையோ तावत् - அதுவரை एषः-இவன் वेदान्त-नय-अन्त-दर्शी-வேதாந்த சாஸ்திரத்தின் முடிவுவரை பார்த்திருந்தவனாகவே अस्तु-இருக்கட்டும். तस्य-அவன் விஷயத்தில் विमुक्ति-वार्ता-अपि-மோக்ஷம் என்ற பேச்சுக்கூட न अस्ति-ஏற்படாது. (164)

(அ) இந்த சரீரம் வாஸ்தவமான ஆத்மாவாகாது என்பதற்கு பல திருஷ்டாந்தங்களைச் சொல்லி அதில் நான் என்ற எண்ணத்தை விடுவது சிரமமில்லையென்று காட்டுகிறார்:—

छायाशरीरे प्रतिबिम्बगात्रे यत्स्वप्नदेहे हृदि कल्पिताङ्गे ।
यथाऽऽत्मबुद्धिस्तव नास्ति काचिज्जीवच्छरीरे च तथैव मास्तु ॥

यत्-எந்தக் காரணத்தினுல் छाया-शरीरे-நிழலாகத் தோன்றும் சரீரத்திலும் प्रतिबिम्ब-गात्रे-(கண்ணுடி முதலானதில் தோன்றும்) பிரதிபிம்பமான சரீரத்திலும் स्वप्न-देहे ஸ்வப்ன காலத்தில் வியவஹரிக்கும் சரீரத்திலும் हृदि-மனதிற்குள்ளேயே (மனோராஜ்யம் செய்யும் போது) தோன்றும் कल्पित-अङ्गे-கல்பிதமான சரீரத்திலும் यथा-எப்படி तव-உனக்கு काचित् எவ்வித आत्म-बुद्धिः-நான் என்ற எண்ணம் न अस्ति-இல்லையோ (அதே காரணத்தினுல் கல்பிதமென்ற காரணத்தினுல்) तथा एव-அப்படியே जीवत्-शरीरे च-ஜீவித்துக்கொண்டிருக்கும் இந்த ஸ்தூல சரீரத்திலும் (நான் என்ற எண்ணம்) मा अस्तु-இருக்கவேண்டாம். (165)

देहात्मधीरेव नृणां असद्धियां जन्मादिदुःखप्रभवस्य बीजम् ।
यतः ततः त्वं जहि तां प्रयत्नात् त्यक्ते तु चित्ते न पुनर्भवाशा ॥१६६॥

असत् - धियां-வாஸ்தவமில்லாததில் நோக்கமுள்ள नृणां-மனிதர்களுக்கு जन्म-आदि-दुःख-प्रभवस्य-பிறப்பு முதலிய துக்கம் உண்டாவதற்கு बीजं-விதையாயிருப்பது देह-आत्म धीः एव-தேஹமே ஆத்மாவென்ற எண்ணம்தான் यतः-என்றிருப்பதினுல் ततः-ஆகையால் त्वं-நீ तां-அந்த எண்ணத்தை प्रयत्नात्-பிரயாஸைப்பட்டு जहि-விட்டுவிடு. चित्ते-அந்த எண்ணம் त्यक्ते तु விடப்பட்டு விட்டாலோ पुनर्भव-आशा-மறுபடியும் ஸம்ஸாரம் ஏற்படுமென்ற எண்ணம் न-கிடையாது. (166)

## 18. பிராணமய கோசம்

(அ) இவ்விதம் 156 முதல் 166 முடிய சுலோகங்களில் அன்னமய கோசமாகிய ஸ்தூல சரீரத்திலிருந்து ஆத்மாவை வேறுபடுத்திக் காட்டிவிட்டு, அதற்கு அடுத்தபடியாய் உள்ளே



இருக்கிற ஸூக்ஷ்ம சரீரத்தில் அடங்கிய பிராணமயகோசத்தை எடுத்துக்கொண்டு அதுவும் ஆத்மாவாக இருக்கக்கூடியதில்லை என்று இரண்டு சுலோகங்களால் விளக்குகிருர்:—

कर्मेन्द्रियैः पञ्चभिरञ्चितोऽयं प्राणो भवेत् प्राणमयस्तु कोशः ।
येनात्मवान् अन्नमयोऽनुपूर्णः प्रवर्ततेऽसौ सकलक्रियासु ॥ १६७ ॥

अयं-இந்த प्राणः-பிராணன் पञ्चभिः-ஐந்து कर्मेन्द्रियैः-கர்மேந்திரியங்களுடன் अञ्चितः - சேர்ந்து प्राणमयः तु-பிராணமயமென்ற कोशः - கோசமாக भवेत् - ஆகிறது. येन-எதினுலேயே अनु-அனுஸரித்து पूर्णः - நிறைந்ததாக अन्नमयः-அன்னமய கோசமானது आत्मवान्-ஆத்மத் தன்மையுள்ளதாக ஆகி असौ-அது सकल-क्रियासु-எல்லா கார்யங்களிலேயும் प्रवर्तते-பிரவிருத்திக்கிறதோ.

பிருதிவி முதலான ஐந்து பூதங்களும் சேர்ந்து அவற்றிலுள்ள ரஜோ குணத்தால் ஏற்பட்டது பிராணன். தனித்தனியாக பிருதிவி, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம் என்னும் பூதங்களின் ரஜோ குணத்திலிருந்து முறையே வாக், பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என்னும் ஐந்து கர்மேந்திரியங்கள் உண்டாயின. பேசுவது, எடுப்பது. நடப்பது, விடுவது, ஆனந்தம் இவை முறையே வாக் முதலான கர்மேந்திரியங்களின் கார்யங்கள். இந்த ஐந்து கர்மேந்திரியங்களுடன் சேர்ந்த பிராணன் பிராணமயகோசம் பசி, தாகம் இரண்டும் பிராணனைச் சேர்ந்தது. ஆத்மாவுக்கு கிடையாது. ஆனுல் பிராணமயகோசம் ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை மறைத்து அவரிடம் பசி தாகங்களை ஏற்றி நான் பசி தாகங்களால் துன்புறுகிறேன் என்ற எண்ணத்தை உண்டுபண்ணி விடுகிறது. பிராணனைப்போலவே கர்மேந்திரியங்களும் ரஜோ குண கார்யமானதால் பிராணமய கோசத்தில் சேர்க்கப்பட்டுள்ளது. (167)

(அ) இது அன்னமயமான சரீரத்தை சேஷ்டிக்கும்படிச் செய்தபோதிலும் ஜடமேயானதால் ஆத்மாவல்ல என்கிருர்:—

नैवात्माऽयं प्राणमयो वायुविकारो
गन्ताऽऽगन्ता वायुवदन्तर्बहिरेषः ।

यस्मात् किंचित् क्वापि न वेत्तीष्टमनिष्टं
स्वं वाऽन्यं वा किंचन नित्यं परतन्त्रः ॥ १६८ ॥

**यस्मात्**-எதினால் **अयं**-இந்த **प्राणमयः**-பிராணமய கோசமானது **वायु-विकारः**-வாயுவின் விகாரமோ **वायुवत्**-வாயுவைப்போலவே **अन्तः**-உள்ளேயும் **बहिः**-வெளியிலும் **एषः**-அது **गन्ता**-போகிறதாயும் **आगन्ता**-வருகிறதாயுமிருக்கிறதோ, **किंचित्**-எதையும் **क्वापि**-எக் காலத்திலும் **इष्टं**-வேண்டியதையோ **अनिष्टं** வேண்டாததையோ **स्वं वा**-தன்னையேயோ **अन्यं**-வேறு **किंचन वा**-எதையுமோ **न वेत्ति** அறிவதில்லையோ **नित्यं**-எப்பொழுதும் **परतन्त्रः**-பாதந்திரமோ (ஸ்வாதீனமற்றதோ அதினால்) (இது) **आत्मा**-ஆத்மாவாக **न एव**-இல்லவேயில்லை.

*வேலை செய்கிறதாலும், குறுகியவனாதாலும், அசேதனனாயும், பராதீனனாயும் இருப்பதாலும் பிராணன் ஆத்மாவல்ல. பிராணன் ஆத்மாவாகுமானால் இரவில் தூங்கும்பொழுது ஆத்மாவான பிராணன் விழித்துக்கொண்டிருப்பதால் திருடன் வருவது ஏன் தெரியவில்லை? மேலும் ஆத்மா பிரதானனானதால் தன் வேலைக்காரர்கள் தூங்கும்பொழுது யஜமானனான பிராணாத்மா விழித்துக்கொண்டிருப்பதும் உசிதமில்லை. இதனாலும் பிராணன் ஆத்மாவல்ல.* (168)

## 19. மனோமய கோசம்

*(அ) இனி பிராணமய கோசத்தையும்விட ஸூக்ஷ்மமாய் உள்ளேயிருந்துகொண்டு ஸம்ஸாரத்திற்கெல்லாம் காரணமாய் இருந்துவருகிற மனோமய கோசத்தைப்பற்றி 169 முதல் 185 சுலோகம்வரை வர்ணிக்கிறார். 169ல் அதிலுள்ளடக்கமான அம்சங்களையும், 185ல் அதுவும் ஆத்மவாகாது என்பதையும், மத்தியிலுள்ள சுலோகங்களில் அதினால் ஏற்படும் கெடுதல்களையும், அதிலிருந்து ஆத்மாவைப் பிரித்து அறிய உபாயத்தையும் விஸ்தாரமாக உபதேசிக்கிறார்:—*

ज्ञानेन्द्रियाणि च मनश्च मनोमयः स्यात्
कोशो ममाहमिति वस्तुविकल्पहेतुः ।



संज्ञादिभेदकलनाकलितो बलीयान्
तत्पूर्वकोशमनुपूर्य विजृम्भते यः ॥ १६९ ॥

**ज्ञानेन्द्रियाणि च**-ஞானேந்திரியங்களும் **मनः च**-மனஸும் சேர்ந்து **मनोमयः कोशः स्यात्**-மனோமய கோசமாகும் **मम**-'என்னுடையது' **अहं**-'நான்' **इति**-என்று **वस्तु-विकल्प-हेतुः**-ஒரு பதார்த்தத்தை பலவிதமாக எண்ணுவதற்கு காரணமாயுள்ளதும் **संज्ञा-आदि-भेद-कलना-कलितः**-நாமம் (ரூபம்) முதலான வேற்றுமைகளை செய்யும் தன்மையுடையதும் **बलीयान्**-(அன்னமயம் பிராணமயம் இவைகளை ஆட்டிவைப்பதால் அவைகளைவிட) மிகவும் பலமுள்ளதுமான **यः**-எது **तत्-पूर्व कोशं**-தனக்கு முந்தின (பிராணமய) கோசத்தை **अनुपूर्य**-அனுஸரித்து நிரப்பிக்கொண்டு **विजृम्भते**-நன்கு சேஷ்டிக்கிறதோ,

*ஆகாசம் முதலான ஐந்து பூதங்களின் ஸத்வாம்சங்களிலிருந்து முறையே உண்டான காது முதலான ஐந்து ஞானேந்திரியங்களும், ஐந்து பூதங்களின் ஸத்வாம்சங்களும் சேர்ந்து உண்டான மனமும் சேர்ந்து மனோமயகோசம் எல்லா இந்திரியங்களும் மனதிற்கு அடங்கினபடியாலும் ஸ்வப்னத்தில் இந்திரியங்கள் இல்லாமல் மனம் இருக்கிறபடியாலும் மனமே பிரதானம். பந்தமோக்ஷங்கள் மனதை ஒட்டி ஏற்படுவதாலும் முன் கோசங்களில் ஞானசக்தி இல்லாததாலும் அவைகளைவிட மனோமயகோசம் பலமுள்ளது.* (169)

*(அ) இந்த மனோமய கோசத்தை அக்னிக்கு ஸமானமாகச் சொல்லி, அதுவே உலகத்தைப் பாழாக்குகிறதென்று காட்டுகிறார்:—*

पञ्चेन्द्रियैः पञ्चभिरेव हेतुभिः प्रचीयमानो विषयाज्यधारया ।
जाज्वल्यमानो बहुवासनेन्धनैः मनोमयोऽग्निः दहति प्रपञ्चम् ॥

**पञ्च-इन्द्रियैः**-ஐந்து (ஞான) இந்திரியங்களாகிற **पञ्चभिः**-ஐந்து **होतृभिः एव**-ஹோதாக்களினாலேயே **विषय-आज्य-धारया**-(சப்தம் ஸ்பர்சம் முதலான) விஷயங்களாகிற

நெய்யின் தாரையினால் प्रचीयमानः-நன்றாக விருத்தி செய்யப்பட்டு बहु वासना इन्धनैः-பற்பல வாஸனைகளாகிற ஸமித்துக்களால் जाज्वल्यमानः-மிகவும் ஜ்வலிக்கிற मनोमयः மனோமய கோசம் என்கிற अग्निः-நெருப்பானது प्रपञ्चं-உலகத்தை दहति-எரிக்கிறது. (170)

(அ) முன் 110-வது சுலோகத்தில் ஸம்ஸார பந்தத்திற்குக் காரணம் அவித்யையென்று சொல்லியிருக்கையில், இப்பொழுது மனஸ்தான் காரணம் என்று சொல்வது நியாயமா என்று ஸந்தேஹம் ஏற்படக்கூடியதே. வெறும் அவித்யை மாத்திரமிருக்கும் ஸுஷுப்தி தசையில் ஸுக துக்கங்கள் அனுபவிக்கப்படுகிறதில்லை; ஜாக்கிரத் காலத்தில் மனஸ் இந்திரியங்களுடன் சேர்ந்தும், ஸ்வப்ன வேளையில் மனஸ் மட்டும் தனித்திருக்கும்பொழுதும் ஸுகதுக்க அனுபவம் ஏற்படுகிறது. ஆகையால் மனஸ் தான் ஸம்ஸாரத்திற்கு முக்கிய காரணம். அதற்கு காரணமாயிருக்கும் அவித்யையும் மனஸ் மூலமாய்தான் ஸம்ஸாரத்திற்கு காரணமாகிறது. ஆகையால் மனஸையே அவித்யையென்று சொல்லிவிடலாம் என்கிறார் :—

न ह्यस्त्यविद्या मनसोऽतिरिक्ता मनो ह्यविद्या भवबन्धहेतुः ।
तस्मिन् विनष्टे सकलं विनष्टं विजृम्भितेऽस्मिन् सकलं विजृम्भते ॥

अविद्या-அவித்யை என்பது मनसः-மனஸைவிட अतिरिक्ता-வேறானது न अस्ति हि-அல்லவல்லவா? भव-बन्ध-हेतुः-ஸம்ஸாரபந்தத்திற்கு காரணமான अविद्या-அவித்யை मनः हि-மனஸ் தானே? (ஏனென்றால்) तस्मिन्-அந்த மனஸ் विनष्टे-நன்கு நாசமடைந்தால் (மறைந்தால்) सकलं-எல்லாமே विनष्टं-நன்கு மறைந்துவிடுகிறது अस्मिन्-அந்த மனஸ் विजृम्भिते-நன்கு வெளிக்கிளம்பினால் सकलं எல்லாம் विजृम्भते-நன்கு தெரியவருகிறது. (171)

(அ) மனஸிற்கு அவ்வளவு சக்தியுண்டாவென்றால் ஸ்வப்னத்தில் அதன் சக்தி நன்றாய் தெரிகிறது என்பதை ஞாபகப்படுத்துகிறார் :—



स्वप्नेऽर्थशून्ये सृजति स्वशक्त्या भोक्त्रादि विश्वं मन एव सर्वम् ।
तथैव जाग्रत्यपि नो विशेषः तत् सर्वं एतत् मनसो विजृम्भणम् ॥

स्वप्ने-ஸ்வப்னம் காணும்போது अर्थ-शून्ये-எவ்வித விஷயமும் இல்லாமலிருக்கையில் मनः एव-மனஸேதான் स्व-शक्त्या-தன்னுடைய சக்தியினால் भोक्त्रादि-அனுபவிக்கிறவன் முதலான सर्वं-எல்லா विश्वं-உலகத்தையும் सृजति-ஸ்ருஷ்டிக்கிறது. तथा एव-அப்படியேதான் जाग्रति अपि-விழிப்பு ஸமயத்திலும் கூட (மனஸே ஸ்ருஷ்டிக்கிறது) विशेषः-வித்யாஸம் नो-கிடையாது. तत्-ஆகையால் एतत्-இது सर्वं-எல்லாமே मनसः-மனஸினுடைய विजृम्भणम्-பகட்டுதல். (172)

सुषुप्तिकाले मनसि प्रलीने नैवास्ति किंचित् सकलप्रसिद्धेः ।
अतो मनःकल्पित एव पुंसः संसार एतस्य न वस्तुतोऽस्ति ॥ १७३ ॥

सुषुप्ति-काले-நல்ல தூக்க ஸமயத்தில் मनसि-மனஸானது प्रलीने-(வாஸனையுள்பட) நன்கு லயமடைந்திருக்கும்போது किंचित्-எதுவும் न एव अस्ति-இல்லவேயில்லை என்பது सकल-प्रसिद्धेः-எல்லா பிராணிகளுக்கும் பிரஸித்தமாய்த் தெரிந்திருக்கும் விஷயமானதினால் अतः ஆகையினால் एतस्य-இந்த पुंसः-ஜீவனுக்கு संसारः-ஸம்ஸாரமானது मनःकल्पित एव-மனஸினால் கல்பிக்கப்பட்டதுதான். (அந்த ஸம்ஸாரம்) वस्तुतः-வாஸ்தவத்தில் न अस्ति-கிடையாது. (173)

(அ) ஸம்ஸார பந்தத்திற்கு மாத்திரம் மனஸ் காரணம் என்பதில்லை, ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுதலையடைவதற்கும் அதுவேதான் காரணம். மனஸ் அசுத்தமாயிருந்தால் ஸம்ஸார பந்தத்திற்கும், சுத்தமாயிருந்தால் மோக்ஷத்திற்கும் காரணம். இவ்விதம் ஒரே மனதிற்கு ஒன்றுக்கொன்று விருத்தமான இரண்டு கார்யங்கள் உண்டு என்பதை திருஷ்டாந்தம் மூலமாக எடுத்துக்காட்டுகிறார் :—

वायुनाऽऽनीयते मेघः पुनस्तेनैव नीयते ।
मनसा कल्प्यते बन्धः मोक्षस्तेनैव कल्प्यते ॥ १७४ ॥

मेघः-மேகமானது वायुना-காற்றினுல் आनीयते-கொண்டுவரப்படுகிறது. पुनः-மறுபடியும் तेन एव-அந்த காற்றினுல்தான் नीयते-கொண்டுபோகப் படுகிறது. (அதைப்போல) मनसा-மனஸினுல் बन्धः-பந்தமானது कल्प्यते-கல்பிக்கப் படுகிறது. मोक्षः-மோக்ஷமும் तेन एव-அந்த மனஸினுலேயே कल्प्यते-கல்பிக்கப்படுகிறது.

(அ) மனஸ் ஒன்றினுல் பந்தமும் மோக்ஷமும் எப்படி ஏற்படுகின்றன என்பதை விளக்கிக்காட்டுகிருர்:—

देहादिसर्वविषये परिकल्प्य रागं
बध्नाति तेन पुरुषं पशुवद्गुणेन ।
वैरस्यमत्र विषवत् सुविधाय पश्चात्
एनं विमोचयति तन्मन एव बन्धात् ॥ १७५ ॥

மனஸானது देह-आदि-सर्व विषये-தேஹம் முதலான எல்லா விஷயங்களிலும் रागं-பற்றுதலை परिकल्प्य-நன்கு ஏற்படுத்திக் கொடுத்து तेन-அந்தப் பற்றுதலைக் கொண்டே गुणेन-கயிற்றினுல் पशुवत्-பசுக்களைக் (கட்டுவதுபோல) पुरुषं-ஜீவனை बध्नाति-கட்டிவிடுகிறது. अत्र-இந்த விஷயங்களிலேயே पश्चात्-பிற்பாடு वैरस्यं-விரஸத்தன்மையை विषवत्-விஷத்தைப் போல सुविधाय-நன்கு ஏற்படுத்திக்கொடுத்து एनं-இந்த ஜீவனை बन्धात्-அந்தக் கட்டிலிருந்து तद् मन एव-அந்த மனஸே विमोचयति-நன்கு விடுவித்துவிடுகிறது. (175)

तस्मान्मनः कारणमस्य जन्तोर्बन्धस्य मोक्षस्य च वा विधाने ।
बन्धस्य हेतुर्मलिनं रजोगुणैर्मोक्षस्य शुद्धं विरजस्तमस्कम् ॥ १७६ ॥

तस्मात्-ஆகையால் मनः-மனஸ் (தான்) अस्य-இந்த जन्तोः-ஜீவனுக்கு बन्धस्य-பந்தத்தையோ मोक्षस्य च वा-



மோக்ஷத்தையோ विधाने-ஏற்படுத்துவதில் कारणं-காரணம் (ஆனுல்) बन्धस्य-பந்தத்திற்கு हेतुः-காரணமாயிருப்பது रजो-गुणैः-ரஜஸ்ஸின் குணங்களால் (ராகம், த்வேஷம் முதலியவைகளால்) मलिनं-அழுக்கடைந்து இருக்கிற (மனஸ்) मोक्षस्य-மோக்ஷத்திற்கு हेतुः-காரணமாயிருப்பது विरजस्तमस्कं-கொஞ்சமேனும் ரஜஸோ தமஸோ இல்லாத (மனஸ்) (176)

(அ) ஆகையால் மோக்ஷத்தை விரும்புகிறவன் மனஸை விவேகத்தினுலும் வைராக்யத்தினுலும் நன்கு சுத்தப்படுத்திக் கொள்ளவேண்டியது அவசியம் என்பதை வற்புறுத்துகிருர்:—

विवेकवैराग्यगुणातिरेकाच्छुद्धत्वमासाद्य मनो विमुक्त्यै ।
भवत्यतो बुद्धिमतो मुमुक्षोस्ताभ्यां दृढाभ्यां भवितव्यमग्रे ॥ १७७ ॥

विवेक-वैराग्य-गुण-अतिरेकात्-விவேகம், வைராக்யம் ஆகிற குணங்கள் மேலிடுவதினுல் मनः-மனஸானது शुद्धत्वं-நிர்மலமாயிருக்கும் தன்மையை आसाद्य அடைந்து विमुक्त्यै-மோக்ஷத்தின் பொருட்டு भवति-காரணமாகிறது. अतः-ஆகையால் बुद्धिमतः-நல்ல புத்தியுள்ள मुमुक्षोः-மோக்ஷத்தில் ஆசையுள்ளவனுக்கு ताभ्यां-அவையிரண்டும் (விவேகமும் வைராக்யமும்) अग्रे முதலிலேயே दृढाभ्यां-திடமாக भवितव्यं-இருக்கவேண்டும்.

பிரஹ்மம் ஒன்றுதான் உண்மைப்பொருள். மற்றவை எல்லாம் பொய் என்ற நிச்சயம் ஏற்பட்டுவிட்டால் பொய்யான பொருளில் ஆசை ஏற்படாததால் உறுதியான வைராக்யம் ஏற்படுகிறது. உறுதியான விவேக வைராக்யங்களால் மனம் தூய்மை அடைகிறது. மனதில் ஆசையில்லாமலிருப்பதுதான் தூய்மை. மோக்ஷத்தில் தீவ்ர விருப்பமுள்ளவன் உறுதியான விவேக வைராக்யங்களை முதலில் சம்பாதித்துவிட்டால் நிச்சயம் மோக்ஷ பலன் கிடைக்கும் என்று கருத்து. (177)

(அ) அவ்விதம் இல்லையானுல் அதே மனஸ் இவனை ஸம்ஸாரத்தில் இழுத்து அமிழ்த்திவிடும் என்கிருர்:—

मनो नाम महाव्याघ्रो विषयारण्यभूमिषु ।
चरत्यत्र न गच्छन्तु साधवो ये मुमुक्षवः ॥ १७८ ॥

मनः-மனஸ் विषय-अरण्य-भूमिषु- விஷயங்களாகிற வன பிரதேசங்களில் महाव्याघ्रः-பெரிய வேங்கைப் புலியாக चरति-ஸஞ்சரித்துக் கொண்டிருக்கிறது. नाम - என்பது பிரஸித்தம். (ஆகையால்) ये-எவர்கள் मुमुक्षवः- மோக்ஷத்தில் ஆசையுள்ளவர்களாய் साधवः - ஸாதுக்களாய் இருக்கிறார்களோ (அவர்கள்) अत्र-இந்த காடுகளில் न गच्छन्तु-போகவேண்டாம். (178)

(அ) மனம் பந்தத்திற்கு காரணம் என்பதை விளக்கிக் காட்டுகிறார்:—

मनः प्रसूते विषयानशेषान्स्थूलात्मना सूक्ष्मतया च भोक्तुः ।
शरीरवर्णाश्रमजातिभेदान्गुणक्रियाहेतुफलानि नित्यम् ॥ १७९ ॥

मनः-மனஸானது भोक्तुः-அனுபவிக்கும் ஜீவனுக்கு स्थूलात्मना-(ஜாக்கிரத் காலத்தில்) ஸ்தூலரூபமாயும் सूक्ष्मतया च-(ஸ்வப்ன காலத்தில்) ஸூக்ஷ்ம ரூபமாயும் உள்ள अशेषान्-பாக்கியன்னியில் எல்லா विषयान्-விஷயங்களையும் शरीर-वर्ण-आश्रम-जाति - भेदान्-(பலவித) சரீரங்கள், (பிராஹ்மணன் முதலான) வர்ணங்கள் (பிரஹ்மசாரி முதலான) ஆசிரமங்கள், (தேவர், மனுஷ்யன், மிருகம் முதலான) பிறவிகள் ஆகிற வேற்றுமைகளையும் गुण-क्रिया-हेतु-फलानि (சப்தம் முதலிய) குணங்கள் (நடப்பது முதலிய) கிரியைகள் (மண் தர்மாதர்மங்கள் முதலிய) காரணங்கள் (குடம், ஸுக துக்கம் முதலிய) பலன்கள் எல்லாவற்றையும் नित्यं-எப்பொழுதும் இடைவிடாமல் प्रसूते-உண்டுபண்ணிக்கொண்டேயிருக்கிறது

விழிப்பில் அந்தந்த இந்திரியங்கள் மூலமாக அனுபவம் ஏற்படுவதால் ஸ்தூலம். ஸ்வப்னத்தில் இந்திரியங்கள் அடங்கிப் போவதால் மனமே விஷயங்களாக மாறி ஸாக்ஷியால் அறியப்



படுவதால் ஸூக்ஷ்மம். ஸுஷுப்தியில் மனமும் அடங்கிய பொழுது விஷயானுபவம் ஏற்படாததால் எல்லாம் மனதால் கல்பிக்கப்பட்டதென்று தெரிகிறது. (179)

असङ्गचिद्रूपममुं विमोह्य देहेन्द्रियप्राणगुणैर्निबध्य ।
अहं ममेति भ्रमयत्यजस्रं मनः स्वकृत्येषु फलोपभुक्तिषु ॥ १८० ॥

असङ्ग-चिद्-रूपं-எவ்வித பற்றுதலில்லாமல் ஞான ஸ்வரூபனாயிருக்கும் अमुं-இந்த ஆத்மாவை विमोह्य-நன்கு மோஹமடையச் செய்து देह इन्द्रिय-प्राण-गुणैः சரீரம் இந்திரியம், பிராணன் இவைகளின் குணங்களால் (கயிறுகளால்) निबध्य-நன்கு கட்டிவிட்டு अहं-'நான்' मम-'என்னுடையது' इति - என்ற (எண்ணத்தை உண்டுபண்ணி) स्व-कृत्येषु - தன்னுடைய (வைதிக லௌகிக) கார்யங்களில் (ஈடுபடுத்தி) फल-उपभुक्तिषु- (ஸுக துக்க ரூபமான அக்கார்யங்களால் ஏற்படும்) பலன்களை அனுபவிக்கும்படி अजस्रं-இடைவிடாமல் मनः- மனஸானது भ्रमयति உழலும்படிச் செய்கிறது.

'நான் அஸங்கமான ஸச்சிதானந்த ஸ்வரூபன்' என்று அறிந்த புருஷன் ஒன்றையும் விரும்புவதில்லை அதனால் ஒரு காரியமும் செய்வதில்லை. ஆகையால் செய்கிற தன்மையும் அநுபவிக்கிற தன்மையும் தேஹாதிகளில் அபிமானத்தால் ஏற்பட்டது. இந்த அபிமானம் மனோமூலகம், ஸுஷுப்தியில் மனம் அடங்கியபொழுது அபிமானம் இருப்பதில்லை ஆகையால் அவித்யை எப்பொழுதும் இருந்தபோதிலும் மனமில்லாதபோது பந்தம் ஏற்படாததால் எல்லா பந்தங்களுக்கும் காரணம் மனம் தான். (180)

अध्यासयोगात्पुरुषस्य संसृतिरध्यासबन्धस्त्वमुनैव कल्पितः ।
रजस्तमोदोषवतोऽविवेकिनो जन्मादिदुःखस्य निदानमेतत् ॥ १८१ ॥

पुरुषस्य-புருஷனுக்கு अध्यास योगात्-(தான் அல்லாததில் தான் என்ற எண்ணமாகிற) அத்யாஸத்தின் ஸம்பந்தத்தினால் (தான்) संसृतिः-ஸம்ஸாரம் (ஏற்படுகிறது) अध्यास-

बन्धः तु அந்த அத்யாஸ ஸம்பந்தம்கூட अमुनैव இந்த மனஸினுல் தான் कल्पितः-கல்பிக்கப்படுகிறது. रजस्तमोदोषवतः ரஜோகுணம் தமோகுணம் ஆகிற தோஷங்களையுடையவனும் अविवेकिनः-(ஆத்மாவையும் அனாத்மாவையும்) பிரித்தறியாதவனுமுள்ளவனுக்கு जन्मादि दुःखस्य-பிறப்பு (விருத்தி, மாறுதல், க்ஷயம், நாசம்) முதலான துக்கத்திற்கு एतद्-இந்த மனஸ்தான் निदानं-காரணம்.

சரீரம் முதலான ஸ்தூல ஸூக்ஷ்ம விஷயங்கள் மனதால் கல்பிக்கப்பட்டதாக 179-வது சுலோகத்தில் 'मनः प्रसूते विषयानशेषान्' என்று கூறப்பட்டது. அவற்றில் அபிமானம் என்னும் அத்யாஸ பந்தமும் மனதால் ஏற்பட்டதாக இங்கு கூறுகிறார். (181)

(அ) ஆகையினுல் இந்த மனஸையே ஸம்ஸாரத்திற்கு காரணமாகிற அவித்யையென்றே முன் 171-வது சுலோகத்தில் சொன்னது நியாயம்தான் என்கிறார்:—

अतः प्राहुर्मनोऽविद्यां पण्डितास्तत्त्वदर्शिनः ।
येनैव भ्राम्यते विश्वं वायुनेवाभ्रमण्डलम् ॥ १८२ ॥

अतः-ஆகையினுல் येन एव-எதினுலேயே विश्वं-பிரபஞ்சமானது वायुना-காற்றினுல் अभ्रमण्डलं மேக மண்டலம் (அலைக்கப்படுகிறது) इव-போல भ्राम्यते-சுழற்றப் படுகிறதோ (அந்த) मनः-மனஸை तत्त्वदर्शिनः-தத்வம் அறிந்த पण्डिताः-பண்டிதர்கள் अविद्यां அவித்யை (என்றே) प्राहुः-சொல்கிருர்கள். (182)

(அ) இதை நிர்மலமாக ஆக்கினுல்தான் மோக்ஷம் கை கூடும் என்பதை மறுபடியும் வற்புறுத்துகிருர்:—

तन्मनःशोधनं कार्यं प्रयत्नेन मुमुक्षुणा ।
विशुद्धे सति चैतस्मिन्मुक्तिः करफलायते ॥ १८३ ॥

तत्-ஆகையால் मुमुक्षुणा-மோக்ஷத்தில் இச்சையுள்ளவனுல் मनःशोधनं-மனஸை சுத்தப்படுத்துதல்



प्रयत्नेन-வெகு பிரயாஸையெடுத்துக் கொண்டு कार्यं-அவசியம் செய்யவேண்டியது. एतस्मिन् இந்த மனஸ் विशुद्धे-நன்கு சுத்தமாக सति च-இருந்ததேயானுல் मुक्तिः-மோக்ஷமானது करफलायते-கையில்கிடைத்துவிட்ட பழம் போலுள்ளதாகும் (நிச்சயமாய் கிடைக்கும்) (183)

(அ) மனம் சுத்தியடைவதற்கு உபாயம் சொல்கிருர்:—

मोक्षैकसक्त्या विषयेषु रागं निर्मूल्य संन्यस्य च सर्वकर्म ।
सच्छ्रद्धया यः श्रवणादिनिष्ठो रजःस्वभावं स धुनोति बुद्धेः ॥ १८४ ॥

यः-எவன் मोक्ष एक सक्त्या-மோக்ஷம் ஒன்றிலேயே ஆஸக்தியுடன் विषयेषु-விஷயங்களிலுள்ள रागं-பற்றுதலை निर्मूल्य-வேறுடன் எடுத்துவிட்டு सर्व कर्म-எல்லாவித கர்மாக்களையும் संन्यस्य-நன்கு விட்டுவிட்டு च-அத்துடன் सत् श्रद्धया-நல்ல திடமான சிரத்தையுடன் श्रवण आदि निष्ठः சிரவணம் (மனனம் நிதித்யாஸனம்) முதலியதில் நிலைத்திருக்கிருனே सः-அவன் बुद्धेः புத்தியினுடைய रजः-स्वभावं-ரஜோகுணத்தின் ஸ்வபாவத்தை धुनोति-உதறி விடுகிருன். (184)

(அ) இதுவரை சொல்லி வந்த மனோமய கோசமும் ஆத்மாவாகாது என்பதற்கு பலவித காரணங்கள் சொல்கிருர்:-

मनोमयो नापि भवेत् परात्मा ह्याद्यन्तवत्त्वात् परिणामिभावात् ।
दुःखात्मकत्वात् विषयत्वहेतोः द्रष्टा हि दृश्यात्मतया न दृष्टः ॥

मनोमयः अपि-மனோமய கோசமும்கூட परात्मा-மேலான ஆத்மா न भवेत्-ஆகாது. हि-என்பது பிரஸித்தம், आदि अन्तवत्त्वात्-(ஜாக்கிரத் முதலிய தசைகளில்) உண்டாவதாலும் (நல்ல தூக்கத்தில்) லயமடைவதினுலும் (ஆதியும் அந்தமுமில்லாத ஆத்மாவாக இருக்க முடியாது. परिणामि भावात्-மாறுதலடையும் தன்மையிருப்பதால் (காமம் கோபம் முதலான மாறுதல்களையடைவ

தால் எவ்வித மாறுதலுமற்ற ஒரேநிலையில் இருக்கும் ஆத்மாவாக ஆகாது) दुःखात्मकत्वात् துக்கஸ்வரூபமாக இருப்பதால் (நித்யாநந்த ஸ்வரூபமான ஆத்மா வாகாது) विषयत्व हेतोः - விஷயமாயிருக்கும் (அறியப் படும்) தன்மையுள்ளது என்றகாரணத்தினால் (விஷயி யாய் அறிகிறவராயிருக்கும் ஆத்மாவாகாது. द्रष्टा - அறிகிறவன் दृश्यात्मतया - அறியப்படும் விஷயரூபமாக न दृष्टः-கண்டதில்லை. हि-என்பது பிரஸித்தம்.

விழிப்பிலும் கனவிலும் மனம் இருப்பதும், தூக்கத்தில் மனம் மறைவதும் இரண்டு காலத்திலும் விளங்குகிற ஸாக்ஷியால் அறியப்படுகிறது. அறியப்படும் பொருள் அறிகிறவனாக இருக்க முடியாது ஆகையால் அறியப்படும் மனம் அறிகிற ஆத்மாவல்ல அநாத்மாதான். (185)

## 20. விக்ஞானமய கோசம்

(அ) இனி மனோமய கோசத்திற்கும் உள்ளேயிருக்கும் விக்ஞானமய கோசத்தைப்பற்றி 186 முதல் 208 சுலோகம் முடிய அதிலடங்கிய அம்சங்கள், அது செய்யும் கார்யங்கள், அதை எப்படி ஆத்மாவிலிருந்து வேறாக அறிகிறது, அது ஏன் ஆத்மாவல்ல என்றெல்லாம் எடுத்துச் சொல்கிறார்:—

बुद्धिः बुद्धीन्द्रियैः सार्धं सवृत्तिः कर्तृलक्षणः ।
विज्ञानमयकोशः स्यात् पुंसः संसारकारणम् ॥ १८६ ॥

बुद्धि इन्द्रियैः - ஞானேந்திரியங்களுடன் सार्धं-கூடிக் கொண்டு सवृत्तिः-(நிச்சயம் செய்தல் என்ற) விருத்தி யுடன் சேர்ந்து कर्तृलक्षणः-கர்த்தா (ஞானம், இச்சை, கிரியை இவைகளுடன் கூடியவன்) என்ற லக்ஷணத்தை யுடையதாயுள்ள बुद्धिः-புத்தி विज्ञानमय कोशः-விக்ஞானமய கோசம் स्यात्-ஆகும். (அதுவே) पुंसः-ஜீவனுக்கு संसारकारणं-ஸம்ஸாரத்திற்கு காரணம்.

ஒரே அந்தக்கரணம் ஸந்தேஹ நிலையில் மனமென்றும், தீர்மானிக்கிற நிலையில் புத்தி என்றும் கூறப்படுகிறது.



தீர்மானித்தபின் காரியத்தைச் செய்வதால் புத்தியை கர்த்தாவான விக்ஞானமய கோசமாகக் கூறுகிறார். மனம் கரணம், புத்தி கர்த்தா இதனால்தான் மனோமய கோசத்திற்குள் விக்ஞானமய கோசம். இந்த வேற்றுமையால்தான் மனதும் புத்தியும் தனித்தனி கோசமாகக் கூறப்படுகிறது. இரண்டிலும் ஞானேந்திரியங்கள் உள்ளன. (186)

(அ) இந்த விக்ஞானமய கோசத்தினால்தான் சரீராதிகளில் 'நான்' என்கிற எண்ணம் ஏற்பட்டு, அவைகள் செய்யும் கார்யங்களை தான் செய்வதாக பாவித்து, அக்கார்யங்களின் பலனாகிய ஸுக துக்கத்தை ஜீவன் அனுபவிக்க நேரிடுவதினால் தான், இந்த கோசம் ஸம்ஸாரத்திற்குக் காரணம் என்று சொல்லப்பட்டது என்று விவரிக்கிறார்:—

अनुव्रजच्चित्प्रतिबिम्बशक्तिः विज्ञानसंज्ञः प्रकृतेर्विकारः ।
ज्ञानक्रियावान् अहमित्यजस्रं देहेन्द्रियादिष्वभिमन्यते भृशम् ॥

विज्ञान संज्ञः-விக்ஞானமென்ற பெயருடைய இந்த கோசம் प्रकृतेः-மூல காரணமான அவித்யையின் विकारः-கார்யம் (மாறுபாடு) अनुव्रजत् चित् प्रतिबिम्ब शक्तिः-கூடவே வந்துள்ள சைதன்யத்தின் பிரதிபிம்பத்தினுடைய சக்தியோடு கூடினது. ज्ञान क्रियावान्-அறிவும் கிரியையும் உள்ளது. देह इन्द्रिय आदिषु-சரீரம் இந்திரியம் முதலான வைகளில் अजस्रं-இடைவிடாமல் अहं-'நான்' इति-என்று भृशं-வெகு பலமாக अभिमन्यते-அபிமானிக்கிறது.

ஸூரிய பிரதிபிம்பத்துடன் கூடிய கண்ணாடி, ஒளியுள்ள ஸூரிய பிரதிபிம்பத்தை உள்ளே வைத்துக் கொண்டிருப்பதால், தனக்குச் சொந்தமாக ஒளியில்லாவிட்டாலும் பொருள்களை பிரகாசப்படுத்துகிறது. அதுபோல் பரமாத்மாவின் பிரதிபிம்பமான ஜீவனை உள்ளே வைத்துக்கொண்டிருக்கிற புத்தியும் ஞானசக்தியுடையதாக விக்ஞானம் என்ற பெயரையடைகிறது. (187)

अनादिकालोऽयमहंस्वभावो जीवः समस्तव्यवहारवोढा ।
करोति कर्माण्यनुपूर्ववासनः पुण्यान्यपुण्यानि च तत्फलानि ॥ १८८ ॥

भुङ्क्ते विचित्रास्वपि योनिषु व्रजन्नायाति निर्यात्यध ऊर्ध्वमेषः ।
अस्यैव विज्ञानमयस्य जाग्रत्स्वप्नाद्यवस्थाः सुखदुःखभोगः ।
देहादिनिष्ठाश्रमधर्मकर्मगुणाभिमानः सततं ममेति ॥

अहं स्वभावः-'நான்' என்று அபிமானிக்கும் ஸ்வபாவமுள்ள अयं-இந்த जीवः-ஜீவன் अनादिकालः-ஆதியில்லாத காலம முதல் இருப்பவன் समस्त व्यवहार वोढा-எல்லா வியவஹாரங்களையும் நிர்வஹிப்பவன் अनुपूर्व वासनः-முன் ஏற்பட்டுள்ள வாஸனைகளையனுஸரிப்பவனாக पुण्यानि-புண்யமானவைகளும் अपुण्यानि-புண்ணியம் அல்லாதவைகளுமான (பாபங்களும் உதாஸீன கர்மாக்களும்) कर्माणि-கர்மாக்களை करोति-செய்கிறான். तत् फलानि-அந்த கர்மாக்களின் பலன்களை (ஸுக துக்கங்களை) विचित्रासु-பலவிதமான योनिषु अपि-பிறவிகளையும் व्रजन्-அடைந்து भुङ्क्ते-அனுபவிக்கிறான். (அவ்விதம் அனுபவிப்பதற்காக) अधः-கீழேயும் (பாப கர்மாவின் பலனாக நரகம், மிருகாதி ஜன்மா இவைகளுக்காக) ऊर्ध्वं-மேலேயும் (புண்ணிய கர்மாவின் பலனாக ஸ்வர்க்கம் தேவாதி ஜன்மா இவைகளுக்காக) एषः-இவன் आयाति-வருகிறான் निर्याति-போகிறான். अस्य-இந்த विज्ञानमयस्य-விக்ஞானமயனுக்கு एव-தான் जाग्रत् स्वप्न आदि अवस्थाः-விழிப்பு கனவு முதலிய தசைகள் सुख दुःख भोगः-ஸுக துக்கங்களை அனுபவிப்பது (இந்த விக்ஞானமய கோசத்திற்குத்தான்) देहादि निष्ठ आश्रम धर्म कर्म गुण अभिमानः-தேஹம் (இந்திரியம) முதலானவைகளில் ஸம்பந்தப்பட்டிருக்கும் (பிரம்மசர்யம் முதலிய) ஆசிரமம் (மானுஷ்யம், பிராஹ்மண்யம்) முதலான தர்மங்கள் (லௌகிக வைதிகமான எல்லா) கர்மாக்கள் (உயரம், பருமன், நல்லது, கெட்டது முதலிய) குணங்கள் இவைகளில் அபிமானம் मम-'என்னைச் சேர்ந்தது' इति-என்று सततं-எப்பொழுதும் (இருந்து வருகிறது.)



ப்ரகிருதியின் காரியம் என்று சொல்லியிருப்பதால் ஆதியுள்ளதாகத்தெரிகிறது. ஆனாலும் பிரளயகாலத்தில் காரணமான அவ்யக்த ரூபமாக இருந்து ஸிருஷ்டிகாலத்தில் வியக்தமாவதால் முக்திவரை அடியோடு நாசமில்லாமல் தொடர்ந்து வந்துகொண்டிருப்பதால் அநாதி என்று கூறப்பட்டது. (188-189)

विज्ञानकोशोऽयमतिप्रकाशः प्रकृष्टसांनिध्यवशात्परात्मनः ।
अतो भवत्येष उपाधिरस्य यदात्मधीः संसरति भ्रमेण ॥

अयं इந்த विज्ञान कोशः-விக்ஞானமய கோசமானது पर आत्मनः-உத்கிருஷ்டமான ஆத்மாவிற்கு प्रकृष्ट सांनिध्य-वशात्-வெகு ஸமீபத்திலிருப்பது காரணமாக अति प्रकाशः-வெகு பிரகாசமுள்ளது. भ्रमेण பிராந்தியினால் यत् आत्मधीः எதில் 'தான்' என்ற எண்ணத்தினால் (ஜீவன்) संसरति-(ஸுக துக்காதியனுபவமாகிற) ஸம்ஸாரத்தில் இருந்து வருகிறானோ एषः-இந்த (விக்ஞானமய) கோசம் अतः-ஆகையினால் अस्य-இந்த ஆத்மாவிற்கு उपाधिः (சிறியதாக வேறாகக் காட்டும்) உபாதியாக भवति இருந்துவருகிறது.

(அ) இந்த விக்ஞானமய கோசத்தை உபாதியாயுடைய ஆத்மா மோக்ஷமடையும்வரை அதை விட்டுப் பிரியாமலிருப்பதால் அந்த ஆத்மாவிற்கும் உபநிஷத்துக்களில் "விக்ஞானமயன்" என்ற வியவஹாரம் ஏற்பட்டிருக்கிறது, வாஸ்தவத்தில் ஆத்மாவிற்கு அக்கோசத்திலுள்ள கர்த்தா போக்தா என்ற வியவஹாரங்கள் கிடையாது, என்பதை குறிப்பிடுகிறார் :—

योऽयं विज्ञानमयः प्राणेषु हृदि स्फुरत्स्वयंज्योतिः ।
कूटस्थः सन्नात्मा कर्ता भोक्ता भवत्युपाधिस्थः ॥ १९१ ॥

यः-எவர் प्राणेषु- இந்திரியங்களிலும் हृदि-ஹ்ருதயத்திலும் स्फुरत् स्वयं ज्योतिः விளங்கும் ஸ்வயம் பிரகாசமாய் कूटस्थः-கூடஸ்தராய் (எவ்வித மாறுதலுமற்றவராய்) सन्-இருந்துகொண்டு இருக்கிறாரோ अयं-இந்த विज्ञानमयः-விக்ஞானமயனான (மோக்ஷம் வரை புத்தியை விட்டுப்

பிரியாத) आत्मा-ஆத்மாவே उपाधिस्थः-(விக்ஞானமய கோசம் என்கிற) உபாதியில் ('நான்' என்கிற எண்ணத்துடன்) இருப்பவராக कर्ता-(புண்ணிய பாப கர்மாக்களை) செய்கிறவர் भोक्ता-(அவைகளின் பலனாகிய ஸுக துக்கங்களை) அனுபவிக்கிறவர் என்று भवति-ஆகிறார். (191)

(அ) வாஸ்தவத்தில் ஆத்மாவைத்தவிர வேறு பதார்த்தமே இல்லாதபோது அவர் தன்னைத்தவிர வேறு பதார்த்தமிருப்பதாக நினைத்து அது விஷயமாக போகத்தை யனுபவிப்பது எப்படி ஸாத்தியம்? என்று ஏற்படக்கூடிய ஸந்தேஹத்திற்கு ஸமாதானமாக, மண்ணிலிருந்தே குடம் செய்யப்பட்டிருந்தபோதிலும் மண்ணையும் குடத்தையும் வேறு பட்டவைபோல ஸாமான்ய ஜனங்கள் நினைப்பதில்லையா? என்று சொல்கிறார்:—

स्वयं परिच्छेदमुपेत्य बुद्धेस्तादात्म्यदोषेण परं मृषात्मनः ।
सर्वात्मकः सन्नपि वीक्षते स्वयं स्वतः पृथक्त्वेन मृदो घटानिव ॥

मृषा आत्मनः-பொய் ஸ்வரூபத்தையுடைய बुद्धेः-புத்தியோடு तादात्म्य दोषेण-தானும் அந்த புத்தியும் ஒன்று என்று எண்ணுகிற தோஷத்தினால் परं-மாத்திரம் स्वयं-தான் परिच्छेदं-குறுகிய தன்மையை उपेत्य-அடைந்து, (ஆத்மாவானவர்) सर्व आत्मकः-எல்லா ஸ்வரூபமாக सन् अपि-இருந்தபோதிலும் स्वयं-தானே स्वतः-தன்னிலிருந்து पृथक्त्वेन-வேறுபட்டதாக मृदः-மண்ணிலிருந்து घटान् குடங்களை (வேறுபட்டதாக பார்ப்பது) इव போல वीक्षते-பார்க்கிறான். (192)

(அ) தன்னிடத்தில் இல்லாததாயும் வேறு பதார்த்தத்தில் இருப்பதுமான ஒரு குணம் அந்த பதார்த்தத்தின் ஸம்பந்ததினால் மாத்திரம் தன்னிடம் ஏற்பட்டுவிடுமா என்றால் ஏற்படாது என்பதே வாஸ்தவம், ஆனால் ஏற்பட்டதாய் தோன்றக் கூடும் என்று முன் 135-வது சுலோகத்தில் சொன்ன அக்னி திருஷ்டாந்தத்தை இங்கேயும் சொல்கிறார்:—



उपाधिसंबन्धवशात्परात्माप्युपाधिधर्माननुभाति तद्गुणः ।
अयोविकारानविकारिवह्निवत्सदैकरूपोऽपि परः स्वभावात् ॥ १९३ ॥

परात्मा-மேலான ஆத்மா स्वभावात्-வாஸ்தவ ஸ்வரூபத்தில் परः-மேலானதாகவும் सदा-எப்பொழுதும் एकरूपः अपि-(எவ்வித மாறுதலுமன்னியில்) ஒரே ஸ்வரூபத்துடன் கூடியவராக இருந்தபோதிலும் उपाधि संबन्ध वशात्-உபாதியின் ஸம்பந்தம் காரணமாக उपाधि धर्मान् உபாதியின் தர்மங்களை अनु-அனுஸரித்து तद् गुणः-அதன் குணங்களை உடையவராக अपि-கூட भाति-தோன்றுகிறார், अविकारि वह्निवत्-எவ்வித மாறுதலையும் அடையாத அக்னி எப்படி (அத்துடன் ஸம்பந்தப்பட்டிருக்கும்) अयो विकारान्-இரும்பின் மாறுதல்களை (அனுஸரித்துத் தோன்றுகிறதோ அப்படி). (193)

(அ) இவ்விதம் உபாதி ஸம்பந்தத்தினால்தான் ஆத்மாவிற்கு ஸம்ஸாரம் ஏற்படுகிறதென்று சொல்லிவருகையில், அவ்வுபாதிக்கு ஆதி கிடையாதென்று 188-வது சுலோகத்தில் சொல்லியிருப்பதினால், ஸாமான்யமாய் உலகத்தில் ஆதியுள்ள பதார்த்தத்திற்குத்தான் நாசம் உண்டென்று அனுபவ ஸித்தமாயிருக்க, இந்த உபாதிக்கும் நாசம் கிடையாதென்று ஏற்பட்டு விடாதா? அப்படியானால் ஸம்ஸாரத்திலிருந்து எக்காலத்திலும் ஒய்வு ஏற்படவே முடியாதே என்று சிஷ்யன் ஸந்தேஹத்தால் கேட்கிறான்:—

शिष्य उवाच ॥—

भ्रमेणाप्यन्यथा वास्तु जीवभावः परात्मनः ।
तदुपाधेरनादित्वान्नानादेर्नाश इष्यते ॥ १९४ ॥

अतोऽस्य जीवभावोऽपि नित्यो भवति संसृतिः ।
न निवर्तेत तन्मोक्षः कथं मे श्रीगुरो वद ॥ १९५ ॥

परात्मनः-பரமாத்மாவிற்கு जीव भावः-ஜீவனாயிருக்கும் தன்மை भ्रमेण अपि-பிராந்தியினாலோ अन्यथा वा-வேறு

(அ) இவ்விஷயம் நன்கு மனதில் பதியவேண்டியதற்காக ரஜ்ஜு ஸர்ப்ப திருஷ்டாந்தத்தைச் சொல்கிறார் :—

यावद्भ्रान्तिस्तावदेवास्य सत्ता मिथ्याज्ञानोज्जृम्भितस्य प्रमादात् ।
रज्ज्वां सर्पो भ्रान्तिकालीन एव भ्रान்தேர்नाशे नैव सर्पोऽस्ति तद्वत् ॥

रज्ज्वां-கயிற்றினிடத்தில் सर्पः (தோன்றும்) ஸர்ப்பம் भ्रान्ति कालीन एव-பிராந்தி ஸமயத்தில் தான் இருக்கும். भ्रान्तेःபிராந்திக்கு नाशे-நாசம் ஏற்பட்டுவிட்டால் सर्पः-ஸர்ப்பம் नैव अस्ति-இல்லவேயில்லை என்பது எப்படியோ तद्वत्-அதே போல मिथ्या अज्ञान उज्जृम्भितस्य - பொய்யாயிருக்கும் அறியாமையினால் நன்கு தோன்றுகிற अस्य-இதற்கு भ्रान्तिः-பிராந்தி यावत्-எதுவரையுண்டோ तावत् एव-அதுவரை தான் प्रमादात्-(சரியான அறிவிலிருந்து) பிசகுவதினால் सत्ता-இருக்கும் தன்மை (தோன்றுகிறது).

(அ) உபாதியாயிருக்கிற விக்ஞானமயகோசம் அநாதியானதினால் அதற்கு நாசம் எப்படி ஏற்படும் என்று சிஷ்யன் கேட்ட கேள்விக்கு, அநாதியான பதார்த்தம் வாஸ்தவ பதார்த்தமாயிருந்தால் அதற்கு நாசம் கிடையாதென்பது வாஸ்தவம், வாஸ்தவமில்லாத பதார்த்தம் அநாதியாயிருந் தாலும் அது தோன்றினதற்குக் காரணமாகிய அறியாமை விலகிவிட்டால் அதுவும் நாசத்தையடைந்து விடுமென்று எடுத்துச்சொல்கிறார் :—

अनादित्वमविद्यायाः कार्यस्यापि तथेष्यते ॥ २०० ॥

उत्पन्नायां तु विद्यायामाविद्यकमनाद्यपि ।
प्रबोधे स्वप्नवत्सर्वं सहमूलं विनश्यति ॥ २०१ ॥

अविद्यायाः-அவித்யைக்கு अनादित्वं-அநாதித்தன்மை (எப்படியோ) तथा-அப்படியே कार्यस्यापि- அதன் கார்ய (மான விக்ஞானமய கோச) த்திற்கும் (அநாதித் தன்மை) इष्यते-ஒப்புக்கொள்ளப்படுகிறது तु-ஆனால் आविद्यकं-அவித்யையினால் ஏற்பட்டது. अनादि अपि-ஆதி



யற்றதாயிருந்தபோதிலும் विद्यायां-(அவித்யைக்கு நேர் விரோதமாய் அதைப் போக்கடிக்க வல்லமையுள்ள) வித்யை उत्पन्नायां - ஏற்பட்டுவிட்டதேயானால் प्रबोधे - (தூக்கத்திலிருந்து) நன்கு விழித்துக்கொண்டுவிட்டால் स्वप्नवत्-ஸ்வப்னம (ஸ்வப்னத்தில் தோன்றின வாஸ்தவமல்லாத பதார்த்தங்கள் எல்லாம் மறைந்துவிடுவது) போல सर्वं-எல்லாம் सहमूलं-காரணமான அவித்யை உள்பட विनश्यति - நன்கு நாசத்தை அடைந்து விடுகிறது. (200, 201)

பிரபஞ்சத்திற்குக்காரணமான அவித்யை ஒரேமாதிரியாயிருப்பதால் அதிலிருந்து தோன்றும் பிரபஞ்சமும் ஒரேமாதிரியாகத்தான் இருக்கவேண்டும். ஆகவே எல்லாவற்றையும் ஸமமாக எண்ணுகிற, பக்ஷபாதமில்லாத ஈசுவரன் அவித்யையைக்கொண்டு பல பல வேற்றுமைகளுள்ள இப் பிரபஞ்சத்தை ஸிருஷ்டிப்பதற்கு பலவித கர்மாக்களுக்கு ஆச்ரயமான புத்தி என்ற உபாதிதான் காரணம் என்று சொல்லவேண்டும். ஆகையால் புத்தியும் (விக்ஞானமய கோசமும்) அநாதி என்று ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

(அ) ஆதியற்றதெல்லாம் நாசமற்றது என்று வைத்துக் கொள்ள அவசியமில்லையென்று தார்கிக மத ரீதியாகவே பதில் சொல்கிறார். ஒரு குடம் உண்டாவதற்கு முன் அதன் இல்லாமை ஆதியற்றது, குடம் உண்டானவுடன் அந்த அநாதியான இல்லாமை நாசத்தை அடைவதில்லையா என்கிறார் :—

अनाद्यपीदं नो नित्यं प्रागभाव इव स्फुटम् ।
अनादेरपि विध्वंसः प्रागभावस्य वीक्षितः ॥ २०२ ॥

इदं-இந்த விக்ஞானமய கோசமானது अनादि अपि-அநாதியாயிருந்தபோதிலும் नो नित्यं - நித்யம் (நாசமற்றது) இல்லையென்பது प्रागभावः इव - (உத்பத்தியாகும் பதார்த்தம உத்பத்தியாவதற்கு முன் அது ஸம்பந்தமாயுள்ள) முன் இல்லாமை போலவே स्फुटम् தெளிவானது

விதமாயோ (வாஸ்தவமாகவேயோ) अस्तु-இருக்கட்டும். अनादेः-ஆதியற்ற பதார்த்தத்திற்கு नाशः-நாசம் न इष्यते-ஒப்புக் கொள்ளப்படுகிறதில்லை. तद् उपाधेः-ஆத்மாவிற்கு உபாதியாயிருக்கிற விக்ஞானமய கோசம் अनादित्वात्-ஆதியற்றதாயிருப்பதால் (அதற்கும் நாசம் ஏற்பட நியாயமில்லை) अतः-ஆகையினால் अस्य-இந்த ஆத்மாவிற்கு जीव भावः-ஜீவனாயிருக்கும் தன்மை अपि-கூட नित्यः நித்யமாய் (நாசமற்றதாய்) भवति-ஆகும். (அப்படியானால்) संसृतिः-ஸம்ஸாரமானது न निवर्तेत-(எக்காலத்திலும்) விலகாது. तत्-ஆகையினால் मोक्षः-ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை என்பது मे-எனக்கு कथं-எப்படி ஏற்படமுடியும்? श्रीगुरो-மஹிமை தங்கிய குருநாதரே वद-சொல்லுங்கள். (194-195)

(அ) சிஷ்யனுடைய கேள்வியை சிலாகித்துக்கொண்டு குரு பதில் சொல்லவாரம்பிக்கிறார்:—

श्रीगुरुः उवाच—

सम्यक्पृष्टं त्वया विद्वन् सावधानेन तच्छृणु ।
प्रामाणिकी न भवति भ्रान्त्या मोहितकल्पना ॥ १९६ ॥

विद्वन्-ஹே வித்வானே! त्वया-உன்னால் सम्यक्-நன்றாக पृष्टं-கேட்கப்பட்டிருக்கிறது. तत्-அதை (அதற்கு நான் சொல்லும் ஸமாதானத்தை) सावधानेन-வெகு கவனமாக शृणु-கேள். भ्रान्त्या-பிராந்தியினால் मोहित कल्पना-மோஹத்தை அடைந்திருப்பவனால் கல்பிக்கப்படுவது प्रामाणिकी-பிரமாண ஸித்தமாக (வாஸ்தவமாக இருப்பதாக) न भवति-ஆகாது. (196)

(அ) சிஷ்யனுடைய கேள்வியில் "ஆத்மாவிற்கு ஜீவத்தன்மை பிராந்தியினாலோ, வேறு விதத்தாலோ ஏற்பட்டிருக்கட்டும்" என்று கண்டிருப்பதில் வேறுவிதம் என்ற ஸந்தேஹமே வேண்டாம். பிராந்தியினால் தான் என்பதை சுட்டிக்காட்டுகிறார்:—



भ्रान्तिं विना त्वसङ्गस्य निष्क्रियस्य निराकृतेः ।
न घटेतार्थसंबन्धो नभसो नीलतादिवत् ॥ १९७ ॥

(வேறு எதனுடனும் பற்றற்று அசைவற்று ரூபமற்று இருக்கும்) नभसः-ஆகாசத்திற்கு नीलतादिवत्-நீலமாயிருக்கும் தன்மை (தளப்போல் தோன்றும் தன்மை) முதலியது (எப்படி பிராந்தியினாலேயே தோன்றுகிறதோ அதைப்)போலவே असङ्गस्य-எதினுடையவும் சேர்க்கையில்லாததும் निष्क्रियस्य எவ்வித கிரியை இல்லாததும் निराकृतेः-எவ்வித ரூபமில்லாததுமான (ஆத்மாவிற்கு) अर्थ सम्बन्धः-விஷயங்களுடன் ஸம்பந்தமானது भ्रान्तिं विना-பிராந்தியன்னியில் न तु घटेत-ஏற்படவே முடியாது. (197)

(அ) ஆத்மாவின் வாஸ்தவ ஸ்வரூபத்தைக்கூறி அதற்கு ஜீவத்தன்மை பிராந்தியால் ஏற்பட்டிருப்பதால் பிராந்தி விலகியதும் அது நீங்கிவிடுமென்று கூறுகிறார்:—

स्वस्य द्रष्टुर्निर्गुणस्याक्रियस्य प्रत्यग्बोधानन्दरूपस्य बुद्धेः ।
भ्रान्त्या प्राप्तो जीवभावो न सत्यो मोहापाये नास्त्यवस्तु स्वभावात् ॥

निर्गुणस्य-எவ்வித குணமுமில்லாததாயும் अक्रियस्य-எவ்வித கிரியா ஸம்பந்தமில்லாததாயும் प्रत्यग्बोध आनन्द रूपस्य-உள்ளேயுள்ள அறிவு ரூபமாயும் ஆனந்த ஸ்வரூபமாயும் द्रष्टुः-எல்லாவற்றையும் பார்க்கிறவனாயும் உள்ள स्वस्य-தனக்கு बुद्धेः-புத்தியினுடைய भ्रान्त्या-பிராந்தியினால் प्राप्तः-ஏற்பட்டிருக்கும் जीव भावः-ஜீவத்தன்மை न सत्यः-ஸத்யம் (எப்பொழுதும் இருக்கிற பதார்த்தம்) ஆகாது. मोह अपाये-மோஹம்விலகிவிட்டால் अवस्तु-வாஸ்தவமில்லாதது (வெறும் தோற்றமாயிருப்பது) स्वभावात्-அதன் தன்மையினாலேயே न अस्ति-இருக்காது (மறைந்துவிடும்) (198)

अनादेः-ஆதியில்லாமலிருக்கும் प्रागभावस्य अपि-முன் இல்லாமைக்கும் கூட (பதார்த்தம் உண்டாகும்போது) विध्वंसः-நாசமானது वीक्षितः-பார்க்கப்படுகிறது. (202)

இவ்வளவுகாலமாக எனக்குப்புரியாத இந்த விஷயம் இப்பொழுதுதான் எனக்குத்தெரிந்தது என்று ஒருவன் சொல்கிறான். இந்த அறியாமை எப்பொழுது ஏற்பட்டது என்று ஒருவரும் கேட்பதில்லை அறியாமை ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஏற்பட்டிருக்குமானால் அதற்கு முன் அறியாமை இல்லாமல் அறிவு இருக்கும்பொழுது எப்படி அறியாமை ஏற்படும்? ஆகையால் அறியாமை அநாதிகாலமாக இருப்பதாகச் சொல்ல வேண்டும். அநாதியாயிருந்தாலும் ஞானம் வந்தவுடன் அறியாமை நீங்கிவிடுகிறது ஆகையால் அநாதியான வஸ்துவுக்கும் நாசம் ஏற்படலாம். (202)

(அ) கயிற்றில் பிராந்தியினால் தோன்றும் பாம்பு எப்படி வாஸ்தவத்தில் கயிற்றைவிட வேறில்லையோ அதேமாதிரி ஆத்மாவினிடத்தில் புத்திதோஷத்தினால் தோன்றும் ஜீவன் வாஸ்தவத்தில் ஆத்மாவைத்தவிர வேறில்லையென்பதைக் காட்டுகிறார் :—

यद्बुद्ध्युपाधिसंबन्धात्परिकल्पितमात्मनि ।
जीवत्वं न ततोऽन्यत्तु स्वरूपेण विलक्षणम् ॥ २०३ ॥

बुद्ध्युपाधिसंबन्धात्-புத்தியாகிற உபாதியின் ஸம்பந்தத்தினால் आत्मनि-ஆத்மாவினிடத்தில் परिकल्पितं-நன்கு கல்பிக்கப்பட்டிருக்கிற यत्-எந்த जीवत्वं-ஜீவத்தன்மையுண்டோ, அது ततः-ஆத்மாவிலிருந்து स्वरूपेण-தன் ஸ்வருபத்தினால் विलक्षणं-வேறுபட்ட லக்ஷணத்தோடு கூடிய अन्यत्-வேறு பதார்த்தம் न तु-இல்லவே இல்லை.

(அ) இந்த ஸம்பந்தம் அறியாமையினாலேயே ஏற்பட்டு இருப்பதினால், அறிவு ஏற்பட்டு அறியாமை விலகினவுடன் இந்த ஜீவத்தன்மையும் விலகிவிடும்; அவ்விதம் விலக்க அறிவைத்தவிர வேறு வழி கிடையாது என்பதை விளக்குகிறார் :—



संबन्धः स्वात्मनो बुद्ध्या मिथ्याज्ञानपुरःसरः ।
विनिवृत्तिर्भवेत्तस्य सम्यग्ज्ञानेन नान्यथा ॥ २०४ ॥

स्वात्मनः-தன் ஆத்மாவிற்கு बुद्ध्या-புத்தியுடன் संबन्धः-ஸம்பந்தமானது-मिथ्याज्ञानपुरस्सरः-பொய்யான அறியாமையை முன்னிட்டுக்கொண்டு (தான் ஏற்படுகிறது) तस्य (அறியாமையால் ஏற்பட்டிருக்கும்) அந்த ஸம்பந்தத்திற்கு विनिवृत्तिः-நன்கு விலகுவதானது सम्यग्ज्ञानेन-(ஆத்மதத்வ ஸாக்ஷாத்காரமாகிற) நன்கு அறிவதினாலேதான் भवेत्-ஏற்படும் अन्यथा-வேறு விதத்தில் न-ஏற்படாது. (204)

(அ) அந்த "நல்ல அறிவு" என்பதின் ஸ்வருபத்தைத் தெளிவாக எடுத்துச் சொல்கிறார் :—

ब्रह्मात्मैकत्वविज्ञानं सम्यग्ज्ञानं श्रुतेर्मतम् ।

ब्रह्मात्मैकत्वविज्ञानं-பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்றுதான் என்று நேரில் அனுபவரூபமாய் அனுபவிப்பதுதான் सम्यग्ज्ञानं-நல்ல அறிவு என்று श्रुतेः-வேதத்தினுடைய मतम्-தீர்மானம்.

(அ) இந்த அறிவு ஏற்படவேண்டுமானால் ஆத்மாவையும் அனாத்மாவையும் நன்கு பிரித்து அறியவேண்டியது அவசியமென்பதை மறுபடியும் சொல்கிறார் :—

तदात्मानात्मनोः सम्यग्विवेकेनैव सिद्ध्यति ।
ततो विवेकः कर्तव्यः प्रत्यगात्मासदात्मनोः ॥ २०५ ॥

तत्-அந்த அறிவு आत्मानात्मनोः-ஆத்மா ஆத்மாவல்லாதது இரண்டையும் सम्यग्विवेकेन-நன்கு பிரித்தறிவதினால் एव-தான் सिद्ध्यति ஏற்படும். ततः-ஆகையினால் प्रत्यगात्मासदात्मनोः-உள்ளேயிருக்கிற (வாஸ்தவமான) ஆத்மா, வாஸ்தவமல்லாத (ஆத்மா மாதிரி தோன்றுகிற)

ஆத்மா இவர்கள் விஷயமாய் विवेकः - பகுத்தறிதல் कर्तव्यः - செய்யவேண்டியது. (205)

(அ) அவ்விதம் செய்து ஆத்மாவல்லாததிலிருந்து ஆத்மாவைப் பிரித்து அறிந்துவிட்டால், அழுக்கு நீங்கின ஜலம் போல, ஆத்மா ஸ்பஷ்டமாகப் பிரகாசிக்கும் என்கிறார் :—

जलं पङ्कवदस्पष्टं पङ्कापाये जलं स्फुटम् ।
यथा भाति तथात्मापि दोषाभावे स्फुटप्रभः ॥ २०६ ॥

यथा-எப்படி जलं ஜலம் पङ्कवत्-சேறுடன் சேர்ந்து अस्पष्टं-தெளிவில்லாமலிருக்கிறதோ पङ्कापाये-சேர் விலகினவுடன் जलं-ஜலம் स्फुटं-தெளிந்து நன்றாக भाति-விளங்குகிறதோ तथा- அதே மாதிரி आत्मा अपि-ஆத்மாவும் கூட दोषाभावे-(அதை மறைத்து அசுத்தப்படுத்திக்கொண்டிருந்த) தோஷம் விலகினவுடன் स्फुटप्रभः-தெளிவான பிரகாசமுள்ளதாக भाति-விளங்குகிறார். (206)

(அ) ஆகையால் ஆத்ம ஸ்வரூபம் நன்கு பிரகாசிக்க வேண்டுமானால் அநாத்மாவின் ஸம்பந்தத்தினால் ஏற்படும் தோஷத்தை விலக்கவேண்டுமென்கிறார் :—

असन्निवृत्तौ तु सदात्मनः स्फुटप्रतीतिरेतस्य भवेत्प्रतीचः ।
ततो निरासः करणीय एवासदात्मनः साध्वहमादिवस्तुनः ॥ २०७ ॥

असन्निवृत्तौ तु- வாஸ்தவமில்லாதது நிவிருத்தியாகிவிட்டால் தான் सदात्मनः-வாஸ்தவமான ஆத்மாவாகிய एतस्य-இந்த प्रतीचः-உள்ளேயிருக்கும் வஸ்துவிற்கு स्फुटप्रतीतिः - நன்கு விளங்குதல் भवेत् - ஏற்படும். ततः - ஆகையால் असदात्मनः - வாஸ்தவ ஆத்மாவல்லாத अहमादिवस्तुनः - அஹங்காரம் முதலான வஸ்துக்களுடைய निरासः -விலக்குதல் साधु-நன்கு करणीय एव- செய்தேயாக வேண்டும். (207)

(அ) இதுவரை வர்ணித்து வந்த விக்ஞானமயகோசம் ஏன் ஆத்மாவாகாது என்பதற்குள்ள காரணங்களையெல்லாம் சேர்த்துச்சொல்கிறார் :—



अतो नायं परात्मा स्याद्विज्ञानमयशब्दभाक् ।
विकारित्वाज्जडत्वाच्च परिच्छिन्नत्वहेतुतः ।
दृश्यत्वाद्व्यभिचारित्वान्नानित्यो नित्य इष्यते ॥ २०८ ॥

अतः -ஆகையால் अयं- இந்த विज्ञानमयशब्दभाक् - விக்ஞானமயம் என்ற பெயரை அடைந்திருக்கிற கோசமானது परात्मा - மேலான ஆத்மா न स्यात् - ஆகாது. विकारित्वात्- (உத்பத்தி, நாசம் முதலிய) மாறுதல்களை உடையதாயிருப்பதாலும் जडत्वात्- (தானாகப் பிரகாசிக்க யோக்கியதையன்னியில்) ஜடமாயிருப்பதாலும் परिच्छिन्नत्वहेतुतः - வரம்புக்குட்பட்டது என்ற காரணத்தினாலும் दृश्यत्वात् - அறியப்படுகிறபடியாலும் व्यभिचारित्वात् - (ஒரே நிலையிலில்லாமல் தூக்கத்தில் லயமடைந்து விடுவதுபோலுள்ள) எப்பொழுதும் இருக்கும் தன்மையற்றிருப்பதினாலும் अनित्यः - நித்யமில்லையென்று ஏற்படுகிற (இந்த கோசம்) नित्यः - (எவ்வித மாறுதலையுமடையாமல் ஸ்வயம்பிரகாசமாய், ஸர்வவியாபகமாய், அறிகிறதாய், எப்பொழுதும் ஒரே நிலையிலிருப்பதாய்) நித்யமாயுள்ள (ஆத்மாவாக) न इष्यते ஒப்புக்கொள்ள முடியாது. (208)

## 21. ஆனந்தமய கோசம்

(அ) இவ்விதமாக விக்ஞானமய கோசமும் ஆத்மாவாகாது என்று நிர்வசனம் செய்துவிட்டு இனி அதற்கும் உள்ளேயுள்ள ஆனந்தமய கோசத்தைப் பற்றி சொல்லவாரம்பிக்கிறார். அதன் ஸ்வரூபத்தையும் கார்யத்தையும் 209வது சுலோகத்திலும், அது தெளிவாய்த் தெரியும் அவஸ்தை ஸுஷுப்தி என்று 210 வது சுலோகத்திலும் சொல்லி, 211வது சுலோகத்தில் இந்த கோசமும் ஆத்மாவாகாது என்பதைக் காட்டுகிறார் :—

आनन्दप्रतिबिम्बचुम्बिततनुर्वृत्तिस्तमोजृम्भिता
स्यादानन्दमयः प्रियादिगुणकः स्वेष्टार्थलाभोदयः ।

पुण्यस्यानुभवे विभाति कृतिनामानन्दरूपः स्वयं
भूत्वा नन्दति यत्र साधु तनुभृन्मात्रः प्रयत्नं विना ॥

आनन्दप्रतिबिम्बचुम्बिततनुः – (ஆத்மாவின் ஸ்வரூபமான) ஆனந்தத்தின் பிரதிபிம்பத்துடன் சேர்ந்த ஸ்வரூபத்துடன் கூடியதாய் तमोजृम्भिता இருட்டு (அவித்யை) யிலிருந்து உண்டானதாய் प्रियादिगुणकः – பிரியம் (மோதம், பிரமோதம்) முதலான அம்சங்களுடன் கூடியதாய் स्वेष्टार्थलाभोदयः – தனக்கு இஷ்டமான பதார்த்தம் கிடைப்பதினால் ஏற்படுவதாய் உள்ள वृत्तिः – விருத்தி आनन्दमयः – ஆனந்தமய கோசம் स्यात् – ஆகும். कृतिनां – புண்ணியம் செய்தவர்களுக்கு पुण्यस्य – புண்ணியத்தின் अनुभवे – பலானுபவம் ஏற்படும்போது स्वयं – தானே आनन्दरूपः – ஆனந்தரூபமாக भूत्वा – ஆகி विभाति – பிரகாசிக்கிறது. यत्र – எந்த ஸமயத்தில் तनुभृन्मात्रः – சரீரம் எடுத்திருக்கும் யாவரும் प्रयत्नं – (இப்பொழுது எவ்வித) பிரயத்தினமும் विना – இல்லாமலே साधु – நன்றாக नन्दति – ஸந்தோஷப்படுகிறதோ (அப்பொழுது ஆனந்தமய கோசம் தெரிகிறதென்று அறியவும்). (209)

(அ) ஜாக்கிரத், ஸ்வப்னம் இவைகளிலும் புண்ணிய வசத்தினால் ஆனந்த ஸ்பூர்த்தி ஏற்பட்டபோதிலும் துக்கம் கலந்தே இருக்குமாதலால், இந்த கோசம் நன்கு தெரிவது ஸுஷுப்தியில்தான் என்கிறார்:—

आनन्दमयकोशस्य सुषुप्तौ स्फूर्तिरुत्कटा ।
स्वप्नजागरयोरीषदिष्टसंदर्शनादिना ॥ २१० ॥

आनन्दमयकोशस्य – ஆனந்தமய கோசத்திற்கு उत्कटा – வெகு நன்றாக स्फूर्तिः – விளங்குதல் सुषुप्तौ – நல்ல தூக்கத்தில். स्वप्नजागरयोः – கனவிலும் விழிப்பிலும் इष्टसंदर्शनादिना – இஷ்டமான வஸ்துவை பார்ப்பது (அடைவது அனுபவிப்பது) முதலானதினால் ईषत् – கொஞ்சம் (விளங்குதல் இருக்கும்).



தாமஸமான ஸுகாகாரவிருத்தி ஆனந்தமய கோசம். ஸுஷுப்தியில் வேறு விருத்தியில்லாமல் துக்கக் கலப்பில்லாமல் ஆனந்தம் ஏற்படுகிறபடியால் ஆனந்தமய கோசத்தை ஸுஷுப்தி நிலையில் நன்கு காணலாம். ஆனாலும் அது அவித்யையால் மறைக்கப்பட்டுள்ளது. விழிப்பிலும் கனவிலும் புண்யவசத்தால் ஏற்படும் ஸுகாகாரவிருத்தியும் ஆனந்தமயம் தான்; ஆனாலும் அங்கு வேறு விருத்திகள் ஏற்படுவதாலும் துன்பம் கலப்பதாலும் ஸுஷுப்தியில்போல் இங்கு வ்யக்தமாக இல்லை. (210)

नैवायमानन्दमयः परात्मा सोपाधिकत्वात् प्रकृतेर्विकारात् ।
कार्यत्वहेतोः सुकृतक्रियायाः विकारसङ्घातसमाहितत्वात् ॥ २११ ॥

अयं – இந்த आनन्दमयः – ஆனந்தமய கோசமானது सोपाधिकत्वात् – (இஷ்ட வஸ்து லாபம் முதலிய) நிமித்தங்களை அபேக்ஷிக்கிறபடியாலும் प्रकृतेः – மூல காரணமான அவித்யையின் विकारात् – பரிணாமமாயிருப்பதினாலும் सुकृतक्रियायाः – புண்யகர்மாவின் कार्यत्वहेतोः – கார்யமாயிருக்கும் தன்மையுடையது என்ற காரணத்தினாலும் विकारसंघातसमाहितत्वात् – (பிரியம், மோதம், பிரமோதம் முதலான) விகாரங்களின் கூட்டத்தினால் சேர்ந்திருப்பதினாலும் परात्मा – மேலான ஆத்மா न एव – ஆகவேயாகாது. (211)

## 22. ஆத்மா கோசங்களுக்கு அதீதர்

(அ) இதுவரை 156 முதல் 211 சுலோகம் முடிய ஐந்து கோசங்களையும் வர்ணித்துவிட்டு அவைகளிலிருந்து ஆத்மாவைப் பிரித்து அறிந்தால் அவ்வாத்மா ஸ்வயம் பிரகாசமாய் விளங்குமென்று 153-வது சுலோகத்தில் சொன்னதை இங்கு மறுபடியும் சொல்லி முடிக்கிறார்:—

पञ्चानामपि कोशानां निषेधे युक्तितः कृते ।
तन्निषेधावधिः साक्षी बोधरूपोऽवशिष्यते ॥ २१२ ॥

पञ्चानां – ஐந்து कोशानां अपि – கோசங்களையும் युक्तितः – (முன் கண்டிருக்கும்) காரணங்களினால் निषेधे – (வாஸ்தவ

மாக) இல்லையென்று कृते-செய்துவிட்டால் तन्निषेधावधिः-அந்த மறுப்புக்கு எல்லையாய் बोधरूपः-ஞானஸ்வரூபமாயிருக்கும் साक्षी-எல்லாவற்றையும் (தான் ஸம்பந்தப்படாமல்) பார்த்துக்கொண்டிருக்கிற ஆத்மா अवशिष्यते-மிஞ்சும். (212)

(அ) அப்படியே முன் 127-வது சுலோகத்தில் சொன்ன ஆத்ம லக்ஷணங்களையும் ஞாபகப்படுத்துகிறார்:—

योऽयमात्मा स्वयंज्योतिः पञ्चकोशविलक्षणः ।

अवस्थात्रयसाक्षी सन् निर्विकारो निरञ्जनः ।
सदानन्दः स विज्ञेयः स्वात्मत्वेन विपश्चिता ॥ २१३ ॥

यः अयं आत्मा-எந்த இந்த ஆத்மா स्वयं ज्योतिः-(வேறு எதையும் அபேக்ஷிக்காமல்) தானே பிரகாசமாயும் पञ्चकोशविलक्षणः-ஐந்து கோசங்களுக்கும் வேறுபட்டவராயும் अवस्थात्रयसाक्षी-(ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற) தசைகள் மூன்றுக்கும் ஸாக்ஷியாயும் सन्-(பாதிக்கப்படாமல் எப்பொழுதும்) இருக்கின்றவராயும் निर्विकारः-எவ்வித மாறுதலற்றவராயும் निरञ्जनः-எவ்வித தோஷமற்றவராயும் सदा आनन्दः-எப்பொழுதும் ஆனந்த ஸ்வரூபியாகவும் இருக்கிறாரோ सः-அவர் विपश्चिता-நன்கு அறிவுள்ளவனால் स्वात्मत्वेन-தன்னுடைய ஆத்மா என்றே विज्ञेयः-நன்கு அறியத்தக்கவர். (213)

(அ) ஸாமான்யமாய் "நான்" "நான்" என்று நினைக்கப்படுகிற ஐந்து கோசங்களையும் "நான் அல்ல" என்று மறுதளித்துவிட்டால், வேறு "நான்" என்று எதுவும் இருப்பதாகத் தெரியவில்லையேயென்று ஸந்தேஹித்து சிஷ்யன் கேட்கிறான்:—

शिष्य उवाच—

मिथ्यात्वेन निषिद्धेषु कोशेष्वेतेषु पञ्चसु ।



सर्वाभावं विना किञ्चित् न पश्याम्यत्र हे गुरो ।
विज्ञेयं किमु वस्त्वस्ति स्वात्मनाऽत्र विपश्चिता ॥ २१४ ॥

एतेषु-இந்த पञ्चसु-ஐந்து कोशेषु-கோசங்களும் मिथ्यात्वेन-வாஸ்தவமில்லையென்று निषिद्धेषु மறுக்கப்பட்டுவிட்டால் सर्वाभावं-எல்லாவற்றின் இல்லாமையை (ஒன்றுமில்லையென்பதை) विना-தவிர किञ्चित् எதையும் न पश्यामि-நான் பார்க்கவில்லை. हे गुरो-ஹே குருநாதரே, (அப்படியானால்) विपश्चिता-வித்வானால் स्वात्मना-தன்னுடைய ஆத்மாவாக अत्र-இங்கே विज्ञेयं-அறியத்தக்கதான वस्तु-வஸ்து किमु-எதுதான் अस्ति-இருக்கிறது? (214)

(அ) இந்த கேள்வியையும் சிலாகித்துக்கொண்டு ஸ்ரீ குரு பதில் சொல்கிறார்:—

श्रीगुरुरुवाच—

सत्यमुक्तं त्वया विद्वन् निपुणोऽसि विचारणे ।
अहमादिविकारास्ते तदभावोऽयमप्यथ ॥ २१५ ॥

सर्वे येनानुभूयन्ते यः स्वयं नानुभूयते ।
तमात्मानं वेदितारं विद्धि बुद्ध्या सुसूक्ष्मया ॥ २१६ ॥

विद्वन्-ஹே வித்வானே! त्वया-உன்னால் उक्तं-சொல்லப்பட்டிருப்பது सत्यं வாஸ்தவமே. विचारणे-(தத்வத்தைப்பற்றி) விசாரிப்பதில் निपुणः-ஸாமர்த்யசாலியாய் असि-இருக்கிறாய். ते अहमादिविकाराः-அந்த அஹங்காரம் முதலான விகாரங்களும் अथ-அதன்பிறகு अयं-இந்த तदभावः अपि-அவைகளின் இல்லாமையும் सर्वे-இவை எல்லாம் येन-எவரால் अनुभूयन्ते-அனுபவிக்கப்படுகின்றனவோ यः-எவர் स्वयं-தான் மாத்திரம் (எதனாலேயும்) न अनुभूयते-அனுபவிக்கப்படுகிறதில்லையோ तं-அந்த वेदितारं-அறிகிறவரை आत्मानं-ஆத்மாவென்று सुसूक्ष्मया-

வெகு கூர்மையான (சுத்தமான) बुद्ध्या - புத்தியினால் विद्धि - அறிந்துகொள். (215-216)

(அ) முன் 213-வது சுலோகத்தில் ஆத்மாவை 'ஸாக்ஷி' என்றும், இந்த சுலோகத்தில் "எவரால் எல்லாம் அனுபவிக்கப்படுகிறதோ" என்றும், சொன்னதற்கு தாத்பர்யம் ஒன்றே என்று தெளிவுபடுத்துகிறார் :—

तत्साक्षिकं भवेत् तत् तत् यत् यत् येनानुभूयते ।
कस्याप्यननुभूतार्थे साक्षित्वं नोपपद्यते ॥ २१७ ॥

यत् यत् - எது எது येन - எவரால் अनुभूयते - அனுபவிக்கப்படுகிறதோ तत् तत् - அது அது तत्साक्षिकं - அவரை ஸாக்ஷியாக உடையதாக भवेत् - இருக்கும். कस्यापि - யாதொருவருக்கும் கூட अननुभूतार्थे - அனுபவிக்கப்படாத பதார்த்தவிஷயமாக साक्षित्वं - ஸாக்ஷியாயிருக்கும் தன்மை नोपपद्यते - பொருத்தமாகாது. (217)

(அ) சிஷ்யன் கேட்கும்போது "ஐந்து கோசங்களையும் ஆத்மாவல்லவென்று மறுத்துவிட்டால் எல்லாவற்றின் இல்லாமையைத்தவிர வேறு எதையும் காணவில்லை" என்று சொன்னதிலிருந்தே "எல்லாவற்றின் இல்லாமை" காணப்படுகிறதென்பது தெரிகிறது. அதைக்காண்பவரே ஆத்மா, அவரைப் பார்க்கவேறு எதுவும் தேவையில்லை, அவர் ஸ்வயம் பிரகாசமாயிருப்பதால், என்கிறார் :—

असौ स्वसाक्षिकोऽभावो यतः स्वेनानुभूयते ।
अतः परं स्वयं साक्षात्प्रत्यगात्मा न चेतरः ॥ २१८ ॥

असौ - அந்த अभावः - (எல்லாவற்றின்) இல்லாமை स्वेन - தன்னால் (ஆத்மாவால்) यतः - எந்தக் காரணத்தினால் अनुभूयते - அனுபவிக்கப்படுகிறதோ, (அதனால்) स्वसाक्षिकः - தன்னை (ஆத்மாவை) ஸாக்ஷியாக உடையது (என்பது ஸித்தம்). अतः - ஆகையினாலேயே प्रत्यगात्मा - உள்ளேயிருக்கும் ஆத்மா स्वयं - தானே साक्षात् - நேராக



परं - உத்க்ருஷ்டமான ப்ரஹ்மமேதான் इतरः - வேறு न च - இல்லவேயில்லை. (218)

(அ) அஹங்காரம் முதலியவைகளின் மாறுதலையெல்லாம் அனுபவிப்பவர் ஆத்மாவென்று 215-வது சுலோகத்தில் சொன்னதையே விஸ்தாரமாக சொல்கிறார் :—

जाग्रत्स्वप्नसुषुप्तिषु स्फुटतरं योऽसौ समुज्जृम्भते
प्रत्यग्रूपतया सदाऽहमहमित्यन्तः स्फुरन्नेकधा ।
नानाकारविकारभाजिन इमान्पश्यन्नहंधीमुखा-
न्नित्यानन्दचिदात्मना स्फुरति तं विद्धि स्वमेतं हृदि ॥ २१९ ॥

यः - எந்த असौ - இவர் जाग्रत्स्वप्नसुषुप्तिषु ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி ஆகிய மூன்று தசைகளிலும் सदा - இடைவிடாமல் अहं अहं इति - 'நான்', 'நான்' என்று अन्तः - உள்ளே प्रत्यग्रूपतया - உள்ளேயிருக்கும் ஸ்வரூபமாக स्फुटतरं - வெகு ஸ்பஷ்டமாக समुज्जृम्भते - நன்கு விளங்குகிறாரோ नानाकारविकारभाजिनः - பலவிதமான ரூபங்களையும், மாறுதல்களையும் அடையக்கூடிய इमान् - இவைகளை (அதாவது) अहंधीमुखान् - அஹங்காரம், புத்தி முதலானதுகளை एकधा - ஒரேவிதமாய் இருந்து கொண்டு (தான் எவ்வித மாறுதலையும் அடையாமல்) स्फुरन् - பிரகாசித்துக்கொண்டு पश्यन् - பார்த்துக்கொண்டு नित्यानन्दचिदात्मना - நித்யமாய், ஆனந்தமாய், ஞானமாய் இருக்கும் தன்மையுடன் हृदि - ஹ்ருதயத்தில் स्फुरति - விளங்கிக்கொண்டிருக்கிறாரோ तं - அந்த एतं - இவரை स्वं - 'தான்' (ஆத்மா) என்று विद्धि - அறிந்துகொள்.

(அ) "வெகு ஸ்பஷ்டமாக விளங்குகிறார்" என்றிருந்தால், புத்தி முதலானதுகளில் "நான்" என்ற எண்ணம் ஏற்படுவதற்குக் காரணம் என்னவென்று கவனித்தால் மூடத்தனத்தைத்தவிர வேறு எதையும் சொல்வதற்கில்லையென்கிறார் :—

घटोदके बिम्बितमर्कबिम्बमालोक्य मूढो रविमेव मन्यते ।
तथा चिदाभासमुपाधिसंस्थं भ्रान्त्याहमित्येव जडोऽभिमन्यते ॥ २२० ॥

घटोदके-குடத்திலுள்ள ஜலத்தில் बिम्बितं-பிரதிபிம்பித்திருக்கும் अर्कबिम्बं-ஸூர்ய மண்டலத்தை आलोक्य-பார்த்துவிட்டு मूढः-மூடனயிருப்பவன் रविं-ஸூர்யன் एव-தான் என்று मन्यते-எண்ணுகிருன். तथा-அதேவிதமாக उपाधिसंस्थं-உபாதியில் இருக்கும் चिदाभासं-சைதன்யத்தின் பிரதிபிம்பத்தை भ्रान्त्या-பிராந்தியினுல் जडः-அறிவில்லாதவன் अहं इति एव-'நான்' என்றே अभिमन्यते-அபிமானிக்கிருன். (220)

घटं जलं तद्गतमर्कबिम्बं विहाय सर्वं दिवि वीक्ष्यतेऽर्कः ।
तटस्थितस्तत्त्रितयावभासकः स्वयंप्रकाशो विदुषा यथा तथा ॥ २२१ ॥

घटं-குடம்-जलं-(அதிலுள்ள) ஜலம் तद्गतं-அந்த ஜலத்திலுள்ள अर्कबिम्बं-ஸூர்யனுடைய பிம்பம் सर्वं-இவை யெல்லாவற்றையும் विहाय-விட்டுவிட்டு तटस्थितः-இவைகளில் ஸம்பந்தப்படாமல் தனியே இருந்துகொண்டு तत्त्रितयावभासकः-அம்மூன்றையும் பிரகாசிக்கும்படி செய்துகொண்டு स्वयंप्रकाशः-தானே பிரகாசமாயுள்ள अर्कः-ஸூர்யன் दिवि-மேல் ஆகாசத்தில் विदुषा-அறிவாளியால் यथा-எப்படி वीक्ष्यते-காணப்படுகிருரோ तथा-அப்படியே. (221)

देहं धियं चित्प्रतिबिम्बमेतं विसृज्य बुद्धौ निहितं गुहायाम् ।
द्रष्टारमात्मानमखण्डबोधं सर्वप्रकाशं सदसद्विलक्षणम् ॥ २२२ ॥

नित्यं विभुं सर्वगतं सुसूक्ष्ममन्तर्बहिःशून्यमनन्यमात्मनः ।
विज्ञाय सम्यङ्निजरूपमेतत्पुमान्विपाप्मा विरजा विमृत्युः ॥ २२३ ॥

देहं-(குடம் போலுள்ள) தேஹத்தையும் धियं-(ஜலம் போலுள்ள) புத்தியையும் एतं-இந்த चित्प्रतिबिम्बं



(அதில் பிரதிபலிக்கிற) சைதன்யத்தின் பிரதிபிம்பத்தையும் विसृज्य விட்டுவிட்டு गुहायां-குஹைபோலிருக்கிற बुद्धौ-புத்தியில் निहितं-உள்ளே வைக்கப்பட்டதுபோலிருக்கிற द्रष्टारं-(எல்லாவற்றையும் ஸாக்ஷியாக) பார்த்துக்கொண்டிருப்பவரும் अखण्डबोधं-துண்டுபடாத ஞான ஸ்வரூபராயும் सर्वप्रकाशं-எல்லாவற்றையும் பிரகாசப்படுத்துகிறவராயும் सदसद्विलक्षणं-(பிருத்வீ, அப்பு, தேஜஸ் ஆகிய) தெரிகிற வஸ்துக்களுக்கும் (அல்லது தோன்றுகிற கார்யமான வஸ்துக்களுக்கும் (வாயு, ஆகாசம் ஆகிய) தெரியாத வஸ்துக்களுக்கும் (அல்லது வ்யக்தமாயில்லாத காரணவஸ்துவிற்கும்) வேறுபட்டவராயும் नित्यं-(காலத்தினுல் வரையறுக்கப்படாமல்) எப்பொழுதுமிருப்பவராயும் विभुं-(தேசத்தினுல் வரையறுக்கப்படாமல்) எங்கும் வ்யாபித்தவராயும் सर्वगतं (வஸ்துவினுல் வரையறுக்கப்படாமல்) எல்லா வஸ்துக்களிலும் காரணமாய் இருப்பவராயும் सुसूक्ष्मं-(ஸுலபமாய் அறிவதற்கில்லாமல்) வெகு ஸூக்ஷ்மராயும் अन्तर्बहिःशून्यं-உள், வெளி அற்றவராயும் आत्मनः-பரப்ஹ்மத்தினிடத்திலிருந்து अनन्यं-வேறுபடாதவராயும் உள்ள आत्मानं-ஆத்மாவை एतत्-இந்த निजरूपं-தன் ஸ்வரூபமென்று सम्यक्-நன்ருக विज्ञाय-அறிந்துகொண்டதற்குப் பிறகு पुमान्-ஜீவன் विपाप्मा-எவ்வித பாபமும் (தோஷமும்) இல்லாதவனுகவும் विरजाः-எவ்வித ரஜோகுணம் (அழுக்கு) இல்லாதவனுகவும் विमृत्युः-மரணமற்றவனுகவும் (ஆகிவிடுகிருன்). (222, 223)

विशोक आनन्दघनो विपश्चित्स्वयं कुतश्चिन्न बिभेति कश्चित् ।
नान्योऽस्ति पन्था भवबन्धमुक्तेर्विना स्वतत्त्वावगमं मुमुक्षोः ॥२२४॥

विशोकः-துக்கமற்றவனுகவும் आनन्दघनः-(நிரதிசயமான) ஆனந்த ஸ்வரூபனுகவும் विपश्चित्-(எல்லாவற்றையும்) அறிந்தவனுகவும் ஆகி स्वयं-தான் कुतश्चित्-எதிலிருந்தும் न बिभेति-பயப்படுவதில்லை. (தன்னைத்

தவிர வேறு இரண்டாவது வஸ்துவே இல்லாததால்). (ஆகையால்) मुमुक्षोः-மோக்ஷமடைய விரும்புவோருக்கு स्वतत्त्वावगमं-தன்னுடைய வாஸ்தவ ஸ்வரூபத்தை அறிவதை विना-விட भवबन्धमुक्तेः-ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுதலையடைவதற்கு अन्यः-வேறு कश्चित्-எந்த पन्थाः-வழியும் नास्ति-கிடையாது. (224)

(அ) ஆத்மாவின் வாஸ்தவ ஸ்வரூபம் பிரஹ்மத்தைத் தவிர வேறில்லை என்கிறார்:—

ब्रह्माभिन्नत्वविज्ञानं भवमोक्षस्य कारणम् ।
येनाद्वितीयमानन्दं ब्रह्म संपद्यते बुधः ॥ २२५ ॥

येन-எதனால் अद्वितीयं-இரண்டாவதற்ற आनन्दं-ஆனந்த ஸ்வரூபமான ब्रह्म பிரஹ்மமாக बुधः-அறிந்தவன் संपद्यते-ஆகிவிடுகிறானோ, (அந்த) ब्रह्माभिन्नत्वविज्ञानं பிரஹ்மத்திலிருந்து வேறுபடாத் தன்மையை நன்கு அறிந்து அனுபவிப்பதே भवमोक्षस्य-ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுவதற்கு कारणं-காரணம். (225)

(அ) அவ்விதம் அறிந்து விடுபட்டவன் மறுபடியும் ஸம்ஸாரத்திற்குத் திரும்புவதில்லை என்பதைச்சொல்கிறார்:—

ब्रह्मभूतस्तु संसृत्यै विद्वान्नावर्तते पुनः ।
विज्ञातव्यमतः सम्यग्ब्रह्माभिन्नत्वमात्मनः ॥ २२६ ॥

विद्वान्-அறிந்தவன் ब्रह्मभूतस्तु-பிரம்மமாகவே இருந்து விடுவதால் संसृत्यै-ஸம்ஸாரத்தின் பொருட்டு पुनः-மறுபடியும் नावर्तते-திரும்புவது கிடையாது. अतः ஆகையினால் आत्मनः-ஆத்மாவிற்கு ब्रह्माभिन्नत्वं-பிரஹ்மத்திலிருந்து வேறுபடாதிருக்கும் தன்மை सम्यक्-நன்றாக विज्ञातव्यं-அறிந்துகொள்ள வேண்டியது. (226)

(அ) அந்த பிரஹ்மம் எத்தகையது என்பதை விளக்குகிறார்:—



सत्यं ज्ञानमनन्तं ब्रह्म विशुद्धं परं स्वतः सिद्धम् ।
नित्यानन्दैकरसं प्रत्यगभिन्नं निरन्तरं जयति ॥ २२७ ॥

ब्रह्म-பிரஹ்மம் என்பது सत्यं-(ஒரு காலத்திலும் பாதிக்கப்படாமல் எப்பொழுதும்) இருக்கும் வஸ்து ज्ञानं-(எவ்வித கருவியையோ, விஷயத்தையோ நிமித்தத்தையோ அபேக்ஷிக்காமல்) அறிவாகவே யுள்ளது. अनन्तं-(காலத்தினாலோ, தேசத்தினாலோ, வேறு வஸ்துவினாலோ) வரையறுக்கப்படாதது विशुद्धं-(எவ்வித தோஷமுமன்னியில்) பரிசுத்தமானது. परं-(எல்லாவற்றையும்விட) மேலானது. स्वतः सिद्धं-(பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களினால் இருக்கிறதென்று காட்டுவதற்கு அவசியமன்னியில்) தானே ஸித்தமாயிருந்து வருவது नित्यानन्दैकरसं-(குறைவு, அழிவு அற்று) எப்பொழுதும் நித்யமாயுள்ள ஆனந்தம் ஒன்றையே ரஸமாயுள்ளது. प्रत्यगभिन्नं-உள்ளேயிருக்கும் ஆத்மாவிலிருந்து வேறுபடாதது निरन्तरं-எவ்வித இடைவெளியுமில்லாதது (அல்லது, இடைவிடாமல்) जयति-ஸர்வோத்க்ருஷ்டமாக விளங்குகிறது. (227)

## 23 பிரஹ்மமும் ஜகத்தும்

(அ) பிரஹ்மமானது எவ்வித பதார்த்தத்தினாலும் வரையறுக்கப்படவில்லையென்றால், இதற்கு முன் அனாத்ம பதார்த்தத்திலிருந்து ஆத்மாவை பிரித்து அறிந்து பிரஹ்மத் தன்மையை அடையவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறதே? அப்படியானால் அனாத்ம பதார்த்தம் பிரஹ்மத்தைவிட வேறு என்று ஏற்படுமே? பிரஹ்மம் அதினால் வரையறுக்கப் பட்டுவிட்டதே? அப்படியிருக்க பிரஹ்மத்திற்கு இரண்டாவது கிடையாது என்பது எப்படிப் பொருந்தும்? என்று கேட்கக் கூடியதால், அனாத்மாவாகத் தோன்றும் உலகமும் வாஸ்தவத்தில் பிரஹ்மத்திலிருந்து வேறுபட்டதில்லை, எப்படி குடம் என்பது மண்ணைத்தவிர வேறில்லையோ, அப்படியே பிரபஞ்சமும் பிரஹ்மத்தைத்தவிர வேறில்லையென்று 228 முதல் 238 முடிய சுலோகங்களில் காட்டுகிறார்:—

सदिदं परमाद्वैतं स्वस्मादन्यस्य वस्तुनोऽभावात् ।
न ह्यन्यदस्ति किंचित्सम्यक्परतत्त्वबोधसुदशायाम् ॥ २२८ ॥

इदं-இந்த ப்ரஹ்மம் सत्-எப்பொழுதும் இருக்கிற வஸ்து. स्वस्मात्-தன்னைத் தவிர अन्यस्य வேறு எவ்வித वस्तुनः-வஸ்துவும் अभावात्-இல்லாததினாலே परमाद्वैतं-மிகவும் மேலானதான இரண்டற்ற தன்மையுள்ளது सम्यक्परतत्त्वबोधसुदशायां-நன்றாக மேலான தத்வத்தை அறியும் உத்தமமான தசையில் अन्यत्-வேறு किंचित्-எதுவும் नास्ति கிடையாது என்பது हि-(ஞானிகளுக்கு) பிரஸித்தம். (228)

(அ) தத்வக்ஞான தசையில்தான் பிரபஞ்சம் ஸத்யம் இல்லையென்று நினைக்கவேண்டாம். அக்ஞான தசையிலும் கூட அது ப்ரஹ்மத்தைவிட வேறு பதார்த்தமாகாது என்கிறார்:-

यदिदं सकलं विश्वं नानारूपं प्रतीतमज्ञानात् ।
तत्सर्वं ब्रह्मैव प्रत्यस्ताशेषभावनादोषम् ॥ २२९ ॥

यत्-எது अज्ञानात्-அக்ஞானத்தினால் नानारूपं-பலவித ரூபங்களுடன் इदं-இந்த सकलं-எல்லா विश्वं-பிரபஞ்சமாக प्रतीतं-தோன்றுகிறதோ तत्-அது सर्वं-எல்லாம் प्रत्यस्ताशेषभावनादोषं-பாக்கியின்னியில் எல்லாவித கல்பனைகளாகிற தோஷமற்றதாயுள்ள ब्रह्मैव-ப்ரஹ்மமேதான்.

(அ) எப்படியென்று மண் குட திருஷ்டாந்தத்தைக் காட்டுகிறார் :—

मृत्कार्यभूतोऽपि मृदो न भिन्नः कुम्भोऽस्ति सर्वत्र तु मृत्स्वरूपात् ।
न कुम्भरूपं पृथगस्ति कुम्भः कुतो मृषा कल्पितनाममात्रः ॥ २३० ॥

मृत्कार्यभूतोऽपि மண்ணிலிருந்து ஏற்பட்ட கார்யமாக இருந்தபோதிலும் कुम्भः-குடம் என்பது मृदः-மண்ணை விட न भिन्नः अस्ति-வேறுபட்டதாக இல்லை. (ஏனென்றால்) सर्वत्र-(குடத்தின்) எந்தவிடத்திலும் मृत्स्वरूपात् तु-மண் ஸ்வரூபமாகவே யிருந்துவருவதால் (அல்லது, அந்த மண் ஸ்வருபத்திலிருந்து) पृथक्-தனியாக कुम्भरूपं-குடத்திற்கு உருவம் नास्ति-கிடையாது. मृषा-பொய்யாக (வியவஹாரத்திற்காக மாத்திரம்) कल्पितनाममात्रः-கல்பிக்கப்பட்ட பெயரை மாத்திரம் உடைய कुम्भः-குடம் என்பது कुतः-எப்படி இருக்கமுடியும்? (230)



(அ) குடம் என்கிற பெயர் எப்படி கல்பிதமாகுமென்றால் காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்துகொண்டிருக்கிறவனுக்கும் காலை மடக்கிக்கொண்டு உட்கார்ந்துகொண்டிருக்கிறவனுக்கும் எப்படி நிலையின் வித்யாஸத்தினால் வேற்றுமை ஏற்பட்டுவிடாதோ அதேமாதிரி உருட்டிவைத்திருக்கும் மண்ணுக்கும் குடமாய்த் தோன்றுகிற மண்ணுக்கும் ஸ்வருபத்தில் வித்யாஸம் கிடையாது என்கிறார் :—

केनापि मृद्भिन्नतया स्वरूपं घटस्य संदर्शयितुं न शक्यते ।
अतो घटः कल्पित एव मोहान्मृदेव सत्यं परमार्थभूतम् ॥ २३१ ॥

मृद्भिन्नतया-மண்ணுக்கு வேறுபட்டதாக घटस्य குடத்தின் स्वरूपं-ஸ்வருபத்தை संदर्शयितुं-நன்கு எடுத்துக் காட்ட केनापि எவராலேயும் (நான்முகனாலேயும்) न शक्यते-முடியாது. अतः-ஆகையால் घटः-குடம் என்பது मोहात्-அறியாமையால் कल्पितः-(வேறுபோல) கல்பிக்கப்பட்டது एव-தான். मृदेव-மண் தான் सत्यं-(மூன்று காலத்திலும்) இருந்துவரும் परमार्थभूतं-வாஸ்தவமாக இருக்கும் வஸ்து. (231)

(அ) அதேமாதிரி பிரபஞ்சமும் பிரஹ்மத்தின் கார்யமாயிருப்பதால் அது பிரஹ்மத்தைவிட வேறுபடாது, அதற்குத் தனியாக இருப்புக் கிடையாது, அதுவும் கல்பிதம்தான் என்கிறார் :—

सद्ब्रह्मकार्यं सकलं सदैव सन्मात्रमेतन्न ततोऽन्यदस्ति ।
अस्तीति यो वक्ति न तस्य मोहो विनिर्गतो निद्रितवत्प्रजल्पः ॥ २३२॥

सद्ब्रह्मकार्यं - ஸத்தாயிருக்கிற பிரஹ்மத்தின் கார்யமாகிய सकलं எல்லாம் सदैव-எப்பொழுதும்கூட सन्मात्रं-ஸத் மாத்திரம் தான். एतत्-இது (கார்யமான பிரபஞ்சம்) ततः-அதை (பிரஹ்மத்தை) விட अन्यत्-வேருக नास्ति-இருப்பதில்லை. यः-எவனாவது अस्ति-(வேருக) இருக்கிறது इति-என்று वक्ति-சொன்னுனேயானுல் तस्य-அவனிடமுள்ள मोहः-அறியாமை न विनिर्गतः-வெளியில் போய்விடவில்லை. (அவன் சொல்வது) निद्रितवत्-தூங்குகிறவனுடையது (ஸ்வப்னம் கண்டு பிதற்றுகிறவனுடையது) போலவே प्रजल्पः-நல்ல பிதற்றல் (தான்) (232)

(அ) மண் திருஷ்டாந்தம் ஸாமவேதத்தைச் சேர்ந்த சாந்தோக்ய உபநிஷத்தில் சொல்லியிருப்பதை அனுஸரித்து அதர்வ வேதத்தைச் சேர்ந்த முண்டக உபநிஷத்தும் சொல்லியிருக்கிறதென்பதைச் சொல்கிருர் :—

ब्रह्मैवेदं विश्वमित्येव वाणी श्रौती ब्रूतेऽथर्वनिष्ठा वरिष्ठा ।
तस्मादेतद् ब्रह्ममात्रं हि विश्वं नाधिष्ठानाद्भिन्नतारोपितस्य ॥ २३३ ॥

ब्रह्म-பிரஹ்மம் एव-தான் इदं-இந்த विश्वं-ஜகத் इति एव-என்றே अथर्वनिष्ठा-அதர்வாவிற்கு (பிரஹ்மதேவனுல்) உபதேசிக்கப்பட்ட श्रौती-வேதத்திலுள்ள वरिष्ठा-மிகவும் சிலாக்கியமான वाणी-வார்த்தை ब्रूते-சொல்கிறது. तस्मात्-ஆகையால் एतत्-இந்த विश्वं-ஜகத் ब्रह्ममात्रं हि-பிரஹ்மம் தானல்லவா? अधिष्ठानात्-அதிஷ்டானத்திலிருந்து (அடிப்படையிலிருந்து) भिन्नता-வேறுபட்டிருக்கும் தன்மை आरोपितस्य-ஆரோபிக்கப்படும் பதார்த்தத்திற்கு (மேல் ஏற்றப்பட்டுத் தோன்றும் பதார்த்தத்திற்கு) न-கிடையாது (233)

(அ) ஜகத் தனி ஸத்தையுள்ளதாகவிருந்தால் பிரஹ்மம் அனந்தம் (வரையறுக்கப்படாதது) என்பது ஸாத்யமில்லை. அவ்விதம் சொல்லும் வேதமும் பிரமாணமில்லை. பகவத்கீதையில் பகவான் சொன்னதும் பொய்யென்று ஏற்பட்டுவிடும்.



இவ்விதம் ஏற்பட எந்த ஆஸ்திகனும் ஸம்மதிக்கமாட்டான் என்கிருர் :—

सत्यं यदि स्याज्जगदेतदात्मनोऽनन्तत्वहानिर्निगमाप्रमाणता ।
असत्यवादित्वमपीशितुः स्यान्नैतत्त्रयं साधु हितं महात्मनाम् ॥ २३४ ॥

एतत्-இந்த जगत्-ஜகத்தானது सत्यं-ஸத்யமாக (பிரஹ்மத்தைபோல் எப்பொழுதுமிருக்கும் வஸ்துவாக) स्यात् यदि-இருக்குமேயானுல் आत्मनः-ஆத்மாவிற்கு (பிரஹ்மத்திற்கு) अनन्तत्वहानिः-அனந்தமாயிருக்கும் தன்மைக்கு ஹானி ஏற்படும். (அவ்விதம் ஏற்படட்டுமேயென்ருல், பிரஹ்மத்தை அனந்தம் என்று சொல்கிற) निगमाप्रमाणता-வேதத்திற்கு பிரமாணமில்லாத் தன்மை ஏற்படும். (அத்துடன்) ईशितुरपि-பகவானுக்குக்கூட असत्यवादित्वं-வாஸ்தவமில்லாததைச் சொல்கிறவர் என்று स्यात्-ஏற்படும். एतत्-இந்த त्रयं-மூன்றும் महात्मनां-பெரியோர்களுக்கு साधु-நியாயமானவாவது हितं-ஒப்புக்கொள்ளக் கூடியதாகவாவது न-ஆகாது. (234)

(அ) அப்படி பகவான் என்ன சொல்லியிருக்கிருர் என்ருல் பகவத்கீதையிலுள்ள வாக்யத்தைக் குறிப்பிடுகிருர் :—

ईश्वरो वस्तुतत्त्वज्ञो न चाहं तेष्ववस्थितः ।
न च मत्स्थानि भूतानीत्येवमेव व्यचीकथत् ॥ २३५ ॥

वस्तुतत्त्वज्ञः-பதார்த்தங்களுடைய வாஸ்தவமான தன்மையை நன்கு அறிந்திருக்கும் ईश्वरः-ஸ்ரீ கிருஷ்ண பகவான் 'तेषु-அந்த உண்டாயிருக்கும் பதார்த்தங்களில் अहं-நான் न चावस्थितः-இருப்பது இல்லை', 'भूतानि-உண்டாகும் பதார்த்தங்கள் न च मत्स्थानि-என்னிடத்திலும் இல்லை' इति-என்று एवमेव-இவ்விதமாகவே व्यचीकथत्-வியக்தமாக சொல்லியிருக்கிருர்.

அந்த கீதா வாக்கியத்தில் முதலில் 'मत्स्थानि सर्वभूतानि உண்டான எல்லா பதார்த்தங்களும் என்னிடத்தில் இருக்

கின்றன’ என்று சொல்லிவிட்டு, அடுத்தபடியாக அதற்கு நேர் விரோதமாக ‘न च मत्स्थानि भूतानि உண்டாயிருப்பவைகள் என்னிடத்தில் இல்லை’ என்று சொல்கிறார். ‘न च अहं तेषु நானும் அவைகளில் இல்லை’ என்றும் சொல்கிறார், இதன் தாத்பர்யம் நன்கு புரிந்தால், ஜகத் வெறும் தோற்றமே தவிர வாஸ்தவமாயிருக்கும் வஸ்துவாகாதென்று ஏற்படும். கயிற்றில் பிராந்தியினால் தோன்றும் பாம்பைப்பற்றி ஒருவன் ‘பாம்பு எங்கேயிருக்கிறது?’ என்று கேட்டால், இங்கே (கயிற்றில்) என்று பதில் சொல்வது உசிதமாகும். அவனே மறுபடியும் ‘கயிற்றில் பாம்பு இருக்கிறதா?’ என்று கேட்டால், ‘இல்லை’ என்று சொல்லவேண்டும். முதல் கேள்வியில் பாம்பு இருப்பதாக வைத்துக்கொண்டு அது தோன்றுவதற்குள்ள ஆதாரம் கேட்கப்பட்டது. இரண்டாவது கேள்வியில் பாம்பு இருக்கிறதா என்றே கேட்கப்படுகிறபடியால், ‘இல்லை’ என்று சொல்லவேண்டி வருகிறது. இம்முறையில்தான் ஜகத்திற்கு ஆதாரம் யார்? என்றால் ‘பகவான்’, ‘பகவானிடத்தில் ஜகத் இருக்கிறதா? என்றால் ‘இல்லை’ என்று சொல்லும்படி ஏற்படுகிறது. பாம்பே வாஸ்தவமில்லாததினால் அது கயிற்றிற்கு ஆதாரமாய் ஒருபொழுதுமிருக்கக் கூடியதில்லை. அம்முறையிலேயே பகவானுக்கு ஆதாரமாக ஜகத் இல்லை என்பதை ‘நான் அவைகளில் இல்லை’ என்கிறார். (235)

(அ) பகவானுடைய வாக்கியத்துடன் பிராணிகளுடைய அனுபவத்தையொட்டிய யுக்தியினாலும் ஜகத் வாஸ்தவமில்லை என்று காட்டுகிறார் :—

यदि सत्यं भवेद्विश्वं सुषुप्तावुपलभ्यताम् ।
यन्नोपलभ्यते किंचिदतोऽसत्स्वप्नवन्मृषा ॥ २३६ ॥

विश्वं-ஜகத்தானது सत्यं ஸத்யமாக यदि भवेत्-இருக்குமேயானால் सुषुप्तौ-நல்ல தூக்கத்தில் उपलभ्यतां-காணப்படட்டுமே? यत्-எந்தக் காரணத்தினால் (அப்பொழுது) किंचित्-எதுவும் नोपलभ्यते-காணப்படவில்லையோ, अतः-அந்த காரணத்தினால் (அது) असत्-வாஸ்தவமில்லாதது स्वप्नवत्-(ஜாக்கிரத் காலத்தில் தோன்றாமல் ஸ்வப்னகாலத்தில் மாத்திரம் தோன்றுகிற) ஸ்வப்னம் (எப்படி பொய்யோ அதே) போல (நல்ல தூக்கத்தில் தோன்றாமல் ஜாக்கிரத்தில் மாத்திரம் தோன்றும் ஜகத்தும்) मृषा-பொய்தான். (236)



अतः पृथङ्नास्ति जगत्परात्मनः पृथक्प्रतीतिस्तु मृषा गुणाहिवत् ।
आरोपितस्यास्ति किमर्थवत्ताऽधिष्ठानमाभाति तथा भ्रमेण ॥ २३७ ॥

अतः-ஆகையால் जगत् ஜகத் என்பது परात्मनः-பரமாத்மாவைத் தவிர पृथक्-தனியாக नास्ति-கிடையாது. पृथक्प्रतीतिस्तु-தனியாக தோன்றுவதோ गुणाहिवत्-கயிற்றில் (தோன்றும்) பாம்புபோல मृषा-பொய்தான். आरोपितस्य-மேலால் கல்பிக்கப்பட்டிருக்கும் வஸ்துவிற்கு अर्थवत्ता-பிரயோஜனத்துடனிருக்கும் தன்மை किं अस्ति-உண்டா? अधिष्ठानं-அடிப்படையான அதிஷ்டானம் தான் भ्रमेण-பிராந்தியினால் तथा-அவ்விதம் (கல்பிக்கப்பட்ட வஸ்து போல) आभाति-பிரகாசிக்கிறது. (237)

भ्रान्तस्य यद्यद्भ्रमतः प्रतीतं ब्रह्मैव तत्तद्रजतं हि शुक्तिः ।
इदंतया ब्रह्म सदैव रूप्यते त्वारोपितं ब्रह्मणि नाममात्रम् ॥ २३८ ॥

भ्रान्तस्य-பிராந்தனாயிருப்பவனுக்கு भ्रमतः-பிராந்தியினால் यत् यत्-எது எது प्रतीतं தெரிகிறதோ तत् तत्-அது அது ब्रह्मैव-பிரஹ்மமேதான் रजतं (கிளிஞ்சலில் தோன்றும்) வெள்ளி शुक्तिः हि-கிளிஞ்சல் தானே? सत्-வாஸ்தவமாய் இருந்து வருகிற ब्रह्म-பிரஹ்மம் தான் इदंतया-‘இது’ என்று रूप्यते-காட்டப்படுகிறது ब्रह्मणि-பிரஹ்மத்தினிடத்தில் आरोपितं-கல்பிக்கப் பட்டது नाममात्रं तु-வெறும் பெயர் மாத்திரம் தான். (238)

## 24. ப்ரஹ்ம லக்ஷணம்

(அ) ஜகத் தோன்றுவதற்குக் காரணமாய் அதிஷ்டானமான பிரஹ்மத்தின் லக்ஷணங்களைச் சொல்கிறார் :—

अतः परं ब्रह्म सदद्वितीयं विशुद्धविज्ञानघनं निरञ्जनम् ।
प्रशान्तमाद्यन्तविहीनमक्रियं निरन्तरानन्दरसस्वरूपम् ॥ २३९ ॥

अतः-ஆகையினால் (ஜகத்திற்குத் தனியான இருப்புக் கிடையாது என்று ஏற்பட்டுவிட்டதினால்) परं ब्रह्म-பரப்பிரஹ்மமானது सत्-எப்பொழுதும் (பாதிக்கப்படாமல்) இருக்கும் अद्वितीयं இரண்டாவதற்ற வஸ்து. विशुद्धविज्ञानघनं-நிர்மலமான ஞானமே ஸ்வரூபமாக உள்ளது. निरञ्जनं-எவ்வித தோஷமுமற்றது प्रशान्तं-நன்கு அடங்கியுள்ளது आद्यन्तविहीनं-ஆதி அந்தம் இரண்டுமற்றது. अक्रियं-எவ்வித சேஷ்டையுமற்றது. निरन्तरानन्दरसस्वरूपं இடையில்லாத (பரிபூர்ணமான) ஆனந்தரஸத்தையே ஸ்வரூபமாகவுடையதாய். (239)

निरस्तमायाकृतसर्वभेदं नित्यं ध्रुवं निष्कलमप्रमेयम् ।
अरूपमव्यक्तमनाख्यमव्ययं ज्योतिः स्वयं किंचिदिदं चकास्ति ॥

निरस्तमायाकृतसर्वभेदं-மாயையினால் ஏற்படுகிற எல்லாவித வேற்றுமைகளும் விலகினதாய் नित्यं-எப்பொழுதுமிருப்பதாய் ध्रुवं-(மாறுதலன்னியில்) ஒரே நிலையிலிருப்பதாய் निष्कलं-அவயவங்களற்றதாய் अप्रमेयं-(பிரத்யக்ஷம் முதலான) பிரமாணங்களுக்கு விஷயமாகாததாய் अरूपं-உருவமற்றதாய் अव्यक्तं-வியக்தமில்லாததாய் अनाख्यं-பெயரற்றதாய் अव्ययं-எவ்வித குறைவுமற்றதாய் स्वयं-தானே ज्योतिः-பிரகாசரூபமாய் किञ्चित्-வர்ணிக்க முடியாததாய்) इदं-இவ்வாறு (அபரோக்ஷமாக) चकास्ति-விளங்கிக்கொண்டிருக்கிறது. (240)

(அ) எவ்வித பிரமாணத்திற்கும் விஷயமில்லையென்றால் பிரஹ்மத்தை அறியவே முடியாதோ என்றால்; அப்படியல்ல அதை அறிந்தவர்கள் அந்த அறியப்படும் பதார்த்தமாக அறிவதில்லை, அறிவாகவே அறிகிறார்கள் என்கிறார் —



ज्ञातृज्ञानज्ञेयशून्यमनन्तं निर्विकल्पकम् ।
केवलाखण्डचिन्मात्रं परं तत्त्वं विदुर्बुधाः ॥ २४१ ॥

ज्ञातृज्ञानज्ञेयशून्यं-(ஸாமான்யமாய் பிரமாணங்களின் மூலமாய் ஏற்படும் அறிவுகளில் உள்ள திரிபுடி என்ற மூன்று அம்சங்களாகிற) அறிகிறவன், அறிகிறதென்ற கிரியை, அறியப்படும் வஸ்து என்ற வேற்றுமை (பிரஹ்மத்தில்) கிடையாது. अनन्तं-அது (காலத்தினாலோ, தேசத்தினாலோ, வஸ்துவினாலோ) வரம்பற்றது. निर्विकल्पकं-(அப்படியோ இப்படியோ என்று) கல்பனை செய்வதற்கு இடம் கொடுக்காதது. केवलाखण्डचिन्मात्रं-(எவ்வித கலப்புமன்னியில்) சுத்தமாய் எவ்விதத்திலும் துண்டுபடாமல் (பரிபூர்ணமாய்) உள்ள அறிவு ஸ்வரூபம் மாத்திரம் தான் என்று बुधाः-(பிரஹ்மஸாக்ஷாத்காரமடைந்த) அறிவாளிகள் परं-உத்தமமான तत्त्वं-தத்வமான பிரஹ்மத்தை विदुः-அறிந்திருக்கிறார்கள். (241)

अहेयमनुपादेयं मनोवाचामगोचरम् ।
अप्रमेयमनाद्यन्तं ब्रह्म पूर्णं महन्महः ॥ २४२ ॥

ब्रह्म-பிரஹ்மமானது अहेयं-(ஆத்மஸ்வரூபமாயேயிருப்பதால்) தள்ளக்கூடியதில்லை अनुपादेयं-(ஆத்மாவை தவிர வேறில்லாததால்) எடுத்துக்கொள்ள வேண்டியதுமில்லை. मनोवाचां-மனோவிருத்திகளுக்கோ, வார்த்தைகளுக்கோ अगोचरं-விஷயமாகாதது अप्रमेयं-(அறிகிறவனின் ஸ்வரூபமாயேயிருப்பதால்) அறியப்படும் வஸ்துவாகாது. अनाद्यन्तं-(எப்பொழுதும் இருந்துவருவதால்) உத்பத்தியோ நாசமோ இல்லாதது. पूर्णं-எங்கும் நிறைந்தது. महन्महः-(ஸூர்யன்முதலானவைகளுக்குக் கூட பிரகாசம் கொடுக்கக்கூடிய) பெரிய பிரகாசம். (242)

## 25. பிரஹ்மமும் ஆத்மாவும்

(அ) இவ்விதமாக 215 முதல் 227 வரை சுலோகங்களில் உள்ளேயிருக்கும் ஆத்மாவும் பிரஹ்மமும் ஒன்றுதான் என்றும், 228 முதல் 238 வரை சுலோகங்களில் ஜகத்தும் பிரஹ்மத்தைத் தவிர வேறில்லையென்றும் காட்டி, 239 முதல் 242 முடிய அந்த பிரஹ்மத்தை வர்ணித்திருக்கிறார். இனி இந்த தத்வத்தை உபதேசிக்கும் உபநிஷத்திலுள்ள மஹாவாக்கியத்தின் அர்த்தத்தை தெளிவுபடுத்த ஆரம்பிக்கிறார் —

तत्त्वंपदाभ्यामभिधीयमानयोर्ब्रह्मात्मनोः शोधितयोर्यदित्थम् ।
श्रुत्या तयोस्तत्त्वमसीति सम्यगेकत्वमेव प्रतिपाद्यते मुहुः ॥ २४३ ॥

(சாந்தோக்ய உபநிஷத்தில் உள்ள மஹாவாக்கியமாகிய 'தத்த்வம் அஸி' என்பதில் காணுகிற) तत्त्वंपदाभ्यां - 'தத்' (அது) 'த்வம்' (நீ) என்ற இரண்டு வார்த்தைகளினால் अभिधीयमानयोः - சொல்லப்படுகிற ब्रह्मात्मनोः - (முறையே) பிரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும் इत्थं - இவ்விதம் (இதுவரை வர்ணித்த பிரகாரம்) शोधितयोः - நன்கு சோதிக்கப்பட்ட तयोः - அவ்விருவருக்குமுள்ள यत् - (ஒன்றாயிருத்தல்) எதுவோ, அந்த एकत्वं - ஒன்றாயிருத்தல்) एव - தான் श्रुत्या - வேதத்தினால் तत् त्वं असि - 'அதுவாகவே நீ இருக்கிறாய்' इति - என்று सम्यक् - நன்றாக मुहुः - பல தடவை प्रतिपाद्यते - எடுத்துச்சொல்லப் படுகிறது. (243)

(அ) 'அது' என்று சொல்லப்படும் ஜகத்காரணமாய் ஸர்வவியாபகமாய் ஸர்வக்ஞமாயுள்ள பிரஹ்மமும் வெகு சிறியதாய் சிற்றறிவோடு கூடியதாயுள்ள 'நீ' என்ற ஆத்மாவும் ஒன்று என்றால் பொருந்தாதேயென்றால், அவை இரண்டிலும் விருத்தப்படும் அம்சங்களை விலக்கிவிட்டு, இரண்டிலும் பொதுவாயுள்ள சைதன்யமாகிற அம்சத்தில்தான் ஐக்கியம்; ஆகையால் வார்த்தைகளை அப்படியே அர்த்தம் செய்து கொள்ளக்கூடாது; லக்ஷணையாலேயே அர்த்தம் செய்து கொள்ளவேண்டும், என்பதைச் சொல்கிறார் :—



ऐक्यं तयोर्लक्षितयोर्न वाच्ययोर्निगद्यतेऽन्योन्यविरुद्धधर्मिणोः ।
खद्योतभान्वोरिव राजभृत्ययोः कूपाम्बुराश्योः परमाणुमेर्वोः ॥ २४४ ॥

खद्योतभान्वोः - (ஞானப்பிரகாசம் என்ற அம்சத்தில்) மினுமினுப் பூச்சியினுடையதும் ஸூர்யனுடையதும் போலவும் राजभृत्ययोः - (சக்தியில்) சேவகனுடையதும் அரசனுடையதும் போலவும் कूपाम्बुराश्योः - (ஆனந்தாம்சத்தில்) கிணற்றினுடையதும் ஸமுத்திரத்தினுடையதும் போலவும், (வியாபக அம்சத்தில்) परमाणुमेर्वोः - பரமாணுவினுடையதும் மேருபர்வதத்தினுடையது इव - போலவும் अन्योन्यविरुद्धधर्मिणोः - ஒன்றுக்கொன்று நேர்விரோதமான தர்மங்களோடு கூடிய तयोः - அவை (ஆத்மா, பிரஹ்மம்) இரண்டையும் குறிக்கும் வார்த்தைகளுக்கு लक्षितयोः - அவைகளால் லக்ஷணையால் காட்டப்படும் அர்த்தங்களுக்குத்தான் ऐक्यं - ஒன்றாயிருக்கும் தன்மையே தவிர वाच्ययोः - நேர் அர்த்தமாயிருப்பவைகளுக்கு ऐक्यं - ஒன்றாயிருக்கும் தன்மை न निगद्यते - சொல்லப்படவில்லை. (244)

(அ) விரோதமாயிருக்கும் அம்சங்கள் உபாதிகளையே சேர்ந்தவைகளானதினால் அவைகளை விலக்கிப் பார்ப்பதினால் ஸ்வரூபத்திற்கு எவ்வித கெடுதலும் இல்லை, பிரஹ்மம் மாயை என்ற உபாதியால் ஈசுவரன் ஆகிறார்; ஆத்மா ஐந்து கோசங்கள் என்ற உபாதியால் ஜீவன் ஆகிறான், என்கிறார் :—

तयोर्विरोधोऽयमुपाधिकल्पितो न वास्तवः कश्चिदुपाधिरेषः ।
ईशस्य माया महदादिकारणं जीवस्य कार्यं शृणु पञ्च कोशाः ॥ २४५ ॥

तयोः - அவ்விரண்டிற்கும் உள்ள अयं - இந்த विरोधः - விரோதமானது उपाधिकल्पितः - உபாதிகளால் கல்பிக்கப் பட்டது. कश्चित् - எதுவும் वास्तवः - வாஸ்தவமாய் ஸ்வரூபத்தைச் சேர்ந்தது न - இல்லை. उपाधिः - உபாதி एषः - இது ईशस्य - ஈசுவரனுக்கு (உபாதி) महदादिकारणं - மஹத் தத்வம் (அஹங்காரம், தன்மாத்திரைகள்) முதலானவை

களின் காரணமாயிருக்கும் माया-மாயை जीवस्य ஜீவனுக்கு (உபாதியாயிருப்பது) शृणु-கேளு कार्यं-(மாயையின்) கார்யமாகிய पञ्च-ஐந்து कोशाः-கோசங்கள். (245)

एतावुपाधी परजीवयोस्तयोः सम्यङ् निरासे न परो न जीवः ।
राज्यं नरेन्द्रस्य भटस्य खेटकस्तयोरपोहे न भटो न राजा ॥ २४६ ॥

एतौ-(மாயை, பஞ்சகோசங்கள் ஆகிய) இரண்டும் तयोः-அந்த परजीवयोः-ஈசுவரனுக்கும் ஜீவனுக்குமுள்ள उपाधी-உபாதிகள் (அவை இரண்டையும்) सम्यक्-நன்றாக निरासे விலக்கிவிட்டால் न परः-ஈசுவரன் என்பதும் கிடையாது. न जीवः-ஜீவன் என்பதும் கிடையாது. नरेन्द्रस्य-அரசனுக்கு राज्यं-அரசாங்கம் (உபாதி) भटस्य சைநிகனுக்கு खेटकः-கேடகம் என்ற ஆயுதம் (உபாதி) तयोः-அவ்விரண்டும் अपोहे-விலகிவிட்டால் न भटः-சைநிகனுமில்லை न राजा-ராஜாவுமில்லை. (246)

अथात आदेश इति श्रुतिः स्वयं निषेधति ब्रह्मणि कल्पितं द्वयम् ।
श्रुतिप्रमाणानुगृहीतयुक्त्या तयोर्निरासः करणीय इत्थम् ॥ २४७ ॥

ब्रह्मणि-பிரஹ்மத்தினிடத்தில் कल्पितं-கல்பிதமாயிருக்கும் द्वयं-இரண்டு உபாதிகளையும் श्रुतिः-வேதம் स्वयं-நேரிலேயே 'अथ अतः आदेशः नेति नेति'-'இது அல்ல, இது அல்ல' என்று निषेधति-மறுக்கிறது. (ஆகையால்) श्रुतिप्रमाणानुगृहीतयुक्त्या-வேதமாகிற பிரமாணத்துடன் ஒத்திருக்கிற யுக்தியினால் तयोः-அவ்விரண்டு உபாதிகளையும் निरासः-விலக்குதல் इत्थं-இவ்விதம் (மேலால் சொல்லப் போகிற பிரகாரம்) करणीयः-அவசியம் செய்ய வேண்டியது. (247)

नेदं नेदं कल्पितत्वान्न सत्यं रज्जौ दृष्टव्यालवत्स्वप्नवच्च ।
इत्थं दृश्यं साधु युक्त्या व्यपोह्य ज्ञेयः पश्चादेकभावस्तयोर्यः ॥ [illegible] ॥



'न इदं-இது (ஈசுவரனுடைய உபாதியான மாயை, வாஸ்தவமாக) இல்லை. न इदं-இது (ஜீவனுடைய உபாதியான பஞ்சகோசங்களும், வாஸ்தவமாக) இல்லை. (இரண்டும்) कल्पितत्वात्-(பிராந்தியினால்) கல்பிக்கப்பட்டதேயானதினால் न सत्यं-ஸத்யமான பதார்த்தம் இல்லை रज्जौ-கயிற்றில் दृष्टव्यालवत्-பார்க்கப்படும் பாம்பு போலவும், स्वप्नवत् च-ஸ்வப்னம் (ஸ்வப்னத்தில் பார்க்கப்படும் வஸ்து) போலவும் தான்' इत्थं-இவ்விதமாக साधुयुक्त्या-நல்ல யுக்தியினால் दृश्यं பார்க்கப்படுவதையெல்லாம் व्यपोह्य-நன்கு விலக்கிவிட்டு तयोः-(ஈசுவரன், ஜீவன் ஆகிய) இருவர்களுக்குமுள்ள यः-எந்த एकभावः-ஒன்றாயிருக்கும் தன்மை (உண்டோ, அது) पश्चात्-(பார்க்கப்படுவதை விலக்குவதற்கு) பிற்பாடு ज्ञेयः-அறியவேண்டியது (இரண்டும் ஒரே சைதன்ய ஸ்வரூபம் தான் என்று.) (248)

(அ) ஈசுவரனுக்கும் ஜீவனுக்குமுள்ள ஒன்றாயிருக்கும் தன்மையை அறிவதென்றால் அவ்விருவரையும் சொல்லும் வார்த்தைகளான தத் (அது) த்வம் (நீ) என்ற பதங்களின் நேரான அர்த்தத்தை கிரஹிக்கக்கூடாதென்றும், லக்ஷணையால் ஏற்படும் அர்த்தத்தையே கிரஹிக்கவேண்டுமென்றும், 244வது சுலோகத்தில் சொல்லப்பட்டது. அதற்கு என்ன அவசியமென்றால் நேர் அர்த்தத்தை எடுத்துக்கொண்டால் ஈசுவரனுடைய தன்மையும் ஜீவனுடைய தன்மையும் ஒன்றாக முடியாமல் விருத்தமாகவே இருக்கின்றனவென்றும், பல திருஷ்டாந்தங்களால் அதே சுலோகத்தில் காட்டப்பட்டது. நேர் அர்த்தம் ஒருவிதமிருக்க அதை விட்டு விட்டு வேறு விதமாய் அர்த்தம் செய்வது நியாயமா என்று தோன்றலாம். உலகத்தில் வார்த்தைகளை உபயோகிக்கும்போது எப்பொழுதும் நேர் அர்த்தத்தில்தான் உபயோகப்படுத்த வேண்டும் என்பது கிடையாது, லக்ஷணையாகவும் உபயோகிப்பதுண்டு, 'கங்கையில் இடைச்சேரி இருக்கிறது' என்கிறோம். கங்கையென்பது ஜலப்பிரவாஹத்தை நேரில் குறிக்கும். அந்த பிரவாஹத்தில இடைச்சேரி இருக்கமுடியாது. ஆகையால் 'கங்கையில்' என்பதற்கு 'கங்கைக் கரையில்' என்று அர்த்தம் செய்து கொள்ளவேண்டும். இங்கே பிரவாஹம் என்கிற நேர்

அர்த்தத்தை விட்டுவிடுவதால் இதை ஜஹத் (விட்ட) லக்ஷணை என்கிறார்கள். அப்படியே ஒரு குதிரைப்பந்தயத்தில் ‘சிவப்பு ஓடுகிறது’ என்று சொன்னால் சிவப்பு என்ற வர்ணம்தான் நேர் அர்த்தமாகும். ஆனால் வர்ணம் தனித்து ஓடமுடியாது. ஆகையால் ‘சிவப்புக் குதிரை’ என்று அர்த்தம் செய்து கொள்ளவேண்டும். இங்கே சிவப்பு என்பதை விடாமலே அர்த்தம் செய்வதால் இதை அஜஹத் (விடாத) லக்ஷணை என்கிறார்கள். ‘மதுரையில் சென்ற வருஷம் பார்த்த அவனே தான் இப்பொழுது ஸ்ரீரங்கத்தில் இருக்கும் இவன்’ என்று சொல்லும்போது ‘அவன்’ என்பதற்கு அடைமொழிகளாகிற இடமும் காலமும் ‘இவன்’ என்பதற்கு அடைமொழிகளாகிற இடமும் காலமும் வேறுபடுவதால் ‘அவன்’ ‘இவன்’ ஆக இருக்கமுடியாது. ஆகையால் விரோதப்படுகிற அவ்வடைமொழிகளை விலக்கிவிட்டு ‘அவன்’ ‘இவன்’ இரண்டிலும் பொதுவாயிருந்துவரும் மனிதனை கிரஹிக்கிறோம். இங்கே விருத்தமான அம்சங்களை விட்டுவிட்டு விருத்தமில்லாத அம்சத்தை எடுத்துக்கொள்வதால் இது ஜஹத்-அஜஹத் (விட்டும் விடாததுமான) லக்ஷணை என்கிறார்கள்.

இந்த ரீதியில் ஈசுவரனுடையவும் ஜீவனுடையவும் நேர் அர்த்தத்திலிருந்து விரோதப்படும் அம்சங்களை விட்டுவிட்டு விரோதப்படாமலிருக்கும் சைதன்யத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டு இரண்டு பேர்களுக்கும் ஒன்றாயிருக்கும் தன்மையை சொல்வதால் இங்கு உபயோகப்படுவது மேலே கண்ட மூன்றாவது விதமான ஜஹத்-அஜஹத் (விட்டும் விடாததுமான) லக்ஷணை என்பதை ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துச்சொல்கிறார்:—

**ततस्तु तौ लक्षणया सुलक्ष्यौ तयोरखण्डैकरसत्वसिद्धये ।**
**नालं जहत्या न तथाऽजहत्या किं तूभयार्थैकतयैव भाव्यम् ॥ २४९ ॥**

तयोः-(ஈசுவரன் ஜீவன் ஆக) இருவருக்கும் अखण्डैकरसत्वसिद्धये-வேறுபடாமல் ஒரே ஸ்வபாவத்துடனிருக்கும் தன்மை ஸித்திக்கவேண்டியதற்காக ततस्तु-(முன் சொன்ன) அந்தக் காரணத்தினாலேயே (உபாதிகளை விலக்கிப் பார்க்க வேண்டியதாயிருப்பதினால்) तौ-அவ்விருவரும் लक्षणया-லக்ஷணையினால் தான் सुलक्ष्यौ-நன்கு



குறிப்பிட வேண்டியவர்களாக இருக்கிறார்கள். (லக்ஷணையிலும்) जहत्या-ஜஹத் (விட்ட) லக்ஷணையினால் न अलं-போதாது. तथा-அப்படியே अजहत्या (விடாத) லக்ஷணையினாலும் न போதாது. किंतु-ஆனால் उभयार्थैकतया-இரண்டு பதங்களின் அர்த்தங்களும் ஒன்றாக ஏற்படும் தன்மையைக் கொடுக்கக்கூடிய லக்ஷணையினால் (அதாவது, விட்டுவிடாத லக்ஷணையினால்) एव-தான் भाव्यम्-இருக்கவேண்டும். (249)

(அ) திருஷ்டாந்தத்தைச் சொல்லி இதை தெளிவுபடுத்துகிறார்:—

**स देवदत्तोऽयमितीह चैकता विरुद्धधर्मांशमपास्य कथ्यते ।**
**यथा तथा तत्त्वमसीति वाक्ये विरुद्धधर्मानुभयत्र हित्वा ।**
**संलक्ष्य चिन्मात्रतया सदात्मनोरखण्डभावः परिचीयते बुधैः ॥**

‘सः-அந்த देवदत्तः-தேவதத்தன் अयं இவன்’ इति-என்கிற इह-இந்தவிடத்தில் विरुद्धधर्मांशं-விருத்தமாயிருக்கும் தர்மமாகிற பாகத்தை अपास्य-விலக்கிவிட்டு एकता च-ஒன்றாயிருக்கும் தன்மையே यथा-எப்படி कथ्यते-சொல்லப்படுகிறதோ तथा-அப்படியே ‘तत् त्वं असि-அதுவாக நீ இருக்கிறாய்’ इति-என்ற वाक्ये-வாக்கியத்தில் उभयत्र-இரண்டிலுமுள்ள विरुद्धधर्मान्-விருத்தமாயிருக்கும் தர்மங்களை हित्वा-விட்டுவிட்டு, चिन्मात्रतया (ஈசுவரனையும் ஜீவனையும்) சைதன்யம் மாத்திரமாகவே संलक्ष्य-நன்கு லக்ஷணையால் அறிந்துகொண்டு सदात्मनोः-ஸத்வஸ்துவான பிரம்மத்திற்கும் பிரத்யகாத்மாவிற்கும் अखण्डभावः-வேறுபடாத் தன்மையானது बुधैः-அறிவாளிகளால் परिचीयते-அனுபவிக்கப்படுகிறது. (250)

(அ) சாந்தோக்ய உபநிஷத்திலுள்ள “தத்த்வம் அஸி” என்ற வாக்கியத்தினால் மாத்திரம் இந்த தத்வம் போதிக்கப்படுகிறதென்பதில்லை. உபநிஷத்துக்களில் நூற்றுக்கணக்கான வாக்கியங்களும் இவ்விஷயத்தை போதிக்கின்றன என்கிறார்:—

एवं महावाक्यशतेन कथ्यते ब्रह्मात्मनोरैक्यमखण्डभावः ।

एवं- இப்படியே ब्रह्मात्मनोः-பிரஹ்மத்திற்கும் ஆத்மா விற்கும் ऐक्यं ஐக்கியம் अखण्डभावः-வேறுபடாத் தன்மை महावाक्यशतेन-நூறு மஹாவாக்கியங்களினுல் कथ्यते-சொல்லப்படுகிறது.

अस्थूलमित्येतदसन्निरस्य सिद्धं स्वतो व्योमवदप्रतर्क्यम् ॥ २५१ ॥

'अस्थूलं-ஸ்தூலமில்லாதது' इति-என்ற வாக்கியத்திலை एतत्-இந்த (பார்க்கப்படுகிற) असत्-வாஸ்தவமல்லாத அநாத்ம பதார்த்தத்தை निरस्य-தள்ளிவிட்டால் (பிரஹ்மமானது) स्वतः-தானுகவே व्योमवत्-ஆகாசம் போல अप्रतर्क्यं-ஆக்ஷேபிக்க முடியாமல் (யுக்திக்கு உள் படாமல்) सिद्धं-நிலைத்துவிடும். (251)

अतो मृषामात्रमिदं प्रतीतं जहीहि यत्स्वात्मतया गृहीतम् ।
ब्रह्माहमित्येव विशुद्धबुद्ध्या विद्धि स्वमात्मानमखण्डबोधम् ॥ २५२ ॥

अतः-ஆகையினுல் स्वात्मतया-தன் ஸ்வரூபமாக यत्-எது गृहीतं எண்ணப்பட்டிருக்கிறதோ प्रतीतं-தோன்றுகிற मृषामात्रं-பொய்யாகவே இருக்கிற इदं-இதை जहीहि-விட்டு விடு. विशुद्धबुद्ध्या-நன்கு தெளிந்த புத்தியினுல் 'ब्रह्माहं'-'பிரஹ்மம் நான்' इत्येव-என்றே स्वं-தன் आत्मानं-ஆத்மாவை अखण्डबोधं-பரிபூர்ண ஞானஸ்வரூபராய் विद्धि- அறிந்துகொள். (252)

(அ) முன் 230, 231, 232 சுலோகங்களில் எடுத்துச் சொன்ன விஷயத்தையே வேறு விதமாக மஹாவாக்யத்துடன் அன்வயப்படுத்தி மறுபடியும் சொல்கிருர்:—

मृत्कार्यं सकलं घटादि सततं मृन्मात्रमेवाभित-
स्तद्वत्सज्जनितं सदात्मकमिदं सन्मात्रमेवाखिलम् ।
यस्मान्नास्ति सतः परं किमपि तत्सत्यं स आत्मा स्वयं
तस्मात्तत्त्वमसि प्रशान्तममलं ब्रह्माद्वयं यत्परम् ॥ २५३ ॥



मृत्कार्यं-மண்ணினுல் செய்யப்பட்டிருக்கும் घटादि-குடம் முதலியது सकलं-எல்லாம் सततं-எப்பொழுதும் अभितः-எல்லாப் பக்கத்திலும் मृन्मात्रं-மண் மாத்திரம் एव-தான். तद्वत्-அதைப்போலவே सज्जनितं ஸத்தான பிரஹ்மத்திலிருந்து ஏற்பட்டிருக்கும் इदं-இந்த பிரபஞ்சம் अखिलं-எல்லாமே सदात्मकं ஸத்தையே தன்மையாயுடையது सन्मात्रं-ஸத் மாத்திரம் एव-தான். यस्मात्-எந்த காரணத்தினுல் सतः-ஸத்தைவிட परं-வேறு किमपि-எதுவும் नास्ति-கிடையாதோ तत्-அதுவே सत्यं-ஸத்யமோ (முக்காலத்திலும் பாதிக்கப்படாமல் இருக்கும் வஸ்துவோ) सः-அவர் आत्मा-ஆத்மா स्वयं-தான். तस्मात्-அந்த காரணத்தினுல் यत्-எது प्रशान्तं-நன்கு அடங்கினதாய் अमलं நிர்மலமாய் अद्वयं-இரண்டாவதற்றதாய் परं-மேலானதாய் இருக்கும் ब्रह्म-பிரஹ்மமோ तत्-அதாகவே त्वं-நீ असि-இருக்கிருய். (253)

निद्राकल्पितकालदेशविषयज्ञात्रादि सर्वं यथा
मिथ्या तद्वदिहापि जाग्रति जगत्स्वाज्ञानकार्यत्वतः ।
यस्मादेवमिदं शरीरकरणप्राणाहमाद्यप्यस-
त्तस्मात्तत्त्वमसि प्रशान्तममलं ब्रह्माद्वयं यत्परम् ॥ २५४ ॥

निद्राकल्पितदेशकालविषयज्ञात्रादि-நித்திரையினுல் கல்பிக்கப்படும் இடம், காலம், விஷயங்கள் அறிகிறவன் முதலானது सर्वं-எல்லாமே यथा-எப்படி मिथ्या-பொய்யோ तद्वत्-அதைப்போலவே इह-இப்பொழுது जाग्रति-விழிப்பு ஸமயத்திலும் अपि-கூட जगत्-பிரபஞ்சமானது स्वाज्ञान-कार्यत्वतः-தன் ஆத்ம ஸ்வரூபத்தை அறியாததின் கார்யமாயிருப்பதால் (இதிலும் இடம் காலம் விஷயங்கள் எல்லாம் தோன்றினுலும் பொய் தான்.) यस्मात्-எந்தக் காரணத்தினுல் एवं-இவ் விதமாக इदं-இந்த शरीरकरण-प्राणाहमादि-சரீரம் இந்திரியங்கள் பிராணன் அஹங்காரம் முதலியது अपि-கூட असत्-வாஸ்தவமல்லாததோ तस्मात्-

அந்த காரணத்தினால் यत्-எது प्रशान्तं நன்கு அடங்கினதாய் अमलं நிர்மலமாய் अद्वयं-இரண்டற்றதாய் परं-மேலானதாயுள்ள ब्रह्म-பிரஹ்மமோ तत्-அதாகவே त्वं-நீ असि-இருக்கிறாய். (254)

## 26. தத்வானுஸந்தானம்

(அ) பிரஹ்மாத்மைக்யக்ஞானம் மனஸில் நன்றாக ஏற்பட வேண்டியதற்காக மறுபடியும் அம்மஹாவாக்யத்தையே இசைத்து இன்னும் 10 சுலோகங்கள் சொல்கிறார் :—

जातिनीतिकुलगोत्रदूरगं नामरूपगुणदोषवर्जितम् ।
देशकालविषयातिवर्ति यद्ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २५५ ॥

यत्-எது जातिनीतिकुलगोत्रदूरगं ஜாதி நீதி குலம் கோத்ரம் இவைகளுக்கெல்லாம் தூரத்தில் இருப்பதாயும் नामरूपगुणदोषवर्जितं பெயர் ரூபம் குணம் தோஷம் எதுவும் அற்றதாயும் देशकालविषयातिवर्ति-இடம் காலம் விஷயம் இவைகளையெல்லாம் மீறினதாயும் இருக்கிறதோ तत्-அந்த ब्रह्म-பிரஹ்மமாகவே त्वं-நீ असि-இருக்கிறாய் (என்று) आत्मनि-தன்னிடத்தில் भावय-அனுஸந்தானம் செய் (அதாவது, நான் பிரஹ்மம் என்று இடைவிடாமல் பாவிக்கவேண்டும்). (255)

यत्परं सकलवागगोचरं गोचरं विमलबोधचक्षुषः ।
शुद्धचिद्घनमनादि वस्तु यद्ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥२५६॥

यत्-எது परं-மேலானதாயும் सकलवागगोचरं-எல்லா வாக்குகளுக்கும் விஷயமாகாததும் विमलबोधचक्षुषः-நிர்மலமான ஞானமாகிய கண்ணுக்கு (மாத்திரம்) गोचरं-விஷயமாகக் கூடியதாயும் இருக்கிறதோ यत्-எது शुद्ध-चिद्घनं-சுத்தமான அறிவு ஸ்வரூபமாயும் अनादि-ஆதியற்றதாயும் वस्तु-வாஸ்தவமாய் இருக்கிற வஸ்துவாயும் இருக்கிறதோ तत्-அந்த ब्रह्म-பிரஹ்மமாகவே त्वं நீ असि-



இருக்கிறாய். (அப்படியே) आत्मनि-தன்னிடத்தில் भावय-அனுஸந்தானம் செய். (256)

षड्भिरूर्मिभिरयोगि योगिहृद्भावितं न करणैर्विभावितम् ।
बुद्ध्यवेद्यमनवद्यभूति यद्ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २५७ ॥

षड्भिः (பசி, தாஹம், சோகம், மோஹம், ஜரை, மரணம் ஆகிய) ஆறு ऊर्मिभिः-அலைகளுடன் अयोगि-ஸம்பந்தப்படாததாயும் योगिहृद्भावितं-யோகிகளுடைய ஹ்ருதயத்தில் அனுஸந்தானம் செய்யப்பட்டதாயும் करणैः-இந்திரியங்களினால் न विभावितं-அறியக்கூடாததாயும் बुद्ध्यवेद्यं-(கூர்மையாயும் பரிசுத்தமாயுமில்லாத) புத்தியினால் அறியத்தகாததாயும் अनवद्यभूति-எவ்வித தோஷமுமற்ற ஐசுவர்யத்தோடு கூடியதாயும் यत्-இருக்கிறதோ तत्-அந்த ब्रह्म பிரஹ்மமாகவே त्वं-நீ असि-இருக்கிறாய். (அப்படியே) आत्मनि-தன்னிடத்தில் भावय-அனுஸந்தானம் செய். (257)

भ्रान्तिकल्पितजगत्कलाश्रयं स्वाश्रयं च सदसद्विलक्षणम् ।
निष्कलं निरुपमानमृद्धिमद्ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २५८ ॥

भ्रान्तिकल्पितजगत्कलाश्रयं-பிராந்தியினால் கல்பிக்கப்பட்டிருக்கிற ஜகத்தாகிற அம்சத்திற்கு ஆசிரயமாயும் (அதிஷ்டானமாயும்) स्वाश्रयं च-(தனக்கு வேறு ஆசிரயமில்லாமல்) தானே தனக்கு ஆசிரயமாயிருப்பதாயும் सदसद्विलक्षणं இருப்பதாய் தெரிகிற (பிருதிவீ, அப்பு, தேஜஸ்), இருப்பதாய் தெரியாமலிருக்கிற (வாயு, ஆகாசம்) பூதங்களுக்கு மாறுபட்டதாயும், निष्कलं-அவயவங்களற்றதாயும் निरुपमानं-உபமானமற்றதாயும் ऋद्धिमत्-எல்லா ஐசுவரியமும் பொருந்தியதாயும் இருக்கிற तत्-அந்த ब्रह्म-பிரஹ்மமாகவே त्वं-நீ असि-இருக்கிறாய். (அப்படியே) आत्मनि-தன்னிடத்தில் भावय-அனுஸந்தானம் செய். (258)

जन्मवृद्धिपरिणत्यपक्षयव्याधिनाशनविहीनमव्ययम् ।
विश्वसृष्ट्यवनघातकारणं ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २५९ ॥

जन्मवृद्धिपरिणत्यपक्षयव्याधिनाशनविहीनं-பிறப்பு, வளர்ச்சி, மாறுதல், குறைவு, வியாதி, நாசம் இவைகள் அற்றதாயும் अव्ययं-(தானாகவேயோ வேறு எதினாலேயோ) அழிக்க முடியாததாயும் विश्वसृष्ट्यवनघातकारणं-ஜகத்தின் ஸ்ருஷ்டி, ரக்ஷணம், அழித்தல் இவைகளுக்கு காரணமாயும் இருக்கிற तत्-அந்த ब्रह्म-பிரஹ்மமாகவே त्वं-நீ असि-இருக்கிறாய். (அப்படியே) आत्मनि-தன்னிடத்தில் भावय-அனுஸந்தானம் செய். (259)

अस्तभेदमनपास्तलक्षणं निस्तरङ्गजलराशिनिश्चलम् ।
नित्यमुक्तमविभक्तमूर्ति यद्ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २६० ॥

यत्-எது अस्तभेदं-வேற்றுமையற்றதாயும் अनपास्तलक्षणं-(ஸத் சித் ஆனந்தமாகிய) லக்ஷணம் (எக்காலத்திலும்) விலகாததாயும் निस्तरङ्गजलराशिनिश्चलं-அலையில்லாத ஸமுத்திரம்போல் அசைவற்றதாயும் नित्यमुक्तं-எப்பொழுதும் விடுபட்டதாயும் (ஒரு காலத்திலும் ஸம்ஸார பந்தத்திற்கு உள்படாததாயும்) अविभक्तमूर्ति-பிரிக்கப்படாத ஸ்வரூபமுள்ளதாயும் இருக்கிறதோ, तत्-அந்த ब्रह्म-பிரஹ்மமாகவே त्वं-நீ असि-இருக்கிறாய் (அப்படியே) आत्मनि-தன்னிடத்தில் भावय-அனுஸந்தானம் செய். (260)

एकमेव सदनेककारणं कारणान्तरनिरासकारणम् ।
कार्यकारणविलक्षणं स्वयं ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥ २६१ ॥

एकं एव-ஒன்றாகவே सत्-இருந்துகொண்டு (தன்னிடத்தில் கல்பிக்கப்படும்) अनेक कारणं-அநேக பதார்த்தங்களுக்கு காரணமாயும் (அதிஷ்டானமாயும்), कारणान्तर निरास कारणं-(தனக்கு) வேறு காரணத்தை அபேக்ஷிக்காத காரணமாயும் (அல்லது, காரணமென்று சொல்லப்படும் ஆகாசம் முதலான மற்ற காரணங்களையெல்லாம் இல்லையென்று மறுப்பதற்கு காரணமாயும்), स्वयं (ஆனால்) தன் வாஸ்தவ நிலையில் कार्य कारण विलक्षणं-காரியமென்பதற்கும் (ஜகத்திற்கும்) காரணமென்பதற்கும் (மாயைக்கும்) வேறுபட்டதாயும் இருக்கும் तत्-அந்த ब्रह्म-பிரஹ்மமாகவே त्वं-நீ असि-இருக்கிறாய். (அப்படியே) आत्मनि-தன்னிடத்தில் भावय அனுஸந்தானம் செய்.

இங்கு முதலில் ப்ரஹ்மத்தைக் காரணம் என்று சொல்லி விட்டு பின்னால் அது காரணமல்ல என்று சொல்கிறார். இதன் கருத்து யாதெனில் பிரஹ்மத்தைத் தவிற வேறு காரணமில்லாததால் பிரபஞ்சத்திற்கு பிரஹ்மத்தைக் காரணமாகக் கூறப்பட்டது. பிரபஞ்சம் பொய்யானதால் அதைக்குறித்து பிரஹ்மத்திற்கு காரணத் தன்மையும் பொய்தான். வாஸ்தவத்தில் பிரஹ்மம் காரணமல்ல. வாஸ்தவத்தில் எப்பொழுதும் பிரஹ்மத்திற்கு காரணத்தன்மை இல்லாமல் போனாலும் மற்றதை விலக்குகிறபடியால் தான் காரணத்தன்மை தடஸ்த லக்ஷணம் என்று கூறப்படுகிறது. வாஸ்தவத்தில் பிரபஞ்சம் இல்லை என்று பிரபஞ்சத்தின் இல்லாமையை நேரில் அறியும் ஸாக்ஷியாக பிரம்மம் இருப்பதால் ஆகாசம் முதலான வேறு காரணங்களை மறுப்பதற்கும் பிரம்மம் காரணம் என்று கூறப்பட்டது. (261)

निर्विकल्पकमनल्पमक्षरं यत्क्षराक्षरविलक्षणं परम् ।
नित्यमव्ययसुखं निरञ्जनं ब्रह्म तत्त्वमसि भावयात्मनि । २६२॥

यत्-எது निर्विकल्पकं-விகல்பம் அற்றதாய் अनल्पं-சிறியதில்லாததாய் अक्षरं-நாசமற்றதாய் क्षर अक्षर विलक्षणं-(ஜகத்தாகிய) க்ஷரம், (மாயையாகிற) அக்ஷரம், இரண்டிற்கும் வேறுபட்டதாய், परं-எல்லாவற்றிற்கும் மேலானதாய், नित्यं-சாசுவதமாய், अव्यय सुखं-குறைவு இல்லாத ஸுகஸ்வரூபமாய்; निरञ्जनं-தோஷமற்றதாய் இருக்கிறதோ, तत्-அந்த ब्रह्म-பிரஹ்மமாகவே त्वं-நீ

असि-இருக்கிறாய் (அப்படியே) आत्मनि-தன்னிடத்தில் भावय-அனுஸந்தானம் செய். (262)

यद्विभाति सदनेकधा भ्रमान्नामरूपगुणविक्रियात्मना ।
हेमवत्स्वयमविक्रियं सदा ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ॥२६३॥

यत्-எது सत्-ஸத் பதார்த்தமாய் हेमवत्-தங்கம் போல, स्वयं-தன் நிலையில் सदा-எப்பொழுதும் अविक्रियं-எவ்வித மாறுதலுமன்னியில் இருந்துகொண்டே भ्रमात्-பிராந்தியினால் नाम रूप गुण विक्रियात्मना-பெயர், உருவம் குணம், மாறுபடுதல் தன்மையுடன் अनेकधा-பலவிதமாக विभाति தோன்றுகிறதோ, तत्-அந்த ब्रह्म-பிரஹ்மமாகவே त्वं-நீ असि-இருக்கிறாய். (அப்படியே) आत्मनि-தன்னிடத்தில் भावय-அனுஸந்தானம் செய். (263)

यच्चकास्त्यनपरं परात्परं प्रत्यगेकरसमात्मलक्षणम् ।
सत्यचित्सुखमनन्तमव्ययं ब्रह्म तत्त्वमसि भावयात्मनि ।२६४॥

यत्-எது अनपरं-தன்னைத் தவிர வேறில்லாததாய், परात् परं-மேலானதிற்கும் மேலாய், प्रत्यग् एक रसं-உள்ளேயுள்ள ஆத்மாவுடன் ஒரே ஸ்வபாவத்தையுடையதாய், आत्म लक्षणं-ஆத்மாவிற்குள்ள லக்ஷணங்களோடு கூடியதாய், सत्य चित् सुखं-ஸத்யமாய் ஞானஸ்வரூபமாய் ஆனந்த ஸ்வரூபமாய் இருப்பதாய், अनन्तं-எல்லையற்றதாய், अव्ययं அழிவற்றதாய் चकास्ति-விளங்குகிறதோ, तत्-அந்த ब्रह्म பிரஹ்மமாகவே त्वं-நீ असि-இருக்கிறாய். (அப்படியே) आत्मनि-தன்னிடத்தில் भावय-அனுஸந்தானம் செய். (264)

(அ) 255 முதல் 264 வரை சுலோகங்களில் சொல்லிய முறைப்படி நன்கு யுக்திகளைக்கொண்டு எவ்வித ஸம்சயமுமன்னியில் அனுஸந்தானம் செய்துவந்தால் ஆத்மதத்வம் வெகு தெளிவாகத் தெரியவரும் என்கிறார் :—



उक्तमर्थमिममात्मनि स्वयं भावय प्रथितयुक्तिभिर्धिया ।
संशयादिरहितं कराम्बुवत्तेन तत्त्वनिगमो भविष्यति ॥ २६५ ॥

उक्तं-இதுவரை சொல்லப்பட்ட इमं-இந்த अर्थं-விஷயத்தை प्रथित युक्तिभिः-(உபநிஷத்துக்களை அனுஸரித்த) பிரஸித்தமான யுக்திகளைக் கொண்டு धिया-புத்தியினால் स्वयं-தானாகவே आत्मनि தன்னிடத்தில் भावय-அனுஸந்தானம் செய் तेन-அதினால் (அவ்விதம் அனுஸந்தானம் செய்வதால்) संशय आदि रहितं-ஸந்தேஹம் (விபரீதக்ஞானம்) முதலானது இல்லாமல் कर अम्बुवत्-உள்ளங்கையிலுள்ள ஜலம்போல, (தெளிவாய் தெரியக்கூடியதாய்) तत्त्व निगमः-ஆத்மாவின் வாஸ்தவத்தன்மை விஷயமான நிச்சயம், भविष्यति-ஏற்பட்டுவிடும். (265)

(அ) இவ்விதமாக சரீரம், இந்திரியம், புத்தி முதலியவைகளுடன் கலந்திருக்கும் ஆத்மதத்வத்தைத் தனித்துப் பிரித்துப்பார்க்கும் யோக்கியதை ஏற்பட்டுவிட்டால், அதிலேயே நிலைத்திருந்து ஆத்மாவல்லாததாகத் தோன்றும் எல்லா அம்சங்களையும் விசாரித்து அவைகள் பிரஹ்மத்தின் கார்யமாகவே இருப்பதால் அவைகள் பிரஹ்மத்தைவிட வேறுபட்டதில்லையென்று உணரவேண்டும் என்கிறார் :—

स्वं बोधमात्रं परिशुद्धतत्त्वं विज्ञाय संघे नृपवच्च सैन्ये ।
तदात्मनैवात्मनि सर्वदा स्थितो विलापय ब्रह्मणि दृश्यजातम् ॥

सैन्ये-ஸைன்யத்தின் மத்தியிலுள்ள नृपवत्-அரசனை (அரசனுக்குள்ள அடையாளங்களால் பிரித்து அறிவதை)ப்போல संघे-(சரீரம், இந்திரியம், பிராணன், அஹங்காரம் முதலானவை சேர்ந்த) கூட்டத்தில் स्वं-தன்னை (ஆத்ம ஸ்வரூபத்தை) बोधमात्रं-அறிவேயாகிற परिशुद्धतत्त्वं-வெகு சுத்தமான வாஸ்தவஸ்வரூபமாக विज्ञाय-நன்கு அறிந்துகொண்டு तदात्मनैव-அந்த தத்வ ஸ்வரூபமாகவே आत्मनि-தன்னிடத்தில் सर्वदा-எப்

பொழுதும் स्थितः-நிலைத்தவனாக दृश्यजातं-தோன்றுவது எல்லாவற்றையும் ब्रह्मणि-பிரஹ்மத்தினிடத்திலேயே विलापय-நன்கு லயம் செய்துவிடு. (266)

(அ) இவ்விதம் ஜகத்தை லயம்செய்து தன்னிடத்தில் பிரஹ்மத்தையே பார்க்கும் நிலை ஸித்தித்துவிட்டால், மறுபடியும் ஜனன, மரண ரூபமான, ஸம்ஸாரம் ஏற்படாது என்பதைக் குறிப்பிடுகிருர் :—

बुद्धौ गुहायां सदसद्विलक्षणं ब्रह्मास्ति सत्यं परमद्वितीयम् ।
तदात्मना योऽत्र वसेद्गुहायां पुनर्न तस्याङ्गगुहाप्रवेशः ॥

बुद्धौ-புத்திரூபமான गुहायां குகைக்குள் सदसद्विलक्षणं-கார்யத்திற்கும் காரணத்திற்கும் (அல்லது, பிருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் இவைகளுக்கு) வேறுபட்டதாய் सत्यं-ஸத்யமாய் (எக்காலத்திலும் பாதிக்கப்படாமல் இருக்கும் வஸ்துவாய்) परं-(எல்லாவற்றிற்கும்) மேலானதாய் अद्वितीय-இரண்டாவது யதார்த்தமற்றதாய் உள்ள ब्रह्म-பிரஹ்மம் अस्ति-இருக்கிறது. तदात्मना-அந்த பிரஹ்ம ஸ்வரூபமாகவே यः-எவன் अत्र-இந்த गुहायां-ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரரூபமான குகையில் वसेत्-வஸிப்பானே तस्य-அவனுக்கு पुनः-மறுபடியும் अङ्गगुहाप्रवेशः-சரீரமாகிற குகைக்குள் நுழைதல் (சரீரத்தில் நான் என்ற அபிமானம்) न-இருக்காது.

ஐந்து கோசங்களுக்கும் 'குகை' என்ற பெயர் உள்ள போதிலும் அன்னமயம், ப்ராணமயம், மனோமயம் என்னும் மூன்று குகைகளுக்குப் புத்தி மூலமாகவே ஆத்மஸம்பந்தம் ஏற்படுவதாலும், ஸுஷுப்தியில் புத்தியில்லாததால் ஆத்மஸ்வரூபத்தை அறியமுடியாதபடியாலும், விக்ஞானமயகோசம் என்னும் புத்தி குகையில் ஆத்மஸ்வரூபம் இருப்பதாகக் கூறப்பட்டது. ஆத்மா எங்கும் உள்ளபோதிலும் மற்ற இடத்தில் ஆத்மாவை அறிய வழியில்லாததாலும் கண்ணாடி முகத்தைக் காட்டுவதுபோல் ஸத்வகுணப் பிரதானமான புத்தியின் வ்ருத்தியினால் மறைவு நீங்கியதும் ஆத்மஸ்வரூபம்



விளங்குவதால் புத்தியில் ஆத்மா இருப்பதாகக் கூறப்பட்டது. (पाषाणे वृक्षः) பாறையில் (அருகில்) மரம் இருக்கிறது என்பது போல बुद्धौ ब्रह्म अस्ति-புத்தியில் (அருகில்) ஆத்மா விளங்குகிறது என்று கருத்து. இந்த சுலோகத்தில் 'अङ्ग' என்ற பதத்தை ஸம்போதனமாகத் தனிப்பதமாக வைத்து 'அப்பா! குஹாப்பிரவேசம் கிடையாது' என்றும் பொருள் கூறலாம். பிரஹ்மத்தை ஆத்மாவாக அறிந்தவன் ஜீவன்முக்தி நிலையில் சரீரத்தில் வஸித்தாலும் அதை ஆத்மாவாக எண்ண மாட்டான். விதேஹமுக்தனுக்கு சரீரமே இருக்காது. (267)

## 27. வாஸனைகளைக் குறை

(அ) இதுவரை சொல்லிவந்த பிரகாரம் அனாத்மாவிலிருந்து ஆத்மதத்வத்தை நன்கு பிரித்து அறிந்து அந்த பிரஹ்மத்தைத்தவிர வேறில்லையென்ற நிச்சயம் ஏற்பட்டபோதிலும், அனாதிகாலமாய் சரீராதிகளில் 'நான்' என்ற எண்ணம் இருந்துவந்திருப்பதால் அவ்வெண்ணத்தை நன்கு நிவ்ருத்தி செய்வதற்கு வேண்டிய பிரயத்னம் அவசியம் செய்யவேண்டும் என்பதை ஸ்ரீமத்ஆசார்யார் எடுத்துச் சொல்கிருர். இரண்டாவது சுலோகத்தில் கூறப்பட்ட 'आत्मानात्मविवेचनं स्वनुभवः' என்ற பகுதி இதுவரை விவரிக்கப்பட்டது. இனி 'ब्रह्मात्मना संस्थितिः मुक्तिः' என்ற பகுதி விவரிக்கப்படுகிறது :—

ज्ञाते वस्तुन्यपि बलवती वासनाऽनादिरेषा
कर्ता भोक्ताऽप्यहमिति दृढा याऽस्य संसारहेतुः ।
प्रत्यग्दृष्ट्याऽऽत्मनि निवसता साऽपनेया प्रयत्ना-
न्मुक्तिं प्राहुस्तदिह मुनयो वासनातानवं यत् ॥ २६८ ॥

वस्तुनि-வாஸ்தவமாயுள்ள தத்வம் ज्ञाते अपि-அறியப்பட்டுவிட்டபோதிலும் या-எது कर्ता-கர்த்தா (புண்ணிய, பாபங்களை செய்கிறவன்) भोक्ता-போக்தா (அவைகளின் பலனாகிய ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறவன்) अपि-இரண்டும் अहं-நான் इति-என்று अनादिः-அனாதிகாலம்

தொட்டு இருப்பதாய் दृढा-மிகவும் திடமாய் अस्य-இவனுக்கு (ஜீவனுக்கு) संसारहेतुः-ஸம்ஸாரத்திற்கு காரணமாய் உள்ளதோ, एषा-இந்த वासना-வாஸனை बलवती-மிகவும் பலமுள்ளது. सा-அந்த வாஸனை आत्मनि-ப்ரஹ்மத்தில் प्रत्यग्दृष्ट्या-அந்தர்முகமாக ஆத்மாபேத ஞானத்துடன் निवसता-நிலைத்திருக்கின்றவனால் प्रयत्नात्-வெகு பிரயாஸையுடன் अपनेया-விலக்க வேண்டியதாய் இருக்கிறது. यत्-எது वासनातानवं-வாஸனைகளை குறைப்பது என்பதோ तत्-அதையே इह-இங்கே (உலகத்தில்) मुनयः (மனனம் செய்து தத்வ ஸாக்ஷாத்காரமடைந்த) முனி சிரேஷ்டர்கள் मुक्ति-மோக்ஷமாக प्राहुः-சொல்கிறார்கள். (268)

(அ) ஆத்மாவிற்கு சரீராதிகளில் கர்த்தாவென்றும் போக்தாவென்றும் வாஸனை ஏற்படுவதற்குக்காரணம், எவ்வித கிரியா ஸம்பந்தமுமில்லாத தன்னை அவைகளுடன் பிராந்தியினால் ஒன்றாக நினைத்து, தானே கிரியை செய்வதாகவும் அந்தக் கிரியையின் பலனையனுபவிப்பதாகவும் நினைத்துக் கொள்வதுதான். இந்தத் தவறான நினைப்பே அத்யாஸம் எனப்படும். இவ்வெண்ணத்தை நன்கு போக்கினால்தான் ஆத்மாவின் வாஸ்தவ ஸ்வரூபம் தெளிவுபடும் என்கிறார் :—

अहं ममेति यो भावो देहाक्षादावनात्मनि ।
अध्यासोऽयं निरस्तव्यो विदुषा स्वात्मनिष्ठया ॥ २६९ ॥

अनात्मनि ஆத்மாவல்லாத देहाक्षादौ-சரீரம் இந்திரியம் முதலியதில் अहं-'நான்' मम-'என்னுடையது' इति-என்று यः-எந்த भावः-எண்ணம் உண்டோ अयं-இந்த अध्यासः-அத்யாஸமானது विदुषा-அறிவாளியால் स्वात्म-निष्ठया-தன் ஆத்மாவில் நன்கு நிலைத்திருப்பது மூலமாய் निरस्तव्यः-விலக்கப்படவேண்டும். (269)

ज्ञात्वा स्वं प्रत्यगात्मानं बुद्धितद्वृत्तिसाक्षिणम् ।
सोऽहमित्येव सद्वृत्त्याऽनात्मन्यात्ममतिं जहि ॥ २७० ॥



बुद्धितद्वृत्तिसाक्षिणं-புத்திக்கும் அதன் விருத்திகளுக்கும் ஸாக்ஷியாக விருக்கும் प्रत्यगात्मानं-உள்ளேயுள்ள ஆத்மாவாக स्वं-தன்னை ज्ञात्वा-அறிந்து கொண்டு सः-அவர் தான் अहं-நான் इत्येव-என்ற सद्वृत्त्या-(எப்பொழுதும் எவ்விதமாயும் பாதிக்கப்படாமல்) இருந்து வருகிற பிரஹ்மாபேத விஷயமான விருத்தியினால் अनात्मनि-ஆத்மாவல்லாததில் வைத்திருக்கும் आत्ममतिं-'நான்' என்கிற எண்ணத்தை जहि-விட்டுவிடு.

(அ) ஸம்ஸாரத்திற்குக் காரணமாகச் சொல்லப்பட்ட வாஸனை மூன்றுவிதம் என்று எடுத்துக்காட்டுகிறார் :—

लोकानुवर्तनं त्यक्त्वा त्यक्त्वा देहानुवर्तनम् ।
शास्त्रानुवर्तनं त्यक्त्वा स्वाध्यासापनयं कुरु ॥ २७१ ॥

लोकानुवर्तनं-உலகப்போக்கை அனுஸரித்து நடப்பது என்பதை त्यक्त्वा-விட்டுவிட்டு देहानुवर्तनं-சரீரத்தின் போக்கை அனுஸரித்து நடப்பது என்பதையும் त्यक्त्वा-விட்டுவிட்டு शास्त्रानुवर्तनं-(ஆத்மக்ஞானத்திற்குப் பிரயோஜனப்படாத) சாஸ்திரத்தை அனுஸரித்து நடப்பது என்பதையும் त्यक्त्वा-விட்டுவிட்டு स्वाध्यासापनयं-தன்னிடத்திலுள்ள (தன் விஷயமாயுள்ள) அத்யாஸத்தின் விலக்குதல் என்பதை कुरु-செய். (271)

(அ) இந்த மூன்றுவித வாஸனைகளை அனுபவித்துக் கொண்டேயிருந்தால் சரியானபடி ஞானம் ஏற்படாது என்பதைச் சொல்கிறார் :—

लोकवासनया जन्तोः शास्त्रवासनयापि च ।
देहवासनया ज्ञानं यथावन्नैव जायते ॥ २७२ ॥

लोकवासनया-உலகத்தார் ஒப்புக்கொள்ளும்படி நடந்துகொள்ள வேண்டுமென்கிற வாஸனையிருந்தாலும் शास्त्रवासनयापि च-பலவித சாஸ்திரங்களை வாசித்துத்

தெரிந்து அவைகளின்படி நடக்கவேண்டுமென்கிற வாஸனையிருந்தாலும் देहवासनया-சரீரம் அபேக்ஷிக்கிறபடியே நடக்கவேண்டுமென்கிற வாஸனையிருந்தாலும் जन्तोः-ஜீவனுக்கு ज्ञानं-ஆத்மக்ஞானமானது यथावत्-உள்ளபடி नैव जायते ஏற்படவே ஏற்படாது.

"உலகில் யாரும் என்னைக் குறை கூறமுடியாமல் எல்லோரும் என்னைப் போற்றும்படி நடந்துகொள்வேன்" என்ற அபிமானம் லோகவாஸனை. இது ஞான வழியில் செல்வதற்குப் பெரிய இடையூறு. ஏனெனில் இம்மாதிரி உலகில் யாரும் வாழமுடியாது. எவன்தான் உலகைத் திருப்திப்படுத்த முடியும்? எல்லா ஜனங்களுக்கும் திருப்தியை உண்டுபண்ணும்படியான உபாயம் ஒன்றுமில்லை. நமக்கு நன்மை தரும் காரியத்தைத்தான் நாம் செய்யவேண்டும். இதுபற்றி உலகில் பலர் பலவாறு பேசுவதால் நமக்கு லாபமும் இல்லை; நஷ்டமுமில்லை.

को लोकमाराधयितुं समर्थः

विद्यते न खलु कश्चिदुपायः सर्वलोकपरितोषकरो यः ।

सर्वथा स्वहितमाचरणीयं किं करिष्यति जनो बहुजल्पः ॥

"உலகம் போற்றினாலும் தூற்றினாலும் ஸமமாக எண்ண வேண்டும். 'तुल्यनिन्दास्तुतिः' என்று கீதையில் பகவான் சொல்கிறார். எப்பொழுதும் படித்துக்கொண்டே இருப்பது, எல்லா சாஸ்திரங்களையும் அறிந்துகொள்வதில் ஈடுபடுவது, அனுஷ்டானத்திலேயே ஈடுபட்டிருப்பது இவை சாஸ்திர வாஸனையாகும். தேஹத்தில் தான் என்ற எண்ணம் வேரூன்றியிருப்பது, தேஹ தோஷங்களை மூடி மறைப்பது, பிராந்தி இவை தேஹ வாஸனையாகும். இவைபற்றி விரிவாக ஜீவன்முக்தி விவேகத்தில் காணலாம். (272)

संसारकारागृहमोक्षमिच्छोरयोमयं पादनिबद्धशृङ्खलम् ।
वदन्ति तज्ज्ञाः पटुवासनात्रयं योऽस्माद्विमुक्तः समुपैति मुक्तिम् ॥

पटुवासनात्रयं-திடமாயிருக்கும் வாஸனைகள் மூன்றையும் संसारकारागृहमोक्षं-ஸம்ஸாரமாகிற காராக்கிருஹத்தி



லிருந்து விடுதலையடைவதை इच्छोः-விரும்புபவனுக்கு अयोमयं-இரும்பினால் செய்திருக்கும் पादनिबद्धशृङ्खलं கால்களில் நன்கு பூட்டப்பட்டிருக்கும் விலங்கு என்று तज्ज्ञाः-அதன் தன்மையை அறிந்தவர்கள் वदन्ति-சொல்கிறார்கள். यः-எவன் अस्मात्-இதிலிருந்து विमुक्तः-விடுபட்டவனோ (அவன்தான்) मुक्तिं-மோக்ஷத்தை समुपैति-நன்கு அடைவான். (273)

(அ) இந்த ஞான ப்ரதிபந்தக வாஸனை விலகி ஆத்ம வாஸனை எழுச்சி பெற உபாயத்தை திருஷ்டாந்த புரஸ்ஸரமாக விளக்கிச் சொல்கிறார்:—

जलादिसंपर्कवशात्प्रभूतदुर्गन्धधूतागरुदिव्यवासना ।
संघर्षणेनैव विभाति सम्यग्विधूयमाने सति बाह्यगन्धे । २७४ ।

जलादिसंपर्कवशात्-ஜலம் முதலானவைகளின் சேர்க்கை (காரணமாய்) ஏற்பட்டிருக்கும் प्रभूतदुर्गन्धधूतागरुदिव्यवासना-ஏராளமான துர்நாற்றத்தினால் விரட்டப்பட்டிருக்கிற அகில் கட்டையின் மனோஹரமான வாஸனையானது संघर्षणेन-(அக்கட்டையை) நன்கு அறைத்துத் தேய்ப்பதினால் बाह्यगन्धे மேலுள்ள நாற்றம் विधूयमाने सति நன்கு விலக்கப்பட்டால் एव-தான் सम्यक्-நன்றாக विभाति-விளங்கும். (274)

अन्तःश्रितानन्तदुरन्तवासनाधूलीविलिप्ता परमात्मवासना ।
प्रज्ञातिसंघर्षणतो विशुद्धा प्रतीयते चन्दनगन्धवत्स्फुटा ॥

अन्तःश्रितानन्तदुरन्तवासनाधूलीविलिप्ता-(மனஸிற்கு) உள்ளே ஒட்டிக்கொண்டிருக்கும் கணக்கில்லாத ஸுலபமாய் போக்கமுடியாத வாஸனைகளாகிற அழுக்கினால் நன்கு பூசப்பட்டதாயிருக்கும் परमात्मवासना-பரமாத்மாவின் வாஸனை प्रज्ञातिसंघर्षणतः-நல்ல அறிவினால் நன்றாக உறைத்துத் தேய்ப்பதினால் विशुद्धा-நன்கு சுத்தமாகி

चन्दनगन्धवत्-சந்தனத்தின் கந்தம்போல स्फुटा-தெளிவாக प्रतीयते-அறியப்படும். (275)

अनात्मवासनाजालैस्तिरोभूतात्मवासना ।
नित्यात्मनिष्ठया तेषां नाशे भाति स्वयं स्फुटा ॥ २७६ ॥

अनात्म-वासना-जालैः-அநாத்ம விஷயமான வாஸனைகளின் கூட்டங்களால், तिरोभूत-आत्म-वासना-மறைக்கப்பட்டிருக்கிற ஆத்ம விஷயமான வாஸனையானது, तेषां-அந்த அநாத்ம வாஸனைகளுக்கு, नित्य-आत्म निष्ठया-எப்பொழுதும்-ஆத்மாவிலேயே-நிலைத்திருப்பதினால், नाशे-நாசமேற்பட்டுவிட்டால், स्वयं-தானே, स्फुटा-தெளிவாக, भाति-விளங்கும்.

லோகவாஸனை, தேஹவாஸனை, சாஸ்த்ரவாஸனை, கீதையில் தம்பம், தர்ப்பம் என்று சொல்லப்பட்டுள்ள ஆஸுர ஸம்பத் இவை அநாத்ம வாஸனைகளாகும் (276)

(அ) ஆத்ம வாஸனை அதிகமாக அதிகமாக அநாத்ம வாஸனை குறைந்து வரும்; அநாத்ம வாஸனை பூராவும் விலகிவிட்டால் எவ்வித இடஞ்சலுமன்னியில் ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்கிறார் :—

यथा यथा प्रत्यगवस्थितं मनस्तथा तथा मुञ्चति बाह्यवासनाः ।
निःशेषमोक्षे सति वासनानामात्मानुभूतिः प्रतिबन्धशून्या ॥

मनः-மனஸானது, यथा यथा-எவ்வளவுக்கெவ்வளவு, प्रत्यक्-अवस्थितं-உள்ளேயுள்ள ஆத்ம தத்வத்தில் நிலைத்திருக்கிறதோ, तथा तथा-அவ்வளவுக்கவ்வளவு, बाह्य-वासनाः-வெளி வாஸனைகளை, मुञ्चति-விட்டுவிடுகிறான். वासनानां-அந்த வெளி வாஸனைகளுக்கு, निश्शेष-मोक्षे-பாக்கியன்னியில் விலக்குதல், सति-ஏற்பட்டுவிட்டதேயானால், आत्म-अनुभूतिः-ஆத்ம தத்வத்தின் அனுபவம், प्रतिबन्ध शून्या எவ்வித தடையும் அற்றதாக (இருக்கும்).



## 28. அத்யாஸத்தைப்போக்கு

(அ) வெளி வாஸனைகளை எப்படி குறைத்துக்கொண்டு வந்து இல்லாமலே செய்து விடுகிறது என்பதை 9 சுலோகங்களில் எடுத்துச்சொல்கிறார். காரியத்தையழிப்பதன் மூலம் காரணத்தையழிக்கமுடியும் என்ற நியாயப்படி வாஸனாகாரியமான ப்ராந்தியின் நாசத்தை வாஸனாக்ஷயத்திற்குக் காரணமாகக் கூறுகிறார் :—

स्वात्मन्येव सदा स्थित्या मनो नश्यति योगिनः ।
वासनानां क्षयश्चातः स्वाध्यासापनयं कुरु ॥ २७८ ॥

स्व आत्मनि एव-தன் ஆத்மஸ்வரூபத்திலேயே, सदा-எப்பொழுதும், स्थित्या-நிலைப்பதால், योगिनः யோகியினுடைய, मनः-மனஸானது, नश्यति-அடங்கிவிடுகிறது. (வெளியில் கிளம்பாமல் இருந்துவிடுகிறது) अतः-அதனால் (மனஸ் அடங்குவதினால்), वासनानां च-வெளி வாஸனைகளுக்கும், क्षयः-(இடமில்லாததினால்) ஓய்வு (ஏற்பட்டு விடுகிறது). अतः-ஆகையால், (இந்த விதமாய்), स्व-अध्यास-अपनयं-தன்னிடத்திலுள்ள அத்யாஸத்தின்-விலக்குதலை, कुरु-செய்

ரஜஸ் தமோ விருத்திகள் அடங்கி ஸத்வகுணம் மேலிட்டு ப்ரஹ்மத்யானம் செய்பவனுக்கு மனம் வேகமிழந்து கட்டுப்படுகிறது. அவனுக்கு சுத்தவாஸனைகள் உறுதிப்பட்டிருப்பதால் முன்பின் ஆலோசியாமல் திடீரென கோபம் முதலியவை ஏற்படுவதற்கு காரணமான மனதிலுள்ள வாஸனை அழிந்துபோவதால் வெளிப்படையான காரணம் இருந்தபோதிலும், கோபம் முதலியவை ஏற்படுவதில்லை. இதுதான் வாஸனாக்ஷயம் என்பது. (278)

(அ) ராஜஸ தாமஸ வ்ருத்திகளையடக்குவதற்கு உபாயம் சொல்கிறார் :—

तमो द्वाभ्यां रजः सत्त्वात्सत्त्वं शुद्धेन नश्यति ।
तस्मात्सत्त्वमवष्टभ्य स्वाध्यासापनयं कुरु ॥ २७९ ॥

**तमः**-தமஸ் (தமோகுணம் மேலிடுவதினால் ஏற்படக் கூடிய மனோவிருத்திகள்), **द्वाभ्यां**-(ஸத்வம், ரஜஸ் ஆகிய) இரண்டினாலும், **रजः** ரஜஸ் (ரஜோகுணம் மேலிடும்போதுள்ள விருத்திகள்), **सत्त्वात्**-ஸத்வத்தினாலும், **सत्त्वं**-ஸத்வம் (ஸத்வகுணம் மேலிடுவதினால் ஏற்படும் விருத்திகள்கூட), **शुद्धेन** சுத்தத்தினால், (குணமற்ற மேலான நிலையடைவதினால்), **नश्यति**-அடங்கிவிடும். **तस्मात्**-ஆகையால், **सत्त्वं**-(அப்பியாஸ காலத்தில்) ஸத்வத்தை, **अवष्टभ्य**-நன்றாக கைக்கொண்டு, **स्व अध्यास अपनयं**-தன்னிடமுள்ள அத்யாஸத்தின் விலக்குதலை, **कुरु**-செய்.

தேஹப்பயிற்சியாலும், காவ்யசாஸ்திரங்களை வாசிப்பதாலும் சோம்பல் தூக்கம் முதலான தமோகுண காரியம் நீங்குகிறது. மனதை ஒருநிலைப்படுத்துவது என்ற ஸத்வ காரியத்தால் கர்மாவைச் செய்வது என்ற ரஜோகுண காரியம் நீங்கிவிடுகிறது. நிர்குண த்யானத்தால் ஸத்வகுண காரியமான ஞானமும் ஏற்படுவதில்லை. ஆதலே தமோகுணத்தால் ஆவரணம் ஏற்பட்டு ரஜோகுணத்தால் ஏற்படும் விக்ஷேப ரூபமான பிரமங்களை, ஸத்வகுணத்தைக் கைக்கொண்டு நீக்க வேண்டும். (279)

(அ) இவ்வித அப்யாஸத்திலேயே ஈடுபட்டுவிட்டால் அப்பியாஸம் செய்வதற்குக்கூட அவசியமாயிருக்கும் இந்த சரீரத்தை காப்பாற்றிக்கொள்வதற்குப் பிரயத்தினம் செய்ய வேண்டாமா என்றால் இந்த சரீரத்தை உண்டுபண்ணின முன் செய்த கர்மாவே இது இருக்கும் வரை போஷணம் செய்யும் என்று நன்றாக நம்பி தைர்யமாக இருக்கலாம் என்கிறார்:—

प्रारब्धं पुष्यति वपुरिति निश्चित्य निश्चलः ।
धैर्यमालम्ब्य यत्नेन स्वाध्यासापनयं कुरु ॥ २८० ॥

**प्रारब्धं** (முன்செய்திருக்கும் கர்மாக்களில் இப்பொழுது இந்த சரீரத்தில் பலன் கொடுக்க) ஆரம்பித்திருக்கும் கர்மாவே, **वपुः**-சரீரத்தை, **पुष्यति**-போஷணம் செய்கிறது, **इति**-என்று, **निश्चित्य** தீர்மானமாய் அறிந்து கொண்டு, **निश्चलः**-(அதற்காகவென்று எவ்வித) கார்யமும் செய்யாமல், **धैर्यं**-தைர்யத்தை, **आलम्ब्य**-நன்கு பிடித்துக்கொண்டு, **यत्नेन** பிரயாஸையோடு, **स्व-अध्यास-अपनयं**-தன்னிடம் உள்ள அத்யாஸத்தின் விலக்குதலை, **कुरु**-செய். (280)



(அ) அந்த பிரயாஸை எவ்விதமிருக்கவேண்டுமென்பதையும் காட்டுகிறார்:—

नाहं जीवः परं ब्रह्मेत्यतद्व्यावृत्तिपूर्वकम् ।
वासनावेगतः प्राप्तस्वाध्यासापनयं कुरु ॥ २८१ ॥

**अहं**-நான் **जीवः** ஜீவன் **न**-இல்லை **परं-ब्रह्म**-மேலான பிரஹ்மமே **इति**-என்று **अतद्-व्यावृत्ति पूर्वकं**-அது அல்லாத (பிரஹ்மமல்லாத) அம்சத்தை-விலக்கிவிடுவதை முன்னிட்டுக்கொண்டு **वासना वेगतः**-(அனாத்ம ஸம்பந்தத்தினால் ஏற்பட்டிருக்கும்) வாஸனைகளின் வேகத்தினால் **प्राप्त-स्व-अध्यास-अपनयं**-வந்திருக்கிற தன்னிடமுள்ள அத்யாஸத்தின் விலக்குதலை **कुरु**-செய். (281)

(அ) எந்த பலத்தைக்கொண்டு அநாத்மாவை விலக்க முடியும், எந்த பலத்தைக்கொண்டு ப்ரஹ்மமே நான் என்று பாவிக்கமுடியும் என்றால், வேதம், யுக்தி, அநுபவம் மூன்றுமே பலம் கொடுக்கும். அந்த பலத்தைக்கொண்டு, சில ஸமயம் தோன்றக்கூடிய அத்யாஸத்தை விலக்கிவிடலாம் என்கிறார்:—

श्रुत्या युक्त्या स्वानुभूत्या ज्ञात्वा सार्वात्म्यमात्मनः ।
क्वचिदाभासतः प्राप्तस्वाध्यासापनयं कुरु ॥ २८२ ॥

**श्रुत्या**-வேதத்தினாலும் (உபநிஷத் வாக்யங்களாலும்) **युक्त्या** (வேதத்தையனுஸரித்த) யுக்தியினாலும் **स्व-अनुभूत्या**-(அவ்விரண்டையும் அனுஸரித்த) தன்னுடைய அனுபவத்தினாலும் **आत्मनः**-ஆத்மாவின் **सार्वात्म्यं**-(கல்பிதமாயிருக்கும்) எல்லா பதார்த்தங்களுடையவும் வாஸ்தவமான ஸ்வரூபமாயிருக்கும் தன்மையை **ज्ञात्वा**-அறிந்து

கொண்டு क्वचित्-எப்பொழுதாவது (வாஸனைகளின் வேகத்தினால்) आभासतः-தோன்றுவது காரணமாக प्राप्त-स्व-अध्यास-अपनयं-வந்திருக்கிற தன்னிடமுள்ள அத்யாஸத்தின்-விலக்குதலை कुरु-செய்.

'आत्मैवेदं सर्वम्' (இது எல்லாம் ஆத்மஸ்வரூபம்தான்) என்பது ச்ருதி ஆத்மப்ரகாசத்தாலேயே எல்லாம் விளங்குகிறபடியாலும் ஆத்மப்ரகாசமில்லாமல் விளங்காதபடியாலும், ஆத்மாவைக்காட்டிலும் ப்ரபஞ்சம் வேறு அல்ல. மேலும் எல்லாவற்றிற்கும் ஆத்மா அதிஷ்டானமானதாலும் இதைக்காட்டிலும் ஆரோபிதமான ப்ரபஞ்சம் வேறு அல்ல என்பது யுக்தி. இவைகளையொட்டிய அனுபவம் இவை மூலம் உண்மையான ஆத்மஸ்வரூபத்தை அறிந்து, ஆத்மச் சாயையைக்கொண்டு கோசங்களையும் ஆத்மாவென எண்ணி அத்யாஸத்தால் ஏற்படும் நான் என்ற நினைப்பை விட்டுவிட வேண்டும். (282)

अन्नादानविसर्गाभ्यामीषन्नास्ति क्रिया मुनेः ।
तदेकनिष्ठया नित्यं स्वाध्यासापनयं कुरु ॥ २८३ ॥

अन्न-आदान-विसर्गाभ्यां-(ப்ராரப்த கர்மாவினாலேயே ஏற்படும்) அன்னம் எடுத்துக்கொள்ளல் மலவிஸர்ஜனம் இவைகளைத்தவிர मुनेः-எப்பொழுதும் மனனம் செய்து கொண்டிருப்பவருக்கு ईषत्-கொஞ்சம் கூட क्रिया-கார்யம் न अस्ति-கிடையாது. तत्-एक-निष्ठया அது (பிரஹ்மம்) ஒன்றிலேயே நிலையுடன் नित्यं-எப்பொழுதும் स्व-अध्यास-अपनयं-தன்னிடமுள்ள அத்யாஸத்தின் விலக்குதலை कुरु-செய். (283)

(அ) அத்யாஸத்தைப் போக்குவதற்கு வேதத்தின் பலத்தினால், ஸாத்யமென்று முந்தின சுலோகத்தில் சொன்னதையனுசரித்து அவ்வேத வாக்கியங்கள் "தத்வம் அஸி" முதலான மஹாவாக்கியங்கள் என்கிறார் :—

तत्त्वमस्यादिवाक्योत्थब्रह्मात्मैकत्वबोधतः ।
ब्रह्मण्यात्मत्वदार्ढ्याय स्वाध्यासापनयं कुरु ॥ २८४ ॥



'तत् त्वं असि'-आदि-वाक्य-उत्थ-ब्रह्म-आत्म-एकत्व-बोधतः-'பிரஹ்மமாகவே நீ இருக்கிறாய்' என்பது முதலான வாக்கியங்களினால் உண்டாகும் பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்றாயிருக்கும் தன்மை விஷயமான ஞானத்தைக் கொண்டு, ब्रह्मणि பிரஹ்மத்தினிடத்தில் आत्मत्व-दार्ढ्याय-ஆத்மாவாயிருக்கும் தன்மை நன்கு திடமாய் (நேரில் அனுபவிக்கும்படி) ஏற்படுவதற்காக स्व-अध्यास-अपनयं-தன்னிடமுள்ள-அத்யாஸத்தின்-நீக்குதலை कुरु-செய்.

அக்ஞானிகளுக்கு தேஹத்தில் நான் என்ற எண்ணம் உறுதியாயிருப்பதுபோல் ப்ராஹ்மத்தில் நான் என்ற எண்ணம் உறுதிப்படவேண்டும். (284)

(அ) 'திடமாய்' என்று சொன்னது சரீராதிகளில் 'நான்' என்கிற எண்ணம் பூராவும் விலகி பிரஹ்மம் தான் நான் என்கிற அனுபவம் வரையென்று தாத்பர்யம் என்கிறார் :—

अहंभावस्य देहेऽस्मिन्निःशेषविलयावधि ।
सावधानेन युक्तात्मा स्वाध्यासापनयं कुरु ॥ २८५ ॥

अस्मिन्-இந்த देहे-சரீரத்தில் (உள்ள) अहंभावस्य-"நான்" என்கிற எண்ணத்திற்கு निश्शेष विलय अवधि-பாக்கியன்னியில் நாசம் ஏற்படும் வரையில் सावधानेन-வெகு கவனத்துடன் युक्त आत्मा-பிசகாமல் ஏகாக்ரமான சித்தமுள்ளவனாக இருந்துகொண்டு स्व अध्यास अपनयं-தன்னிடமுள்ள அத்யாஸத்தின் நீக்குதலை कुरु-செய்.

(அ) இதுமாத்திரம் போதாது இரண்டாவதாகத் தோன்றும் ஜகத் வாஸ்தவமல்லவென்ற அனுபவமும் ஏற்பட வேண்டும் என்கிறார் :—

प्रतीतिर्जीवजगतोः स्वप्नवद्भाति यावता ।
तावन्निरन्तरं विद्वन् स्वाध्यासापनयं कुरु ॥ २८६ ॥

स्वप्नवत् (தூங்கி விழித்துக்கொண்டவனுக்கு பொய்யாகவே தெரிகிற) ஸ்வப்னம்போல, जीव जगतोः-ஜீவன்

விஷயமாயும் ஜகத் விஷயமாயும் प्रतीतिः-(பொய்தான் என்ற) எண்ணம் यावता-எப்பொழுது भाति-நன்கு பிரகாசிக்கிறதோ, तावत्-அதுவரையில் निरन्तरं-இடைவிடாமல், विद्वन्-ஹே வித்வானே, स्व अध्यास अपनयं-தன்னிடமுள்ள அத்யாஸத்தின் நீங்குதலை कुरु செய்.

(அ) 'இடைவிடாமல்' என்றால் ஆத்மானுஸந்தானத்தை கெடுக்கக்கூடிய எதற்கும் அவகாசம் கொடுக்காமல் என்று தாத்பர்யம் என்பதை விளக்குகிறார்:—

निद्राया लोकवार्तायाः शब्दादेरपि विस्मृतेः ।
क्वचिन्नावसरं दत्त्वा चिन्तयात्मानमात्मनि ॥ २८७ ॥

निद्रायाः-தூக்கத்திற்கும், लोकवार्तायाः-உலக விஷயமான பேச்சுக்கும், शब्दादेः-சப்தம் (ஸ்பர்சம்) முதலிய விஷயங்களுக்கும், अपि-அப்படியே विस्मृतेः-மறதிக்கும், क्वचित्-எக்காலத்திலும் अवसरं-இடம் न दत्त्वा-கொடுக்காமல் आत्मनि-புத்தியில் आत्मानं-ஆத்ம ஸ்வரூபத்தை चिन्तय-சிந்தித்துக்கொண்டிரு.

தூக்கம், உலகப்பேச்சு, சப்தாதி விஷயங்கள் இவைகளில் ஈடுபட்டால் ஆத்மதத்வம் மறந்துபோகும் ஆகையால் இவைகளால் ஏற்படும் ஆத்மவிஸ்மரணத்திற்கு இடம் கொடுக்காதே என்றும் பொருள் கொள்ளலாம். (287)

(அ) இவ்வித இடைஞ்சல்களெல்லாம் ஏற்படுவதற்கு முக்கிய காரணம் சரீரத்திலுள்ள அபிமானமேயானதால் அதன் வாஸ்தவ தன்மையை நினைத்துப்பார்த்து அவ்வபிமானத்தை விட்டுவிடச் சொல்கிறார்:—

मातापित्रोर्मलोद्भूतं मलमांसमयं वपुः ।
त्यक्त्वा चण्डालवद्दूरं ब्रह्मीभूय कृती भव ॥ २८८ ॥

मातापित्रोः-தாயார் தகப்பனார் இருவர்களுடைய मल उद्भूतं-மலத்தினாலேயே உண்டானதாயும் मल मांसमयं-மலமும் மாம்ஸமுமே உருவெடுத்ததான वपुः-சரீரத்தை,



चण्डालवत्-சண்டாளனை விட்டு தூர விலகுவதுபோல, दूरं-தூரத்திலேயே त्यक्त्वा-விட்டு விட்டு (சரீரம் வெகு அசுத்தமானதினால் சுத்தமான ஆத்மாவுடன் சேர்ந்து கொள்ள யோக்கியதையற்றதென்ற பாவனையுடன் அதில் வைத்திருக்கும் அபிமானத்தை விட்டு) ब्रह्मीभूय-(அறியாமையால் நான் பிரஹ்மமில்லையென்று தோன்றுவதை விலக்கி) பிரஹ்மமாகவிருந்துகொண்டு कृती-கிருதகிருத்யனாக भव-ஆகுக. (288)

(அ) ஸர்வ வியாபகமான ஆத்மாவை சிறியதாகத் தோன்றும்படிச் செய்கிற சரீராதிகளை விலக்கிவிட்டால், அது தானாகவே வியாபகமாய் இருந்துவிடும் என்பதை திருஷ்டாந்தத்துடன் சொல்கிறார்:—

घटाकाशं महाकाश इवात्मानं परात्मनि ।
विलाप्याखण्डभावेन तूष्णीं भव सदा मुने ॥ २८९ ॥

घटाकाशं குடத்திலுள்ள ஆகாசத்தை (குடத்தை கவனிக்காதபோது) महाकाशे इव-வியாபகமான பெரிய ஆகாசத்தில்போல (லயம் செய்து இரண்டும் ஒன்றுதான் என்று பார்ப்பதுபோல), आत्मानं (சரீராதி உபாதிகளினால் சிறியதாய்த் தோன்றும்) ஜீவாத்மாவை परात्मनि-வியாபகமான பரமாத்மாவில் विलाप्य-நன்கு லயம் செய்து (உபாதிகளை விலக்கி இரண்டு ஆத்மாக்களும் ஒன்றேயென்று அறிந்து) अखण्डभावेन-துண்டுபடாத் தன்மையுடன் मुने-ஹே மனனத்தில் ஈடுபடுபவரே! सदा-எப்பொழுதும் तूष्णीं-(அதற்குமேல் செய்ய வேண்டியது யாதொன்றுமில்லாததினால்) சும்மா भव-இருப்பாயாக. "एतद् बुद्ध्वा बुद्धिमान् स्यात् कृतकृत्यश्च भारत" (இதையறிந்து க்ருதக்ருத்யனாக (செய்ய வேண்டியது ஒன்றுமில்லாதவனாக) ஆகிறான்) என்று கீதையில் கூறப்பட்டுள்ளது. (289)

(அ) இவ்விதம் ஜீவாத்மாவைப் பரமாத்மாவில் லயம் செய்வதுபோல அந்தப் பரமாத்மாவில் கல்பிக்கப் பட்டிருக்கும் ஜகத்தையும் அசற்கு அதிஷ்டானமான பரமாத்மாவிலேயே லயம் செய்துவிட வேண்டும் என்பதைச் சொல்கிறார் :—

स्वप्रकाशमधिष्ठानं स्वयंभूय सदात्मना ।
ब्रह्माण्डमपि पिण्डाण्डं त्यज्यतां मलभाण्डवत् ॥ २९० ॥

स्वप्रकाशं-ஸ்வயம் பிரகாசமாயுள்ள अधिष्ठानं-(எல்லா வித கல்பனைகளுக்கும் அடிப்படையாயிருக்கிற) அதிஷ்டானமாக (பிரஹ்மமாக) स्वयंभूय-தானே ஆகி, सत्-आत्मना-ஸத்தாக (எப்பொழுதும் இருக்கும் தன்மையுள்ளதாக)விருக்கும் பிரஹ்ம ஸ்வரூபமாகவே (பாவித்து) ब्रह्माण्डं-உலகம் अपि-அப்படியே पिण्डाण्डं-சரீரமும், मल-भाण्डवत्-மலமுள்ளபாத்திரத்தைப்போல, त्यज्यतां-தள்ளப் படவேண்டியது (அவை பரிசுத்தமான ஆத்மாவாகாது என்றும் அவைகளுக்கு ஆத்மாவை விட்டு இருப்புக் கிடையாது என்றும் அறியவேண்டும்). (290)

## 29. அஹங்காரத்தை விலக்கு

(அ) ஸ்தூல சரீரத்திலுள்ள "நான்" என்கிற எண்ணத்தை விட்டுவிடுவதுபோலவே, இந்திரியங்கள் பிராணன் அந்தஃகரணம் சேர்ந்த ஸூக்ஷ்ம சரீரத்திலும் அவ்வெண்ணத்தை விட்டுவிடவேண்டும் என்கிறார் :—

चिदात्मनि सदानन्दे देहारूढामहंधियम् ।
निवेश्य लिङ्गमुत्सृज्य केवलो भव सर्वदा ॥ २९१ ॥

देह आरूढां-சரீரத்தில் ஏறியிருக்கிற अहंधियं "நான்" என்கிற பாவனையை (சரீரத்திலிருந்து எடுத்து) चित्-आत्मनि-ஞான ஸ்வரூபமாயும் सदानन्दे-நித்யமான ஆனந்த ஸ்வரூபமாயும் உள்ள ஆத்ம தத்வத்தில் निवेश्य-நன்கு வைத்து, लिङ्गं-ஸூக்ஷ்ம சரீரத்தை உத்ஸ்ருஜ்ய-நன்கு எறிந்துவிட்டு (அதுவும் ஆத்மாவல்ல என்று உணர்ந்து) सर्वदा எப்பொழுதும் केवलः தனித்து (உபாதிகளெல்லாம் விலகி சுத்தமாய்) भव இருந்து வா.



केवलो भव என்பதற்கு ஒன்றிலும் ஸம்பந்தமில்லாமல் அஸங்கனாக இரு என்று பொருள். அல்லது ஸஜாதீயம், விஜாதீயம், ஸ்வகதம் என்ற மூன்றுவித வேற்றுமைகளும் அற்றவனாக இரு என்றும் பொருள் கூறலாம். இதுதான் கைவல்யம். வேற்றுமை அக்ஞானத்தால் ஏற்பட்டது. நான் பரமாத்மா என்ற ஞானம் ஏற்பட்டதும் அக்ஞானம் விலகி அதனால் ஏற்பட்ட வேற்றுமைகளும் மறைந்துவிடுகின்றன. அப்பொழுது ஸ்வதஸ்ஸித்தமான கைவல்யம் வியக்தமாகிறது.

यत्रैष जगदाभासो दर्पणान्तः पुरं यथा ।
तद्ब्रह्माहमिति ज्ञात्वा कृतकृत्यो भविष्यसि ॥ २९२ ॥

दर्पण अन्तः(உள்ளே இடைவெளி இல்லாத ஸ்வச்சமான) கண்ணாடிக்கு உள்ளே पुरं-(வாஸ்தவமாயில்லாத போனாலும்) நகரமானது यथा எப்படி (உள்ளே இருப்பதுபோல் தோன்றுகிறதோ அப்படியே), एषः-இந்த जगत् आभासः-ஜகத்தின் தோற்றமானது यत्र எதில் (இருப்பதாகத்) தோன்றுகிறதோ, तत्- அந்த ब्रह्म-பிரஹ்மம் अहं-நான் इति-என்று ज्ञात्वा-அறிந்துகொண்டு कृतकृत्यः-கிருத கிருத்யனாக (இனி செய்யவேண்டியது யாதொன்றும் இல்லாதவனாக) भविष्यसि-ஆகிவிடுவாய்.

यत्सत्यभूतं निजरूपमाद्यं चिदद्वयानन्दमरूपमक्रियम् ।
तदेत्य मिथ्यावपुरुत्सृजैतच्छैलूषवद्वेषमुपात्तमात्मनः ॥ २९३ ॥

सत्यभूतं-ஸத்யமாய் (ஒரு காலத்திலும் பாதிக்கப் படாமல்) இருப்பதாயும், आद्यं-முதலிலேயே (ஆதியற்று) இருப்பதாயும் चित् अद्वय आनन्दं-ஞான ஸ்வரூபமாய், இரண்டற்றதாய் ஆனந்தஸ்வரூபமாய் உள்ளதாயும், अरूपं-ரூபமற்றதாயும், अक्रियं-எவ்வித கிரியையுமற்றதாயும் உள்ள निजरूपं-தன் ஸ்வரூபமாகிய तत्-அதை

प्राप्य-அடைந்து एतत् இந்த मिथ्या वपुः பொய்யான சரீரம்
आत्मनः-தனக்கு उपात्तं-வந்திருப்பதை, वेषं-(நாடகத்தில்
போட்டுக்கொள்ளும்) வேஷத்தை शैलूषवत्-நடன்
(நடனமான பிறகு எப்படி எடுத்து விடுவானோ அது)
போல, उत्सृज-விலக்கிவிடு.

இங்கு நிஜஸ்வரூபத்தை அறிவதுதான் அதையடைவது
என்பது. தன்னிடமில்லாததைப் புதிதாக அடைவதில்லை.
கழுத்தில் சங்கிலி இருந்தபோதிலும் அதை கவனியாமல்
அக்ஞானத்தால் இழந்துவிட்டதாக நினைத்து பிறகு கழுத்தில்
இருப்பதைக் கண்ணால் பார்த்ததும் அதை அடைந்ததுபோல்
நினைக்கிறான் அல்லவா! இதுபோலவே தான். இங்கு சரீரத்தில்
அபிமானத்தை துறப்பதுதான் சரீரத்தை விடுவது என்பது.

(அ) அஹம்பதார்த்தமான ஆத்மாவை சரீரம் முதலிய
வற்றினின்று பிரித்துக்காட்டுகிறார்:—

सर्वात्मना दृश्यमिदं मृषैव नैवाहमर्थः क्षणिकत्वदर्शनात् ।
जानाम्यहं सर्वमिति प्रतीतिः कुतोऽहमादेः क्षणिकस्य सिध्येत् ॥

इदं-இந்த दृश्यं அநுபவிக்கப்படும் பொருள்
(எல்லாம்) क्षणिकत्व दर्शनात्-க்ஷணத்திற்கு க்ஷணம் வேறு
படும் தன்மையுள்ளதாகத் தெரிகிறபடியால் सर्वात्मना-
எந்த பிரகாரம் கவனித்தாலும் मृषा एव-பொய்தான்,
अहमर्थः-"நான்" என்ற சப்தத்தின் அர்த்தமாக न एव-
ஆகவே ஆகாது. क्षणिकस्य-க்ஷணிகமாயிருக்கிற अहमादेः-
அஹங்காரம் முதலியவைகளுக்கு 'अहं-நான் सर्वं-எல்லா
வற்றையும் जानामि-அறிகிறேன்' इति-என்ற प्रतीतिः-
தோற்றம் कुतः-எப்படி सिध्येत्-ஏற்பட முடியும்? (294)

(அ) கண் பார்ப்பதினால் ஏற்படும் அறிவை மாத்திரம்
கொடுக்கும், காது கேட்பதினால் ஏற்படும் அறிவை மாத்திரம்
கொடுக்கும், அப்படியே மற்ற இந்திரியங்களும் அவையவை
களின் கார்யத்தைமாத்திரம் செய்யுமே தவிர எல்லாவித
அறிவையும் ஏற்படுத்திக் கொடுக்க வல்லமையற்றவைகளே
யாகும். அந்தந்த சிற்றறிவை ஏற்படுத்திக்கொடுப்பதும்கூட,



தான் ஜடமாகயிருப்பதினால் ஆத்மாவின் சைதன்ய வியாப்தி
யின் பலத்தினாலேதான். ஆகையால் வாஸ்தவமாக எல்லா
அறிவையும் உடையதாய் இந்திரியாதிகளுக்கெல்லாம் தன்
னுடைய ஸன்னிதி விசேஷத்தினாலேயே சக்தியைக் கொடுப்
பதாயுமுள்ள ஆத்மாதான் வாஸ்தவமாக "நான்" என்ற
பதார்த்தம் என்கிறார்:—

अहंपदार्थस्त्वहमादिसाक्षी नित्यं सुषुप्तावपि भावदर्शनात् ।
ब्रूते ह्यजो नित्य इति श्रुतिः स्वयं तत्प्रत्यगात्मा सदसद्विलक्षणः ॥

नित्यं-எப்பொழுதும், सुषुप्तौ अपि-நல்ல தூக்கத்தில்
கூட भावदर्शनात्-இருப்பதாகத் தெரிவதினால் अहमादिसाक्षी-
அஹங்கார முதலானவைகளுக்கும் ஸாக்ஷியாயிருப்பது
(ஆத்மா) तु-தான் अहंपदार्थः-'நான்' என்கிற வார்த்
தைக்கு அர்த்தம். श्रुतिः-வேதமானது स्वयं-தானே हि-
அல்லவா (இந்த ஆத்மாவை) अजः-உத்பத்தியற்றது
नित्यः-என்றைக்குமிருப்பது इति-என்று ब्रूते-சொல்கிறது.
तत्-ஆகையால் प्रत्यगात्मा-உள்ளேயிருக்கும் ஆத்ம தத்வம்
सत् असत्-विलक्षणः-ஸத்திற்கும் (வியக்தமாயிருக்கும்
கார்யத்திற்கும்) அஸத்திற்கும் (வியக்தமில்லாமலிருக்
கும் காரணத்திற்கும்) வேறுபட்டதேயாகும். (295)

(அ) ஆத்மா எப்படி ஸாக்ஷி, எப்படி நித்யர், என்று
விளக்கிச் சொல்கிறார்:—

विकारिणां सर्वविकारवेत्ता नित्योऽविकारो भवितुं समर्हति ।
मनोरथस्वप्नसुषुप्तिषु स्फुटं पुनः पुनर्दृष्टमसत्त्वमेतयोः ॥ २९६ ॥

विकारिणां-மாறுதலடைகிற எல்லா பதார்த்தங்
களுடைய सर्व विकार वेत्ता-எல்லாவித மாறுதல்களையும்
(ஸாக்ஷியாயிருந்து) அறிகிறது எதுவோ அது नित्यः-
எப்பொழுதும் இருப்பதாயும் अविकारः-தான் மாறுதலடை
யாததாயும் भवितुं-இருக்கவேண்டியதே समर्हति-மிகவும்
நியாயம். एतयोः-இந்த (மாறுதலடையும் சரீரம்
முதலானது, அதில் நான் என்று அபிமானிக்கும் ஜீவன்)

இருவர்களுடைய அஸத்வம்-வாஸ்தவமாக இல்லாத் தன்மையானது मनोरथ स्वप्न सुषुप्तिषु மனக்கோட்டை கட்டும்போதும் ஸ்வப்னம் காணும்போதும், நல்ல தூக்கத்திலும் पुनः पुनः-அடிக்கடி स्फुटं-தெளிவாக दृष्टं-அனுபவிக்கப்பட்டிருக்கிறது. (296)

(அ) ஆகையால் என்ன செய்யவேண்டுமென்று சொல்கிறார்:—

अतोऽभिमानं त्यज मांसपिण्डे पिण्डाभिमानिन्यपि बुद्धिकल्पिते ।
कालत्रयाबाध्यमखण्डबोधं ज्ञात्वा स्वमात्मानमुपैहि शान्तिम् ॥२९७॥

अतः-மேலே சொன்ன காரணங்களினால் मांसपिण्डे-மாம்ஸ பிண்டமாகிற இந்த சரீரத்திலும், बुद्धिकल्पिते-புத்தியினால் கல்பிக்கப்பட்டிருக்கிற पिण्डाभिमानिनि-அப்பிண்டத்தை தானென்று நினைக்கிற ஜீவனிடத்திலும் अपि கூட अभिमानं-'நான்' என்று எண்ணுவதை त्यज-விட்டுவிடு. कालत्रय-अबाध्यं-முக்காலத்திலும் பாதிக்க முடியாததாய் अखण्ड-बोधं-துண்டுபடாத அறிவு ஸ்வரூபமாயிருப்பதை स्वं-தன்னுடைய आत्मानं-ஆத்மாவாக ज्ञात्वा-அறிந்துகொண்டு शान्तिं-சாந்தியை उपैहि-அடைவாயாக. (297)

(அ) இந்த அபிமானத்தின் லக்ஷணத்தை கொஞ்சம் விஸ்தரித்துச் சொல்லி அதை விட்டுவிட்டால் நித்யமாயுள்ள ஆனந்த ஸ்வரூபமாகவே யிருக்கலாமென்பதைக் காட்டுகிறார்:—

त्यजाभिमानं कुलगोत्रनामरूपाश्रमेष्वार्द्रशवाश्रितेषु ।
लिङ्गस्य धर्मानपि कर्तृतादींस्त्यक्त्वा भवाखण्डसुखस्वरूपः ॥ २९८ ॥

आर्द्र-शव-आश्रितेषु-ஈரமாயிருக்கிற பிரேதமாகிய இந்த சரீரத்தை ஒட்டினதாயுள்ள कुल-गोत्र नाम-रूप-आश्रमेषु-குலம்-கோத்ரம்-பெயர்-ரூபம்-ஆசிரமம் இவைகளில் अभिमानं-அபிமானத்தை त्यज-விட்டுவிடு. लिङ्गस्य-ஸூக்ஷ்ம சரீரத்தினுடைய धर्मान्-தர்மங்களாகிற कर्तृतादीन्-கர்த்தாவாயிருக்கும் தன்மை (போக்தாவாயிருக்கும் தன்மை) முதலியதுகளையும் अपि-கூட त्यक्त्वा-விட்டுவிட்டு अखण्ड-सुखस्वरूपः (இந்த சரீரங்களுக்கெல்லாம் வேறுபட்டதாயுள்ள) பரிபூர்ணமான-ஆனந்த-ஸ்வரூபனாய் भव-இருந்து வா. (298)



(அ) ஆத்மஞானம் ஏற்படவிடாமல் தடுக்கும் எல்லா காரணங்களுக்கும் மூலகாரணமாயிருப்பது அஹங்காரமேயாவதால் அதற்கு இடமே கொடுக்காமல் வெகு ஜாக்கிரதையாய் இருக்கவேண்டுமென்று 299 முதல் 311 சுலோகங்கள் முடிய வற்புறுத்திச்சொல்கிறார்:—

सन्त्यन्ये प्रतिबन्धाः पुंसः संसारहेतवो दृष्टाः ।
तेषामेषां मूलं प्रथमविकारो भवत्यहंकारः ॥ २९९ ॥

पुंसः-புருஷனுக்கு संसार-हेतवः-ஸம்ஸாரத்திற்கு-காரணங்களாக दृष्टाः-காணப்படும் प्रतिबन्धाः-இடைஞ்சல்கள் अन्ये-வேறு सन्ति-இருக்கின்றன. एषां-இந்த तेषां-அந்த இடைஞ்சல்களுக்கெல்லாம் मूलं-மூலமாக प्रथम-विकारः-(அவித்யையின்) முதல் விகாரமான अहंकारः-அஹங்காரமே भवति-இருக்கிறது. (299)

यावत्स्यात्स्वस्य संबन्धोऽहंकारेण दुरात्मना ।
तावन्न लेशमात्रापि मुक्तिवार्ता विलक्षणा ॥ ३०० ॥

स्वस्य தனக்கு यावत् எதுவரை दुरात्मना-துஷ்டஸ்வபாவமுள்ள अहंकारेण-அஹங்காரத்துடன் संबन्धः-ஸம்பந்தம் स्यात्-இருக்குமோ, तावत्-அதுவரையில் विलक्षणा-அதற்கு நேர்எதிரிடையான मुक्ति वार्ता-மோக்ஷம் என்கிற பேச்சு लेशमात्राऽपि-கொஞ்சங்கூட न-ஸாத்தியமில்லை. (300)

अहंकारग्रहान्मुक्तः स्वरूपमुपपद्यते ।
चन्द्रवद्विमलः पूर्णः सदानन्दः स्वयंप्रभः ॥ ३०१ ॥

अहंकार-ग्रहात्-அஹங்காரமாகிற கிரஹத்திலிருந்து (ராகுவிலிருந்து) मुक्तः-விடுபட்டவனாய், चन्द्रवत्-(ராகுவிலிருந்து விடுபட்ட) சந்திரன்போல, विमलः-நிர்மலமாய், पूर्णः-பரிபூர்ணமாய், सदा-आनन्दः எப்பொழுதும் ஆனந்த ரூபியாய், स्वयंप्रभः (வேறு எதையும் அபேக்ஷிக்காமல்) தானே-பிரகாசமாய் (இருந்துகொண்டு) स्वरूपं-தன்னுடைய வாஸ்தவமான ஸ்வரூபத்தை उपपद्यते-அடைகிறான். (301)

यो वा पुरैषोऽहमिति प्रतीतो बुद्धयाऽविविक्तस्तमसातिमूढया ।
तस्यैव निःशेषतया विनाशे ब्रह्मात्मभावः प्रतिबन्धशून्यः ॥ ३०२ ॥

तमसा-அக்ஞானத்தினால் अतिमूढया-மிகவும் மோஹத்தையடைந்திருக்கும் बुद्ध्या புத்தியுடன் अविविक्तः-தனித்துப் பிரித்து அறியாமல் पुरा-முன்னால் एषः-இவன் अहं-நான் इति-என்று यो वा प्रतीतः-எது பரிச்சின்னமாகத் தெரிந்து கொண்டிருந்ததோ, तस्य-அதற்கு निश्शेषतया-கொஞ்சமேனும் மிச்சமன்னியில் विनाशे-நாசம் ஏற்பட்டுவிட்டால் एव தான் प्रतिबन्ध शून्यः-எவ்வித தடங்கலுமில்லாமல் ब्रह्म आत्म भावः-பிரஹ்மம் தான் ஆத்மா-என்கிற-பாவனை (ஏற்பட்டுவிடும்). (302)

(அ) அந்த அஹங்காரத்தை எப்படி நாசம் செய்வதென்று திருஷ்டாந்தம் மூலமாக விளக்குகிறார்:—

ब्रह्मानन्दनिधिर्महाबलवताहंकारघोराहिना
संवेष्ट्यात्मनि रक्ष्यते गुणमयैश्चण्डैस्त्रिभिर्मस्तकैः ।
विज्ञानाख्यमहासिना द्युतिमता विच्छिद्य शीर्षत्रयं
निर्मूल्याहिमिमं निधिं सुखकरं धीरोऽनुभोक्तुं क्षमः ॥ ३०३ ॥

ब्रह्मानन्द-निधिः-பிரஹ்மாநந்தமாகிற புதையல் महा-बलवता-(விஷயங்களாகிற பாலை நிறைய சாப்பிட்டு) மிகவும் பலசாலியான अहंकार घोर-अहिना-அஹங்காரமாகிற மிகவும் பயங்கரமான ஸர்ப்பத்தினால் गुणमयैः-(ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிற) குணங்களாகிற चण्डैः-பயங்கரமான त्रिभिः-மூன்று मस्तकैः-தலைகளால் आत्मनि தன்னிடத்தில் संवेष्ट्य-நன்கு சுற்றிக்கொண்டு रक्ष्यते-(பிறர் அனுபவிக்க முடியாமல்) ரக்ஷிக்கப்பட்டு வருகிறது. द्युतिमता-நன்கு பிரகாசிக்கிற विज्ञानाख्य महासिना சிறந்த அறிவாகிய அனுபவம் என்கிற-பெரிய வாளால் शीर्षत्रयं-(அந்த) தலைகள் மூன்றையும் विच्छिद्य-நன்கு வெட்டிவிட்டு अहिं-(அந்த) ஸர்ப்பத்தை निर्मूल्य-நன்கு நாசம் செய்து விட்டு सुखकरं-ஸுகத்தைத் தருகிற इमं-இந்த निधिं-புதையலை अनुभोक्तुं-அனுபவிப்பதற்கு धीरः-நல்ல தீரனாயிருப்பவன் (தெளிந்த புத்தியுடனிருப்பவன்) क्षमः - தகுதியுள்ளவனாவான். (303)

यावद्वा यत्किंचिद्विषदोषस्फूर्तिरस्ति चेद्देहे ।
कथमारोग्याय भवेत्तद्वदहंतापि योगिनो मुक्त्यै ॥ ३०४ ॥

विष-दोष-स्फूर्तिः-விஷத்தினால் ஏற்படும்-தோஷத்தின் ஸம்பந்தம் देहे-சரீரத்தில் यावत् वा-எதுவரையிலாவது यत्किंचित्-கொஞ்சமேனுமாவது अस्ति चेत्-இருக்குமேயானால் कथं-எப்படி आरोग्याय-ஆரோக்கியத்தின் பொருட்டு भवेत्-ஏற்படமுடியும்? तद्वत्-அதைப்போலவே योगिनः-யோகிக்கு अहंता अपि-அஹங்காரமும் (எதுவரையிலாவது கொஞ்சமாவது வாஸனாரூபமாகவாவது இருந்துவந்தால்) मुक्त्यै-மோக்ஷத்தின் பொருட்டு (இடையூறுதான்). வாஸனைகூட இல்லாதபடி அஹந்தையை அடியோடு விலக்கவேண்டும். (304)

अहमोऽत्यन्तनिवृत्त्या तत्कृतनानाविकल्पसंहृत्या ।
प्रत्यक्तत्त्वविवेकादयमहमस्मीति विन्दते तत्त्वम् ॥ ३०५ ॥

अहमः-அஹங்காரத்தை अत्यन्त-निवृत्त्या-பூராவும் போக்கடிப்பதினால் तत्-कृत नाना-विकल्प-संहृत्या-அதனால் ஏற்படும்-பலவித - தோஷங்களை-நாசம் செய்வதால்

प्रत्यक्-तत्त्व-विवेकात्-உள்ளிருக்கிற ஆத்மதத்வத்தைப் பிரித்து அறிவதினால் "अयं-இதுவாகத்தான் अहं-நான் अस्मि-இருக்கிறேன்" इति-என்று तत्त्वं-உண்மையை विन्दते-நேரில் அனுபவிக்கிறான். (305)

अहंकर्तर्यस्मिन्नहमिति मतिं मुञ्च सहसा
विकारात्मन्यात्मप्रतिफलजुषि स्वस्थितिमुषि ।
यदध्यासात्प्राप्ता जनिमृतिजरादुःखबहुला
प्रतीचश्चिन्मूर्तेस्तव सुखतनोः संसृतिरियम् ॥ ३०६ ॥

चिन्मूर्तेः-ஞான ஸ்வரூபியாய் सुखतनोः-ஆனந்த ஸ்வரூபியாய் प्रतीचः-உள்ளே இருக்கிறதான तव-உனக்கு (ஆத்ம தத்வமாயிருக்கிற உனக்கு) जनि-मृति-जरा-दुःख-बहुला-பிறப்பு இறப்பு மூப்பு துக்கங்கள் நிறைந்த इयं-இந்த संसृतिः-ஸம்ஸாரமானது यत्-अध्यासात्-எதில் நான் என்று அத்யாஸம் ஏற்பட்டிருப்பதனால் प्राप्ता-வந்திருக்கிறதோ अस्मिन्-இந்த विकार आत्मनि-(ஸூக்ஷ்ம பூதங்களின்) கார்யமாயிருக்கும் தன்மையுடையதாயும் आत्म-प्रतिफल-जुषि-ஆத்மாவின் பிரதிபிம்பத்துடன் கூடியதாயும் स्वस्थिति-मुषि-தன்னுடைய (ஆத்மாவினுடைய வாஸ்தவமான ஞான-ஆனந்த) ஸ்வரூபத்தைத் திருடிக்கொண்டதாயும் உள்ள अहंकर्तरि-அஹங்காரத்தில் अहं-इति-मतिं-'நான்' என்ற எண்ணத்தை सहसा-உடனே मुञ्च-விட்டுவிடு. (306)

(அ) அஹங்காரத்தில் வைத்த அத்யாஸத்தினால்தான் ஆத்மாவிற்கு ஸம்ஸாரம் ஏற்பட்டிருக்கிறது என்று சொன்ன விஷயத்தையே நன்கு உறுதிப்படுத்தி அந்த அத்யாஸமில்லையானால் ஸம்ஸாரம் ஏற்படாது என்பதையும் சொல்கிறார்:—

सदैकरूपस्य चिदात्मनो विभोरानन्दमूर्तेरनवद्यकीर्तेः ।
नैवान्यथा क्वाप्यविकारिणस्ते विनाहमध्यासममुष्य संसृतिः ॥ ३०७ ॥



सदा-एक-रूपस्य-எப்பொழுதும் ஒரே ஸ்வரூபத்துடனிருப்பதாயும் चित् आत्मनः-ஞான ஸ்வரூபமாயும் विभोः-வியாபகமாயும் आनन्द मूर्तेः-ஆனந்தஸ்வரூபமாயும் अनवद्य-कीर्तेः-எவ்வித தோஷமும் சொல்வதற்கிடமில்லாமல் கீர்த்தி பெற்றதாயும் अविकारिणः-எவ்வித மாறுதலற்றதாயும் இருக்கும் ते-உனக்கு अमुष्य-அதனுடன் (அஹங்காரத்துடன்) अहं-अध्यासं विना-'நான்' என்ற அத்யாஸமில்லாமல் अन्यथा-வேறு எவ்விதமாகவும் क्वापि-எக்காலத்திலும் संसृतिः-ஸம்ஸாரமானது न एव-ஏற்படவே ஏற்படாது.

'सदेकरूपस्य' என்ற பாடத்தில் ஸத்தாக, முக்காலத்திலும் மாறாமல் ஒரே ஸ்வரூபமாக இருக்கிற என்று பொருள். அத்யாஸத்தால் தான் ஆத்மாவுக்கு பல ஸ்வரூபம், ஜடத் தன்மை, குறுகிய தன்மை, துன்பம், அபகீர்த்தி எல்லாம் ஏற்பட்டிருக்கிறது என்பது கருத்து. (307)

तस्मादहंकारमिमं स्वशत्रुं भोक्तुर्गले कण्टकवत्प्रतीतम् ।
विच्छिद्य विज्ञानमहासिना स्फुटं भुङ्क्ष्वात्मसाम्राज्यसुखं यथेष्टम् ॥

तस्मात्-ஆகையால் भोक्तुः-சாப்பிடுகிறவனுடைய गले-தொண்டையில் कण्टकवत्-(அகப்பட்டுக்கொண்டு சிரமப்படுத்தும்) முள்ளைப்போல प्रतीतं-ஏற்பட்டிருக்கிற इमं-இந்த स्वशत्रुं-தனக்கு சத்ருவாயிருக்கும் अहंकारं அஹங்காரம் என்பதை विज्ञान महासिना அனுபவ ஞானமாகிற பெரியவாளால் विच्छिद्य-நன்கு வெட்டிவிட்டு आत्म साम्राज्य सुखं-ஆத்மாவிற்குள்ள (வேறு எதற்கும் உள்படவேண்டியதில்லாமல் இருக்கும் தன்மையான) ஸாம்ராஜ்யமான ஆனந்தத்தை स्फुटं-நன்கு (எவ்வித தடையுமன்றியில்) यथा इष्टं-விருப்பப்படி भुङ्क्ष्व-அனுபவித்துக் கொள். (308)

ततोऽहमादेर्विनिवर्त्य वृत्तिं संत्यक्तरागः परमार्थलाभात् ।
तूष्णीं समास्स्वात्मसुखानुभूत्या पूर्णात्मना ब्रह्मणि निर्विकल्पः ॥

ततः-அதன்பிறகு अहमादेः-அஹங்காரம் முதலானதிலிருந்து वृत्ति மனோவிருத்தியை विनिवर्त्य நன்கு திருப்பி संत्यक्तरागः-ஆசையை நன்கு விட்டுவிட்டவனாக परमार्थलाभात् உத்தமமான பிரயோஜனம் கிடைத்துவிட்டபடியால் (இனி வேறு எதையும் அபேக்ஷித்து பிரயத்னம் செய்ய அவசியமில்லாததினால்) आत्म सुख-अनुभूत्या-ஆத்மாவின் ஸ்வரூபமான ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டு पूर्णात्मना-(எவ்விதக் குறைவுமண்ணியில்) பரிபூர்ணஸ்வரூபமாயிருந்துகொண்டு निर्विकल्पः-(எவ்வித ஸந்தேஹம் முதலிய) விகல்பங்கள் அற்றவனாய் ब्रह्मणि-ப்ரஹ்மத்தினிடத்திலேயே तूष्णीं-(வேறு எவ்விதப் பிரவிருத்தியுமில்லாமல்) சும்மா समास्स्व நன்கு இருந்து கொள். (309)

## 30. ஜாக்ரியம் அவசியம்

समूलकृत्तोऽपि महानहं पुनर्व्युल्लेखितः स्याद्यदि चेतसा क्षणम् ।
संजीव्य विक्षेपशतं करोति नभस्वता प्रावृषि वारिदो यथा ॥ ३१० ॥

महान्-மிகவும் பெரிதாயிருக்கிற अहं-அஹங்காரமானது समूल कृत्तोऽपि-வேருடன் அறுக்கப்பட்டபோதிலும் पुनः-மறுபடியும் चेतसा-மனஸினால் क्षणं-ஒரு க்ஷணம் व्युल्लेखितः स्यात् यदि-நினைத்துப்பார்க்க நேரிட்டாலும்கூட प्रावृषि-மழைக் காலத்தில் नभस्वता-காற்றினால் (கொண்டு வரப்பட்ட) वारिदः-மேகம் यथा-எப்படி (ஏராளமாக நீரைப் பொழிகிறதோ) அப்படியே संजीव्य-மறுபடியும் உயிர் பெற்றதாய் ஏற்பட்டு विक्षेप शतं-நூற்றுக்கணக்கான விக்ஷேபங்களை करोति-ஏற்படுத்திவிடும்.

சரத்காலத்தில் மேகம் இருப்பதே தெரியாமலிருந்தும் பின்னால் எங்கிருந்தோ மழை காலத்தில் காற்று மேகங்களை திரட்டிக்கொண்டு வந்து மழை பெய்யும்படி செய்வதுபோல, அஹங்காரத்தில் வைத்திருந்த அத்யாஸம் ஆத்ம ஞானத்தினால் போய்விட்டதாக நினைக்கும்போதே அவ்வத்யாஸத்தை



நினைத்துப்பார்த்தாலும் போதும், உடனே அதற்கு உயிர் வந்து மேல் மேல் விக்ஷேபங்களுக்குக் காரணமாகுமென்று தாத்பர்யம். (310)

(அ) சரத்காலத்தில் வேருடன் அறுக்கப்பட்டபுல்லெல்லாம் இருக்கிறவிடம் தெரியாமல் போயிருந்தபோதிலும் மழை பெய்தவுடன் எப்படி மறுபடியும் பூமியிலிருந்து முளைத்து தலைதூக்குகிறதோ அதேமாதிரி அத்யாஸத்திற்கு கொஞ்சம் இடம் கொடுத்தாலும் மறுபடியும் ஆபத்துதான் என்பதை விளக்குகிறார் :—

निगृह्य शत्रोरहमोऽवकाशः क्वचिन्न देयो विषयानुचिन्तया ।
स एव संजीवनहेतुरस्य प्रक्षीणजम्बीरतरोरिवाम्बु ॥ ३११ ॥

शत्रोः-சத்ருவாயிருக்கும் अहमः-அஹங்காரத்திற்கு, निगृह्य-நிக்ரஹம் செய்த பிறகு क्वचित्-ஒரு ஸமயத்திலும் विषय अनुचिन्तया-விஷயங்களை நினைத்துப் பார்ப்பதின் மூலமாய் अवकाशः - இடம் न देयः - கொடுக்கக்கூடாது. स एव-அவ்விதம் இடம் கொடுப்பதே अस्य-இந்த அஹங்காரத்திற்கு प्रक्षीण जम्बीर तरोः-நன்கு வாடின எலுமிச்சம் செடிக்கு अम्बु-ஜலம் इव-(எப்படி மறுபடியும் புத்துயிர் உண்டுபண்ணுமோ அது) போல संजीवन हेतुः-மறுபடியும் உயிருடன் கிளம்பக் காரணமாகும்.

விவேக விக்ஞானத்தால் அஹங்காரம் அழிந்தபோதிலும் விஷயத்தை நினைக்க ஆரம்பித்தால் மறுபடியும் உயிர்பெற்று இவனை ஸம்ஸாரத்தில் ஆழ்த்திவிடும். எப்படியெனில் விஷயத்தை நினைக்க ஆரம்பித்தால் ஸ்வஸ்வரூபம் மறைந்துவிடும். சரீரம், மனம், இந்திரியம் முதலானவைகளையே 'நான்' என்று எண்ணுவான். அப்பொழுது அஹங்காரம் உயிர்பெற்று வலுவடையும். ஸ்வஸ்வரூபானந்தம் மறைந்துவிட்டால் விஷயம்மூலம் மனதிற்கு ஆனந்தம் ஏற்படும் என்று எண்ணி விஷயத்தை ஸங்கல்பிப்பான். அதாவது விஷயம் எனக்கு மிகவும் நல்லது என்று நினைப்பான். இந்த ஸங்கல்பத்தால் விஷயங்களில் காமம்—ஆசை—உண்டாகும். ஆசையினால் விஷயங்களை அடைய பிரவர்த்

திப்பான் இதன் மூலம் ஸ்வஸ்வரூபத்திலிருந்து வெகுதூரம் விலகிச்சென்று அதோகதியை அடைவான். விஷயத்தை நினைக்காமல், அஹங்காரத்திற்கு இடம் கொடுக்காமல் ஸ்வஸ்வரூபத்திலேயே நிலைத்து நின்றால் அவனுக்கு ஸங்கல்பம், காமம், ப்ரவ்ருத்தி ஒன்றும் ஏற்படாது. இவன் ஸம்ஸார கதியை அடையமாட்டான். (311)

देहात्मना संस्थित एव कामी विलक्षणः कामयिता कथं स्यात् ।
अतोऽर्थसंधानपरत्वमेव भेदप्रसक्त्या भवबन्धहेतुः ॥ ३१२ ॥

देह-आत्मना-தேஹமே தான் தான் என்று (நினைத்துக் கொண்டு) संस्थितः-இருப்பவன் एव-தான் कामी-ஆசையுள்ளவனாக இருப்பான். विलक्षणः-வேறுபட்டவன் (நான் தேஹமல்லவென்று உறுதியுடனிருப்பவன்) कामयिता-ஆசைப்படுகிறவனாக कथं-எப்படி स्यात्-இருக்க முடியும்? अतः-ஆகையால், अर्थ-संधान-परत्वं-விஷயங்களை சிந்தனை பண்ணுவதில் ஈடுபடுவது एव-தான் भेदप्रसक्त्या-(ஆசைப்படுகிறவன், ஆசைப்படும் விஷயம் என்ற விதமாக) வேற்றுமையை உண்டுபண்ணுவது மூலமாக भवबन्धहेतुः-ஸம்ஸாரமாகிற பந்தத்திற்கு காரணமாயிருக்கிறது. (312)

(அ) பூமியில் புதைக்கப்பட்டிருக்கும் ஒரு விதை முளைத்து துளிர் விட்டு செடியாகி மரமாக இடமே கொடுக்காமல் முதலிலேயே தடுத்துவிட்டால், தானே ப்ரயோஜனமற்று மண்ணுடன் மண்ணாகப்போய்விடும். அவ்விதம் தடுக்காமல் இடம் கொடுத்துக்கொண்டே வந்தால் நன்கு வேறான்றி அவ்விதையே மிகவும் பெரிதாகிவிடும். அதுபோலவே அஹங்காரமாகிற விதை ஸம்ஸாரத்திற்குக் காரணமாக விடாமல் தடுக்கவேண்டுமானால் அதிலிருந்து முதலில் ஏற்படும் விஷய-அனுசிந்தனையென்பதை நன்கு தடுத்தாகவேண்டும் என்கிறார்:—

कार्यप्रवर्धनाद्बीजप्रवृद्धिः परिदृश्यते ।
कार्यनाशाद्बीजनाशस्तस्मात्कार्यं निरोधयेत् ॥ ३१३ ॥



वासनावृद्धितः कार्यं कार्यवृद्ध्या च वासना ।
वर्धते सर्वथा पुंसः संसारो न निवर्तते ॥ ३१४ ॥

कार्यप्रवर्धनात्-காரியம் நன்கு விருத்தியடைவதினால் बीज प्रवृद्धिः-விதை நன்குவிருத்தியடைகிறதென்பது परिदृश्यते-காணப்படுகிறது. (அப்படியே) कार्य-नाशात्-கார்யத்திற்கு நாசமேற்பட்டால் बीज नाशः-விதையின் நாசம் (ஏற்படுகிறதென்பதும் காணப்படுகிறது) तस्मात्-ஆகையினால் कार्यं-கார்யத்தை निरोधयेत्-உண்டாகாமல் தடுக்கவேண்டும். (இந்த நியாயப்படி)— (313)

वासना-वृद्धितः-(அஹங்காரத்தில் அடங்கியுள்ள) விஷயவாஸனை விருத்தியடைந்ததேயானால் कार्यं-அதிலிருந்து (விஷய அனுசிந்தனம், ஆசை, ப்ரவிருத்தி, தர்மாதர்மம், ஸுகதுக்கம் முதலிய) கார்யம் ஏற்படுகிறது. कार्य-वृद्ध्या-அக்காரியங்கள் விருத்தியடைவதினால் वासना च-வாஸனையும் वर्धते-விருத்தியடைகிறது. सर्वथा-எல்லாவிதமாகவும் पुंसः-புருஷனுக்கு संसारः-ஸம்ஸாரமானது न निवर्तते-விலகுவதேயில்லை.

ஸ்வரூபானந்தத்தை மறந்ததால், ஆனந்தத்தைத்தரும் என்ற ப்ரமத்தால் வெளி விஷயங்களைத் தேட முயற்சி. கிடைக்காவிட்டால் துக்கம் கிடைத்தால் ஸந்தோஷம். அதனால் கர்வம், தர்மத்தை மீறிச் செல்லல், புத்தியில் அசக்தி, ஆத்மாவை அறியும் சக்தியில்லாமை தேஹத்தையே ஆத்மா என எண்ணுதல் இதனால் மூப்பு, மரணம் பிறவி முதலியவை (ஸம்ஸாரம்) தொடர்ந்துவரும். (314)

(அ) ஆகையால் உள்ளடங்கியிருக்கும் வாஸனையை வெளிக்கிளம்பவிடாமல் தடுக்கவேண்டியது மிகவும் அவசியம்; விஷயத்தைப்பற்றி சிந்தனை செய்யாமலிருந்தால் வாஸனை குறையும்; வாஸனையின் கார்யமான சிந்தனை ஆசையாக பரிணமித்து ப்ரவிருத்தியில் கொண்டுவிடாமலிருப்பதற்கு அந்த சிந்தனையை நிரோதம் செய்து கொள்ளவேண்டும் என்கிறார்:—

संसारबन्धविच्छित्त्यै तद्द्वयं प्रदहेद्यतिः ।
वासना प्रेर्यते ह्यन्तः चिन्तया क्रियया बहिः ॥ ३१५ ॥

संसार बन्ध विच्छित्त्यै-ஸம்ஸாரமாகிற கட்டை நன்கு அறுத்துவிடுவதற்கு यतिः-யதியானவர் (பிரயத்தினம் செய்பவர்) तत्-அந்த द्वयं-(வாஸனை, அதன் கார்யம், ஆகிய) இரண்டையும் प्रदहेत् நன்கு எரித்துவிடவேண்டும். वासना हि வாஸனையோ अन्तः-உள்ளே (மனஸில்) चिन्तया விஷயங்களை சிந்திப்பதினாலும், बहिः-வெளியில் क्रियया-அதையனுஸரித்து சரீராதிகளால் செய்யப்படும் கிரியையினாலும் प्रेर्यते-ஏவப்படுகிறது (விருத்தியடைகிறது). (315)

ताभ्यां प्रवर्धमाना सा सूते संसृतिं आत्मनः ।
त्रयाणां च क्षयोपायः सर्वावस्थासु सर्वदा ॥ ३१६ ॥

सर्वत्र सर्वतः सर्वब्रह्ममात्रावलोकनम् ।
सद्भाववासनादार्ढ्यं तत् त्रयं लयमश्नुते ॥ ३१७ ॥

ताभ्यां-(சிந்தனை, கிரியை ஆகிய) அந்த இரண்டினாலும் प्रवर्धमाना-நன்கு விருத்தியடையும் सा-அந்த வாஸனையானது आत्मनः-ஆத்மாவிற்கு संसृतिं-ஸம்ஸாரத்தை सूते-ஏற்படுத்துகிறது. त्रयाणां च-(சிந்தனை, கிரியை, வாஸனை, ஆகிய இந்த) மூன்றுக்கும் क्षय उपायः-நாசத்தை யுண்டுபண்ணும் உபாயம் (ஸாதனம்) सर्व अवस्थासु-(ஜாக்கிரத் முதலிய) எல்லா-நிலைகளிலும் सर्वदा-எப்பொழுதும் सर्वत्र-எல்லாவிடத்திலும் सर्वतः-எல்லா விஷயத்திலும் सर्व ब्रह्म मात्र अवलोकनं-எல்லாம் பிரஹ்மமே தான் என்று பார்ப்பது என்பது தான் (இவ்விதம்) सत् भाव वासना दार्ढ्यं-ஸத்தாகிய பிரஹ்மம் தான் இருக்கிறது என்ற வாஸனை உறுதிப்பட்டு விட்டால் तत्-அந்த त्रयं-(சிந்தனை, கிரியை, வாஸனை ஆகிய) மூன்றும் लयं-நாசத்தை अश्नुते-அடைந்து விடும். (316, 317)



(அ) இம்மூன்றும் லயமடைவதை அவரவர்களே அறிந்து கொள்ளலாம். வெளிப்பிரவிருத்தி குறைந்தால் உள் சிந்தனை குறைந்திருக்கவேண்டும். உள் சிந்தனை குறைந்தால் வாஸனை குறைந்து வருகிறதென்று அறியலாம்; வாஸனையேயில்லாமல் இருப்பதே ஜீவன் முக்தி நிலை என்கிறார்:—

क्रियानाशे भवेत् चिन्तानाशोऽस्मात् वासनाक्षयः ।
वासनाप्रक्षयो मोक्षः स जीवन्मुक्तिरिष्यते ॥ ३१८ ॥

क्रिया नाशे-கிரியைக்கு நாசமேற்பட்டால் चिन्ता नाशः-விஷய சிந்தனைக்கு நாசம் भवेत्-ஏற்பட்டிருக்கும். अस्मात्-இது இருந்தால் (விஷய சிந்தனை நாசமடைந்தால்) वासना क्षयः-வாஸனைக்கு நாசம் இருக்கும். वासना प्रक्षयः-வாஸனைகள் நன்கு நாசத்தை யடைவதுதான मोक्षः-(ஸம்ஸாரத்திலிருந்து விடுதலையாகிற) மோக்ஷம் எனப்படுவது. सः-அந்த மோக்ஷமே जीवन्मुक्तिः-ஜீவன் முக்தி (சரீரம் ஜீவித்திருக்கும்போதே விடுதலை) என்று इष्यते-கருதப்படுகிறது. (318)

सद्वासनास्फूर्तिविजृम्भणे सति ह्यसौ विलीना त्वहमादिवासना ।
अतिप्रकृष्टाऽप्यरुणप्रभायां विलीयते साधु यथा तमिस्रा ॥ ३१९ ॥

अति प्रकृष्टा-மிகவும் அதிகமாயிருக்கும் तमिस्रा-இருட்டு अपि-கூட अरुण प्रभायां-அருணோதயமாகி ஏற்படும் வெளிச்சம் வரும் போது यथा-எப்படி साधु-நன்றாக विलीयते-போய் விடுகிறதோ (அப்படியே), सद् वासना स्फूर्ति विजृम्भणे-பிரஹ்ம வாஸனையின் வெளிப்படல் நன்கு விருத்தியுடன் सति-இருந்ததேயானால் हि-ஸந்தேஹமன்னியில் असौ-இந்த अहमादिवासना-(சரீராதிகளில்) நான் (என்னுடையது) முதலான வாஸனை विलीना तु-லயத்தையே யடைந்து விடும். (319)

(அ) நான் பிரஹ்மம் என்கிற திடமான வாஸனையே விஷய வாஸனைகளை நாசம் செய்துவிடுமேயானால், ஸாக்ஷாத்தாகவே அந்த பிரஹ்மத்தை நான் என்றே அறிகிறவனுக்கு அவ்வாஸனைகளால் ஏற்படக்கூடிய ஸம்ஸாரபந்தம் கிடையாதென்பது சொல்லாமலே விளங்கும். அருணோதயத்தினாலேயே இருட்டுப் போகுமேயானால் ஸூர்யன் உதித்தபிறகு இருட்டிற்கு இடம் ஏது என்கிறார்:—

तमस्तमःकार्यमनर्थजालं न दृश्यते सत्युदिते दिनेशे ।
तथाद्वयानन्दरसानुभूतौ नैवास्ति बन्धो न च दुःखगन्धः ॥ ३२० ॥

दिनेशे பகலுக்கு அதிபதியான ஸூர்யன் उदिते सति-உதயமாகிவிட்டால் तमः-இருட்டும் तमःकार्यं-இருட்டினால் ஏற்படுகிற अनर्थजालं-அனர்த்தக் கூட்டமும் न दृश्यते-காணப்படுவதில்லை. तथा-அதைப்போலவே अद्वय आनन्द रस अनुभूतौ-இரண்டற்ற பிரஹ்மானந்தத்தின் ரஸத்தை அனுபவிக்கும்போது बन्धः-ஸம்ஸாரபந்தம் न एव अस्ति-இருக்கவே இருக்காது दुःखगन्धः च-(அந்த பந்தத்தினால் ஏற்படும்) துக்கங்களின் கந்தம் கூட न-இராது. (320)

(அ) பிராரப்த கர்மாதீனமாக ஆத்மாவைத் தவிர இரண்டாவதாக வெளியில் ஜகத்தும் உள்ளே அஹங்காரம் முதலியதும் தோன்றுமேயானால் அவைகளையும் ஆத்மாவில் லயம் செய்து எல்லாவற்றையும் ஆத்மாவாகவே பார்க்க வேண்டும் என்கிறார்:—

दृश्यं प्रतीतं प्रविलापयन्स्वयं सन्मात्रमानन्दघनं विभावयन् ।
समाहितः सन्बहिरन्तरं वा कालं नयेथाः सति कर्मबन्धे ॥ ३२१ ॥

कर्मबन्धे-(பிராரப்த) கர்மாவின் பந்தம் सति-இருக்கும்போது प्रतीतं-தோன்றுகிற दृश्यं-பார்க்கப்படும் பதார்த்தத்தையெல்லாம் (அதன் அதிஷ்டானமாகிய பிரஹ்மத்தில்) प्रविलापयन्-நன்கு லயம் செய்தும் स्वयं-தன்னை (தன் ஆத்மஸ்வரூபத்தை) सन्मात्रं-ஸத்தாகிய பிரஹ்மமே என்றும் आनन्दघनं-ஆனந்தஸ்வரூபம் என்றும் विभावयन्-



நன்கு பாவித்துக்கொண்டும் बहिः-வெளியிலும் अन्तरं वा-உள்ளேயும் समाहितः-நன்கு (ஸமாதியில்) நிலைநிறுத்தப்பட்ட மனஸுள்ளவனாக सन्-இருந்துகொண்டு कालं-வாழ்நாளை नयेथाः-போக்குவாயாக. (321)

## 31. ஆத்மநிலை நழுவாதே

(அ) அவ்விதம் மனதை நிறுத்துவதில் கொஞ்சமேனும் ஜாக்கிரதைக்குறைவு ஏற்பட்டால் மறுபடியும் ஸம்ஸாரத்திற்கு இழுத்துவிடுமானதினால் மிகவும் ஜாக்கிரதையாயிருந்துவர வேண்டுமென்று வற்புறுத்துகிறார்:—

प्रमादो ब्रह्मनिष्ठायां न कर्तव्यः कदाचन ।
प्रमादो मृत्युरित्याह भगवान्ब्रह्मणः सुतः ॥ ३२२ ॥

ब्रह्मनिष्ठायां-பிரஹ்மத்தில் நிலைத்திருப்பதில் कदाचन-ஒருக்காலும் प्रमादः-நழுவுதல் न कर्तव्यः செய்யக்கூடாது. ब्रह्मणः-பிரஹ்மாவின் सुतः-குமாரர் (ஸனத்ஸுஜாதர்) ஆகிய भगवान्-ஸர்வக்ஞான ஸம்பன்னர் प्रमादः-நழுவுதல் मृत्युः-மிருத்யு (நாசத்திற்குக் காரணம்) इति-என்று (திருதராஷ்டிரருக்கு உபதேசிக்கும்போது) आह-சொல்லியிருக்கிறார். (322)

न प्रमादादनर्थोऽन्यो ज्ञानिनः स्वस्वरूपतः ।
ततो मोहस्ततोऽहंधीस्ततो बन्धस्ततो व्यथा ॥ ३२३ ॥

ज्ञानिनः-ஞானிக்கு स्वस्वरूपतः-தன் ஸ்வரூபத்திலிருந்து प्रमादात्-நழுவுதலைவிட अन्यः-வேறு अनर्थः-கெடுதலானது न-கிடையாது. (ஏனென்றால்) ततः-அதினால் (ஸ்வரூபத்திலிருந்து நழுவுவதால்) मोहः-மோஹம் (ஸ்வரூபத்தை மறந்துவிடுதல்) ஏற்படும். ततः-அதிலிருந்து (ஸ்வரூபமறதியினால்) अहंधीः-('நான்' அல்லாத தேஹம் முதலான அனாத்மாக்களில்) 'நான்' என்ற எண்ணம் ஏற்படும். ततः-அதிலிருந்து (அனாத்மாவில்

ஆத்மபுத்தியினால்) बन्धः-ஸம்ஸாரபந்தம் ஏற்படும். ततः-அதினால் (பந்தம் ஏற்படுவதினால் அதன் கார்யமான) व्यथा-துக்கம் ஏற்படும். (323)

विषयाभिमुखं दृष्ट्वा विद्वांसमपि विस्मृतिः ।
विक्षेपयति धीदोषैर्योषा जारमिव प्रियम् ॥ ३२४ ॥

विद्वांसं-வித்வானை (விவேகமுள்ளவனை) अपि-இருந்தும் கூட विषय अभिमुखं - வெளிவிஷயங்களில் நோக்கமுள்ளவனாயிருக்கிறானென்று दृष्ट्वा - தெரிந்து கொண்டு विस्मृतिः-மறதியானது (அவனை), जारं-ஜாரனையும் प्रियं-பிரியனையும் இருக்கும் அன்ய புருஷனை योषा-ஒரு ஸ்திரீ (எப்படிக் கலங்கச் செய்வாளோ) इव-அதைப் போலவே धीदोषैः-புத்தியின் தோஷங்களைக் கொண்டு विक्षेपयति-பலவிதமாக ஆட்டிவைக்கும்.

जारं-வேறு ஸ்திரீயினிடத்தில் ஆஸக்தியுள்ள प्रियं-பர்த்தாவை அந்த ஆஸக்தியினால் ஏற்படக்கூடிய தோஷங்களை எடுத்துக் காட்டி எப்படி योषा-பத்னியானவள் அந்த ஆஸக்தியிலிருந்து அவனைக் கலைத்து விடுவாளோ, அவ்விதம் - என்றும் பொருள் கொள்ளலாமென்பது ஸ்ரீமத் ஜகத்குரு ஆசார்யாரவர்களின் அபிப்பிராயம். (324)

(அ) முன் 151, 152 சுலோகங்களில் சொன்ன பாசி திருஷ்டாந்தத்தை இவ்விஷயத்திலும் உதாஹரிக்கிறார்—

यथाऽपकृष्टं शैवालं क्षणमात्रं न तिष्ठति ।
आवृणोति तथा माया प्राज्ञं वापि पराङ्मुखम् ॥ ३२५ ॥

यथा-எவ்விதம் अपकृष्टं-ஒதுக்கப்பட்ட शैवालं-பாசியானது क्षणमात्रं-ஒரு க்ஷணம் கூட न तिष्ठति-ஒதுங்கி நிற்பதில்லையோ (மறுபடியும் பரவிக்கொண்டு மூடி விடுகிறதோ) तथा-அவ்விதமே माया-மாயையானது पराङ्मुखं-வெளிப்பார்வை யுள்ளவனை प्राज्ञं वा अपि-அறிவாளியாக விருந்தாலும் கூட आवृणोति-மூடிக்கொள்கிறது. (ஆத்மஸ்வருபம் தெரியவொட்டாமல் மறைத்து விடுகிறது.) (325)

(அ) மறைப்பது மாத்திரமில்லை, மேலால் ஸம்ஸாரத்தில் இழுத்துவிட்டு துக்கத்தை அனுபவிக்கும்படிச் செய்கிறது என்பதை படிக்கட்டில் மேல்படியில் நிற்கும்போது கைதவறி விழுந்த பந்து, தனக்கு விருப்பமில்லாவிட்டாலும் எப்படி ஒவ்வொரு படியாய் தட்டித் தட்டி கீழே அடித்தலத்துக்குப் போய் எடுக்கமுடியாமல் போய்விடுமோ அதைப்போல என்று திருஷ்டாந்தத்தினால் விளக்குகிறார் :—

लक्ष्यच्युतं चेद्यदि चित्तमीषद्बहिर्मुखं सन्निपतेत्ततस्ततः ।
प्रमादतः प्रच्युतकेलिकन्दुकः सोपानपङ्क्तौ पतितो यथा तथा ॥३२६॥

प्रमादतः-அஜாக்கிரதையினால் प्रच्युतकेलिकन्दुकः-நழுவி விழுந்த விளையாட்டுப் பந்து सोपानपङ्क्तौ-படிக்கட்டு வரிசையில் पतितः-விழுந்தது यथा-எப்படியோ (படிப்படியாய் கீழேயே போய்விடுமோ) तथा-அப்படியே चित्तं-மனஸானது ईषत्-கொஞ்சமேனும் लक्ष्यच्युतं चेत् यदि-(பிரஹ்மமாகிற) குறி தவறிவிட்டதேயானால் बहिर्मुखं-வெளியில் நோக்கமுள்ளதாக सत्-ஏற்பட்டு ततः ततः-ஒன்றிலிருந்து மற்றொன்று, அதிலிருந்து மற்றொன்று என்று (படிப்படியாய்) निपतेत्-(அஹங்காரம், புத்தி, மனஸ், பிராணன், தேஹம், விஷயங்கள் இவைகளில்) இறங்கி விழுந்துவிடும். (326)

(அ) சித்தமானது கீழே இறங்கி விழும் கிரமத்தை எடுத்துக் காட்டுகிறார் :—

विषयेष्वाविशच्चेतः संकल्पयति तद्गुणान् ।
सम्यक्संकल्पनात्कामः कामात्पुंसः प्रवर्तनम् ॥ ३२७ ॥

ततः स्वरूपविभ्रंशो विभ्रष्टस्तु पतत्यधः ।
पतितस्य विना नाशं पुनर्नारोह ईक्ष्यते ॥ ३२८ ॥

विषयेषु-(சப்தம் ஸ்பர்சம் முதலான) விஷயங்களில் आविशत्-ஆஸக்தியை வைக்கும் चेतः மனஸானது तद् गुणान्-அந்த விஷயங்களிலுள்ள குணங்களை संकल्पयति-நன்கு நினைத்துப் பார்க்கிறது. सम्यक् संकल्पनात् வெகுவாக நன்கு நினைத்துப் பார்ப்பதினால் कामः-ஆசை (ஏற்படுகிறது). कामात्-ஆசையிலிருந்து पुंसः-புருஷனுக்கு प्रवर्तनं-(ஆசைக்கு விஷயமான பதார்த்தத்தை ஸம்பாதிப்பதற்காக) பிரவிருத்தி ஏற்படுகிறது. (327)

ततः-அதினால் (பிரவிருத்தியில் ஈடுபடுவதால்) स्वरूप विभ्रंशः-ஆத்ம ஸ்வரூபத்திலிருந்து நழுவுதல் (ஆத்மஸ்வரூபத்தை விட்டு அநாத்ம பதார்த்தங்களில் ஆத்மா வென்ற எண்ணம் ஏற்படுகிறது). विभ्रष्टः तु-அவ்விதம் நழுவி விட்டவனோ अधः கீழேயே (ஸம்ஸாரத்தில்) पतति-விழுந்து விடுகிறான். पतितस्य-அவ்விதம் கீழே விழுந்தவனுக்கு नाशं विना-நாசத்தை (எப்பொழுதும் ஸம்ஸாரத்தில் உழன்றுகொண்டிருப்பதை) தவிர, पुनः-மறுபடியும் आरोहः-ஏறுவது (ஆத்ம ஸாக்ஷாத்காரம் கிடைப்பது) न ईक्ष्यते-எதிர்பார்க்கமுடியாது.

संकल्पं वर्जयेत्तस्मात्सर्वानर्थस्य कारणम् ।
[1]अपथ्यानि हि वस्तूनि व्याधिग्रस्तो यथोत्सृजेत् ॥ ३२९ ॥

व्याधि ग्रस्तः-வியாதியினால் பீடிக்கப்பட்டிருப்பவன் यथा-எப்படி अपथ्यानि-அபத்தியமான वस्तूनि-வஸ்துக்களை उत्सृजेत्-விலக்கிவிடுவான் हि-என்பது பிரஸித்தமோ (அப்படியே) तस्मात्-ஆகையால் (முன் சொன்ன காரணங்களினால்) सर्व अनर्थस्य-எல்லா அனர்த்தத்திற்கும் कारणं-காரணமாயிருக்கிற संकल्पं-விஷயங்களைப் பற்றி நினைப்பதென்பதை वर्जयेत्-விலக்கிவிட வேண்டும்.(329)

1. இந்தப் பாதி சுலோகம் ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணீ விலாஸ் பதிப்பில் காணப்படவில்லை.



अतः प्रमादान्न परोऽस्ति मृत्युर्विवेकिनो ब्रह्मविदः समाधौ ।
समाहितः सिद्धिमुपैति सम्यक्समाहितात्मा भव सावधानः ॥ ३३० ॥

अतः-ஆகையினால் विवेकिनः-விவேகமுள்ளவனாய் ब्रह्मविदः பிரஹ்மத்தை அறிந்தவராய் உள்ளவருக்கு समाधौ-ஸமாதி விஷயத்தில் (பிரஹ்மத்தினிடத்திலேயே நிலைத்திருப்பதில்) प्रमादात्-நழுவுதல் ஏற்படுவதைக் காட்டிலும் परः-வேறு मृत्युः-மிருத்யு न अस्ति-கிடையாது. समाहितः-ஸமாதியில் நிலைத்திருப்பவர் सिद्धिं-ஸித்தியை (மோக்ஷத்தை) उपैति-அடைவார். (ஆகையால் நீயும்) सम्यक्-உறுதியாக समाहित आत्मा-பிரஹ்மத்தில் நிலைத்த மனஸுள்ளவனாக सावधानः-வெகு ஜாக்கிரதையுடன் (நழுவுவதற்கிடமில்லாமல்) भव-இருந்துவா. (330)

जीवतो यस्य कैवल्यं विदेहे च स केवलः ।
यत्किञ्चित्पश्यतो भेदं भयं ब्रूते यजुःश्रुतिः ॥ ३३१ ॥

यस्य-எவருக்கு जीवतः உயிருடனிருக்கும்போதே कैवल्यं-(தேஹம் முதலான எல்லா உபாதிகளின் ஸம்பந்தமில்லாமல்) தனித்திருக்கும் தன்மை உள்ளதோ, सः-அவர் विदेहे च சரீரம் விலகின பிறகும் केवलः-தனித்தவரே. यत्किंचित्-ஏதேனும் சிறிதளவு भेदं-வேற்றுமையை पश्यतः-பார்ப்பவனுக்கு भयं-பயம் உண்டென்று यजुः श्रुतिः-யஜுர்வேதம (தைத்திரீய உபநிஷத்து) ब्रूते-சொல்கிறது. (331)

(அ) அந்த உபநிஷத் வாக்கியத்தின் தாத்பர்யத்தை எடுத்துச் சொல்கிறார் :—

यदा कदा वापि विपश्चिदेष ब्रह्मण्यनन्तेऽप्यणुमात्रभेदम् ।
पश्यत्यथामुष्य भयं तदेव यदीक्षितं भिन्नतया प्रमादात् ॥ ३३२ ॥

एषः-இந்த विपश्चित्-வித்வான் कदा वा अपि-ஏதேனும் ஒரு ஸமயத்தில் अनन्ते-எல்லையற்றதாகிய ब्रह्मणि-

பிரஹ்மத்தினிடத்தில் अणुमात्र भेदं अपि-அணுமாத்திரம் வேற்றுமையையேனும் पश्यति यदा-பார்க்கிருனாகில் अथ-அப்பொழுது प्रमादात्-தவறுதலாக भिन्नतया-பிரஹ்மத்தை விட்டு வேறுபட்டதாக यत्-எது ईक्षितं-பார்க்கப்பட்டதோ तत् एव-அதுவே अमुष्य-அவனுக்கு भयं பயம் (பயத்தை உண்டுபண்ணும்) (332)

श्रुतिस्मृतिन्यायशतैर्निषिद्धे दृश्येऽत्र यः स्वात्ममतिं करोति ।
उपैति दुःखोपरि दुःखजातं निषिद्धकर्ता स मलिम्लुचो यथा ॥ ३३३ ॥

श्रुति स्मृति न्याय शतैः - நூற்றுக் கணக்கான வேத வாக்கியங்களாலும் ஸ்மிருதி வாக்கியங்களாலும் யுக்திகளாலும் निषिद्धे-(ஆத்மாவல்ல, ஆத்மாவல்லவென்று) மறுக்கப்பட்டிருக்கிற अत्र-இந்த दृश्ये-(தேஹம் முதலான) பார்க்கப்படும் பதார்த்தங்களில் यः-எவன் स्व आत्म मतिं-தன் ஆத்மா வென்ற எண்ணத்தை करोति-கொள்ளுகிருனோ, सः-அவன் मलिम्लुचः-திருடன் यथा-எப்படியோ (அப்படியே) निषिद्ध कर्ता-தடுக்கப்பட்டிருப்பதை செய்கிறவனாதலால் दुःख उपरि-துக்கத்திற்கு மேல் दुःखजातं-துக்கக் கூட்டத்தை उपैति-அடைவான். (333)

'திருடன்போல' என்று சொன்னதற்கு சாந்தோக்ய உபநிஷத்தில் உள்ள பிரமாண வாக்கியத்தின் தாத்பர்யத்தை ஆதாரமாக உதாஹரிக்கிருர்—'பழுக்கப்பழுக்க இரும்பைக் காய்ச்சி கையால் பிடிக்கும்படிக் கொடுத்தால் 'நான் திருடன் இல்லை' என்று ஸத்யமாய் சொல்பவனை சுடாது, பொய்யாக சொன்னால் சுட்டுவிடும்.'

सत्याभिसंधानरतो विमुक्तो महत्त्वमात्मीयमुपैति नित्यम् ।
मिथ्याभिसंधानरतस्तु नश्येद्दृष्टं तदेतद्यदचोरचोरयोः ॥ ३३४ ॥

सत्य अभिसंधान रतः-ஸத்யத்திலேயே பிடிமானம் உள்ளவன் विमुक्तः (தீயினால் சுடப்படாமல் குற்றவாளியல்லவென்று,) விடுபட்டவன் आत्मीयं-தனக்கு ஸ்வபாவமான महत्त्वं-பெருமையை नित्यं-எப்பொழுதும் उपैति-அடைவான். मिथ्या अभिसंधान रतः तु-பொய்யில் பிடிமானம் உள்ளவனோ नश्येत्-(தீயினால் சுடப்பட்டவனாக குற்றவாளியென்று அகப்பட்டுக் கொண்டு) நாசத்தை அடைவான். अचोर चोरयोः-திருடனல்லாதவன் விஷயத்திலும் திருடன் விஷயத்திலும் यत्-எந்த நியாயமிருக்கிறதோ तत् एतत्-அதே இந்த நியாயம் दृष्टं-நன்கு தெரிந்ததே. (334)

(அ) ஆகையால் ஆத்மாவல்லாததில் உள்ள பிடிமானத்தை நன்கு விலக்கிவிட்டு வாஸ்தவமாயுள்ள ஆத்ம தத்வத்திலேயே நிலைத்திருக்க வேண்டுமென்று வற்புறுத்துகிருர்:—

यतिरसदनुसंधिं बन्धहेतुं विहाय
स्वयमयमहमस्मीत्यात्मदृष्ट्यैव तिष्ठेत् ।
सुखयति ननु निष्ठा ब्रह्मणि स्वानुभूत्या
हरति परमविद्याकार्यदुःखं प्रतीतम् ॥ ३३५ ॥

यतिः-ஸந்நியாஸியாயிருப்பவர் बन्ध हेतुं-ஸம்ஸார பந்தத்திற்கு காரணமாயிருக்கும் असद् अनुसंधिं-(ஆத்மாவல்லாத தேஹாதிகளாகிற) அஸத் பதார்த்தங்களில் பிடிமானத்தை (நான் என்கிற எண்ணத்தை) विहाय-விட்டு விட்டு, स्वयं-தான் अयं-இதாக अहं-நான் अस्मि-இருக்கிறேன் इति-என்று आत्म दृष्ट्या एव-ஆத்மாவை பார்ப்பதிலேயே तिष्ठेत्-நிலைத்து நிற்கவேண்டும். ब्रह्मणि-பிரஹ்மத்தினிடத்தில் स्व अनुभूत्या-"தான்" என்ற அனுபவத்துடன் निष्ठा-நிலைத்திருப்பது सुखयति-ஆனந்தத்தைக் கொடுக்கும் ननु-ஸந்தேஹமன்னியில். (மேலும்) अविद्या कार्यं दुःखं-அவித்யையினால் ஏற்பட்டிருக்கும் துக்கம் அல்லது அவித்யை, அதன் காரியங்கள் இவைகளால் ஏற்பட்டிருக்கும் துக்கம் प्रतीतं-தோன்றிக் கொண்டிருப்பதை परं-நன்ருக हरति-விலக்கிவிடும்.

बाह्याभिसंधिः परिवर्धयेत्फलं दुर्वासनामेव ततस्ततोऽधिकाम् ।
ज्ञात्वा विवेकैः परिहृत्य बाह्यं स्वात्मानुसंधिं विदधीत नित्यम् ॥३३६॥

बाह्याभिसन्धिः-வெளி விஷயங்களில் பற்றுவைப்பது फलं-அதன் பலனாகிய दुर्वासनां एव-(பிறவிக்குக் காரணமான) கெட்ட வாஸனையையே ततः ततः - அதைவிட, அதைவிட अधिकां மேலுக்கு மேலாக परिवर्धयेत्-நன்கு வளரச் செய்யும். (ஆகையால் அதற்கு இடம் கொடுக்காமல்) ज्ञात्वा-(வாஸனை வளருமென்பதை) அறிந்து கொண்டு विवेकैः-திரும்பத் திரும்ப விவேசனம் செய்வதினால் बाह्यं-வெளிப் பதார்த்தங்களை (எண்ணிக் கொண்டிருப்பதை) परिहृत्य-தள்ளிவிட்டு नित्यं-எப்பொழுதும் स्व आत्म अनुसन्धिं-தன்னுடைய ஆத்மதத்வத்தின் அனுஸந்தானத்தை विदधीत-செய்ய வேண்டும். (336)

बाह्ये निरुद्धे मनसः प्रसन्नता मनःप्रसादे परमात्मदर्शनम् ।
तस्मिन्सुदृष्टे भवबन्धनाशो बहिर्निरोधः पदवी विमुक्तेः ३३७ ॥

बाह्ये - வெளி வியாபாரங்கள் निरुद्धे - தடுக்கப்பட்டு விட்டால் मनसः-மனஸிற்கு प्रसन्नता-தெளிவு (ஏற்படும்). मनः प्रसादे-மனஸ் தெளிவடைந்தால் परमात्मदर्शनं-பரமாத்மாவின் தர்சனம் (ஏற்படும்). तस्मिन्-அந்த பரமாத்மா सुदृष्टे-நன்கு பார்க்கப்பட்டால் भव बन्ध नाशः-ஸம்ஸார பந்தத்திற்கு நாசம் (ஏற்படும்). (ஆகையால் இவ்விதமாக) बहिः निरोधः - வெளி வியாபாரங்களை தடுப்பதே विमुक्तेः-(ஸம்ஸாரபந்தத்திலிருந்து) விடுதலையடைவதற்கு पदवी வழி.

உலக வியவஹாரங்களில் அதிகமாக ஈடுபட்டவனுக்குக் கூட தூங்கிவிழித்ததும் மனம் தெளிந்து இருக்கும். ஏனெனில் தூக்கத்தில் வெளிப் பதார்த்தங்களின் எண்ணமில்லை. அதனால் தான் தூக்கத்திற்கு 'ஸம்ப்ரஸாதம்' என்று பெயர். நம் முயற்சியில்லாமலேயே தூக்கத்தில் தானாகவே வெளிப் பொருள்களின் எண்ணம் நீங்கியபொழுது மனம் ப்ரஸன்னமாக இருக்குமானால் மிகுந்த முயற்சியுடன் வெளி எண்ணங்களை அடியோடு விலக்கியபொழுது மனம் ப்ரஸன்னமாக இருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? மனம் பிரஸன்னமாக ஆனால்தான், ஐகாக்ர்யம் (ஒன்றிலேயே நிலைத்திருக்கும் தன்மை) ஏற்பட்டு ஆத்மதர்சனம் பெறத் தகுதியுள்ளதாக ஆகும். (337)



कः पण्डितः सन्सदसद्विवेकी श्रुतिप्रमाणः परमार्थदर्शी ।
जानन्हि कुर्यादसतोऽवलम्बं स्वपातहेतोः शिशुवन्मुमुक्षुः ॥ ३३८ ॥

श्रुति प्रमाणः-வேதத்தை பிரமாணமாகக் கொண்டவனும் परमार्थ दर्शी மேலான புருஷார்த்தம் (மோக்ஷம் என்று) அறிந்தவனாய் सत् असत् विवेकी - எது எப்பொழுதும் இருக்கிற ஸத் பதார்த்தம், எது ஸத் அல்லாதது என்ற பகுத்தறிவு உடையவனாய் मुमुक्षुः-(ஸம்ஸார பந்தத்திலிருந்து) விடுதலையடைய ஆவல் உள்ளவனாய் पण्डितः - (பிரஹ்மமே ஸத்யம், ஜகத் மித்யை, என்று) அறிவுள்ளவனாய் सन् - இருந்து கொண்டு जानन् - (ஸத் அல்லாததை ஆசிரயித்தால் கெடுதல் என்பதை) அறிந்திருக்கும் कः-எவன் शिशुवत्-(ஒன்றும் தெரியாத) சிறு குழந்தையைப் போல, स्वपात हेतोः-தான் கீழே விழுவதற்கு காரணமாயிருக்கும் असतः-ஸத் அல்லாததின் अवलम्बं-அவலம்பத்தை (பிடித்துக் கொள்வதை) कुर्यात्-செய்வான்?

சிறு குழந்தை அறியாமையால் மேலேயிருந்து கீழே விழுந்துவிடும் தனக்குத் துன்பம் ஏற்படுமென்பதை அறியாமல் கையால் பாம்பைப் பிடிக்கும். நெருப்பைக் கையால் தொடும். இதுபோல் அறிவாளியாயிருந்த போதிலும் ஆத்மாவல்லாததை ஆத்மாவென எண்ணி அதற்காக தன்னை ஸம்ஸாரத்தில் உழலும்படிச் செய்யும் காரியங்களைச் செய்வானேயானால் அவன் சிறு குழந்தைதான். (338)

(அ) முமுக்ஷுவுக்கு தேஹாதி அஸத் வஸ்துக்களின் பிடிமானம் கூடாது என்று சொன்னதுடன் அப்பிடிமானம் இருக்கும் வரை முக்தி ஏற்படாதென்றும் முக்தியேற்பட்டால் அப்பிடிமானம் இருக்காது என்றும் சொல்லி, முக்திதசை எப்படியிருக்குமென்று வர்ணிக்கிறார் :—

देहादिसंसक्तिमतो न मुक्तिर्मुक्तस्य देहाद्यभिमत्यभावः ।
सुप्तस्य नो जागरणं न जाग्रतः स्वप्नस्तयोर्भिन्नगुणाश्रयत्वात् ॥ ३३९ ॥

सुप्तस्य-தூங்கிக்கொண்டிருப்பவனுக்கு जागरणं-விழிப்பு नो-இருக்காது, जाग्रतः-விழித்துக்கொண்டிருப்பவனுக்கு स्वप्नः-தூக்கம் न இருக்காது, तयोः-(விழிப்பு, தூக்கம் ஆகிய) இரண்டும் भिन्न गुण आश्रयत्वात्-மாறுபட்ட ஸ்வபாவங்களுக்கு ஆசிரயமாயிருப்பதால். (அதேவிதமாக) देहादि संसक्तिमतः-தேஹம் முதலானதில் அபிமானமுள்ளவனுக்கு मुक्तिः-முக்தி न-கிடையாது. मुक्तस्य-முக்தனுக்கு देहादि अभिमति अभावः-தேஹம் முதலானதில் அபிமானம் இராது. (339)

अन्तर्बहिः स्वं स्थिरजङ्गमेषु ज्ञानात्मनाधारतया विलोक्य ।
त्यक्ताखिलोपाधिरखण्डरूपः पूर्णात्मना यः स्थित एष मुक्तः ॥ ३४० ॥

स्थिर जङ्गमेषु-அசையாப் பொருள் அசையும் பொருள் எல்லாவற்றிலும் अन्तः-உள்ளேயும் बहिः-வெளியிலும் स्वं-தன்னையே ज्ञान आत्मना-ஞான ஸ்வருபத்துடன் आधारतया-ஆதாரமாயிருப்பதாக विलोक्य-பார்த்துக்கொண்டு, त्यक्त अखिल उपाधिः-எல்லா உபாதிகளையும் (நான் அல்லவென்று) விலக்கிவிட்டவராய் अखण्डरूपः-எவ்விதத்திலும் துண்டுபடாத ஸ்வரூபமுள்ளவராய் यः-எவர் पूर्ण आत्मना-எங்கும் நிறைந்த ஆத்மஸ்வரூபமாகவே स्थितः-இருக்கிறாரோ, एषः-இவர் मुक्तः-முக்தர் ஆவார். (340)



(அ) தன்னைவிட வேறு பதார்த்தம் கிடையாது, வேறாகத்தோன்றுவதெல்லாம் வாஸ்தவத்தில் தன்னைத் தவிர வேறில்லை, என்று எல்லாவற்றையும் தானாகவே அனுபவிக்கும் நிலையேற்பட்டால்தான் முக்தி என்பதை தெளிவுபடுத்துகிறார்.

सर्वात्मना बन्धविमुक्तिहेतुः सर्वात्मभावान्न परोऽस्ति कश्चित् ।
दृश्याग्रहे सत्युपपद्यतेऽसौ सर्वात्मभावोऽस्य सदात्मनिष्ठया ॥ ३४१ ॥

बन्ध विमुक्ति हेतुः-ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுதலையடைவதற்கு காரணமாயிருப்பது सर्वात्मभावात्-எல்லாம் தானே (ஆத்மாவே) என்கிற நிலையைத் தவிர परः வேறு कश्चित्-ஏதுவும் सर्वात्मना-எவ்வித முறையிலும் न अस्ति-கிடையாது. अस्य-இந்த ஜீவனுக்கு असौ-அந்த सर्वात्म भावः-எல்லாமாக இருக்கும் நிலை सदा-எப்பொழுதும் आत्मनिष्ठया-ஆத்ம ஸ்வரூபத்திலேயே நிலைத்திருப்பதினால் दृश्य अग्रहे-(இரண்டாவதான) பார்க்கப்படுவதெல்லாம் தோன்றாமல் सति-இருக்கும்போது उपपद्यते-ஏற்படும்.

விஷயங்களே தன்னைக் காட்டிலும்வேறாக பார்ப்பவனுக்குத் தான் அவை பந்தத்தைக் கொடுக்கும். தானே தனக்கு பந்தத்தைக் கொடுக்கமுடியாது. நெருப்பு தன்னைப் பொசுக்குவதில்லை. நடனத்தில் நன்கு கற்றுத் தேர்ந்த போதிலும் தன் தோளில் தான் ஏறமுடியாது. ஆனால் விஷயம் முதல் எல்லாவற்றையும் தனது ஆத்மஸ்வரூபமாகப் பார்க்கும் ஞானிக்கு விஷயம் வேறாகத் தோன்றாததால் அவனுக்கு பந்தத்தைக் கொடுக்க முடியாது. (341)

(அ) ஆத்மநிஷ்டையில் இருந்தாலொழிய இரண்டாவது பதார்த்தம் தோன்றாமலிராது, ஆகையால் ஸமாதி மூலமாய் பிரயத்தினம் செய்து அந்த நிஷ்டையை ஸம்பாதித்து ஆகவேண்டுமென்கிறார் :—

दृश्यस्याग्रहणं कथं नु घटते देहात्मना तिष्ठतो
बाह्यार्थानुभवप्रसक्तमनसस्तत्तत्क्रियां कुर्वतः ।

संन्यस्ताखिलधर्मकर्मविषयैर्नित्यात्मनिष्ठापरै-
स्तत्त्वज्ञैः करणीयमात्मनि सदानन्देच्छुभिर्यत्नतः ॥ ३४२ ॥

देह आत्मना–தேஹமே ஆத்மாவென்று तिष्ठतः–இருந்து கொண்டு बाह्य अर्थ अनुभव प्रसक्त मनसः–வெளியிலுள்ள விஷயங்களை அனுபவிப்பதில் ஈடுபட்ட மனஸுள்ளவனாய் तत् तत् क्रियां–அதற்கதற்குரிய கார்யங்களை कुर्वतः–செய்து கொண்டிருப்பவனுக்கு दृश्यस्य–பார்க்கப்படும் பதார்த்தத்தினுடைய अप्रहणं–தோன்றுதிருத்தல் कथं नु–எப்படித்தான் घटते–ஏற்படமுடியும்? (ஆகையால்) तत्त्वज्ञैः–தத்வம் அறிந்தவர்களாய் सदा–எப்பொழுதும் आनन्द इच्छुभिः–ஆனந்தத்தை விரும்புகிறவர்களாயிருப்பவர்களால் संन्यस्त अखिल धर्म कर्म विषयैः–எல்லா வைதிக தர்மானுஷ்டானங்களையும் வெளிக் கார்யங்களையும் (சப்தம் ஸ்பர்சம் முதலான) விஷயங்களையும் நன்கு விட்டு விட்டவர்களாக இருந்துகொண்டு नित्य आत्म निष्ठा परैः–எப்பொழுதும் ஆத்ம நிஷ்டையில் ஈடுபட்டவர்களாக यत्नतः–மிகவும் பிரயாஸை எடுத்துக்கொண்டு आत्मनि–தன்னிடத்தில் (வெளி பதார்த்தங்களின் தோற்றம் ஏற்படாமல்) करणीयं–செய்து கொள்ள வேண்டியது அவசியம். (342)

## 32. நிர்விகல்ப ஸமாதி

(அ) இந்த ஆத்ம நிஷ்டைதான் ஸமாதி என்பது. அதுதான் ஸர்வாத்ம பாவ நிலைக்கு ஸாதனம். அந்த ஸமாதியும் இரண்டுவிதம். ஒன்றில் அறிகிற நான், அறியப்படும் பிரஹ்மம், இரண்டையும் ஒன்றாக அறியும் அறிவு, ஆகிய மூன்று அம்சங்களும் இருக்கும். அப்பொழுது அதை "ஸவிகல்பக ஸமாதி" என்பார்கள். இந்த வேற்றுமையும் அற்று பிரஹ்மாகாரமாக மாத்திரம் விருத்தியிருக்கும்போது "நிர்விகல்பக ஸமாதி" என்பார்கள். மண்ணால் செய்யப்பட்டிருக்கும் யானை உருவத்தைப் பார்க்கும்பொழுது இது மண்தான் என்று தெரிந்தபோதிலும் யானை உருவமும்



தோன்றிக் கொண்டுதானிருக்கும். இதுபோல ஸவிகல்ப ஸமாதியில் எல்லாம் ஸத்ரூபமாகத் தோன்றியபோதிலும் த்ரிபுடியும் தோன்றிக் கொண்டுதானிருக்கும். ஆனால் தண்ணீரில் உப்பைக் கரைத்துவிட்டால் அங்கு தண்ணீர் தான் தெரியுமே தவிர தனியாக உப்பு தோன்றுது. அது போல நிர்விகல்ப ஸமாதியில் ஸத்ரூபம்தான் தெரியுமே தவிர த்ரிபுடி தோன்றுது. இவ்விரண்டில் அந்த நிர்விகல்பக ஸமாதிதான் அஹங்காரத்தை பூராவும் நாசம் செய்யும். இந்த நிர்விகல்ப ஸமாதியின் அவசியத்தைப் பற்றி 343 முதல் 363 முடிய விஸ்தாரமாக எடுத்துச் சொல்கிறார்:—

सार्वात्म्यसिद्धये भिक्षोः कृतश्रवणकर्मणः ।
समाधिं विदधात्येषा शान्तो दान्त इति श्रुतिः ॥ ३४३ ॥

कृत श्रवण कर्मणः–(குருமுகமாய் வேதாந்த வாக்கியத்தை) கேட்டறிவதாகிய கார்யத்தை செய்தவராகிய भिक्षोः–ஸன்னியாஸிக்கு सार्वात्म्य सिद्धये–ஸர்வாத்ம பாவம் ஸித்திப்பதற்காக 'शान्तो दान्त उपरतः तितिक्षुः समाहितः' इति–என்ற एषा–இந்த श्रुतिः–(பிருஹதாரண்யக) உபநிஷத்தானது समाधिं–ஸமாதியை विदधाति–விதிக்கிறது. (343)

आरूढशक्तेरहमो विनाशः कर्तुं न शक्यः सहसापि पण्डितैः ।
ये निर्विकल्पाख्यसमाधिनिश्चलास्तानन्तराऽनन्तभवा हि वासनाः ॥

ये–எவர்கள் निर्विकल्प आख्य समाधि निश्चलाः–நிர்விகல்பம் என்று, பெயருள்ள ஸமாதியில் அசைவற்றிருக்கிறார்களோ तान्–அவர்களை अन्तरा–தவிர पण्डितैः–(வேதாந்தம் கேட்டறிந்த) பண்டிதர்களால் अपि–கூட आरूढ शक्तेः–நன்கு வலுத்த சக்தியுடைய अहमः–அஹங்காரத்தை विनाशः–நாசம் कर्तुं–செய்வதற்கு सहसा–திடீரென न शक्यः–ஸாத்யப்படாது. वासनाः வாஸனைகள் अनन्तभवाः–எல்லையற்றதாய் ஏற்படுபவை हि–அல்லவா?

(அ) முன்னால் 142 முதல் 146 வரை அவித்யையானது ஆவரண சக்தியினால் ஆத்மதத்வம் தெரியவொட்டாமல் செய்து விக்ஷேப சக்தியினால் ஸம்ஸார துக்கத்தை ஏற்படுத்தி விடுகிறது என்று சொன்னதை இந்த ஸந்தர்பத்தில் ஞாபகப் படுத்துகிறார்:—

अहंबुद्ध्यैव मोहिन्या योजयित्वावृतेर्बलात् ।
विक्षेपशक्तिः पुरुषं विक्षेपयति तद्गुणैः ॥ ३४५ ॥

आवृतेः-(ஆத்மஸ்வரூபத்தை மறைக்கும்) ஆவரண சக்தியின் बलात्-பலத்தைக் கொண்டு विक्षेपशक्तिः-விக்ஷேப சக்தியானது मोहिन्या-மோஹத்தை யுண்டு பண்ணக்கூடிய अहंबुद्ध्या एव-'நான்' என்கிறஎண்ணத்துடனேயே पुरुषं-புருஷனை योजयित्वा-சேர்த்து விட்டு तद्गुणैः-அதினுடைய (ஸங்கல்பம், காமம், பிரவிருத்தி முதலான) குணங்களால் विक्षेपयति-பலவிதமாய் அலைக்கிறது. (345)

विक्षेपशक्तिविजयो विषमो विधातुं
निःशेषमावरणशक्तिनिवृत्त्यभावे ।
दृग्दृश्ययोः स्फुटपयोजलवद्विभागे
नश्येत्तदावरणमात्मनि च स्वभावात् ।

निःसंशयेन भवति प्रतिबन्धशून्यो
विक्षेपणं न हि तदा यदि चेन्मृषार्थे ॥ ३४६ ॥

निश्शेषं – பாக்கியன்னியில் आवरणशक्ति निवृत्त्यभावे – ஆவரணசக்தி நிவிருத்தியாகாமலிருந்தால் विक्षेपशक्ति विजयः-விக்ஷேப சக்தியின் ஜயம் विधातुं विषमः-செய்வதற்கு மிகவும் சிரமம். स्फुटपयोजलवत्-நன்கு பாலையும் ஜலத்தையும் (ஹம்ஸபக்ஷி பிரித்துவிடுவது) போல दृक् दृश्ययोः-பார்க்கும் ஆத்மாவையும் பார்க்கப்படும் அநாத்மாவையும் विभागे-நன்கு பிரித்துவிட்டால் तदा –



அப்பொழுது आवरणं – ஆவரணமானது स्वभावात्-தானாகவே आत्मनि-ஆத்மாவிடத்தில் नश्येत् च-நாசத்தையடைந்துவிடும். मृषार्थे-பொய்யான (அநாத்ம) பதார்த்தத்தில் विक्षेपणं-மனதை வைப்பது यदि चेत् न – இல்லையானால் तदा हि-அப்பொழுதே (விக்ஷேப சக்தியை ஜயிப்பதானது) निस्संशयेन-ஸந்தேஹமன்னியில் प्रतिबन्धशून्यः-தடங்கலில்லாமல் भवति-ஏற்பட்டுவிடும். (346)

सम्यग्विवेकः स्फुटबोधजन्यो विभज्य दृग्दृश्यपदार्थतत्त्वम् ।
छिनत्ति मायाकृतमोहबन्धं यस्माद्विमुक्तस्य पुनर्न संसृतिः ॥ ३४७ ॥

स्फुटबोधजन्यः-தெளிவான (ஸந்தேஹம் விபரீதமில்லாத உபநிஷத்தாலும் குருவின் அநுக்ரஹத்தாலும் ஏற்பட்ட) அறிவினால் ஏற்படும் सम्यग्विवेकः - திடமான பகுத்தறிவு दृग्दृश्यपदार्थतत्त्वं - ஆத்மா அநாத்மாவாகிற பதார்த்தங்களுடைய வாஸ்தவமான தன்மையை (ஆத்மா ஸத்யம், அநாத்மா மித்யை என்பதை) विभज्य-நன்கு பிரித்துக் காட்டி, यस्मात्-எதிலிருந்து विमुक्तस्य-விடுபட்டவனுக்கு पुनः-மறுபடியும் संसृतिः-ஸம்ஸாரம் न-கிடையாதோ (அந்த) मायाकृतमोहबन्धं-மாயையினால் செய்யப்பட்டிருக்கும் மோஹமாகிற கட்டை छिनत्ति-அறுத்துவிடும்.

பால் தயிருகி, வெண்ணையாகி, நெய்யாக ஆன பிறகு மறுபடியும் நெய் பாலாக ஆவதில்லை. அதுபோல் ஸ்வப்ரகாச ஆநந்த ஸ்வரூபமாக ஆன மனம் அநாத்ம விஷயங்களில் ஒட்டுவதில்லை. (347)

(அ) இதே விஷயத்தை வேறு திருஷ்டாந்தத்தினால் மேலும் தெளிவுபடுத்துகிறார்:—

परावरैकत्वविवेकवह्निर्दहत्यविद्यागहनं ह्यशेषम् ।
किं स्यात्पुनः संसरणस्य बीजमद्वैतभावं समुपेयुषोऽस्य ॥ ३४८ ॥

पर अवर एकत्व विवेक वह्निः – மேலான ஈசவரன்

கீழ்பட்ட ஜீவன் இருவருக்குமுள்ள ஒன்றாயிருக்கும் தன்மை விஷயமான அறிவாகிய நெருப்பு अविद्या गहनं- அவித்யையாகிற காட்டை अशेषं - பாக்கியன்னியில் दहति हि-எரித்துவிடுமல்லவா? अद्वैत भावं - இரண்டற்ற தன்மையை समुपेयुषः -நன்கு அடைந்திருக்கும் अस्य- இவனுக்கு पुनः - மறுபடியும் संसरणस्य - ஸம்ஸாரத்தில் ஈடுபடுவதற்கு बीजं-விதை किं-எது स्यात्-இருக்க முடியும்? (348)

(அ) ஆத்மஞானம் திடமாயேற்பட்டால், ஆவரணம், விக்ஷேபம், அதினால் ஏற்படும் துக்கம், ஆகிய மூன்றுமே விலகிவிடும் என்று திருஷ்டாந்தம் மூலமாய் காண்பிக்கிறார்:—

आवरणस्य निवृत्तिर्भवति च सम्यक्पदार्थदर्शनतः ।
मिथ्याज्ञानविनाशस्तद्वद्विक्षेपजनितदुःखनिवृत्तिः ॥ ३४९ ॥

एतत्त्रितयं दृष्टं सम्यग्रज्जुस्वरूपविज्ञानात् ।

सम्यक् पदार्थ दर्शनतः-நன்கு பதார்த்தத்தை அறிவதினால் आवरणस्य-ஆவரணத்தினுடைய (மறைவினுடைய) निवृत्तिः - நிவிருத்தி भवति-ஏற்படுகிறது. मिथ्या अज्ञान विनाशः பொய்யான அக்ஞானம் (வேறுவிதமாய் தோன்றும் விக்ஷேபம்) இதன நாசம் च-கூட ஏற்படுகிறது. तद्वत्-அப்படியே विक्षेपजनितदुःखनिवृत्तिः-விக்ஷேபத்தினால் ஏற்பட்டிருக்கும் துக்கத்தின் நிவிருத்தியும் (ஏற்படுகிறது). एतत्-இந்த त्रितयं மூன்றும் सम्यक् रज्जु स्वरूप विज्ञानात्-நன்றாக கயிற்றின் ஸ்வரூபத்தை அறிந்துவிடுவதால் (ஏற்படுகிறதென்பது) दृष्टं-(எல்லோராலேயும) அனுபவித்து அறியப்பட்டிருக்கிறது.

இது கயிறுதான் என்று உண்மையான கயிறை நன்கு அறிந்தவுடன், கயிறைத் தெரியவொட்டாமல் அதை மறைத்திருந்த ஆவரணம் விலகி, அதன்மூலம் இது பாம்பு என்ற எண்ணத்தைக் கொடுத்த ஸர்பபிராந்தியும் விலகி, பாம்பாகப் பார்த்ததால் ஏற்பட்ட பயமும் உடல் நடுக்கமும் நீங்கி விடுகிறது.



तस्माद्वस्तुसतत्त्वं ज्ञातव्यं बन्धमुक्तये विदुषा ॥ ३५० ॥

तस्मात्-ஆகையால் विदुषा-அறிவுள்ளவனால் बन्धमुक्तये-ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடவேண்டியதற்காக वस्तुसतत्त्वं-வஸ்துவினுடைய ஆத்மாவினுடைய வாஸ்தவமான ஸ்வரூபம் ज्ञातव्यं-அறியப்படவேண்டியது. (350)

अयोऽग्नियोगादिव सत्समन्वयान्मात्रादिरूपेण विजृम्भते धीः ।
तत्कार्यमेतत्त्रितयं यतो मृषा दृष्टं भ्रमस्वप्नमनोरथेषु ॥ ३५१ ॥

अग्नि योगात्-அக்னியின் சேர்க்கையினால் अयः இரும்பு (எப்படிப் பொய்யாக சுடுவதாகத் தோன்றுகிறதோ அதை) इव-போல सत् समन्वयात्- ஸத்தான ஆத்மாவின் சேர்க்கையினால் धीः-புத்தியானது मात्रादि रूपेण- அறிகிறவன் (அறிவு, அறியப்படும் வஸ்து) முதலான ரூபத்துடன் विजृम्भते-பலவிதமாகத் தோன்றுகிறது. तत् कार्यं-அதினால் ஏற்பட்ட एतत् त्रितयं-இம்மூன்றும் (பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படுவது ஆகிய மூன்றும்) भ्रम स्वप्नमनोरथेषु - பிராந்தி ஸ்தலத்திலும், ஸ்வப்னம் காண்பதிலும், மனக்கோட்டை கட்டுவதிலும் मृषा- பொய்தான் என்று यतः-எதினால் दृष्टं-அறியப்பட்டிருக்கிறதோ (அதேகாரணத்தினால் புத்தியின் ஸ்ருஷ்டியான ஜாக்கிரத்தும் பொய்யே) (351)

ततो विकाराः प्रकृतेरहंमुखा देहावसाना विषयाश्च सर्वे ।
क्षणेऽन्यथाभाविन एष आत्मा नोदेति नाप्येति कदापि नान्यथा ॥

ततः-ஆகையால் प्रकृतेः-மூலகாரணமான அவித்யையினுடைய विकाराः-மாறுதல்கள் (கார்யங்கள்) ஆகிய अहंमुखाः-அஹங்காரம் முதல் देहावसानाः-சரீரம் முடிய உள்ளவைகளும் विषयाः च-(சப்தம் முதலிய) விஷயங்

களும் सर्वं எல்லாமே क्षणे-ஒரு க்ஷணத்தில் अन्यथा-भाविनः-வேறு படக்கூடிய தன்மையுடையவைகள் एषः-இந்த आत्मा-ஆத்மா कदा अपि-ஒரு பொழுதும் न उदेति-உண்டாவதில்லை, न अपैति-நாசமடைவதுமில்லை, न अन्यथा-வேறுவிதமாக மாறுவதுமில்லை. (352)

नित्याद्वयाखण्डचिदेकरूपो बुद्ध्यादिसाक्षी सदसद्विलक्षणः ।
अहंपदप्रत्ययलक्षितार्थः प्रत्यक्सदानन्दघनः परात्मा ॥ ३५३ ॥

नित्याद्वयाखण्डचिदेकरूपः-நித்யமாய் (உத்பத்தி விநாசமில்லாததாய்) இரண்டற்றதாய் (தன்னைக்காட்டிலும் வேறான உண்மையான வஸ்து இல்லாததாய்) துண்டு படாததாய் (தேச கால வஸ்துக்களின் எல்லைக்கு உட்படாததாய்) சைதன்யம் ஒன்றையே ஸ்வரூபமாயுடையதாயும் बुद्धि आदि साक्षी-புத்தி முதலானவைகளுக்கு ஸாக்ஷியாயும் सत् असत् विलक्षणः-ஸத் (கார்யம், அல்லது பிருதிவீ அப்பு, தேஜஸ்) அஸத் (காரணம், அல்லது வாயு ஆகாசம்) இவைகளுக்கு வேறுபட்டதாயும் अहं पद-प्रत्यय लक्षितार्थः-'நான்' என்ற பதத்தினாலும் பாவனையாலும் லக்ஷணையால் குறிக்கப்படும் பொருளாகவும் உள்ள प्रत्यक्-உள்ளேயுள்ள வஸ்து सदानन्द घनः-(எங்கும் எப்பொழுதும்) இருப்புள்ள ஆனந்தக்கட்டியாகிய परात्मा-(எல்லாவற்றிற்கும்) மேலானுள்ள ஆத்மா (பிரம்மமே). (353)

इत्थं विपश्चित्सदसद्विभज्य निश्चित्य तत्त्वं निजबोधदृष्ट्या ।
ज्ञात्वा स्वमात्मानमखण्डबोधं तेभ्यो विमुक्तः स्वयमेव शाम्यति ॥

इत्थं-இவ்விதமாக विपश्चित्-அறிவுள்ளவன் सत्-ஸத்தாகிய ஆத்மாவையும் असत्-அஸத்தாகிய அனாத்மாவையும் विभज्य-நன்கு வேறுபடுத்தி निजबोधदृष्ट्या-தன்னுடைய ஞானமாகிற கண்ணினால் तत्त्वं-வாஸ்தவத் தன்மையை निश्चित्य-தீர்மானித்துக் கொண்டு स्वं-தன்



னுடைய आत्मानं ஆத்மாவை अखण्डबोधं துண்டுபடாத அறிவு ஸ்வரூபமென்று ज्ञात्वा-அறிந்து तेभ्यः-அனாத்ம பதார்த்தங்களிலிருந்து विमुक्तः-நன்கு விடுபட்டவனாய் स्वयं एव-தானாகவே शाम्यति-அடங்கிவிடுகிறான். (354)

अज्ञानहृदयग्रन्थेर्निःशेषविलयस्तदा ।
समाधिनाऽविकल्पेन यदाऽद्वैतात्मदर्शनम् ॥ ३५५ ॥

यदा-எப்பொழுது अविकल्पेन-நிர்விகல்பமான समाधिना-ஸமாதியினால் अद्वैतात्मदर्शनं-இரண்டற்ற ஆத்மஸ்வரூபத்தின் ஸாக்ஷாத்காரம் (ஏற்படுகிறதோ), तदा அப்பொழுதுதான் अज्ञान हृदय ग्रन्थेः-அக்ஞானத்தினால் ஏற்பட்ட ஹ்ருதயத்தில் உள்ள (ஆத்மாவையும் அனாத்மாவையும் சேர்த்து வைத்திருக்கும்) முடிச்சுக்கு निश्शेष विलयः-பாக்கியன்னியில் நிவிருத்தி (ஏற்படும்.) (355)

त्वमहमिदमितीयं कल्पना बुद्धिदोषा-
त्प्रभवति परमात्मन्यद्वये निर्विशेषे ।
प्रविलसति समाधावस्य सर्वो विकल्पो
विलयनमुपगच्छेद्वस्तुतत्त्वावधृत्या ॥ ३५६ ॥

त्वं 'நீ' अहं 'நான்' इदं 'இது' इति-என்ற इयं-இந்த कल्पना-கல்பனையானது अद्वये-இரண்டற்றதாய் निर्विशेषे-எவ்வித விசேஷமுமில்லாத परमात्मनि-பரமாத்மாவினிடத்தில் बुद्धि-दोषात्-புத்தியின் தோஷத்தினால் प्रभवति-ஏற்படுகிறது. समाधौ-ஸமாதி நிலையானது प्रविलसति-நன்கு பிரகாசிக்கும்போது वस्तु-तत्त्व-अवधृत्या-வஸ்துவின் (ஆத்மாவின்) வாஸ்தவத்தன்மை விஷயமாயுள்ள நிச்சய ஞானத்தினால் सर्वः-எல்லா विकल्पः-விகல்பங்களும் विलयनं-நாசத்தை उपगच्छेत्-அடைந்துவிடும். (356)

(அ) இதுவரை சொல்லிக்கொண்டு வந்ததையெல்லாம் சேர்த்து ஸமாதியின் பூர்வாங்கங்கள், ஸமாதிநிலையின்

தன்மை, ஸமாதி நிலையின் பலன் எல்லாவற்றையும் ஒரே சுலோகத்தில் ஸங்கிரஹித்துச் சொல்கிறார் :—

शान्तो दान्तः परमुपरतः क्षान्तियुक्तः समाधिं
कुर्वन्नित्यं कलयति यतिः स्वस्य सर्वात्मभावम् ।
तेनाविद्यातिमिरजनितान्साधु दग्ध्वा विकल्पा-
न्ब्रह्माकृत्या निवसति सुखं निष्क्रियो निर्विकल्पः ॥ ३५७॥

शान्तः-மனதை அடக்கினவராய் दान्तः-இந்திரியங்களை அடக்கினவராய் परं-நன்றாக उपरतः-வெளி பிரவிருத்திகளிலிருந்து விலகினவராய் क्षान्ति युक्तः-(சீதோஷ்ணாதிகளை) பொறுத்துக்கொள்ளும் தன்மை உடையவராய் இருந்துகொண்டு समाधिं ஸமாதியை नित्यं எப்பொழுதும் कुर्वन्-செய்துகொண்டிருக்கும் यतिः-ஸன்னியாஸியானவர் स्वस्य-தன்னுடைய सर्वात्मभावं-எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருக்கும் தன்மையை (எல்லாவற்றையும் தன்னிடத்திலேயே லயம் செய்து தனித்திருக்கும் நிலையை) कलयति-அனுபவிக்கிறார். तेन-அதினால் (அவ்விதம் ஸமாதி நிலையிலிருப்பதினால்) अविद्या तिमिर जनितान्-அவித்யையாகிற இருட்டினால் ஏற்படும் विकल्पान्-பலவித கல்பனைகளையெல்லாம் साधु-நன்றாக दग्ध्वा- எரித்துவிட்டு निष्क्रियः-எவ்வித வியாபாரமுமன்னியிலும் निर्विकल्पः-எவ்வித விகல்பமன்னியிலும் ब्रह्माकृत्या - பிரஹ்மஸ்வரூபமாகவே सुखं - ஆனந்தமாக निवसति இருந்துவிடுகிறார். (357)

(அ) இவ்வித அனுபவம் ஏற்பட்டால்தான் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடமுடியும், அனுபவமில்லாத வெறும் ஞானம் போதாது என்பதைத் துலக்குகிறார் :—

समाहिता ये प्रविलाप्य बाह्यं श्रोत्रादि चेतः स्वमहं चिदात्मनि ।
त एव मुक्ता भवपाशबन्धैर्नान्ये तु पारोक्ष्यकथाभिधायिनः ॥ ३५८॥

ये-எவர்கள் स्वं-தன்னுடைய बाह्यं - வெளியிலுள்ள



श्रोत्रादि-சுரோத்திரம் முதலிய இந்திரியங்களையும் (ஐந்து பூதங்களையும்) (உள்ளேயுள்ள) चेतः-மனஸ் अहं-அஹங்காரம் இவைகளையும் चिदात्मनि-ஞானஸ்வரூபமாயுள்ள ஆத்மாவினிடத்தில் प्रविलाप्य - நன்கு லயம் செய்து समाहिताः-ஸமாதி நிலையிலிருக்கிறார்களோ ते एव அவர்கள் தான் भव पाश बन्धैः – ஸம்ஸாரமாகிற கயிற்றினால் கட்டப்பட்டிருப்பதிலிருந்து मुक्ताः-விடுபட்டவர்களாவார்கள். पारोक्ष्य कथा अभिधायिनः-(நானே பிரஹ்மம் என்று) வெளிப்பேச்சு சொல்லிக்கொண்டிருக்கும் अन्ये तु-மற்றவர்களோ न-விடுபட்டவர்களாக மாட்டார்கள்.

उपाधियोगात्स्वयमेव भिद्यते चोपाध्यपोहे स्वयमेव केवलः ।
तस्मादुपाधेर्विलयाय विद्वान्वसेत्सदाऽकल्पसमाधिनिष्ठया ॥ ३५९ ॥

(ஆத்மா) उपाधि योगादेव-(மாயை, அவித்யை, பஞ்ச கோசங்கள் ஆகிய) உபாதிகளின் சேர்க்கையால் தான் स्वयं-தானும் भिद्यते-வேற்றுமையடைகிறார். उपाधि अपोहे च-அவ்வுபாதி விலகிவிட்டாலோ स्वयं-தானே केवलः एव-தனித்திருப்பவரேயாவார். तस्मात्-ஆகையால் विद्वान्-அறிவுள்ளவர் उपाधेः – உபாதியினுடைய (முக்யமாக அஹங்காரத்தின்) विलयाय நன்கு லயத்தை யுத்தேசித்து सदा – எப்பொழுதும் अकल्प समाधि निष्ठया – நிர்விகல்ப ஸமாதியில் நிலைத்திருப்பதுடன் वसेत् – இருந்துவர வேண்டியது. (359)

सति शक्तो नरो याति सद्भावं ह्येकनिष्ठया ।
कीटको भ्रमरं ध्यायन्भ्रमरत्वाय कल्पते ॥ ३६० ॥

कीटकः - ஒரு சிறு புழு भ्रमरं – வண்டை ध्यायन् – நினைத்துக் கொண்டிருந்து भ्रमरत्वाय-வண்டின் தன்மையை அடைய कल्पते – முடிகிறது. (அதைப் போலவே) सति-பிரஹ்மத்தில் सक्तः – ஈடுபட்டிருக்கும் नरः-மனுஷ்யன் एकनिष्ठया-அது ஒன்றிலேயே நிலைத்

திருப்பதினால் सद्भावं-பிரஹ்மத் தன்மையை याति हि-அடையவே அடைவான். (360)

(அ) தியானம் செய்யும் புழு தியானம் செய்யப்பட்ட வண்டாக ஆகிறதில்லை, வேறு வண்டாகவல்லவா ஆகிறது? அதுபோல் இங்கேயும் ஸமாதியில் ஈடுபடும் ஜீவன் வேறொரு பிரஹ்மமாக ஆகலாமே தவிர அதே பிரஹ்மமாக ஆக முடியாதே? என்று தோன்றலாம். வண்டுகள் பல உள்ளதால் வேறு வண்டாக புழு ஆகிறது. பிரஹ்மம் ஒன்றேதான் உள்ளது, அதில் ஏதேனும் வேற்றுமை தோன்றினாலும் அது அறியாமையினாலேயே தோன்றுவதால் வாஸ்தவமில்லை. ஆகையால் வேறு பிரஹ்மமாவதற்கு இங்கே இடமில்லை, அதே பிரஹ்மமாகத்தான் ஆகமுடியும் என்பதையும் வண்டாக இல்லாத, வண்டைக் காட்டிலும் வேறான புழு வண்டை தியானம் செய்து வண்டாக ஆகலாமானால், பிரஹ்மமாகவேயிருக்கும் ஜீவன் பிரஹ்மத்தைத் தியானம் செய்து பிரஹ்மமாக ஆவதில் என்ன சிரமம் என்பதையும் காட்டுகிறார்:—

क्रियान्तरासक्तिमपास्य कीटको ध्यायन्यथालिं ह्यलिभावमृच्छति ।
तथैव योगी परमात्मतत्त्वं ध्यात्वा समायाति तदेकनिष्ठया ॥ ३६१ ॥

कीटकः – சிறு புழுவானது क्रियान्तरासक्तिं – வேறு எவ்வித கார்யத்தில் ஈடுபடுவதையும் अपास्य – விட்டு விட்டு (தன்னைக் கொட்டிவிடுமே என்ற பயத்தினாலே) अलिं – வண்டையே ध्यायन् – எண்ணிக் கொண்டிருந்து अलिभावं-வண்டின் தன்மையை यथा-எப்படி ऋच्छति हि-அடைகிறது என்பது பிரஸித்தமோ तथा एव-அப்படிப் போலவே योगी யோகியானவர் तदेकनिष्ठया-(பரமாத்ம தத்வமாகிற) அதில் ஒன்றிலேயே நிலைத்திருப்பதுடன் ध्यात्वा – தியானம் செய்து परमात्मतत्त्वं – பரமாத்மாவின் வாஸ்தவ ஸ்வருபத்தை समायाति – நன்கு (எவ்வித வேற்றுமையுமன்னியில்) அடைந்துவிடுகிறார். (361)

अतीव सूक्ष्मं परमात्मतत्त्वं न स्थूलदृष्ट्या प्रतिपत्तुमर्हति ।
समाधिनात्यन्तसुसूक्ष्मवृत्त्या ज्ञातव्यमार्यैरतिशुद्धबुद्धिभिः ॥ ३६२ ॥



परं-மேலான (பஞ்சகோச விலக்ஷணமான) आत्मतत्त्वं-(ஸச்சிதானந்தருபமான) ஆத்மாவின் வாஸ்தவ ஸ்வருபம் (குணங்களில்லாததால்) अतीव-மிகவும் सूक्ष्मं-ஸூக்ஷ்மமானது स्थूलदृष्ट्या – ஸ்தூல பதார்த்தங்களிலேயே பழகியுள்ள மனோவிருத்தியினால் प्रतिपत्तुं – அறியதற்கு न अर्हति-ஸாத்தியப்படாதது. (ஆகையால்) अतिशुद्धबुद्धिभिः-வெகு நிர்மலமான புத்தியையுடைய आर्यैः – ஆர்யர்களினால் (சுருதி, ஸ்மிருதிகளில் குறிப்பிட்டிருக்கும் ஸாதனங்களை அனுஷ்டிப்பவர்களால்) अत्यन्तसुसूक्ष्मवृत्त्या-வெகு நன்றாகவும் ஸூக்ஷ்மமாகவுமிருக்கிற மனோவிருத்தியாகிற समाधिना – ஸமாதியினால் (தான்) ज्ञातव्यं – அறியத்தக்கது. (362)

(அ) மனஸிற்கு நிர்மலத்தன்மை எவ்விதம் ஏற்படுமென்பதை இரண்டு சுலோகங்களால் காட்டுகிறார்:—

यथा सुवर्णं पुटपाकशोधितं त्यक्त्वा मलं स्वात्मगुणं समृच्छति ।
तथा मनः सत्त्वरजस्तमोमलं ध्यानेन संत्यज्य समेति तत्त्वम् ॥ ३६३ ॥

पुटपाक शोधितं – புடம்போட்டு சுத்திசெய்யப்பட்ட सुवर्णं – தங்கம் यथा – எப்படி मलं – அழுக்கையெல்லாம் त्यक्त्वा-தள்ளிவிட்டு स्व आत्म गुणं-தனக்கு சொந்தமான குணத்தை समृच्छति – நன்கு அடைகிறதோ, तथा-அப்படியே मनः – மனஸானது ध्यानेन – தியானத்தினால் सत्त्व रजः तमः मलं-(ஆத்மாவை அசுத்தப்படுத்துகிற மாயையின் கார்யங்களான) ஸத்வம், ரஜஸ், தமஸ் (என்ற மூன்று குணங்களாகிற) அழுக்கை संत्यज्य-நன்கு விலக்கிவிட்டு तत्त्वं-ஆத்மாவின் வாஸ்தவ ஸ்வருபத்தை (பிரஹ்மமாயிருக்கும் தன்மையை) समेति-நன்கு அடைகிறது.

தங்கத்தின் ஸ்வபாவமான ஒளியையும் நிறத்தையும் மறைத்துக்கொண்டிருக்கும் அழுக்கைப் போக்குவதற்காக தங்கத்தை புடத்தில் போட்டு நெருப்பில் வைத்து சுத்தப்படுத்துவது வழக்கம். இதுவே புடபாகம். இதனால் அழுக்கு

நீங்கி தங்கம் ஒளியுடன் விளங்கும். இதுபோல் த்யானத்தால் மனதிலுள்ள ஸத்வரஜஸ்தமோ குணங்கள் என்ற அழுக்கு நீங்கியதும் ப்ரஹ்மமாக ஆய்விடுகிறது "ரஜோகுணமும் தமோ குணமும் தானே மலமாகும், ஸத்வகுணம் மலமாகாதே! 'ரஜஸ் தமோ மலங்களை நீக்குவதற்காக ஸத்வகுணத்தைக் கைக்கொள்ளவேண்டும், ஸத்வகுணத்தைக்கொண்டு அத்யாஸத்தைப் போக்கவேண்டும்' என்றெல்லாம் கூறப் பட்டிருக்கிறதே" என்று கேட்கலாம். ஆனாலும் முக்குணங் களையும் கடந்தவன்தான் பிரஹ்மத்தையடைகிறான் என்றும் 'சுத்த ஸத்வப்ரதானமான மாயை விலகுகிறது' என்றும் கூறப்பட்டிருப்பதாலும் சுத்த ஸத்வமும் மித்யையானபடி யாலும் அதுவும் விலக்கவேண்டிய மலம்தான் 'எந்த சுத்த ஸத்வகுணத்தைக்கொண்டு ரஜஸ் தமோகுணங்களை விலக்கு கிறாயோ அதையும் விலக்கவேண்டும்' என்று கூறப்பட்டிருக் கிறது. ஸத்வகுணம் மிஞ்சியிருந்தால் நிர்குணமான பிரஹ்மத்தை அடையமுடியாது மூலாக்ஞானத்தைப்போக்கும் ஸாத்விகமான அகண்டாகார விருத்தியும் தானாகவே அழிந்து விடுகிறது. ஆதலால் ஸத்வகுணமும் மலம்தான். (363)

निरन्तराभ्यासवशात्तदित्थं पक्वं मनो ब्रह्मणि लीयते यदा ।
तदा समाधिः स विकल्पवर्जितः स्वतोऽद्वयानन्दरसानुभावकः ॥

निरन्तर अभ्यास वशात्-இடைவிடாமல் அப்பியாஸம் செய்வது காரணமாக इत्थं-இவ்விதம் तत्-அந்த मनः-மனஸ் पक्वं-பக்குவமாகி ब्रह्मणि-பிரஹ்மத்தினிடத்தில் यदा-எப்பொழுது लीयते-லயிக்கிறதோ, तदा-அப்பொழுது स्वतः-தானாகவே (வேறு பிரயத்தனத்திற்கு அவசிய மில்லாமல்) अद्वय आनन्द रस अनुभावकः-இரண்டற்ற ஆனந்த ரஸத்தை அனுபவிக்கும்படிச் செய்யும் सः-அந்த समाधिः-ஸமாதி विकल्प वर्जितः-எவ்வித கல்பனையுமற்றது, நிர்வி கல்ப ஸமாதி (எனப்படும்)

இங்கு மனதின் பக்வமென்பது விபரீத பாவனை முதலான தோஷங்கள் நீங்குவது மனதிற்கு ப்ரஹ்மத்தில் லயமென்பது ஒரு விருத்தியுமில்லாமல் ப்ரஹ்ம மாத்ரமாக இருப்பது. (364)



समाधिनानेन समस्तवासनाग्रन्थेर्विनाशोऽखिलकर्मनाशः ।
अन्तर्बहिः सर्वत एव सर्वदा स्वरूपविस्फूर्तिरयत्नतः स्यात् ॥ ३६५ ॥

अनेन-இந்த (நிர்விகல்ப) समाधिना-ஸமாதியினால் समस्त वासना ग्रन्थेः-(அவித்யையினால் ஏற்பட்ட) எல்லாவித வாஸனைகளாகிற முடிச்சிற்கு विनाशः-பூராவும் நாசமும், अखिल कर्म नाशः-(முன் சேகரிக்கப்பட்டுள்ள) எல்லா கர்மாக்களின் நாசமும், अन्तः-உள்ளேயும் बहिः-வெளி யிலும் सर्वतः-எல்லாவற்றிலும் सर्वदा-எப்பொழுதும் एव-கூட स्वरूप विस्फूर्तिः-ஆத்மஸ்வரூபத்தின் நன்கு பிரகாச முமும், अयत्नतः-எவ்வித யத்தினமுமன்னியில் स्यात्-ஏற்படும். (365)

श्रुतेः शतगुणं विद्यान्मननं मननादपि ।
निदिध्यासं लक्षगुणमनन्तं निर्विकल्पकम् ॥ ३६६ ॥

श्रुतेः-சிரவணத்தைவிட मननं-மனனமானது शतगुणं-நூறுபங்கு (பிரயோஜனமுள்ளது என்று) विद्यात्-அறிந்து கொள்ள வேண்டும். मननात् மனனத்தைக்காட்டிலும் अपि-கூட निदिध्यासं-நிதித்யாஸனத்தை लक्षगुणं-லக்ஷம் பங்கு (பிரயோஜன முள்ளது என்றும்), निर्विकल्पकं-நிர்விகல்பக ஸமாதியை अनन्तं-எண்ணற்ற பங்கு (பிரயோஜன முள்ளது என்றும் அறியவேண்டும்) (366)

निर्विकल्पकसमाधिना स्फुटं ब्रह्मतत्त्वमवगम्यते ध्रुवम् ।
नान्यथा चलतया मनोगतेः प्रत्ययान्तरविमिश्रितं भवेत् ॥३६७॥

निर्विकल्पक समाधिना-நிர்விகல்பக ஸமாதியினால் ब्रह्म तत्वं-பிரஹ்மத்தின் தத்வம் स्फुटं-தெளிவாக अवगम्यते-அறியப்படுகிறது. ध्रुवं-இது நிச்சயம். अन्यथा-வேறு பிரகாரமாக न-அறியமுடியாது. मनोगतेः மனஸின் போக்கு चलतया-சஞ்சலமாயிருப்பதால் (அந்த தத்வம்) प्रत्ययान्तर विमिश्रितं-வேறுவித எண்ணங்களுடன் (தேஹம்

முதலானது நான் என்பதுபோலுள்ள தோற்றங்களுடன்) நன்கு கலங்கியே भवेत्-இருக்கும். (367)

(அ) ஆகையால் நிர்விகல்பஸமாதியை அவசியம் அப்யாஸம் செய்யவேண்டுமென்று முடிக்கிறார் :—

अतः समाधत्स्व यतेन्द्रियः सन् निरन्तरं शान्तमनाः प्रतीचि ।
विध्वंसय ध्वान्तमनाद्यविद्यया कृतं सदेकत्वविलोकनेन ॥ ३६८ ॥

अतः-மேலே சொன்ன காரணங்களினால் यतेन्द्रियः-கட்டுப்படுத்தின இந்திரியங்களுடையவனாய் शान्त मनाः-விருத்திகள் அடங்கின மனஸுள்ளவனாய் सन्-இருந்துகொண்டு प्रतीचि-உள்ளேயிருக்கும் ஆத்மாவினிடத்தில் निरन्तरं-இடைவிடாமல் समाधत्स्व-மனஸை நிலைநிறுத்து अनादि अविद्यया-அனாதியான அவித்யையினால் कृतं-உண்டு பண்ணப்பட்டிருக்கும் ध्वान्तं-இருட்டை सत् एकत्व विलोकनेन-ஸத் ஒன்றுதான் உள்ளது என்று ஸாக்ஷாத்கரிப்பதினால் विध्वंसय-நன்கு போக்கிவிடு. (368)

## 33. ஸமாதிக்கு ஸாதனங்கள்

(அ) அவ்வித நிர்விகல்பக ஸமாதி ஏற்படுவதற்குள்ள ஸாதனங்களை எடுத்துச்சொல்கிறார் :—

योगस्य प्रथमं द्वारं वाङ्निरोधोऽपरिग्रहः ।
निराशा च निरीहा च नित्यमेकान्तशीलता ॥ ३६९ ॥

योगस्य (மனோவிருத்திகளை அடக்குவதான) யோகத்திற்கு प्रथमं-முதலாவது द्वारं-வாயிலாயிருப்பது वाक् निरोधः-பேச்சைக் கட்டுப்படுத்துவது; अपरिग्रहः-(சரீர ஸ்திதிக்கு அவசியமானதைத் தவிர வேறு) எந்த பதார்த்தத்தையும் வைத்துக்கொள்ளாமலிருப்பதும், निराशा च-ஆசையற்றிருப்பதும், निरीहा च-எவ்வித வெளி வியாபாரமற்றிருப்பதும், नित्यं-எப்பொழுதும் एकान्त



शीलता-(ஜனங்களில்லாத இடத்தில்) தனித்தேயிருக்கும் பழக்கத்துடனிருப்பதும். (யோகத்திற்கு ஸாதனங்கள்)

மௌனத்தைக் கைக்கொள்ளாமல் அதிகமாகப் பேசினால் அடக்கமுடியாமல் மனோவிருத்திகள் வளரும். தேவைக்கு அதிகமாக பொருள்களை சேகரித்தால் அதை காப்பாற்றுவதிலேயே மனம் ஈடுபடும். ஆசையும் கர்மாக்களும் ஜனக் கூட்டமும் மனதிற்கு விக்ஷேபத்தைக்கொடுக்கும். (369)

(அ) ஏகாந்த வாஸத்தில் சப்தம் முதலான விஷயங்களில்லாமையால் காது முதலான இந்திரியங்கள் வெளியில் போகாமல் அடங்கும். இந்திரியங்கள் அடங்கினால் மனஸ் ஒடுங்கி ஆத்மாபிமுகமாக ஆகும் அதனால் நான் என்ற வாஸனைகள் குறையும், வாஸனையற்றுப்போனால் ஆனந்தானுபவம் ஏற்படும், என்பதை வர்ணிக்கிறார் :—

एकान्तस्थितिरिन्द्रियोपरमणे हेतुर्दमश्चेतसः
संरोधे करणं शमेन विलयं यायादहंवासना ।
तेनानन्दरसानुभूतिरचला ब्राह्मी सदा योगिन-
स्तस्माच्चित्तनिरोध एव सततं कार्यः प्रयत्नान्मुनेः ॥

एकान्त स्थितिः-தனித்து இருப்பது इन्द्रिय उपरमणे-இந்திரியங்கள் அடங்குவதில் हेतुः-காரணமாகும். दमः-இந்திரியங்களை அடக்குதல் चेतसः-மனஸை संरोधे-அடக்குவதில் करणं-உபயோகப்படும் கருவி. शमेन-மனஸ் அடங்குவதினால் अहं वासना-(தேஹம் முதலானதுகளில்) "நான்" என்ற வாஸனை विलयं-லயத்தை यायात्-அடையும். तेन-அதினால் (அப்படி வாஸனை லயமடைவதால்) ब्राह्मी-ப்ரஹ்ம விஷயமான आनन्द रस अनुभूतिः-ஆனந்த ரஸத்தின் அனுபவம் योगिनः-யோகிக்கு सदा-எப்பொழுதும் अचला-அசைவற்று ஸ்திரமாக (ஏற்படும்). तस्मात्-ஆகையால் चित्त निरोधः-மனஸை அடக்குவது एव-தான் मुनेः-யோகிக்கு सततं-எப்பொழுதும் प्रयत्नात्-பிரயாஸை எடுத்துக்கொண்டு कार्यः-செய்யவேண்டிய கார்யம். (370)

(அ) பேச்சை அடக்குவதிலிருந்து ஆரம்பித்து செய்ய வேண்டிய அப்பியாஸத்தை கடோபநிஷத்தில் கண்ட முறையை அனுஸரித்து எடுத்துச்சொல்கிறார் :—

वाचं नियच्छात्मनि तं नियच्छ बुद्धौ धियं यच्छ च बुद्धिसाक्षिणि ।
तं चापि पूर्णात्मनि निर्विकल्पे विलाप्य शान्तिं परमां भजस्व ॥

वाचं - வாக் இந்திரியத்தை आत्मनि - மனஸிற்குள் नियच्छ- அடக்கிக்கொள். (பேசுவதை நிறுத்திக்கொண்டு மனஸில் எண்ணுவதோடு இருந்துவா. அதன் பிறகு) तं- அந்த மனஸை बुद्धौ - புத்தியில் नियच्छ- அடக்கிக் கொள் (பலவிதமாக ஆலோசிப்பதை விட்டு தீர்மானத் துடன் நின்றுவிடு. அதன் பிறகு) धियं च-புத்தியையும் बुद्धि साक्षिणि புத்திக்கும் ஸாக்ஷியான ('த்வம்' பதத்தின் லக்ஷ்யார்த்தமான) பிரத்யகாத்ம சைதன்யத்தில் यच्छ- அடக்கிவிடு. तं च अपि அந்த ஸாக்ஷி சைதன்யத்தையும் கூட निर्विकल्पे-எல்லா கல்பனையுமற்றதான पूर्ण आत्मनि- நிறைந்ததான ('தத்' பதத்தின் லக்ஷ்யமான) பிரஹ்ம சைதன்யத்தில் विलाप्य- நன்கு லயம் செய்து (இரண்டு சைதன்யங்களும் வெவ்வேறல்ல, ஒன்றுதான் என்று அறிந்து) परमां- உத்தமமான शान्ति-(ஸம்ஸாரத்திலிருந்து விடுதலையாகிற) சாந்தியை भजस्व-அடைந்துவிடு.

பசு முதலான பிராணிகளுக்குப்போல் மௌனம் உறுதிப் பட்டபின் மனதை புத்தியில் அடக்கவேண்டும். கையில் உளி இல்லாத சமயம் தச்சன் வேலை செய்யாமல் சும்மா இருப்பதுபோல் வேலை செய்யும் ஸ்வபாவமுள்ளபோதிலும் புத்தி மனோவியாபாரம் என்ற கருவி இல்லாததால் வெளி வியாபாரங்களிலிருந்து ஒதுங்கி சாந்தமாகிவிடுகிறது. (371)

देहप्राणेन्द्रियमनोबुद्ध्यादिभिरुपाधिभिः ।
यैर्यैर्वृत्तेः समायोगस्तत्तद्भावोऽस्य योगिनः ॥ ३७२ ॥

तन्निवृत्त्या मुनेः सम्यक्सर्वोपरमणं सुखम् ।
संदृश्यते सदानन्दरसानुभवविप्लवः ॥ ३७३ ॥



अस्य-இந்த ஆத்மாவிற்கு देह प्राण इन्द्रिय मनोबुद्ध्यादिभिः- தேஹம் (அன்னமயகோசம்) பிராணன் (பிராணமய கோசம்) இந்திரியம் (கர்மேந்திரியங்கள் பிராணமய கோசத்திலும், ஞானேந்திரியங்கள் மனோமய விக்ஞானமய கோசங்களிலும் சேரும்) - மனஸ் (மனோமயகோசம்) - புத்தி (விக்ஞானமய கோசம்)- (ஆனந்தமயகோசம்) முதலான उपाधिभिः - உபாதி களுடன் यैः यैः-எந்த எந்த கோசங்களுடன் वृत्तेः-மனோ விருத்திக்கு समायोगः-ஸம்பந்தம் (ஏற்படுகிறதோ) तत् तत् भावः- அது அதுவாக இருக்கும் தன்மை (ஏற்பட்டு விடுகிறது) मुनेः-ஐந்து கோசங்களும் ஆத்மாவல்ல என்று யுக்திகளால் சிந்தனம் செய்கின்ற योगिनः-மனோ விருத்திகளை யடக்கும் யோகிக்கு तत् निवृत्त्या - அது (உபாதியாகிற கோசம்) விலகிவிடுவதினால் सर्व उपरमणं- (அவைகளுடன் ஸம்பந்தத்தினால் ஏற்படும் ஸுக துக்கம்) எல்லாம் அடங்கும் நிலையான सुखं-ஸ்வருப ஆனந்தம் सम्यक्-நன்கு (ஆவிர்பவிக்கும்). सत् आनन्दरस अनुभवविप्लवः - எப்பொழுதும் இருக்கக்கூடிய ஆனந்த ரஸத்தின் அனுபவத்தினுடைய பெருக்கு संदृश्यते-நன்கு விளங்கும்.

ஸ்படிகம் ஸ்வச்சமாக வெளுப்பாக இருந்தபோதிலும் பக்கத்திலுள்ள பொருள்களின் நிறத்தையொட்டி அந்தந்த நிறமுள்ளதாகக் காணப்படுகிறது இதுபோல ஆத்மாவுக்கும் அன்னமயம் முதலான கோசங்களுடன் மனோவிருத்திகளின் மூலமாக ஸம்பந்தம் ஏற்பட்டு கோச தர்மங்களை தன்னிட மிருப்பதாக எண்ணி பலவித துன்பங்களை யனுபவிக்கிறது. மனோவிருத்திகளையடக்கும் யோகிக்கு கோசங்களுடன் ஸம்பந்தமில்லாததால் அவைகளில் நான் என்ற எண்ணம் நீங்கி எல்லாத் துன்பங்களும் விலகி ஸதா ஆநந்தரஸானுபவத்தில் மூழ்குகிறான் கடும் கோடையில் ஆழமுள்ள கங்காநதியில் மூழ்குபவனுக்கு தாபமெல்லாம் விலகி உள்ளும் வெளியும் ஸுகம் ஏற்படுவதுபோல் யோகிக்கும் ஆனந்தானுபவம் நிறைந்திருக்கும். (372-373)

(அ) 369-வது சுலோகத்தில் 'நிராசா' (ஆசையற்றிருத்தல்) என்ற வைராக்யத்தை யோகத்திற்கு முக்ய ஸாதனமாகக் கூறினர் 177-வது சுலோகத்தில் தீவ்ரதமமான, உறுதியான வைராக்யம் மனசுத்திக்கு காரணமென்று கூறப்பட்டது. இத்தகைய அந்தரங்கஸாதனமான வைராக்யத்தை 6 சுலோகங்களால் நிரூபணம் செய்கிருர் :—

अन्तस्त्यागो बहिस्त्यागो विरक्तस्यैव युज्यते ।
त्यजत्यन्तर्बहिःसङ्गं विरक्तस्तु मुमुक्षया ॥ ३७४ ॥

विरक्तस्य-ஆசையற்றவனுக்கு एव-தான் अन्तस्त्यागः-உள்ளிருப்பவைகளின் (அஹங்காரம் முதல் தேஹம் வரையுள்ளவைகளில் 'நான்' என்கிற எண்ணத்தின்) பரித்யாகமோ, बहिस्त्यागः - வெளியிலிருப்பவைகளின் (புத்திரமித்ராதி விஷயங்களில் "என்னுடையது" என்கிற எண்ணத்தின்) பரித்யாகமோ युज्यते-ஏற்படக் கூடியதாகும். विरक्तः तु-ஆசையற்றவன்தான் मुमुक्षया-மோக்ஷமடைய வேண்டுமென்ற ஆவலினுல் अन्तः बहिः सङ्गं-உள்ளேயும் வெளியிலும் பற்றுதலை त्यजति - விட்டு விடுவான். (374)

(அ) இவ்விஷயத்தையே இன்னமும் தெளிவாகச் சொல்கிருர்:—

बहिस्तु विषयैस्सङ्गस्तथाऽन्तरहमादिभिः ।
विरक्त एव शक्नोति त्यक्तुं ब्रह्मणि निष्ठितः ॥ ३७५ ॥

सङ्गः-பற்றுதல் என்பது बहिः तु-வெளியிலோ विषयैः-விஷயங்களுடன், तथा-அப்படியே अन्तः-உள்ளே अहं आदिभिः-அஹங்காரம் முதலானவைகளுடன். (இவ்விது பற்றுதலை) त्यक्तुं-விட்டுவிடுவதற்கு ब्रह्मणि பிரஹ்மத்தினிடத்தில் निष्ठितः - நிலைத்திருக்கும் विरक्तः -வைராக்ய முள்ளவன் एव-தான் शक्नोति - சக்தியுள்ளவனுவான்.

(அ) பிரஹ்மத்தில் நிலைத்திருப்பதற்கு வைராக்கியம் அவசியமேயானுலும் அதுமாத்திரம் போதாது, ஆத்ம



அநாத்ம விவேசனம் செய்து ஆத்ம ஸ்வருபத்தை நன்கு அறிந்து அனுபவிக்கும் தன்மையும் அவசியம் என்பதை, கீழே இருக்கும் ஒரு பக்ஷி மேல் மாடிக்குப் பறந்துபோக வேண்டுமானுல் எப்படி ஒரு இரக்கையுடன் இருந்தால் போதாது, இரண்டு இரக்கைகளையும் உபயோகப் படுத்தினுல் தான் ஸாத்தியப்படுமோ அது போல என்ற திருஷ்டாந்தத்தை சொல்லி விளக்கிக் காட்டுகிருர் :—

वैराग्यबोधौ पुरुषस्य पक्षिवत्पक्षौ विजानीहि विचक्षण त्वम् ।
विमुक्तिसौधाग्रतलाधिरोहणं ताभ्यां विना नान्यतरेण सिध्यति ॥

पक्षौ-இரண்டு இரக்கைகளும் पक्षिवत्-பக்ஷிக்கு எப்படியோ அதே போல, पुरुषस्य-மோக்ஷமடைய விரும்பும் மனிதனுக்கு वैराग्य बोधौ - வைராக்கியமும் ஆத்மானுபவ ஞானமும் என்று, विचक्षण - ஸாமர்த்திய முள்ளவனே त्वं-நீ विजानीहि-நன்கு தெரிந்துகொள். ताभ्यां - அவ்விரண்டும் विना - சேர்ந்திராமல் अन्यतरेण-அவைகளில் ஒன்றினுல் மாத்திரம் विमुक्ति सौधाग्रतल अधिरोहणं-மோக்ஷமாகிற மாளிகையின் உச்சியிலுள்ள தளத்தை ஏறியடைவது न सिध्यति - ஸாத்தியப்படாது.

अत्यन्तवैराग्यवतः समाधिः समाहितस्यैव दृढप्रबोधः ।
प्रबुद्धतत्त्वस्य हि बन्धमुक्तिर्मुक्तात्मनो नित्यसुखानुभूतिः ॥ ३७७ ॥

अत्यन्त वैराग्यवतः-(மறுபடியும் அநாத்ம பதார்த்தங்களால் இழுக்கமுடியாதபடி) தீவிரமான வைராக்கியத்தையுடையவனுக்கு(த்தான்) समाधिः - ஸமாதி (பிரஹ்மத்தில் நன்கு நிலைத்தல்) (ஸித்திக்கும்). समाहि-तस्य-பிரஹ்மத்தில் நன்கு நிலைத்த மனஸுள்ளவனுக்கு एव-தான் दृढप्रबोधः - (பிரஹ்மத்தைத் தவிர வேறு விஷயங்களில் போகாமல்) திடமான நல்ல ஞானம் (ஏற்படும்). प्रबुद्ध तत्त्वस्य-பிரஹ்மதத்வத்தை நன்கு அறிந்தவனுக்கு हि - அல்லவா बन्धमुक्तिः-(அனுத்மாக்களுடன் சேர்ந்து) கட்டுப்படுவதிலிருந்து விடுதலை

(ஏற்படும்). मुक्त आत्मनः-அவ்விதம் விடுபட்ட மனதை யுடையவனுக்கு(த்தான்) नित्यसुख अनुभूतिः-சாசுவதமான ஆனந்தத்தின் அனுபவம் ஏற்படும். (377)

वैराग्यान्न परं सुखस्य जनकं पश्यामि वश्यात्मन-
स्तच्चेच्छुद्धतरात्मबोधसहितं स्वाराज्यसाम्राज्यधुक् ।
एतद्द्वारमजस्रमुक्तियुवतेर्यस्मात्त्वमस्मात्परं
सर्वत्रास्पृहया सदात्मनि सदा प्रज्ञां कुरु श्रेयसे ॥ ३७८ ॥

वश्यात्मनः-தேஹம், இந்திரியம், மனஸ் இவைகளை நன்கு வசப்படுத்திக்கொண்டிருப்பவருக்கு सुखस्य-ஸுகத்தை जनकं-உண்டுபண்ணக் கூடியது वैराग्यात्-வைராக்கியத்தைவிட परं-வேறு (இருப்பதாக) न पश्यामि-நான் காணவில்லை. तत्-அந்த வைராக்கியம் शुद्धतर आत्मबोध सहितं चेत्-(ஆத்மாவுடன் கலக்காமல்) வெகு சுத்தமான ஆத்மதத்வ ஞானத்துடன் சேர்ந்திருக்கக் கூடுமானால் स्वाराज्य साम्राज्यधुक्-தனக்குத் தானே அரசனாயிருக்கும் தன்மை (பிறருக்குக் கட்டுப்படாது இருத்தல்) எல்லாருக்கும் மேல் அரசனாயிருக்கும் தன்மை (எல்லோரையும் தான் அடக்கியாள்வது) இவைகளைக் கறக்கும் (உண்டுபண்ணும்). ஆசையுள்ளவன் விஷயங்களைத் தேடிச்சென்று பிறருக்குக் கட்டுப்படுவான் வைராக்யமுள்ளவன் தேவையில்லாததால் யாருக்கும் கட்டுப்படமாட்டான். एतत्-இந்த வைராக்கியமானது अजस्रमुक्ति युवतेः-நித்தியமான முக்தியென்ற ஸ்திரீயை அடைவதற்கு द्वारं-வாசற்படி என்பது यस्मात्-எதினலோ अस्मात्-அதினல் त्वं-நீ श्रेयसे-உன்னுடைய உத்தமமான நன்மையின் பொருட்டு सर्वत्र-எல்லா பதார்த்தங்களிலும் परं-மிகவும் अस्पृहया-ஆசையற்று सत् आत्मनि-ஸத்தாகிய ஆத்ம ஸ்வரூபத்தில் सदा-எப்பொழுதும் प्रज्ञां-(ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை உண்டுபண்ணக்கூடிய) நிர்விகல்பக ஸமாதியை। कुरु-செய்.



ஆஸநம், பிராணாயாமம் முதலான ஹடயோக முறைகளைச் செய்து சரீரத்தை வசப்படுத்தியபோதிலும் வைராக்கியம் இல்லாவிடில் ஸுகம் ஏற்படாது. யோகிகளும்கூட அணிமா முதலான ஸித்திகளில் மனதைச் செலுத்தினால் பந்தம்தான் உறுதியாகும். ஹிரண்யகசிபு முதலான அஸுரர்கள் முதலில் சரீரம், இந்திரியம், மனம் முதலானவைகளை அடக்கி கடும் தவம் செய்தபோதிலும் வைராக்கியம் இல்லாததால் விஷய போகங்களில் ஈடுபட்டு அழிந்துபோனார்கள் என்பதைப் புராணங்களில் காண்கிறோம். பசி, தாகத்தை மறந்து உடல் அஸ்தி மாத்ரமாக ஆகி அதில் எறும்பு ஊறினபோதிலும் பக்ஷிகள் கூடுகட்டியபோதிலும் அதைக்கண்டு கலங்காமல் தவத்தில் ஈடுபட்டிருந்தார்கள் என்றால் அவர்கள் சரீரத்தை வசப்படுத்தியவர்கள் என்பதில் என்ன ஸந்தேஹம்? தேஹத்தை வசப்படுத்தாதவனுக்கு ஒருக்காலும் வைராக்யம் ஏற்படாது. (378)

आशां छिन्धि विषोपमेषु विषयेष्वेषैव मृत्योः सृति-
स्त्यक्त्वा जातिकुलाश्रमेष्वभिमतिं मुञ्चातिदूरात्क्रियाः ।
देहादावसति त्यजात्मधिषणां प्रज्ञां कुरुष्वात्मनि
त्वं द्रष्टास्यमलोऽसि निर्द्वयपरब्रह्मासि यद्वस्तुतः ॥ ३७९ ॥

विषोपमेषु-விஷத்திற்கு ஸமானமாயிருக்கிற विषयेषु-விஷயங்களில் आशां-ஆசையை छिन्धि-அறுத்துவிடு. एषा-இந்த ஆசை एव-தான் मृत्योः-ஸ்வஸ்வரூபத்திலிருந்து நழுவிவிடுவது என்ற மிருத்யுவிற்கு सृतिः-மார்க்கம். जाति कुल आश्रमेषु-(சரீரத்தையொட்டியிருக்கும்) ஜாதி குலம் ஆசிரமம் இவைகளில் अभिमतिं-அபிமானத்தை त्यक्त्वा-விட்டுவிட்டு (அவ்வபிமானத்தினல் ஏற்பட்டிருக்கும் எல்லாவித) क्रियाः-கார்யங்களையும் अतिदूरात्-வெகு தூரத்திலேயே मुञ्च-விட்டுவிடு. असति-ஸத் இல்லாத (பொய்யான) देहादौ-தேஹம் முத

லானதில் आत्मधिषणां ஆத்மாவென்கிற எண்ணத்தை त्यज-விட்டுவிடு. यत् - எந்தக் காரணத்தினால் त्वं-நீ वस्तुतः-வாஸ்தவமாய் द्रष्टा-பார்க்கிறவனாக असि-இருக்கிறாயோ, अमलः-எவ்வித தோஷமுமற்றவனாய் असि-இருக்கிறாயோ, निर्द्वय परब्रह्म-இரண்டற்ற மேலான பிரஹ்மமாக असि-இருக்கிறாயோ (அதினால்), आत्मनि-ஆத்மாவினிடத்திலேயே दृढां-திடமான ஞானத்தை (ஸமாதி நிலையை) कुरुष्व-செய்துகொள். (379)

(அ) அவ்வித ஆத்ம நிஷ்டை ஏற்பட்டால் பிரஹ்மானந்த அனுபவம் ஏற்படுமென்பதைச் சொல்கிறார் —

लक्ष्ये ब्रह्मणि मानसं दृढतरं संस्थाप्य बाह्येन्द्रियं
स्वस्थाने विनिवेश्य निश्चलतनुश्चोपेक्ष्य देहस्थितिम् ।
ब्रह्मात्मैक्यमुपेत्य तन्मयतया चाखण्डवृत्त्यानिशं
ब्रह्मानन्दरसं पिबात्मनि मुदा शून्यैः किमन्यैर्भ्रमैः ॥ ३८० ॥

लक्ष्ये - உத்தேசமான ब्रह्मणि - பிரஹ்மத்தினிடத்தில் मानसं மனதை दृढतरं-வெகு திடமாக संस्थाप्य நன்கு நிறுத்தி, बाह्येन्द्रियं-(கர்மேந்திரியங்கள், ஞானேந்திரியங்கள் ஆகிய) வெளி இந்திரியங்களை स्वस्थाने-அகதற்கு சொந்தமான இடமாகிய கோளகங்களிலேயே विनिवेश्य-(வெளியில் போகவிடாமல்) நன்கு இருக்கும்படிச் செய்து, देहस्थितिं-பிராரப்தகர்மா சரீரத்தைக் காப்பாற்றும் என்ற உறுதியால் தேஹத்தினுடைய ஸம்ரக்ஷணையை उपेक्ष्य च-கவனிக்காமலும், निश्चल तनुः-(ஸ்திர ஸுகமான ஆஸனத்தில் அமர்ந்து) அசையாத சரீரமுடையவனாய், तन्मयतया - அதுவாகவே (பிரஹ்மமாகவே) இருக்கும் தன்மையினால் ब्रह्म आत्म ऐक्यं-பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்றேதான் என்ற நிலையை उपेत्य-அடைந்து (ஸாக்ஷாத்காரம் செய்து) अखण्डवृत्त्या-இடையில்லாத விருத்தியினால் अनिशं च-எப்பொழுதுமே



ब्रह्मानन्द रसं - பிரஹ்மானந்தத்தின் ரஸத்தை आत्मनि - தன்னிடத்திலேயே मुदा-ஸந்தோஷமாக पिब-அருந்து. शून्यैः-பிரயோஜனமற்றதான अन्यैः-(அனாத்ம விஷயமாயுள்ள) வேறு भ्रमैः பிராந்திக்ஞானங்களினால் किं-என்ன பிரயோஜனம்? (380)

अनात्मचिन्तनं त्यक्त्वा कश्मलं दुःखकारणम् ।
चिन्तयात्मानमानन्दरूपं यन्मुक्तिकारणम् ॥ ३८१ ॥

कश्मलं - அசுத்தமாயும் दुःख कारणं - துக்கத்திற்குக் காரணமாயுமுள்ள अनात्म चिन्तनं - அனாத்மவிஷயமான சிந்தனையை त्यक्त्वा விட்டு விட்டு, यत्-எது मुक्ति कारणं-முக்திக்கு காரணமாயிருக்கிறதோ (அந்த) आनन्द रूपं-ஆனந்த ஸ்வரூபமான आत्मानं - ஆத்மாவை चिन्तय - சிந்தனை செய் (381)

एष स्वयंज्योतिरशेषसाक्षी विज्ञानकोशे विलसत्यजस्रम् ।
लक्ष्यं विधायैनमसद्विलक्षणमखण्डवृत्त्यात्मतयानुभावय ॥ ३८२ ॥

एषः-இவர் स्वयं ज्योतिः-(வேறு எதையும் அபேக்ஷிக்காமல்) தானே பிரகாசிப்பவர், अशेष साक्षी-எல்லாவற்றையும் ஸாக்ஷியாயிருந்து பார்த்துக்கொண்டிருப்பவர், विज्ञानकोशे-விக்ஞான கோசத்தில் (புத்தியில்) अजस्रं-இடைவிடாமல் विलसति-பிரகாசித்துக்கொண்டிருக்கிறார். (அதனால்) असद् विलक्षणं-அஸத் பதார்த்தத்திற்கு (ஜடமாயும் அறியப்படுகிறதாயுமுள்ள புத்தி முதலான அனாத்மாவிற்கு) நேர்மாறுதலான லக்ஷணத்தையுடைய एनं - இவரை लक्ष्यं - லக்ஷ்யமாக विधाय-வைத்துக்கொண்டு अखण्ड वृत्त्या-துண்டு விழாத விருத்தியுடன் आत्मतया-ஆத்ம ஸ்வரூபமாக अनुभावय-ஸாக்ஷாத்காரம் செய். (382)

(அ) 'துண்டு விழாத விருத்தி' என்றால் எப்படி என்பதை விளக்குகிறார் —

एतमच्छिन्नया वृत्त्या प्रत्ययान्तरशून्यया ।
उल्लेखयन्विजानीयात्स्वस्वरूपतया स्फुटम् ॥ ३८३ ॥

अच्छिन्नया-(அழுக்கற்ற திரியுடனும் எண்ணெயுடனும் கூடிய தீபத்தின் ஜ்வாலை போலும் தைலதாரை போலும்) இடைவிடாமல் தொடர்ந்ததாயும் प्रत्ययान्तरशून्यया-(ஆத்மாவைத்தவிர) வேறு எண்ணங்களற்றதாயும் உள்ள वृत्त्या-விருத்தியினால் एतं-இவரை (ஆத்மாவை) उल्लेखयन्-எண்ணிக்கொண்டு स्वस्वरूपतया-தன்னுடைய ஸ்வரூபம் என்பதாக स्फुटं-தெளிவாக विजानीयात्-அறிந்துகொள்ள வேண்டும். (383)

अत्रात्मत्वं दृढीकुर्वन्नहमादिषु संत्यजन् ।
उदासीनतया तेषु तिष्ठेद्घटपटादिवत् ॥ ३८४ ॥

अत्र இதனிடத்தில் (ஆத்மாவினிடத்தில்) आत्मत्वं-'தான்' என்ற தன்மையை दृढीकुर्वन्-திடமாக (தீர்மானமாக) செய்துகொண்டு, अहमादिषु அஹங்காரம் முதலானவைகளில் ("தான்" என்ற தன்மையை) संत्यजन्-பூராவும் விட்டுவிட்டு, तेषु-அவைகளில் घट पटादिवत्-குடம் வஸ்திரம் முதலியவைகளில் (எப்படி "தான்" என்று எண்ணுவது கிடையாதோ அதைப்) போல उदासीनतया-உதாஸீனமாக ("நான்" என்ற பாவனையில்லாமல்) तिष्ठेत्-இருக்கவேண்டும். (384)

(அ) முன் 371வது சுலோகத்தில் இவ்விதம் புத்தி முதலானவைகளுக்கெல்லாம் ஸாக்ஷியாக இருக்கிற ஆத்மாவையும் விகல்பமற்று பரிபூர்ணமாயுள்ள பிரஹ்மத்தில் லயப்படுத்த வேண்டுமென்று சொன்னதை எவ்விதம் செய்வதென்று மூன்று சுலோகங்களில் காட்டுகிறார் —

विशुद्धमन्तःकरणं स्वरूपे निवेश्य साक्षिण्यवबोधमात्रे ।
शनैः शनैर्निश्चलतामुपानयन्पूर्णत्वमेवानुविलोकयेत्ततः ॥ ३८५ ॥



विशुद्धं-(ரஜோ குணம் தமோ குணம் நீங்கி) நன்கு சுத்தமாயிருக்கும் अन्तःकरणं-அந்தःகரணத்தை अवबोधमात्रे-(உபாதிகளற்ற) ஞானஸ்வரூபமாகமட்டுமிருக்கும் साक्षिणि-ஸாக்ஷியாகிய स्वरूपे-ஸ்வரூபத்தில் निवेश्य-நன்கு வைத்து, शनैः शनैः-மெள்ள மெள்ள निश्चलतां-அசைவற்ற தன்மையை उपानयन्-ஏற்படுத்திக்கொண்டு, ततः-அதன் பிறகு पूर्णत्वं एव-பரிபூர்ணமாயிருக்கும் தன்மையையே अनुविलोकयेत्-ஸாக்ஷாத்கரிக்க வேண்டும்.

கண்ணாடிக்கெதிரில் நின்று பார்க்கும்பொழுது நம் முகத்தைதக்காட்டிலும் வேருகக் கண்ணாடிக்குள் பிரதிபிம்பம் தெரிகிறது. கண்ணாடியை யகற்றிவிட்டால் அந்த பிரதி பிம்பம் பிம்பமான முகத்துடன் ஒன்ருகச் சேர்ந்துவிடுகிறது. இதுபோல் பிரஹ்மம் மனதில் பிரதிபிம்பித்து சிதாபாஸனாக தனியாகத் தோன்றிக்கொண்டிருந்தது. எல்லா விருத்திகளையும் அடக்கியவுடன் உபாதி நீங்கிவிட்டபடியால் பிரதிபிம்பமான சிதாபாஸன் பிம்பமான பிரஹ்மத்துடன் ஒன்றிவிடுகிறது.

देहेन्द्रियप्राणमनोहमादिभिः स्वाज्ञानक्लृप्तैरखिलैरुपाधिभिः ।
विमुक्तमात्मानमखण्डरूपं पूर्णं महाकाशमिवावलोकयेत् ॥ ३८६ ॥

स्वाज्ञान क्लृप्तैः-தன் ஸ்வரூபத்தை அறியாததினால் ஏற்பட்டிருக்கும் देह इन्द्रिय प्राण मनो अहं आदिभिः-தேஹம் இந்திரியம் பிராணன் மனஸ் அஹங்காரம் முதலான अखिलैः-எல்லா उपाधिभिः-உபாதிகளால் विमुक्तं-நன்கு விடப்பட்டிருக்கிற आत्मानं ஆத்மாவை महाकाशं इव-வியாபகமான ஆகாசத்தைப்போல, अखण्डरूपं துண்டு படாத ஸ்வரூபமாய் पूर्णं-நிறைந்ததாக अवलोकयेत्-ஸாக்ஷாத்கரிக்கவேண்டும். (386)

(அ) 'ஆகாசத்தைப்போல' என்பதை தெளிவுபடுத்துகிறார் —

घटकलशकुसूलसूचिमुख्यैर्गगनमुपाधिशतैर्विमुक्तमेकम् ।
भवति न विविधं तथैव शुद्धं परमहमादिविमुक्तमेकमेव ॥ ३८७ ॥

घट कलश कुसूल सूचि मुख्यैः-குடம், கலசம், குதிர், ஊசி முதலான उपाधिशतैः-(சிறிதும் பெரியதுமான, பலவாகத் தோற்றத்திற்குக் காரணமான) நூற்றுக்கணக்கான உபாதிகளினால் विमुक्तं-நன்கு விடப்பட்டிருக்கும் गगनं-ஆகாசம் एकं-ஒன்றாகவே भवति-இருக்கிறது, विविधं-பலவிதமாக न-இருப்பதில்லை. तथा एव-அவ்விதமே, अहमादि विमुक्तं-அஹங்காரம் முதலானவைகளிலிருந்து நன்கு விடப்பட்ட शुद्धं-சுத்தமான परं மேலான வஸ்துவான ஆத்மா एकं एव-ஒன்றே தான். (387)

(அ) ஆகாச திருஷ்டாந்தத்தில். உபாதிகளாகக்கண்ட குடம் முதலியவைகளுக்கு ஆகாசத்தைப்போலவே வியாவஹாரிகஸத்தையுண்டு; ஆத்மாவிற்கு ஏற்பட்ட உபாதிகள் வெறும் தோற்றமாயே இருப்பதால் ஆத்மாவின் ஏகமாயிருக்கும் தன்மையை உணர்வது சிரமமில்லையென்ற கருத்துடன் சொல்கிறார் —

ब्रह्मादिस्तम्बपर्यन्ता मृषामात्रा उपाधयः ।
ततः पूर्णं स्वमात्मानं पश्येदेकात्मना स्थितम् ॥ ३८८ ॥

ब्रह्म आद्याः-ஹிரண்ய கர்ப்பர் முதல் स्तम्ब पर्यन्ताः-ஸ்தம்பமென்ற சிறு பூச்சி வரையாகிற उपाधयः-உபாதிகள் मृषामात्राः-மித்யையே. ततः-ஆகையால் स्वं-தன்னுடைய आत्मानं-ஆத்மாவை एकात्मना-ஒரேவிதமாக स्थितं-இருக்கும் पूर्णं-பரிபூர்ண வஸ்துவாக पश्येत्-பார்க்கவேண்டும். (388)

यत्र भ्रान्त्या कल्पितं यद्विवेके तत्तन्मात्रं नैव तस्माद्विभिन्नम् ।
भ्रान्तेर्नाशे भ्रान्तिदृष्टाहितत्त्वं रज्जुस्तद्वद्विश्वमात्मस्वरूपम् ॥

यत्र-எதினிடத்தில் यत्-எது भ्रान्त्या-பிராந்தியினால் कल्पितं-கல்பிக்கப்பட்டதோ, तत्-அது विवेके-விசாரித்துப் பார்க்கும்போது तत् मात्रं-அந்த அதிஷ்டானமாகவே தானிருக்கும்; तस्मात्-அதிலிருந்து विभिन्नं-வேறுபட்டது न एव-இல்லவே யில்லை. भ्रान्तेः-இது பாம்பு என்ற



பிராந்திக்கு (இது பாம்பு அல்ல, கயிறுதான் என்ற ஞானத்தால்) नाशे-நாசமேற்பட்டால் भ्रान्ति दृष्ट अहि तत्त्वं-பிராந்தியினால் காணப்பட்ட ஸர்ப்பத்தின் வாஸ்தவத் தன்மை रज्जुः-கயிறுதான். तद्वत्-அதுபோல் विश्वं-(அஞ்ஞானத்தினால் தோன்றும்) ஜகத் आत्मस्वरूपं-(அதன் அதிஷ்டானமான) ஆத்ம ஸ்வரூபமேயாகும்.

கயிறு தெரிந்தவுடன் பாம்பு மறைவதுபோல் அதிஷ்டானமான ஆத்மஸ்வரூபம் தெரிந்தவுடன் உலகத்தோற்றம் மறைந்துவிடும். (389)

स्वयं ब्रह्मा स्वयं विष्णुः स्वयमिन्द्रः स्वयं शिवः ।
स्वयं विश्वमिदं सर्वं स्वस्मादन्यन्न किंचन ॥ ३९० ॥

स्वयं-தானே ब्रह्मा-பிரஹ்மா. स्वयं-தானே विष्णुः-விஷ்ணு. स्वयं-தானே इन्द्रः-இந்திரன். स्वयं-தானே शिवः-சிவன். स्वयं-தானே इदं-இந்த सर्वं-எல்லா विश्वं-ஜகத்தும். स्वस्मात्-தன்னைவிட अन्यत्-வேறு किञ्चन-எதுவும் न கிடையாது. (390)

अन्तः स्वयं चापि बहिः स्वयं च
स्वयं पुरस्तात्स्वयमेव पश्चात् ।
स्वयं ह्यवाच्यां स्वयमप्युदीच्यां
तथोपरिष्टात्स्वयमप्यधस्तात् ॥ ३९१ ॥

अन्तः च अपि-உள்ளேயும் கூட स्वयं-தானே. स्वयं-தானே बहिः च-வெளியிலும். स्वयं-தானே पुरस्तात्-முன்னால் (கிழக்கில்) स्वयं एव-தான் தான் पश्चात्-பின்னால் (மேற்கில்). स्वयं हि-தான் தான் अवाच्यां-தெற்கில். स्वयं-தானே उदीच्यां अपि-வடக்கிலும். तथा-அப்படியே उपरिष्टात्-மேலேயும் अधस्तात्-கீழேயும் अपि-கூட स्वयं-தானே. (391)

(அ) தனித்தனியாகத் தோன்றும் பதார்த்தங்கள் எல்லாம் ஸ்வரூபத்தில் ஒன்றாகவே இருக்கமுடியுமாவென்றால், ஒரே

ஜலம் அலையாகவும், நுரையாகவும், சுழலாகவும் தோன்றவில்லையா என்கிறார் —

तरङ्गफेनभ्रमबुद्बुदादि सर्वं स्वरूपेण जलं यथा तथा ।
चिदेव देहाद्यहमन्तमेतत्सर्वं चिदेवैकरसं विशुद्धम् ॥ ३९२ ॥

तरङ्ग फेन भ्रम बुद्बुदादि-அலை, நுரை, சுழல், நீர்குமிழி முதலியது सर्वं - எல்லாம் स्वरूपेण - ஸ்வரூபத்தில் यथा-எப்படி जलं-ஜலமேதானோ, तथा-அப்படியே देहादि-தேஹம் முதல் अहमन्तं-அஹங்காரம் முடிய एतत्-இது सर्वं-எல்லாம் एकरसं-ஒரே ரஸமாயும் विशुद्धं-சுத்தமாயும் உள்ள चित् एव-சைதன்யம் தான். (392)

(அ) இந்த அனுபவம் பிரஹ்மத்தில் நிலைத்தவருக்குத் தான் ஏற்படுமே தவிர, மாயைக்கு உள்பட்டவருக்கு ஏற்படாது என்பதைச் சொல்கிறார் —

सदेवेदं सर्वं जगदवगतं वाङ्मनसयोः
सतोऽन्यन्नास्त्येव प्रकृतिपरसीम्नि स्थितवतः ।
पृथक्किं मृत्स्नायाः कलशघटकुम्भाद्यवगतं
वदत्येष भ्रान्तस्त्वमहमिति मायामदिरया ॥ ३९३ ॥

इदं-இந்த सर्वं-எல்லா जगत्-ஜகத்தும் सत् एव-ஸத் (பிரஹ்மம்) தான் என்று वाङ्मनसयोः - (உபநிஷத்) வாக்கியத்தினாலும், (அதையனுஸரித்த யுக்தியோடு கூடிய) புத்தியினாலும் अवगतं-அறியப்பட்டதாக ஆகிறது. प्रकृति पर सीम्नि -காரணங்களுக்குள் மேலான (பிரஹ்மமாகிற) எல்லையில் स्थितवतः - நிற்பவருக்கு सतः-ஸத்தைத் தவிர अन्यत्-வேறு எதுவும் न अस्ति एव-கிடையவே கிடையாது தான். कलश घट कुम्भादि-கலசம், குடம், கும்பம் முதலியது मृत्स्नायाः-மண்ணைவிட்டு पृथक्-வேறாக किं अवगतं-அறியப்படுகிறதா? मायामदिरया-மாயையாகிற கள்ளினால் भ्रान्तः-பிராந்தியடைந்தவனாய் एषः-



இவன் त्वं-'நீ' अहं-'நான்' इति-என்று वदति-சொல்லி வருகிறான்.

இந்த சுலோகத்தில் 'வாக்' என்பது 'सन् घटः सन् पटः' இது முதலான ஒரே பொருளைக் குறிக்கிற ஸமானாதிகரண பதங்களுடன் கூடிய வாக்யத்தைக் குறிக்கிறது. அல்லது 'ऐतदात्म्यमिदं सर्वं वाचारम्भणं विकारो नामधेयं' (இது எல்லாம் பிரஹ்மம். பிரபஞ்சம் பொய்). இது முதலான உபநிஷத் வாக்யத்தைக் குறிக்கிறது. 'மனஸ்' என்பது ஸமானாதிகரண வாக்யங்களால் ஏற்படும் 'இந்த ஜகத் எல்லாம் ஸத் ஸ்வரூபம் தான்' என்ற ஞானத்தைக் குறிக்கிறது. அல்லது உபநிஷத் வாக்யங்களால் ஏற்படும் அதிஷ்டான மாத்திர விஷயமான அகண்டாகார விருத்தியைக் குறிக்கிறது. 'यः चोरः स स्थाणुः' 'திருடனாக என் கண்ணுக்குப் புலப்பட்ட இது திருடனல்ல, மரக்கட்டைதான்' என்பதுபோல் இதுவரை பிரபஞ்சமாகத் தோன்றிக்கொண்டிருந்த இது பிரபஞ்சமல்ல ஸத்ரூபமான பிரஹ்மம்தான் என்ற ஞானம் ஏற்பட்டுவிடுகிறது. (393)

क्रियासमभिहारेण यत्र नान्यदिति श्रुतिः ।
ब्रवीति द्वैतराहित्यं मिथ्याध्यासनिवृत्तये ॥ ३९४

"यत्र नान्यत्-எதில் வேறு எதுவும் கிடையாதோ" इति-என்ற श्रुतिः-(பிருஹதாரண்யக உபநிஷத்) சுருதியானது क्रियासमभिहारेण - திரும்பத்திரும்ப द्वैत राहित्यं-இரண்டாயிருக்கும் தன்மை கிடையாது என்று मिथ्याध्यासनिवृत्तये-பொய்யாயிருக்கும் அத்யாஸத்தை விலக்குவதற்காக ब्रवीति-சொல்லுகிறது. (இங்கு 'அத்யாஸம்' என்பது பேத ஞானத்தையும், பிரபஞ்சத்தையும் குறிக்கிறது.) (394)

आकाशवन्निर्मलनिर्विकल्पनिःसीमनिस्पन्दननिर्विकारम् ।
अन्तर्बहिःशून्यमनन्यमद्वयं स्वयं परं ब्रह्म किमस्ति बोध्यम् ॥

आकाशवत् - ஆகாசத்தைப்போல निर्मल அழுக்கற்றதாய் निर्विकल्प -(அப்படி இப்படியென்று சொல்வதற்கில்லாமல்) ஒரே விதமாய் निस्सीम-எல்லையற்றதாய்

निस्स्पन्दन-அசைவற்றதாய் निर्विकारं-எவ்வித மாறுதலு மற்றதாயும் अन्तर्बहिश्शून्यं-உள்ளே யென்றோ வெளி யென்றோ கிடையாததாயும் (இருக்கிறது). अनन्यत्-(பிரத்யகாத்மாவைவிட) வேறு இல்லாததாய் अद्वयं-இரண்டற்றதாய் स्वयं-தானாகவேயிருப்பதாய் परं-(எல்லாவற்றிற்கும்) மேலானதாய் ब्रह्म பிரஹ்மம் (இருக்கிறது). (அது அறியப்பட்டு விட்டால்) किं-(வேறு) எது ज्ञेयं-அறியவேண்டியதாக अस्ति-இருக்கும்?

பிரஹ்மத்திற்கு திருஷ்டாந்தமே கிடையாதபோதிலும் நமக்கு அதன் தன்மை கொஞ்சமாவது மனசில் படவேண்டுமே என்று ஆகாசம் திருஷ்டாந்தமாக சொல்லப்பட்டிருக்கிறது. अन्तर्बहिश्शून्यं என்பதால் ஸ்வகதபேதம் (தன் ஸ்வரூபத்தில் வேற்றுமை) இல்லையென்றும் अनन्यत् என்பதால் ஸஜாதீய பேதமில்லையென்றும் अद्वयं என்பதால் விஜாதீய பேதம் இல்லை என்றும் சொல்லப்படுகிறது. ஒன்றை அறிந்தால் எல்லாம் அறிந்ததாக ஆகும் என்ற நியாயப்படி எல்லாமாக இருக்கும் பிரஹ்மத்தையறிந்துவிட்டால் எல்லாம் அறிந்ததாக ஆகிற படியால் அறியவேண்டியது ஒன்றும் பாக்கியில்லை. (395)

वक्तव्यं किमु विद्यतेऽत्र बहुधा ब्रह्मैव जीवः स्वयं
ब्रह्मैतज्जगदापराणु सकलं ब्रह्माद्वितीयं श्रुतेः ।
ब्रह्मैवाहमिति प्रबुद्धमतयः संत्यक्तबाह्याः स्फुटं
ब्रह्मीभूय वसन्ति संततचिदानन्दात्मनैव ध्रुवम् ॥ ३९६ ॥

अत्र-இவ்விஷயத்தில் (பிரஹ்மம் ஒன்று தான் உள்ளது என்பதில்) बहुधा-பலவிதமாக वक्तव्यं-சொல்ல வேண்டியது किमु-எது வேனும் विद्यते-உண்டா? ब्रह्म एव-பிரஹ்மம் தான் स्वयं-தானே जीवः-(உபாதியோடு சேரும் போது) ஜீவன் (எனப்படுகிறது.) आपराणु-பரமாணுவரை एतत्-இந்த जगत्-ஜகத் सकलं-எல்லாம் (பிரஹ்மத்திலிருந்து உண்டாகி அதிலேயே இருந்து அதிலேயே லயத்தை யடைகிறபடியால்) ब्रह्म-பிரஹ்மமே



(பிரஹ்மத்தைத் தவிர வேறில்லை). (ஜீவனும் பிரஹ்மம், ஜகத்தும் பிரஹ்மம் என்றிருப்பதினால்) श्रुतेः-உபநிஷத் பிரமாணத்தினால் ब्रह्म-பிரஹ்மம் अद्वितीयं-இரண்டாவதற்றது. ब्रह्म एव-பிரஹ்மம் தான் अहं-நான் इति-என்று प्रबुद्धमतयः-நன்கு அறிந்துகொண்ட புத்தி யுள்ளவர்கள் स्फुटं பூரணமாக (வாஸனையுள்பட) संत्यक्त बाह्याः-வெளி (அனாத்ம) பதார்த்தங்களை நன்கு விட்டு விட்டவர்களாக ब्रह्मीभूय-பிரஹ்மமாக ஆகி संतत चिदानन्दात्मना एव-இடைவிடாமல் ஞான ஆனந்த ஸ்வரூப மாகவே தான் ध्रुवम्-நிச்சயமாக वसन्ति-இருப்பார்கள்.

जहि मलमयकोशेऽहंधियोत्थापिताशां
प्रसभमनिलकल्पे लिङ्गदेहेऽपि पश्चात् ।
निगमगदितकीर्तिं नित्यमानन्दमूर्तिं
स्वयमिति परिचीय ब्रह्मरूपेण तिष्ठ ॥ ३९७ ॥

मलमय कोशे-மலம் நிறைந்த (அன்னமய) கோசத்தில் अहं धिया-'நான்' என்ற எண்ணத்தினால் उत्थापिताशां-கிளப்பப்பட்டிருக்கும் ஆசையை प्रसभं-பலாத்காரமாக जहि-போக்கடித்து விடு. पश्चात्-(ஸ்தூலதேஹ ஸம்பந்த மான ஆசை நீங்கிய) பிறகு अनिलकल्पे-காற்றுப்போலுள்ள (கண்ணுக்குத் தெரியாமல் எப்பொழுதும் சலித்துக் கொண்டிருக்கிற) लिङ्गदेहे-(பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம் என்கிற மூன்று கோசங்கள் அடங்கிய) ஸூக்ஷ்ம சரீரத்திலும் अपि-கூட (நான் என்ற எண்ணத் தையும் அதினால் ஏற்படும் அபிமானத்தையும் விட்டு விடு. அநித்யமாயுள்ள ஆனந்தமய கோசத்தில் அபிமானம் தானாகவே நிவிருத்தியாகிவிடும். பிறகு) निगम गदित कीर्तिं வேதத்தில் சொல்லப்பட்ட (ஸத், சித், ஆனந்தம், என்றெல்லாம் பலவாறாக) கீர்த்தியுள்ளதான नित्यं आनन्द मूर्तिं-எப்பொழுதும் ஆனந்த ஸ்வரூபமான பிரஹ்மத்தை स्वयं-தான் इति-என்று परिचीय-அறிந்து

அனுபவித்து ब्रह्मरूपेण-பிரஹ்ம ஸ்வரூபமாகவே तिष्ठ-நிலைத்திரு. (397)

शवाकारं यावद् भजति मनुजः तावदशुचिः
परेभ्यः स्यात् क्लेशो जननमरणव्याधिनिरयाः ।
यदाऽऽत्मानं शुद्धं कलयति शिवाकारं अचलं
तदा तेभ्यो मुक्तो भवति हि तदाह श्रुतिरपि । ३९८ ॥

मनुजः-மனுஷ்யன் यावत्-எதுவரையில் शव आकारं-பிணமாக உள்ளதை (இந்த ஸ்தூல சரீரத்தை) தன் ஸ்வரூபமாக भजति-எண்ணிக்கொண்டு இருக்கிறானோ, तावत्-அதுவரை (அவன்) अशुचिः-அசுத்தமானவன் தான், परेभ्यः-பிறர்களிடமிருந்து क्लेशः-துன்பம் स्यात्-ஏற்படும் जनन मरणव्याधि निरयाः-(இந்த லோகத்தில்) பிறப்பு, இறப்பு, பிணி, (மறு லோகத்தில்) நரகம் இவைகளும் (ஏற்படும்) यदा-எப்பொழுது (ஸாதன சதுஷ்டயத்தைக் கைகொண்டு ஸத்குருவையண்டி வேதாந்த சிரவண மனனங்களால்) आत्मानं-தன்னை शुद्धं சுத்தமாக (ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்னும் மூன்று சரீரங்களுக்கும் அப்பால் பட்டதாக) शिवाकारं ஆனந்த ஸ்வரூபமாக अचलं-அசைவற்றதாக அல்லது நன்கு கவனமாக कलयति-அறிகிறானோ तदा-அப்பொழுது तेभ्यो-அவைகளிடமிருந்து (துன்பம், பிறப்பு முதலியவைகளிடமிருந்து) मुक्तः-விடுபட்டவனாக भवति-ஆகிவிடுகிறான் हि-என்பது பிரஸித்தம். तत्-அந்த விஷயத்தை श्रुतिः-(சாந்தோக்ய உபநிஷத்) சுருதியும் अपि-கூட आह-சொல்கிறது.

ஸ்தூல சரீரம் தனிப்பட்ட முறையில் சைதன்ய ஸ்வரூபமாக இல்லாததால் பிணம்தான். மலம் நிறைந்த அசுத்தமான சரீரத்தை நான் என்று எண்ணுகிறவனும் அசுத்தன்தான். சுருதியும் என்பதால் அநுபவமும் ஆசார்யர்களும் சொல்கிறார்கள் என்ற அர்த்தம் கிடைக்கிறது तदपि श्रुतिराह அதையும் சுருதி சொல்கிறது என்றும் அர்த்தம் கொள்ளலாம். (398)



## 34. இரண்டற்ற நிலை

(அ) 'சுத்தமாக' என்று சொன்னதை விஸ்தரிக்கிறார் :-

स्वात्मन्यारोपिताशेषाभासवस्तुनिरासतः ।
स्वयमेव परं ब्रह्म पूर्णं अद्वयं अक्रियम् ॥ ३९९ ॥

स्वात्मनि - தன் ஆத்மாவினிடத்தில் आरोपित-ஏற்றிய (கல்பிக்கப்பட்ட) अशेष-எல்லா आभास-வெறும் தோற்றமான वस्तु-(அஹங்காரம் முதலிய) வஸ்துக்களை निरासतः-விலக்கி விடுவதினால் स्वयं एव-தான் தானே परं-மேலானதாய் पूर्णं-நிறைந்ததாய் अद्वयं-இரண்டற்றதாய் अक्रियं-எவ்வித கிரியையும் அற்றதாயுமுள்ள ब्रह्म-பிரஹ்மம் (தான் என்ற அனுபவம் ஏற்படும்) (399)

(அ) முதலில் மிகுந்த பிரயாஸை எடுத்துக்கொண்டு பிரபஞ்சத் தோற்றத்தை விலக்கி ஸமாதியை அப்யஸித்து வந்தால் அதிலேயே நிலைத்தபின் தானாகவே பிரபஞ்சத் தோற்றம் முயல்கொம்பு போலாகிவிடும் என்பதை கூறுகிறார் ;—

समाहितायां सति चित्तवृत्तौ परात्मनि ब्रह्मणि निर्विकल्पे ।
न दृश्यते कश्चिदयं विकल्पः प्रजल्पमात्रः परिशिष्यते ततः ॥ ४०० ॥

परात्मनि - பரமாத்மாவாயுள்ள निर्विकल्पे - எவ்வித விகல்பமுமற்ற ब्रह्मणि-பிரஹ்மமாகிற सति ஸத்பதார்த்தத்தில் चित्तवृत्तौ மனதின் விருத்தி समाहितायां - நன்கு வைக்கப்பட்டதேயானால் (அதாவது நிர்விகல்ப ஸமாதி நிலை ஏற்பட்டதேயானால்), अयं-இந்த (அக்ஞான தசையில் காணப்படுகிற) विकल्पः - விகல்பம் कश्चित्-எதுவும் न दृश्यते-காணப்படுவதில்லை, ततः-பிறகு (அந்த விகல்பமெல்லாம்) प्रजल्पमात्रः-வெறும் பேச்சாக மாத்திரம் परिशिष्यते மிஞ்சிவிடுகிறது. (ஒன்றும் செய்ய சக்தியற்றதாகிவிடுகிறது.)

முன்னால் ஸூக்ஷ்மங்களைக் கொடுத்துக்கொண்டிருந்த பிரபஞ்சம், பிரஹ்மநிஷ்டனுக்குத் தோன்றியபோதிலும்

ஆகாசத்தாமரைபோலும், விஷப்பல்லைப் பிடுங்கிய பாம்பு போலும், ஒரு காரியத்தையும் உண்டுபண்ணுவதில்லை. வஸ்து இல்லாமல் சொல்லும் ஞானமும் ஏற்படுவது விகல்பம் என்று யோக ஸூத்ரத்தில் கூறப்பட்டுள்ளது. அதுபோலாகிவிடும்.

असत्कल्पो विकल्पोऽयं विश्वमित्येकवस्तुनि ।
निर्विकारे निराकारे निर्विशेषे भिदा कुतः ॥ ४०१ ॥

विश्वं-ஜகத் इति-என்ற अयं-இது असत्कल्पः-இல்லாத வஸ்துவிற்கு ஸமானமான विकल्पः-விகல்பமாயிருக்கிறது. निर्विकारे-எவ்வித மாறுதலுமில்லாத निराकारे-எவ்வித ரூபமுமில்லாத निर्विशेषे-எவ்வித விசேஷமுமில்லாத एक वस्तुनि-ஒரே வஸ்துவான பிரஹ்மத்தில் भिदा-வேற்றுமை कुतः-எங்கிருந்து ஏற்பட முடியும்?

எப்பொழுதும் பிரஹ்மஸ்வரூபத்திலேயே மனம் நன்கு நிலைத்து நிர்விகல்ப ஸமாதியிலிருப்பவர்களுக்கு ஒருபொழுதும் உலகம் தோன்றுவதில்லை. ஆனாலும் மற்றவர்களுக்கு உலகம் தோன்றுகிறது. இவர்களுக்கும் கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளிபோல ஞானம் வந்ததும் மறைந்துவிடுகிறது. இதனால் தான் பிரபஞ்சத்தை முயல் கொம்புபோல அஸத் என்று சொல்லாமல் அஸத் கல்பம (அஸத்தைப்போன்றது) என்று கூறுகிறார். தோன்றி மறைவதால் பிரபஞ்சம் மித்யை (பொய்யானது). மித்யையான பிரபஞ்சத்தால் பிரஹ்மம் அத்வைதம் என்பதற்கு பாதகமில்லை. ஆகையால் வாஸ்தவத்தில் பிரஹ்மஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறு வஸ்து இல்லை. பிரஹ்மஸ்வரூபத்திலும் வேற்றுமை இல்லை. (401)

द्रष्टृदर्शनदृश्यादि भावशून्यैकवस्तुनि ।
निर्विकारे निराकारे निर्विशेषे भिदा कुतः ॥ ४०२ ॥

(அக்ஞானம் விலகிவிட்டபடியால் தன்மூலகமான) द्रष्टृ-பார்க்கிறவன் दर्शन-பார்வை दृश्य-பார்க்கப்படும் வஸ்து आदि-(பார்க்கும் கருவி) முதலான भाव-வஸ்துக்கள் शून्य-இல்லாத एक-ஒரே वस्तुनि-வஸ்துவாயும் निर्विकारे-விகாரமற்றதாயும் निराकारे-ரூபமற்றதாயும் निर्विशेषे-விசேஷமற்றதாயும் உள்ள பிரஹ்மத்தில் भिदा-வேற்றுமை कुतः-எங்கிருந்துவரும்? (402)



कल्पार्णव इवात्यन्तपरिपूर्णैकवस्तुनि ।
निर्विकारे निराकारे निर्विशेषे भिदा कुतः ॥ ४०३ ॥

कल्पार्णवे-கல்பம் முடிந்து பிரளயம் ஏற்படும் போதுள்ள ஸமுத்திரத்தில் इव-போல अत्यन्त-எல்லையிறி परिपूर्ण-எங்கும் நிறைந்து एक-ஒன்றாயிருக்கும் वस्तुनि-வஸ்துவாயும் निर्विकारे-விகாரமற்றதாயும் निराकारे-ரூபமற்றதாயும் निर्विशेषे-விசேஷமற்றதாயும் உள்ள பிரஹ்மத்தில் भिदा வேற்றுமை कुतः-எங்கிருந்து வரும்?

तेजसीव तमो यत्र विलीनं भ्रान्तिकारणम् ।
अद्वितीये परे तत्त्वे निर्विशेषे भिदा कुतः ॥ ४०४ ॥

भ्रान्तिकारणं-பிராந்திக்குக்காரணமான तमः-அக்ஞானமாகிற இருட்டு यत्र-எதினிடத்தில் (तमः-இருட்டு) तेजसि பிரகாசத்தில் (லயித்துவிடுவது) इव-போல विलीनं-நன்கு லயமடைந்துவிடுகிறதோ (அந்த) अद्वितीये இரண்டாவதற்ற परे-உத்தமமான तत्त्वे-வாஸ்தவமான निर्विशेषे-விசேஷமில்லாததான பிரஹ்மத்தில் भिदा-வேற்றுமை कुतः-எங்கிருந்து வரும்? (404)

(அ) எல்லாம் ஒன்றாகத்தெரியும்போது வேற்றுமைக்கு இடமில்லையென்பதை நல்ல தூக்கத்தை திருஷ்டாந்தமாகச் சொல்லி தெளிவுபடுத்துகிறார் :—

एकात्मके परे तत्त्वे भेदवार्ता कथं भवेत् ।
सुषुप्तौ सुखमात्रायां भेदः केनावलोकितः ॥ ४०५ ॥

एकात्मके-ஒரே ஸ்வரூபமாயுள்ள परे-மேலான तत्त्वे-தத்வத்தில் भेदवार्ता-வேற்றுமை என்ற பேச்சு कथं-எப்படி भवेत् இருக்கமுடியும்? सुखमात्रायां-ஸுகம் மாத்திரமாயிருக்கும் सुषुप्तौ-நல்ல தூக்கத்தில் भेदः-வேற்றுமை

யானது केन-எவனலாவது अवलोकितः-அனுபவிக்கப்பட்டதுண்டா?

ஸுஷுப்தியில் ஞானத்தை உண்டுபண்ணும் மனம் அடங்கிவிட்டபடியால், ஆத்மா ஜடமானபடியால் ஞானம் ஏற்படுவதில்லை என்பது தார்க்கிகரின் கொள்கை. இது சரியல்ல நித்ய ஞான ஸ்வரூபனுன ஸ்வயம் பிரகாச ஆத்மா ஸுஷுப்தியிலும் விளங்கிக்கொண்டுதான் இருக்கிருன். ஆனல் அறியப்படும் விஷயம் இல்லாததால்தான் ஸுஷுப்தியில் ஞானம் ஏற்படுவதில்லை. இரண்டாவதுவஸ்து இருக்குமாகில் அவசியம் பார்ப்பான் "ஆத்மா ஸ்வயம் ப்ரகாச நித்ய ஞான ஸ்வருபனுக இருந்தாலும் இதைக்காட்டிலும் வேருக இரண்டாவது வஸ்து இல்லாததால் தான் ஆத்மா ஸுஷுப்தியில் அறிகிறதில்லை" என்ற இக்கருத்தை சுருதி கூறுகிறது

यद्वै तन्न पश्यति पश्यन् वै तन्न पश्यति न तु तद्द्वितीयमस्ति ततोऽन्यद्विभक्तं यत्पश्येत् ॥

ஸுஷுப்தியில் அக்ஞான மிருந்தாலும் அது ஆத்மசக்தியானதாலும் அதிஷ்டானமான ஆத்மாவில் கல்பிதமானதாலும் ஆத்மாவைக்காட்டிலும் வேறல்ல எல்லா நிலைகளிலும் ஆத்மா இவ்வாருக இருந்தபோதிலும் எல்லாம் அடங்கியுள்ள ஸுஷுப்தியில் அத்வைதத்தை சுலபமாகப் புரிந்து கொள்ளக் கூடும் என்பது சுருதியின் கருத்து ஒரு உத்தம அதிகாரி ஜாக்ரத் நிலையிலேயே ஸுஷுப்தி நிலையை நன்கு சிந்திப்பானேயாஞல் அவனுக்கு ஸமாதி கைகூடி அந்தக்கரண விருத்தியைக்கொண்டே அக்ஞானத்தைப்போக்கி நிஷ்ப்ரபஞ்ச ப்ரஹ்மமாக ஆய்விடுவான். ஸுஷுப்தி, ஸமாதி இரண்டிலும் விக்ஷேபமில்லை, ஆனல் ஸுஷுப்தியில் ஆவரணம் உள்ளது ஸமாதியில் அதுவுமில்லை வாஸ்தவத்தில் த்வைத பிரபஞ்சம் இருக்குமாஞல் ஸுஷுப்தியில் காணப்படும் அது இல்லாததால்தான் காணப்படவில்லை. ஸுஷுப்தியில் அக்ஞானம் இருந்தபோதிலும் ஸமாதியில் நீங்கிவிடுகிறபடியால் அதுவும் வாஸ்தவமல்ல. (405)

न ह्यस्ति विश्वं परतत्त्वबोधात्सदात्मनि ब्रह्मणि निर्विकल्पे ।
कालत्रये नाप्यहिरीक्षितो गुणे न ह्यम्बुबिन्दुर्मृगतृष्णिकायाम् ॥ ४०६ ॥



परतत्त्वबोधात्-உத்தமமான தத்வத்தின் அறிவு (அனுபவம்) ஏற்பட்டுவிட்டால் (அக்ஞானம் அடியோடு நீங்கி விடுகிறபடியால்) सदात्मनि-ஸத் ஸ்வருபமாயும் निर्विकल्पे-விகல்பமற்றதாயுமுள்ள ब्रह्मणि - பிரஹ்மத்தினிடத்தில் विश्वं ஜகத் न अस्ति हि-இல்லைதான். गुणे-கயிற்றில் ईक्षितः-பார்க்கப்பட்ட अहिः-பாம்பானது कालत्रये अपि-(பார்ப்பதற்கு முன்னுலும், மறைந்தபிறகும், பார்க்கப்படும் காலத்திலும் ஆக) மூன்று காலங்களிலும்கூட न-இல்லவே இல்லை. (அப்படியே) मृगतृष्णिकायां-(மானுக்கு தாஹத்தை யுண்டுபண்ணும் பொய்யான) கானல் ஜலத்தில் अम्बुबिन्दुः-துளி ஜலம்கூட न-கிடையாது என்பது हि-பிரஸித்தம்.

நல்ல அறிவைக்கொண்டுதான் ஒரு வஸ்து இருப்பதையும் இல்லாததையும் தீர்மானிக்கவேண்டும். அக்ஞானத்தால் முன்னுல் தோன்றிக்கொண்டிருந்த பிரபஞ்சம் தத்வஞானத்தால் அக்ஞானம் விலகியதும் மறைந்துவிடுகிறது. ஆகவே அக்ஞானம் மூலமான பிரபஞ்சம் வாஸ்தவத்தில் முக்காலுமில்லை ப்ரஹ்மம்தான் முக்காலுமுள்ளது என்பது தீர்மானம் இதுவரை எனக்கு கிளிஞ்சல் வெள்ளியாக தோன்றிக்கொண்டிருந்தது. ஒரு சந்திரன் இரண்டாகத் தோன்றியது என்று சொல்லும் இடத்தில் தோன்றியபோதிலும் கிளிஞ்சலும், இரு சந்திரர்களும் முக்காலுமில்லை என்பதை அனுபவத்தில் தீர்மானிக்கிறேம்.

(அ) இதுவரை சொல்லிவந்த விஷயத்திற்கு யுக்தி, அனுபவம் மாத்திரம் பிரமாணமென்பதில்லை, வேதமே பிரமாணம்; அதையனுஸரித்துத்தான் யுக்தியும் அனுபவமும் இருக்கிறது என்கிருர்:—

मायामात्रमिदं द्वैतमद्वैतं परमार्थतः ।
इति ब्रूते श्रुतिः साक्षात्सुषुप्तावनुभूयते ॥ ४०७ ॥

"इदं-இந்த (பார்க்கப்படுகிற) द्वैतं-இரண்டாயிருக்கும் தன்மை मायामात्रं வெறும் மாயைதான், अद्वैतं-இரண்டற்று இருக்கும் தன்மைதான் परमार्थतः-வாஸ்தவமாயுள்ளது". इति-என்று श्रुतिः-வேதம்

साक्षात्-நேராகவே श्रुते சொல்கிறது. (அதுவேதான்) सुषुप्तौ-நல்ல தூக்கத்தில் अनुभूयते-அனுபவிக்கப்படுகிறது. (புருஷனால் இயற்றப்படாமல் ஸ்வதஸ்ஸித்தமான நித்யமான வேதத்தையொட்டி நம் அனுபவம் இருக்கிறபடியால் இதுபற்றி விவாதத்திற்கு இடமில்லை.)

(அ) ஸுஷுப்தியில் எல்லாம் மறைந்தபோதிலும் அங்கு அக்ஞானம் இருப்பதாக,

सुषुप्तिकाले सकले विलीने तमोऽभिभूतः सुखरूपमेति ॥

என்று கைவல்யோபநிஷத்தில் கூறியிருப்பதால் ஸுஷுப்தியில் அத்வைதம் எப்படி தீர்மானிக்கமுடியும் என்ற கேள்விக்கு அந்த அக்ஞானம் அதிஷ்டானமான பிரஹ்மத்தில் கல்பிதமானதால் அதிஷ்டானத்தைக்காட்டிலும் ஆரோபித வஸ்து வேறல்லவாதலாலும் ஸமாதியில் அந்த அக்ஞானம் இல்லாதபடியாலும், அத்வைதத்திற்கு விரோதமில்லை என்பதைக் கூறுகிறார்:—

अनन्यत्वमधिष्ठानादारोप्यस्य निरीक्षितम् ।
पण्डितै रज्जुसर्पादौ विकल्पो भ्रान्तिजीवनः ॥ ४०८ ॥

आरोप्यस्य மேல் ஏற்றப்பட்ட (கல்பிக்கப்பட்ட) வஸ்துவிற்கு अधिष्ठानात्-அடிப்படை (அதிஷ்டான) பதார்த்தத்திலிருந்து अनन्यत्वं-வேறுபடாத் தன்மையானது पण्डितैः-பண்டிதர்களால் रज्जुसर्पादौ-கயிற்றில் தோன்றும் பாம்பு முதலிய விடங்களில் निरीक्षितं-நன்கு பார்க்கப்பட்டிருக்கிறது. विकल्पः-விகல்பம் (தோற்றம்) என்பது भ्रान्तिजीवनः-பிராந்தியினாலேயே உயிரோடு பட்டுப் பிழைத்துக்கொண்டிருக்கிறது. (408)

चित्तमूलो विकल्पोऽयं चित्ताभावे न कश्चन ।
अतश्चित्तं समाधेहि प्रत्यग्रूपे परात्मनि ॥ ४०९ ॥

अयं-இந்த विकल्पः-விகல்பமானது चित्तमूलः-சித்தத்தை மூலமாக (வேராக) உடையது. चित्ताभावे-சித்தம் இல்லையானால் (வேலை செய்யாவில்லையானால்) कश्चन-எவ்வித விகல்பமும் न-கிடையாது. अतः-ஆகையால் प्रत्यग्रूपे-உள்ளுள்ள ஆத்மஸ்வரூபமாயிருக்கும் परात्मनि-பரபிரஹ்மத்திலிடத்தில் चित्तं-சித்தத்தை समाधेहि-நன்கு வை (ஸமாதிநிலையில் இரு). (409)



(அ) அவ்விதம் ஏற்படக்கூடிய ஸமாதி நிலையை வர்ணிக்கிறார். இதுவரை சொல்லிவந்த ஸமாதியில் இரண்டாவது வஸ்து தோன்றும், ஆனால் அது வாஸ்தவமில்லையென்ற ஞானமும் கூடவேயிருக்குமாதலால், அந்த ஸமாதியை "திருச்யானுவித்தம்" என்பார்கள். இப்பொழுது சொல்லும் ஸமாதியில் இரண்டாவது தோன்றாமல் ஆத்ம ஸ்வரூபானு ஸந்தானம் மாத்திரமிருப்பதால், இதை "சப்தானுவித்தம்" என்பார்கள். இரண்டுவித ஸமாதிகளின் ஸ்வரூபம், பிரயோஜனம், இவை எல்லாம் "ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்கிரஹம்" என்கிற பிரகரணத்தில் 829 முதல் 872 வரை சுலோகங்களில் விஸ்தாரமாக ஸ்ரீமத் ஆசார்யாரவர்களே வர்ணித்திருக்கிறார்கள்:—

किमपि सततबोधं केवलानन्दरूपं
निरुपममतिवेलं नित्यमुक्तं निरीहम् ।
निरवधि गगनाभं निष्कलं निर्विकल्पं
हृदि कलयति विद्वान्ब्रह्म पूर्णं समाधौ ॥ ४१० ॥

किं अपि-ஏதோவொரு (வர்ணிக்கமுடியாததாய்) सततबोधं-நித்யமான ஞான ஸ்வரூபமாய் केवल आनन्दरूपं-(துக்கக்கலப்பில்லாத) தனித்த ஆனந்த ஸ்வரூபமாய் निरुपमं-உபமானமற்றதாய் अतिवेलं-கரை கடந்ததாய் (பிரபஞ்சத்திற்கு மேல்பட்டதாய்) नित्यमुक्तं-எப்பொழுதும் (ஸம்ஸாரத்திலிருந்து) விடுபட்டதாய் निरीहं-(செயற்கையற்றதாய்) ஆசையற்றதாய் निरवधि-(தேசம், காலம், வஸ்து என்னும் மூவித) எல்லையற்றதாய் गगनाभं-ஆகாசம்போல் அஸங்கமாயும் நிர்மலமாயும் உள்ளதாய் निष्कलं-அவயவங்கள் அற்ற

தாய் निर्विकल्पं விகல்பங்களற்றதாய் पूर्णं-நிறைந்ததாய் உள்ள ब्रह्म - பிரஹ்மத்தை विद्वान् - அறிந்தவர் समाधौ- ஸமாதிநிலையில் हृदि- ஹ்ருதயத்தில் कलयति - அனுபவிக்கிறார். (410)

प्रकृतिविकृतिभिन्नं[1] भावनातीतभावं
समरसं असमानं मानसंबन्धदूरम् ।
निगमवचनसिद्धं नित्यं अस्मत्प्रसिद्धं
हृदि कलयति विद्वान् ब्रह्म पूर्णं समाधौ ॥ ४११ ॥

प्रकृतिविकृतिभिन्नं - காரணத்திற்கும் கார்யத்திற்கும் வேறாய் भावनातीतभावं-பாவனைக்குமேல் போன ஸ்வபாவமுள்ளதாய் (தர்க்கத்தினால் மட்டும் அறியமுடியாததாய்) समरसं- ஸமரஸமாய் (எப்பொழுதும் ஒரே நிலையிலிருப்பதாய்) असमानं - ஈடற்றதாய் मानसंबन्धदूरं - (பிரத்யக்ஷம் முதலான) பிரமாணங்களின் ஸம்பந்தத்திலிருந்து வெகு தூரத்திலிருப்பதாய் निगमवचनसिद्धं-வேதத்தின் வாக்கியங்களினாலேயே இருப்பதாக தீர்மானிக்கப்பட்டிருப்பதாய் नित्यं-எப்பொழுதும் (அல்லது, நித்யமாய்) अस्मत्प्रसिद्धं- 'நான்' என்று பிரஸித்தமாய் पूर्णं-நிறைந்ததாய் உள்ள ब्रह्म - பிரஹ்மத்தை विद्वान् - அறிந்தவர் समाधौ - ஸமாதி தசையில் हृदि- ஹ்ருதயத்தில் कलयति- அனுபவிக்கிறார்.

अजरममरमस्ताभासवस्तुस्वरूपं
स्तिमितसलिलराशिप्रख्यमाख्याविहीनम् ।
शमितगुणविकारं शाश्वतं शान्तमेकं
हृदि कलयति विद्वान्ब्रह्म पूर्णं समाधौ ॥ ४१२ ॥

अजरं - ஜரை (குறைவு) இல்லாததாய் अमरं - மரணமில்லாததாய் अस्ताभासवस्तुस्वरूपं-தோற்றமெல்லாம் நீங்கி வாஸ்தவமாய் இருக்கும் ஸ்வரூபத்தை யுடையதாய்

१ शून्यं



स्तिमितसलिलराशिप्रख्यं - அசைவற்றிருக்கும் ஸமுத்திரத்தைப் போலுள்ளதாய் आख्याविहीनं - எவ்வித பெயரும் அற்றதாய் शमितगुणविकारं-குணமும் மாறுதலும் விலகினதாய் शाश्वतं -என்றுமிருப்பதாய் शान्तं- அடங்கினதாய் एकं ஒன்றாகவே யிருப்பதாய் पूर्णं-நிறைந்ததாய் உள்ள ब्रह्म-பிரஹ்மத்தை समाधौ -ஸமாதிநிலையில் विद्वान्-ஞானியானவர் हृदि ஹ்ருதயத்தில் कलयति-அனுபவிக்கிறார்.

(அ) வித்வான் இவ்விதம் அனுபவிப்பதுபோல் நீயும் ஸமாதி செய்து அனுபவிக்கலாமென்று சிஷ்யனை சொல்கிறார்:—

समाहितान्तःकरणः स्वरूपे विलोकयात्मानमखण्डवैभवम् ।
विच्छिन्द्धि बन्धं भवगन्धगन्धिलं यत्नेन पुंस्त्वं सफलीकुरुष्व ॥

स्वरूपे - ஸ்வஸ்வரூபத்தில் समाहितान्तःकरणः - அசைவில்லாமல் நன்கு நிறுத்தி வைக்கப்பட்ட அந்த:கரணத்தை யுடையவனாய் अखण्डवैभवं- துண்டுபடாத மேன்மையுடைய आत्मानं ஆத்மதத்வத்தை विलोकय- நன்கு பார்த்து அனுபவி. भवगन्धगन्धिलं-ஸம்ஸார வாஸனையோடு கூடிய बन्धं-பந்தத்தை विच्छिन्द्धि-நன்கு அறுத்துவிடு. पुंस्त्वं-(முன் 2, 4, 5 சுலோகங்களில் சொன்னபடி எவ்வளவோ புண்ணியம் செய்து சிரமப்பட்டு ஸம்பாதிக்கப்பட்டிருக்கிற) புருஷத்தன்மையை यत्नेन- பிரயாஸை எடுத்துக்கொண்டு सफलीकुरुष्व- பிரயோஜனமுள்ளதாகச் செய்துகொள். (413)

सर्वोपाधिविनिर्मुक्तं सच्चिदानन्दमद्वयम् ।
भावयात्मानमात्मस्थं न भूयः कल्पसेऽध्वने ॥ ४१४ ॥

सर्वोपाधिविनिर्मुक्तं-(காரண சரீரம், ஸூக்ஷ்மசரீரம், ஸ்தூல சரீரம் ஆகிய) எல்லா உபாதிகளிலிருந்தும் (அவைகளின் வாஸனைகளிலிருந்தும்) நன்கு விடுபட்டதாய் सत् चित् आनन्दं - ஸத் (எப்பொழுதுமுள்ளதாய்) சித் (ஞானஸ்வரூபமாய்) ஆனந்தம் (துக்கமே கலக்காத

ஆனந்தமாய்) உள்ள अद्वयं – இரண்டற்ற आत्मानं – ஆத்மாவை आत्मस्थं – தன்னிடத்திலேயே இருப்பதாக भावय – தெரிந்து அனுபவி. भूयः – மறுபடியும் अध्वने – ஸம்ஸாரவழிக்கு न कल्पसे–வரமாட்டாய். (414)

## 34. சரீரத்தை கவனிக்காதே

(அ) இவ்வித ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டபிறகும் பிராரப்த கர்மத்தினுல் சரீரம் இருக்கத்தான் இருக்கும். ஆனுல் ஒருவன் வெளிச்சத்தில் நிற்கும்போது கீழே விழும் நிழல் அவனைப்போலவே கை கால் உள்ளதாகத் தோன்றின போதிலும் அந்த நிழலில் "நான்" என்ற எண்ணம் கொள்வதில்லை. அதுபோல ஞானி இந்த சரீரத்தில் கொஞ்ச மேனும் அபிமானம் வைக்கமாட்டான் என்று 5 ச்லோகங்களில் எடுத்துக் காட்டுகிருர் :—

छायेव पुंसः परिदृश्यमानमाभासरूपेण फलानुभूत्या ।
शरीरमाराच्छववन्निरस्तं पुनर्न संधत्त इदं महात्मा ॥ ४१५ ॥

महात्मा – (ஆத்ம ஸாக்ஷாத்கார மடைந்திருக்கும்) மஹான் फलानुभूत्या–உத்தமபலனுகிய ஸ்வரூப சைதன்யத்தை அனுபவித்துவரும் காரணத்தினுல் पुंसः – மனிதனுடைய छाया इव – நிழலைப்போல आभासरूपेण– வெறும் தோற்றமான ரூபத்துடன் परिदृश्यमानं–தோன்றி காணப்பட்டுக்கொண்டிருப்பதும் शववत्–சவம் போலவே आरात् – தூரத்திலேயே निरस्तं – போட்டுவிடப்பட்டதாயுமுள்ள इदं–இந்த शरीरं–சரீரத்தை पुनः – மறுபடியும் न संधत्ते– ('நான்' என்று) நினைத்துப் பார்க்கமாட்டார்.

பிராரப்த கர்மா முடிந்து சரீரம் விழும் வரை சரீரம் தோன்றிக்கொண்டிருந்தபோதிலும். பாம்பால் கழட்டப்பட்ட பாம்புச் சட்டையைப் போலும் நிழலைப்போலும் அதில் ஞானிக்கு அபிமானம் இருக்காது. (415)

सततविमलबोधानन्दरूपं स्वमेत्य त्यज जडमलरूपोपाधिमेतं सुदूरे ।
अथ पुनरपि नैव स्मर्यतां वान्तवस्तु स्मरणविषयभूतं कल्पते कुत्सनाय ॥



सततविमलबोधानन्दरूपं– எப்பொழுதும் நிர்மலமாயுள்ள ஞான ஸ்வரூபமாயும் ஆனந்தஸ்வரூபமாயுமுள்ள स्वं– தன்னை एत्य–அடைந்து (அறிந்து) जडमलरूपोपाधिं–ஜடமாம் மலமாய் இருக்கும் தன்மையுள்ள உபாதியாகிய एतं–இந்த சரீரத்தை सुदूरे–வெகு தூரத்திலேயே त्यज–விட்டுவிடு. अथ – அதன் பிறகு पुनः अपि – மறுபடியும் (அது) न एव स्मर्यतां–நினைக்கப்படவே கூடாது. वान्तवस्तु–(தாலே, வேருெருவரோ) வாயிலெடுத்த பதார்த்தம் स्मरणविषयभूतं–ஞாபகத்திற்கு விஷயமாக ஆனுல் कुत्सनाय–வெறுப்புக்கே कल्पते–காரணமாகும்.

சரீரத்தில் நான் என்றோ, என்னுடையது என்றோ சிறிதும் அபிமானமில்லாமல் இதைப்பற்றிய நினைவேயில்லாமல் இருக்க வேண்டும். (416)

(அ) ஆத்ம ஸாக்ஷாத்காரம் மேலும் பலப்பட்டு பிரஹ்மவித் வரிஷ்டநிலை ஏற்படும்போது அவர் பிரஹ்மத்திலேயே லயித்திருப்பதினுல் இந்த சரீரம் இருந்தபோதிலும் அவருக்கு இருப்பதாகவே தோன்றுது என்கிருர் :—

समूलमेतं परिदह्य वह्नौ सदात्मनि ब्रह्मणि निर्विकल्पे ।
ततः स्वयं नित्यविशुद्धबोधानन्दात्मना तिष्ठति विद्वरिष्ठः ॥

सदात्मनि– எக்காலத்திலும் பாதிக்கப்படாமலிருக்கும் தன்மையுள்ள निर्विकल्पे–எவ்வித விகல்பமுமற்ற ब्रह्मणि–ப்ரஹ்மமாகிற वह्नौ–அக்னியில் एतं – இந்த சரீரத்தை समूलं – (அக்ஞானமாகிற) வேருடன் परिदह्य – நன்கு எரித்துவிட்டு ततः–அதன்பிறகு नित्यविशुद्धबोधानन्दात्मना– நித்யமாய் நன்கு சுத்தமாயுள்ள ஞான ஆனந்தஸ்வரூபமாகவே स्वयं தானே विद्वरिष्ठः – பிரஹ்மவித்துக்களுக்குள் மிகவும் மேலானவர் तिष्ठति–நிலைத்திருப்பார். (417)

प्रारब्धसूत्रग्रथितं शरीरं प्रयातु वा तिष्ठतु गोरिव स्रक् ।
न तत्पुनः पश्यति तत्त्ववेत्तानन्दात्मना ब्रह्मणि लीनवृत्तिः ॥

गोः-பசுமாட்டுக்கு स्रक्-தும்பு (அல்லது அலங்காரத்திற்காக கழுத்தில் போடப்பட்டிருக்கும் மாலை) எப்படியோ इव-அதைப்போல प्रारब्ध सूत्र ग्रथितं-பிராரப்த கர்மாவாகிற கயிற்றில் கட்டப்பட்டிருக்கிற शरीरं-சரீரமானது प्रयातु-போகட்டும் (மரணமடையட்டும்). तिष्ठतु वा-அல்லது இருக்கட்டும் (ஜீவித்திருக்கட்டும்). तत्-அதை तत्त्ववेत्ता-தத்வத்தை அறிந்தவராய் आनन्दात्मना-ஆனந்தஸ்வரூபமாய் ब्रह्मणि-பிரஹ்மத்தினிடத்தில் लीनवृत्तिः-லயமடைந்த விருத்தியுள்ளவராயிருப்பவர் पुनः-மறுபடியும் न पश्यति-பார்க்கமாட்டார்.

பசுமாடு தன் கழுத்தில் போடப்பட்டிருக்கும் கயிறையோ அலங்காரமாலைகளையோ தன்னுடையதாக எண்ணாது இது போல ஞானி பிராரப்தகர்மாவினால் இயங்கிக் கொண்டிருக்கும் இந்த சரீரம் இருந்தாலும், போனாலும் இதை கவனிக்க மாட்டான். ஆனால் உலகத்தார் இந்த சரீரத்தை ஞானியைச் சேர்ந்ததாகவும் இதனால் அவன் ஸுகதுக்கங்களையடைவதாகவும் எண்ணுவார்கள். ஸுகத்தையடைவதற்காகத்தான் மனம் வெளியில் செல்கிறது. ஞானிக்கு நித்யஸுகம் கிடைத்து ஆனந்தஸ்வரூபமாகவே விளங்குவதால் அவன் மனம் வெளியில் செல்லாது. (418)

अखण्डानन्दमात्मानं विज्ञाय स्वस्वरूपतः ।
किमिच्छन्कस्य वा हेतोर्देहं पुष्णाति तत्त्ववित् ॥ ४१९ ॥

अखण्डानन्दं-பரிபூர்ண ஆனந்தரூபமான आत्मानं-ஆத்மாவை स्वस्वरूपतः-தன்னுடைய ஸ்வரூபமாக विज्ञाय-நன்கு அறிந்து கொண்ட பிறகு तत्त्ववित्-வாஸ்தவத் தன்மையை அறிந்தவர் किं-எதை इच्छन्-விரும்பி कस्य-எந்த हेतोर्वा-காரணத்திற்காக (பிரயோஜனத்தை உத்தேசித்துத்) தான் देहं-சரீரத்தை पुष्णाति-போஷணை செய்வார்?

அஞ்ஞானி ஸுகத்தையடைய சரீரத்தைக்கொண்டே முயற்சிக்கவேண்டியிருப்பதனால் சரீரத்தை போஷிப்பான். ஞானி ஸுகத்தை அடைந்துவிட்டபடியால் முயற்சிக்கு தேவையில்லை. இதனால் ஞானி சரீரத்தை போஷிக்க மாட்டான். (419)



## 36. ஜீவன்முக்த லக்ஷணம்

संसिद्धस्य फलं त्वेतज्जीवन्मुक्तस्य योगिनः ।
बहिरन्तः सदानन्दरसास्वादनमात्मनि ॥ ४२० ॥

योगिनः-ஸாதனங்களை கிரமப்படி அனுஷ்டித்து வந்தவராய் संसिद्धस्य-நன்கு ஸித்தியடைந்திருக்கும் जीवन्मुक्तस्य-ஜீவித்திருக்கும்போதே முக்தியடைந்திருப்பவருக்கு आत्मनि-தன்னிடத்தில் बहिः-வெளியிலும் (ஸமாதி நிலையிலிருந்து வெளியில் வந்தபோதும்) अन्तः-உள்ளேயும் (ஸமாதி நிலையிலிருக்கும் போதும்) सदा-எப்பொழுதும் आनन्दरसास्वादनं-ஆனந்த ரஸத்தை அனுபவிப்பதாகிய एतत् तु இதுவே फलं-பலன்.

விவேகம் வைராக்யம் முதலான நான்கு ஸாதனங்களையும் கைக்கொண்டு குருவையண்டி வேதாந்த சிரவண மனன நிதித்யாஸனங்களை அனுஷ்டித்து ஆத்மானுபவம் பெற்று அதிலேயே மனதை நிலைநிறுத்தி ஜீவித்துக்கொண்டு இருக்கும்பொழுதே முக்தனான ஞானிக்கு எப்பொழுதும் ஸமாதியிலும் வியுத்தான நிலையிலும் ஆனந்தானுபவம் இருக்கும். அஞ்ஞானம் நீங்கிவிட்டபடியால் அவனுக்கு வியுத்தான நிலையிலும் ஆனந்தம் மறையாது. உலகத்தாரும் அவனைக்கண்டு புன்சிரிப்பு, பார்வை முதலியவைகளைக் கொண்டு பூர்ணானந்தம் அனுபவிப்பதைத் தெரிந்து கொள்வார்கள். (420)

(அ) முன் 376, 377, 378 சுலோகங்களில் வைராக்கியமும் ஞானமும், பக்ஷிக்கு இரண்டு இறக்கைகள்போல, மோக்ஷமடைவதற்கு முக்கிய ஸாதனங்கள் என்றும் 379ல் அவ்விரண்டும் ஏற்பட்டால் ஸகலவிதமான கிரியைகளையும் விட்டு விட்டிருக்கும் நிலை ஏற்படுமென்றும் சொல்லப்பட்டு இருக்கிறது. இம் மூன்றும் தனித்தனியான, ஸமமான காரணம் அல்லவென்பதையும், இம் மூன்றுக்குள்ளும் ஒன்றுக்கொன்று காரிய காரணபாவம் உள்ளது என்பதையும் இங்கு தெளிவாய்த்

சொல்லி, அந்த கிரியைகளிலிருந்து நிவிருத்தியினால் மேலே கண்ட ஆனந்தானுபவம் ஏற்பட்டு உத்கிருஷ்டமான சாந்தியேற்படுகிறது என்கிறார் :—

वैराग्यस्य फलं बोधो बोधस्योपरतिः फलम् ।
स्वानन्दानुभवाच्छान्तिरेषैवोपरतेः फलम् ॥ ४२१ ॥

वैराग्यस्य-வைராக்கியத்தினுடைய फलं-பலன் (பிரயோஜனம்) बोधः-ஆத்மதத்வ ஞானம். बोधस्य-ஞானத்தினுடைய फलं-பலன் उपरतिः-வெளி விஷயங்களிலிருந்து நிவிருத்தியாதல். उपरतेः-அந்த நிவிருத்தியின் फलं-பலன் स्वानन्दानुभवात्-தன் ஸ்வரூப ஆனந்தத்தை அனுபவிப்பதனால் ஏற்படும் एषा-இந்த शान्तिः-சாந்தி (அடங்குதல்) एव-தான்.

ஆரம்பத்தில் கூறப்பட்ட விவேகம் முதலான ஸாதன சதுஷ்டயத்திலும் வைராக்யம், உபரதி, சாந்தி இவை காணப்படுகிறது. ஆனால், ப்ரஹ்மவிசாரத்திற்கு ஸாதனமான அந்த வைராக்யமும் உபரதியும் சாந்தியும் அப்பொழுது ஸாமான்யமாக இருந்தாலும் போதும். இப்பொழுதுதான் அவை பூர்ணமாகின்றன. முன்னால் முயற்சியுடன் ஸம்பாதிக்கவேண்டிய ஸாதனங்கள் இப்பொழுது தானாகவே நிலைபெற்றுவிடுகின்றன. விசாரம் செய்யும்பொழுது விஷயங்களில் ஆசையற்றிருப்பதுதான் வைராக்யம் என்பது. இப்பொழுது வாஸனையும் விலகும்பொழுது வைராக்யம் பூர்ணமாகி ஞானம் ஏற்படுகிறது. வைராக்யாதி ஸாதனங்களுடன் ஒருவன் விசாரம் செய்தும் ஞானம் ஏற்படவில்லையானால் அவனுக்கு வைராக்யம் பூர்ணமாகவில்லையென்றுதான் சொல்லவேண்டும். இவன் வைராக்யம் நிலைபெற முயற்சி செய்யவேண்டும். வைராக்யம் பூர்ணமானால் கட்டாயம் ஞானம் ஏற்பட்டேதீரும். ஆகவே பூர்ணமான வைராக்யத்தின் பலன் போதம். ஆத்ம ஸாக்ஷாத்காரம்.

ஞானத்தின் பலன் உபரதி ஸாதனசதுஷ்டயத்திலும் சமாதிஷட்கத்தில் உபரதி காணப்படுகிறது. வெளிப்பதார்த்தங்களின் எண்ணம் மனதில் ஏற்படாமலிருப்பதுதான் உபரதி. விசாரம் செய்யும்பொழுது போக்யவஸ்துக்களை நினையாமல்



இருக்கலாமேதவிற வெளிச் சிந்தையே இல்லாமலிருக்க முடியாது. இப்பொழுது நிதித்யாஸனத்தால் மனதில் அநாத்மவிருத்தி இல்லாமல் செய்துவிடலாம். ஆகவே பூர்ணமான உபரதி ஞானத்தின்பலன் ஸாமான்யமான உபரதி ஞானத்திற்கு ஸாதனம். இத்தகைய உபரதியின் பலன் ஆத்மாநந்தத்தால் ஏற்படும் சாந்தி. முன்னால் சமம் (சாந்தி) தமம் இவைகளின் பலனாக உபரதி கூறப்பட்டது. இங்கு உபரதி பூர்ணமானபிறகு இதன் பலனாக சாந்தி கூறப்படுகிறது. இது போல் முன்னால் விவேகம் பரோக்ஷமாக இருந்தது. இப்பொழுது விவேகம் அபரோக்ஷமாகிவிடுகிறது. ஆகவே பூர்ணமான வைராக்யம் ஏற்பட்டு வாஸனையும் விலகியவுடன் ஆத்மஞானம் வந்து பூர்ணமான உபரதியும் அதன்மூலம் ஆநந்தானுபவமும் சாந்தியும் ஏற்படுகிறது. (421)

(அ) ஆத்மஞானத்தின் பலன் உபரதியென்றும் உபரதியின் பலன் ஆனந்தானுபவமூலமாய் சாந்தியென்றும் சொன்னதையே கொஞ்சம் விஸ்தரித்து நான்கு சுலோகங்களில் சொல்கிறார் :—

निवृत्तिः परमा तृप्तिरानन्दोऽनुपमः स्वतः ।
दृष्टदुःखेष्वनुद्वेगो विद्यायाः प्रस्तुतं फलम् ॥ ४२२ ॥

विद्यायाः - ஆத்மஸாக்ஷாத்காரத்தினுடைய प्रस्तुतं-பிரஸித்தமாகக் காணப்படுகின்ற फलं-பலன் :— (1) निवृत्तिः-எல்லா வெளி வியாபாரங்களிலிருந்து நிவிருத்தியடைவது; (செய்யவேண்டியது ஒன்றும் பாக்கியில்லாததால் ஒன்றும் செய்யாமலிருத்தல்.) (2) परमा-உத்தமமான तृप्तिः-திருப்தி (இனிமேல் செய்யவேண்டியதோ அடையவேண்டியதோ யாதொன்றும் கிடையாது. செய்யவேண்டியதைச் செய்தாய்விட்டது. அடையவேண்டியதை அடைந்தாய்விட்டது. நான் தன்யன் என்று எண்ணி அதனால் ஏற்படும் ஸுகம். (3) स्वतः-தானாகவே (வேறு விஷயத்தையோ, நிமித்தத்தையோ கருவியையோ எதிர்பாராமல் ஏற்படும்) अनुपमः-நிகரற்ற आनन्दः-ஆனந்தானுபவம், (4) दृष्टदुःखेषु-(பிராரப்த கர்ம

வசத்தினால்) தென்படும் துக்கங்கள் ஏற்படும்போது) अनुद्वेगः பதட்டமில்லாமை (கவலைப் படாமலிருத்தல்.)

தத்வஞானத்திற்கு நான்கு பலன்கள். 1. நிவிருத்தி 2. பரமதிருப்தி 3. ஒப்பற்ற ஆனந்தம் 4. துக்கங்களைக் கண்டு மனதில் தாபம் ஏற்படாதநிலை

1. ஞானிக்கு செய்யவேண்டியது பாக்கி ஒன்றும் இல்லாததால் ஒரு காரியத்திலும் ஈடுபடாமல் ஒதுங்கியிருத்தல் நிவிருத்தி.

2. செய்யவேண்டியதைச் செய்துவிட்டேன். அடைய வேண்டியதை அடைந்துவிட்டேன். இனி எனக்கு செய்ய வேண்டியதோ, அடையவேண்டியதோ ஒன்றும் பாக்கியில்லை. நான் தன்யன் என்ற மனநிறைவு பரமதிருப்தி.

3. விஷயத்தை எதிர்பாராமல் தானாகவே ஏற்படும் அழிவற்ற, எல்லையற்ற ஸுகம் ஒப்பற்ற ஆனந்தம்.

4. பிராரப்த கர்மாக்களால் துக்கம் ஏற்படும்பொழுது மனதில் தாபம் இல்லாமை.

அக்ஞானி துக்கம் வரும்பொழுது "ஐயோ! நான் மஹாபாபி. துன்பத்தையனுபவிக்கிறேன். என்னை என்ன செய்ய" என்று அலறுவான் இது விவேகம்போல் தோன்றலாம். ஆனாலும் இந்த விவேகம் முற்பிறவிகளில் இருக்குமானால் பாபத்தைச் செய்யாமலிருப்பான். இந்த நிலை வந்திருக்காது. இந்த விவேகம் பயனுள்ளதாக ஆகும். பாபங்களை தைரியமாகச்செய்துவிட்டு இப்போது வருந்துவதில் என்ன பயன். ஆகையால் இது தமோகுணத்தின் காரியமான பிராந்தி. இது ஞானிக்கு ஏற்படாது. (422)

यत्कृतं भ्रान्तिवेलायां नानाकर्म जुगुप्सितम् ।
पश्चान्नरो विवेकेन तत्कथं कर्तुमर्हति ॥ ४२३ ॥

भ्रान्तिवेलायां-பிராந்தியிருக்கும் ஸமயத்தில் जुगुप्सितं-லஜ்ஜைப்படக்கூடியதாக नाना-பலவிதமாக यत्-எந்த कर्म-கார்யம் कृतं-செய்யப்பட்டதோ तत्-அதை पश्चात्-பின்னால் विवेकेन-விவேகத்துடனேயே नरः-மனிதன் कर्तुं-செய்வதற்கு कथं-எப்படி अर्हति-முடியும்? (423)



(அ) அவிவேகத்திற்கும் விவேகத்திற்கும் இத்தனை வித்யாஸம் இருக்கும்பொழுது விவேகத்தின் பலனான ஞானத்திற்கும் அக்ஞானத்திற்கும் எத்தனை வித்யாஸம் இருக்கும் என்பதைக் கூறுகிறார்:—

विद्याफलं स्यादसतो निवृत्तिः प्रवृत्तिरज्ञानफलं तदीक्षितम् ।
तज्ज्ञाज्ञयोर्यन्मृगतृष्णिकादौ नो चेद्विदो दृष्टफलं किमस्मात् ॥ ४२४ ॥

विद्याफलं-ஞானத்தின் பலன் असतः-வாஸ்தவமில்லாத (அநாத்ம) பதார்த்தத்திலிருந்து निवृत्तिः-விலகுவதே स्यात्-ஆகும். अज्ञानफलं-அக்ஞானத்தின் பலன் प्रवृत्तिः-பிரவ்ருத்தி (ஆகும்). यत्-எது (எந்த வித்யாஸம்) मृगतृष्णिकादौ கானல் ஜலம் (கயிற்றில பாம்பு, சிப்பியில் வெள்ளி) முதலியவிடங்களில் (பார்க்கப்பட்டு இருக்கிறதோ) तत्-அதுவே (பொதுவாக) तज्ज्ञ अज्ञयोः-பதார்த்த தத்வத்தை அறிந்தவனுக்கும் அறியாதவனுக்கும் (உள்ளதாக) ईक्षितम्-பார்க்கப்பட்டிருக்கிறது. नो चेत्-அவ்விதம் இல்லையானால विदः-அறிந்தவனுக்கு अस्मात्-இதைவிட दृष्टफलं-அறியப்படும் பலனாக किं-வேறு என்ன உண்டு?

கானல் (ஸூரியகிரணம்) தான் ஜலமாகத் தோன்றுகிறது வாஸ்தவத்தில் இங்கு தண்ணீர் இல்லை என்பதை அறிந்தவன தண்ணீரைத்தேடி அங்கு அலையமாட்டான். அறியாதவன் தான் அங்கு செல்வான். இவனுக்கு அலைச்சல்தான மிச்சமே தவிர தண்ணீர் கிடைக்காது. இதுபோல் ஆத்மஸ்வரூப ஆனந்தத்தை அறியாதவன் உலகை உண்மை என்று எண்ணி ஸுகமடைவதற்காக எத்தனையோ காரியங்களைச் செய்கிறான். ஒன்றிலும் நித்யஸுகம் கிடைப்பதில்லை. ஸ்வரூபானந்தத்தை அறிந்தவன் உலகைப் பொய் என்று எண்ணுவதால் அதில் முனையமாட்டான். (424)

(அ) ஞானிக்கு பிரவிருத்திக்குக் காரணமில்லாததாலும் அவன் பிரவர்த்திக்காமல் ஒதுங்கிவிடுகிறான் என்பதைக் கூறுகிறார்:—

अज्ञानहृदयग्रन्थेर्विनाशो यद्यशेषतः ।
अनिच्छोर्विदुषः किं नु प्रवृत्तेः कारणं स्वतः ॥ ४२५ ॥

अज्ञानहृदय ग्रन्थेः - அக்ஞானத்தினல் புத்தியில் ஏற்படும் முடிச்சுக்கு (அத்யாஸத்திற்கு) विनाशः - நாசமானது अशेषतः - மீதமின்றியில் यदि - ஏற்பட்டிருக்குமேயானல் (அப்பொழுது) स्वतः - தானாக अनिच्छोः - (அத்யாஸத்தினல் ஏற்படக்கூடிய) ஆசையற்ற विदुषः - அறிவாளிக்கு प्रवृत्तेः - பிரவிருத்தி செய்வதற்கு कारणं - காரணம் किं नु ஏதேனும் இருக்கமுடியுமா?

உலகில் நல்ல காரியமோ, கெட்டகாரியமோ எதிலும் பிரவர்த்திப்பதற்கு இச்சைதான் காரணம். प्रयोजनमनुद्दिश्य न मन्दोऽपि प्रवर्तते (பலனை விரும்பாமல் முட்டாளும் காரியம் செய்யமாட்டான்) என்று கூறுவது வழக்கம். மோக்ஷத்தில் இச்சையுள்ளவன்தான் விசாரம் செய்கிறன். முமுக்ஷுத்வமும் (மோக்ஷத்தில் இச்சையும்) ஸாதனமாக கூறப்பட்டிருக்கிறது. ஆத்மானந்தத்தையறியாதவன் விஷய ஸுகத்தில் ஆசையால் அதையடைய முயற்சிக்கிறன். விஷயங்கள் மூலம் ஸுகம் கிடைக்காது என்பதையறிந்து வைராக்யம் ஏற்பட்டபின் வெளி விஷயங்களில் ஆசை நீங்கிவிட்டதால் வெளி பிரவிருத்தி நின்றுவிடுகிறது. ஆனாலும் மோக்ஷ இச்சை இருப்பதால் சாஸ்த்ரீயமான சிரவண மனன நிதித்யாஸனுதி காரியங்களில் பிரவர்த்திக்கிறன். ஆகவே மோக்ஷ இச்சையும் முக்தி ஸாதனங்களில பிரவர்த்திப்பதும் அக்ஞான தசையில்தான் இச்சை என்பது அந்தக்கரணதர்மம். இது அத்யாஸத்தால் ஏற்படுகிறது. ஆத்மஞானம் ஏற்பட்டு அக்ஞானம் விலகி அத்யாஸம் நீங்கி ஆத்மானந்தமடைந்தபின் பலன் ஏற்பட்டு விட்டபடியால் இவனுக்கு மோக்ஷ இச்சையும் இல்லாதபடியால் அந்த பிரவிருத்தியுமில்லை. உள் விஷயமாகவோ வெளிவிஷயமாகவோ பிரவிருத்திக்குக் காரணமான இச்சை யாதொன்றுமில்லாததால் ஒரு பிரவிருத்தியுமில்லாமல் நிஷ்க்ரியமான ஆத்மஸ்வருபமாகவே இருப்பது என்ற நிவிருத்தி பிரஹ்ம வித்தையின் திருஷ்டபலன். (425)

(அ) முன் 421வது சுலோகத்தில் கண்ட வைராக்கியம் ஞானம், உபரதி இவைகள் பரிபூர்ணமாய் ஏற்பட்டுவிட்டது



என்று எப்படி தன்னுலேயே அறிந்துகொள்ளமுடியும் என்பதை காட்டுகிறர் :—

वासनानुदयो भोग्ये वैराग्यस्य तदावधिः ।
अहंभावोदयाभावो बोधस्य परमावधिः ।
लीनवृत्तेरनुत्पत्तिर्मर्यादोपरतेस्तु सा ॥ ४२६ ॥

(எப்பொழுது) भोग्ये - போகத்திற்கு விஷயமான பதார்த்தம் இருக்கும்போது वासना अनुदयः - (நல்லது, கெட்டது என்ற) வாஸனை ஏற்படாமலிருக்கிறதோ तदा - அப்பொழுதுதான் वैराग्यस्य - வைராக்யத்திற்கு अवधिः - எல்லை. अहं भाव उदय अभावः - 'நான்' என்கிற எண்ணத்தின் கிளம்புதல் இல்லாமலிருப்பது बोधस्य - ஆத்மக்ஞானத்தின் परमावधिः - மேலான எல்லை. लीनवृत्तेः - (பிரஹ்மத்தில்) லயமான விருத்திக்கு अनुत्पत्तिः - (மறுபடியும் வேறு விஷயத்தில்) வெளிக் கிளம்பாமலிருப்பது (எதுவோ) सा तु அதுதான் उपरतेः - உபரதியின் मर्यादा - எல்லை.

நான் என்ற எண்ணம் தோன்றுமலிருப்பது ஞானத்தின் எல்லை. ஞானிக்கு பிரஹ்மத்தில் நான் என்ற எண்ணம் தோன்றுகிறதே எனில் அப்படியல்ல. अहं ब्रह्मास्मि என்பதற்கு நான் பிரஹ்மம் என்று அர்த்தமல்ல. "திருடன் என்று எதை எண்ணினேனே அது மரக்கட்டை" என்பது போல் 'நான்' என்று எதை எண்ணினேனே அது பிரஹ்மம் என்று பொருள். ஆகையால் ஞானிக்கு ஒன்றிலும் 'நான்' என்ற எண்ணம் கிடையாது. அல்லது பஞ்சகோசஙகளில் நான் என்ற எண்ணம் தோன்றுவதில்லை என்பதாகப் பொருள் கூறலாம். பால், தயிராகி, வெண்ணையாகி நெய்யாகிறது. பின்னல் இந்த நெய் பாலாக மாறுமா? இதுபோல் ப்ரஹ்மானந்தஸ்வருபத்தில் லயமடைந்த மனம் விஷயத்தை நோக்கி கிளம்புவதில்லை. இதுதான் உபரதியின் எல்லை. (426)

(அ) இம் மூன்றும் ஸித்தித்த பிரஹ்மாநந்தானுபவம் ஏற்பட்டிருக்கும் ஞானியின் நிலையை வர்ணிக்கிறர் :—

ब्रह्माकारतया सदा स्थिततया निर्मुक्तबाह्यार्थधी-
रन्यावेदितभोग्यभोगकलनो निद्रालुवद्बालवत् ।
स्वप्नालोकितलोकवज्जगदिदं पश्यन्क्वचिल्लब्धधी-
रास्ते कश्चिदनन्तपुण्यफलभुग्धन्यः स मान्यो भुवि ॥

ब्रह्माकारतया – பிரஹ்மஸ்வரூபமாகவே सदा-எப்பொழுதும் स्थिततया - நிலைத்திருக்கும் தன்மையினால் निर्मुक्तबाह्यार्थधीः-வெளிப் பதார்த்தங்களிலிருந்து விலகிய புத்தியுடன் கூடினவராய் निद्रालुवत् – தூங்குகிறவன் போலும் बालवत्-குழந்தைபோலும் अन्यावेदित भोग्यभोग कलनः - மற்றவர்களாலேயே தெரிவிக்கப்பட்ட போக்ய வஸ்துக்களால் ஏற்பட்ட போகத்தின் ஸம்பந்தம் உள்ளவராய் क्वचित्-சில ஸமயங்களில் लब्धधीः-பரமாத்ம நிஷ்டை அடைந்த புத்தியுடன் (அல்லது சில ஸமயங்களில் வெளி பதார்த்தங்களில் ஏற்படும் புத்தியுடன்) இருந்துகொண்டு स्वप्नालोकित लोकवत् – ஸ்வப்னத்தில் காணப்பட்ட உலகத்தைப் போலவே इदं-இந்த जगत्-வெளி உலகத்தையும் पश्यन्-(மித்யை என்று) பார்த்துக்கொண்டு कश्चित्-அபூர்வமாய் யாரோ ஒருவர் आस्ते-இருக்கிறார். सः-அவர் (ஆரம்பத்தில் 2-வது சுலோகத்தில் சொன்னபடி) अनन्तपुण्यफलभुक्-எல்லையற்ற புண்யங்களின் பலனை அனுபவிப்பவர். (அல்லது, தைத்திரீய உபநிஷத்தில் சொன்னபடி, எல்லையற்றதாய் என்னவெல்லாம் புண்ய பலன்களுண்டோ அவை எல்லாவற்றையும் சேர்த்து ஒரே ஸமயத்தில் அனுபவிப்பவர்), (அவரே) धन्यः-மிகவும் பாக்யசாலி, (அவரே) भुवि-உலகத்தில் मान्यः-பஹுமானிக்கத் தகுந்தவர்.

இரவில் சாப்பிடாமல் தூங்கும் குழந்தைக்கு தாய் சாதத்தை ஊட்டுகிறாள். தூங்குகின்ற பெரியவனும் தூக்கக் கலக்கத்தில் தான் அறியாமலேயே பாலை வாங்கி குடிக்கிறான். இங்கு தானாக ஒரு முயற்சியும் செய்வதில்லை. நான் உணவு அருந்துகிறேன் என்ற எண்ணமுமில்லை. இதுபோல் ஞானி பிரஹ்மஸ்வரூபத்திலேயே நிலைபெற்று வெளித் தோற்றமே இல்லாத நிலையில் இவன் வாழ்வதற்காக பிராரப்த கர்மபலத்தால் இவன் வாயில் பிறர் போடுகிற அன்னத்தை சாப்பிடுகிறான். இவன் இதற்காக ஒரு பிரயத்னமும் செய்கிறதில்லை. நான் சாப்பிடுகிறேன் என்ற தோற்றமும் இல்லை.



सोऽश्नुते सर्वान् कामान् सह ब्रह्मणा विपश्चितेति

ப்ரஹ்மஸ்வரூபமாக இருக்கும் முக்தன் எல்லா ஆனந்தங்களையும் (புண்ய பலன்களையும்) ஒரேஸமயத்தில் அனுபவிக்கிறான். மற்றவர் கிரமமாக ஒவ்வொன்றாகத்தான் அனுபவிக்க முடியும். இங்கு முக்தன் விஷயானந்தத்தை அனுபவிக்கிறான் என்பது இதன் பொருளல்ல. ப்ரஹ்மானந்தத்தில் எல்லா விஷயானந்தங்களும் உள்ளடங்கியுள்ளபடியால் ப்ரஹ்மானந்தத்தை அனுபவிப்பதாலேயே மற்ற ஆனந்தங்களை அனுபவிப்பதுபோல் ஆகிறது. ப்ரஹ்மானந்தத்தின் லவலேசம்தான் எல்லா விஷயானந்தங்களும். (427)

(அ) இவ்வித அனுபவமுள்ளவரைத்தான் ஸ்ரீமத் பகவத்கீதை 2வது அத்யாயத்தில் "ஸ்திதப்பிரஜ்ஞர்" என்று சொல்லப்பட்டிருக்கிறது என்று ஸ்திதப்ரஜ்ஞ லக்ஷணத்தை ஸூத்ரம் மாதிரி ஸங்கிரஹமாகக் கூறுகிறார்:—

स्थितप्रज्ञो यतिरयं यः सदानन्दमश्नुते ।
ब्रह्मण्येव विलीनात्मा निर्विकारो विनिष्क्रियः ॥ ४२८ ॥

यः-எவர் सदा-எப்பொழுதும் ब्रह्मणि एव-பிரஹ்மத்தினிடத்திலேயே विलीनात्मा-நன்கு லயித்த மனஸுடன், निर्विकारः-எவ்வித விகாரமும் (மாறுபாடும்) அன்னியில் विनिष्क्रियः – எவ்வித சேஷ்டையுமன்னியில் सदा – எப்பொழுதும் आनन्दं-ஆநந்தத்தை अश्नुते – அனுபவிக்கிறாரோ अयं – இந்த यतिः – ஸன்னியாஸி स्थितप्रज्ञः-"ஸ்திதப்பிரக்ஞன்" (எனப்படுவான்) இது ஜீவன் முக்தனின் சுருக்கமான லக்ஷணம். பின்னால் ஒவ்வொன்றும் விவரிக்கப்படுகிறது. (428)

(அ) "ஸ்திதப்பிரக்ஞன்" என்ற பெயர் எப்படி ஏற்பட்டது என்பதைக்கூறி அவனேதான் ஜீவன்முக்தன் என்று கூறுகிறார் :—

ब्रह्मात्मनोः शोधितयोरेकभावावगाहिनी ।
निर्विकल्पा च चिन्मात्रा वृत्तिः प्रज्ञेति कथ्यते ।
सा सर्वदा भवेद्यस्य स जीवन्मुक्त इष्यते ॥ ४२९ ॥

शोधितयोः- நன்கு சோதித்து உபாதிகள் விலகிய தத்த்வபத லக்ஷ்யமான ब्रह्म आत्मनोः-பிரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும் एकभावावगाहिनी - (இரண்டும் சைதன்யம் என்ற முறையில்) ஒன்றாய் இருக்கும் தன்மையுடையது என்று ஸாக்ஷாத்கரிப்பதாய் निर्विकल्पा-எவ்வித விகல்ப மற்றதாய் चिन्मात्रा च-சைதன்யத்தை மாத்திரம் விஷயீ கரிக்கும் वृत्तिः-மனோவிருத்தியானது प्रज्ञा-"பிரக்ஞை" इति-என்று कथ्यते-சொல்லப்படுகிறது. सा-அந்த விருத்தி सर्वदा - எப்பொழுதும் यस्य-எவருக்கு भवेत् - இருக்குமோ (அவர் ஸ்திதப்பிரக்ஞர்), स-அவர்தான் जीवन्मुक्तः- ஜீவன்முக்தர் (உயிருடன் தேஹமிருக்கும்போதே ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுதலையடைந்தவர்). इष्यते- என்று கருதப்படுகிறார். (429)

(அ) ஜீவன்முக்தருடைய லக்ஷணத்தையும் அவருடைய அனுபவத்தையும் பற்றி மேலாலும் 14 சுலோகங்களில் விஸ்தரிக்கிறார் :—

यस्य स्थिता भवेत्प्रज्ञा यस्यानन्दो निरन्तरः ।
प्रपञ्चो विस्मृतप्रायः स जीवन्मुक्त इष्यते ॥ ४३० ॥

यस्य-எவருடைய . प्रज्ञा-(முன் சொன்ன) பிரக்ஞை யானது स्थिता - நிலைத்து நிற்பதாய் भवेत् - இருக்குமோ यस्य-எவருக்கு आनन्दः-ஆனந்தமானது निरन्तरः-இடைவெளியன்னியில் (இருக்குமோ) (எவரால்) प्रपञ्चः உலக மானது विस्मृतप्रायः-மறந்துவிட்டது போலவே (இருக்குமோ) सः-அவர் जीवन्मुक्तः ஜீவன் முக்தர் என்று इष्यते கருதப்படுகிறார்.



இங்கு ஸ்திதப்ரஜ்ஞனுக்கு மூன்று லக்ஷணங்கள் கூறப் பட்டுள்ளன. இவை ஸ்வரூபலக்ஷணம். மற்றதை விலக்கு வதற்காக ஏற்பட்டதல்ல. அல்லது மூன்றும் தனித்தனியான லக்ஷணம் என்று கூறலாம். ஞானி ப்ரஹ்மத்தில் நிலைத்து உலகை மறந்தபோதிலும் சிலஸமயம் சிஷ்யனின் பலமான அதிருஷ்டத்தால் ஸமாதி கலைந்து வெளியே வந்து சிஷ்ய னுக்கு சாஸ்திரார்த்தங்களைச் சொல்லி தத்வத்தையுபதேசிப் பார். இந்த ஸமயத்தில் இவருக்கு ப்ரபஞ்சத்தின் தோற்றம் இருக்கும். இதனால்தான் प्रपंचो विस्मृतप्रायः அநேகமாக உலகத் தோற்றம் மறையும் என்று கூறப்பட்டது. (430)

(அ) ஸுஷுப்தி நிலையைக் காட்டிலும் ஜீவன்முக்தநிலை வேறுபட்டது என்பதைக் காட்டுகிறார் :—

लीनधीरपि जागर्ति यो जाग्रद्धर्मवर्जितः ।
बोधो निर्वासनो यस्य स जीवन्मुक्त इष्यते ॥ ४३१ ॥

यः – எவர் जाग्रद्धर्मवर्जितः – (ஸாதாரணமாய் மற்ற ஜனங்களால் அனுபவிக்கப்பட்டு வருகிற) விழிப்பு என்ற தசையின் தர்மங்கள் அற்றவராயிருந்தபோதிலும் लीनधीः – (பிரஹ்மத்தினிடத்தில்) லயித்துவிட்ட புத்தி யுடனிருந்தபோதிலும் अपि – கூட जागर्ति – (அக்ஞான மாகிய பெரிய தூக்கம் போய்விட்டபடியால்) விழித்துக் கொண்டேயிருக்கிறாரோ यस्य-எவருடைய बोधः-அறிவு निर्वासनः எவ்வித வாஸனையுமற்றதாக இருக்கிறதோ सः-அவர் जीवन्मुक्तः-ஜீவன்முக்தர் என்று इष्यते-கருதப் படுகிறார்.

எல்லோருக்கும் ஸுஷுப்தியில் மனம் அக்ஞானத்தில் மறைந்துவிடுகிறது. அக்ஞான நித்திரையால் அப்பொழுது ஒன்றும் தெரிவதில்லை. ஞானியின் மனம் ஞானரூபமான ப்ரஹ்மத்தில் மறைகிறது. இவனுக்கு அக்ஞானம் இல்லாத தால் நித்திரையில்லை. ஞானிக்கு ஸ்வரூபஞானமிருக்கிறது.

ஆகலால்தான் முக்தன் மனம் ஒடுங்கினாலும் விழித்துக் கொண்டிருக்கிறான் என்று கூறப்பட்டது. எல்லாவற்றையும் ஆத்மஸ்வரூபமாக அறிகிறான். ஆனாலும் தேஹாதிகளில் அபிமானம் இல்லாததால் ஜாக்ரத் தர்மமில்லை. உலக விஷயங்களை அறிந்தாலும் ஆஸக்தியோ ராகத்வேஷங்களோ வேண்டும் வேண்டாம் என்ற எண்ணமோ இருக்காது. அல்லது கண் முதலான இந்திரியங்கள் ஞானிக்கு விழித்தபடி இருப்பதால் விழிப்பு நிலை. ஆனாலும் மனம் ப்ரஹ்மத்தில் லயித்திருப்பதால் இந்திரியங்கள்மூலம் அறிவு ஏற்படாததால் விழிப்பு நிலையின் காரியமில்லை. ஒருவேளை புலன்கள்மூலம் அறிவு ஏற்பட்டாலும் ராகத்வேஷாதிகள் இல்லாததால் இவனுடைய அறிவு வாஸனையற்றது. ஆகவே எப்பொழுதும் முக்தன் நிர்விகாரமாகவே இருக்கிறான். (431)

(அ) 12 சுலோகங்களால் நிர்விகாரத் தன்மையை விளக்குகிறார். நிர்விகாரமாக இருந்துவிட்டால் தானாகவே பிரயத்னமில்லாமலே ப்ரஜ்ஞை நிலைக்கும். எப்பொழுதும் ஆனந்தானுபவம் ஏற்படும் :—

शान्तसंसारकलनः कलावानपि निष्कलः ।
यः सचित्तोऽपि निश्चित्तः स जीवन्मुक्त इष्यते ॥ ४३२ ॥

यः-எவர் शान्तसंसारकलनः - அடங்கிவிட்ட ஸம்ஸார சேஷ்டைகளுடையவராய் कलावान् अपि - எல்லாவித வித்யையையும் கற்றறிந்தவராய் இருந்தும் निष्कलः- (பிரஹ்மத்தைத் தவிர வேறு) அறிவற்றவராய் (அல்லது பிராணன் சிரத்தா முதலிய 16 கலைகள் இருந்தும் அதில் அபிமானமில்லாததால் கலைகளற்றவர்) सचित्तः अपि - மனஸுடன் இருந்தபோதிலும் निश्चित्तः- மனோவிருத்திகள் அற்றவராய் இருக்கிறாரோ सः- அவர் जीवन्मुक्तः- ஜீவன்முக்தர் என்று इष्यते-கருதப்படுகிறார்.

वर्तमानेऽपि देहेऽस्मिञ्छायावदनुवर्तिनि ।
अहंताममताभावो जीवन्मुक्तस्य लक्षणम् ॥ ४३३ ॥



छायावत्-நிழலைப்போல अनुवर्तिनि - கூடவேயிருக்கும் अस्मिन्-இந்த देहे சரீரம் वर्तमाने-இருக்கும்போது अपि- கூட (அதில்) अहंता ममता अभावः-"நான்" என்றாவது "என்னுடையது" என்றாவது எண்ணம் இல்லாதிருப்பது जीवन्मुक्तस्य - ஜீவன்முக்தருடைய लक्षणं- லக்ஷணம் (அடையாளம்)

பிறருடைய சரீரத்தில் நான் எனது என்ற அபிமானம் எப்படி இல்லையோ அப்படியே நிழல்போல் தன்கூடவே வந்துகொண்டிருக்கும் ஸ்தூலசரீரத்தில் நான் எனது என்ற அபிமானம் ஜீவன்முக்தனுக்கு இருக்காது. ராகத்வேஷங்கள் ஜராமரணங்கள் முதலான எல்லா விகாரங்களுக்கும் ஸ்தூல தேஹாபிமானமே மூலகாரணமானதால் இந்த அபிமானம் இலலையென்று கூறுவதன்மூலம் எவ்வித விகாரமும் இல்லை என்று காட்டப்பட்டது. ஆகவே 428வது சுலோகத்தில் கூறப் பட்ட விகாரமில்லாத தன்மை இங்கு விளக்கப்பட்டது. (433)

अतीताननुसंधानं भविष्यदविचारणम् ।
औदासीन्यमपि प्राप्ते जीवन्मुक्तस्य लक्षणम् ॥ ४३४ ॥

अतीत अननुसंधानं-முன் நடந்ததை ஸ்மரிக்காமலிருப்பது भविष्यद् अविचारणं-வரப்போவதை நினைக்காமலிருப்பது प्राप्ते अपि- இப்பொழுது ஏற்பட்டிருப்பதிலும்கூட औदासीन्यं-பற்றுதலையின்மையில் உதாஸீனனாய் இருப்பது (இவையெல்லாம்) जीवन्मुक्तस्य - ஜீவன் முக்தருடைய लक्षणं-லக்ஷணம். (434)

गुणदोषविशिष्टेऽस्मिन् स्वभावेन विलक्षणे ।
सर्वत्र समदर्शित्वं जीवन्मुक्तस्य लक्षणम् ॥ ४३५ ॥

गुणदोषविशिष्टे - (பலவித) குணங்கள் தோஷங்கள் இவைகளுடன் கூடியதாய் அதனாலேயே स्वभावेन - ஸ்வபாவத்தினாலேயே विलक्षणे - வேறுபட்ட லக்ஷணத்தோடு கூடியதாய் இருக்கும் अस्मिन्-இவ்வுலகத்தில் सर्वत्र

எல்லா பதார்த்தங்களிலும் समदर्शित्वं-ஸமமான பார்வை யுடனிருப்பது (குணம என்று எண்ணி ஒன்றை எடுப்பதுமில்லை. தோஷமென்று எண்ணி மற்றென்றைத் தள்ளுவதுமில்லை. அல்லது பிரஹ்மத்தையே பார்ப்பது) जीवन्मुक्तस्य-ஜீவன் முக்தருடைய लक्षणं-லக்ஷணம்.

इष्टानिष्टार्थसंप्राप्तौ समदर्शितयाऽऽत्मनि ।
उभयत्राविकारित्वं जीवन्मुक्तस्य लक्षणम् ॥ ४३६ ॥

इष्ट अनिष्ट अर्थ संप्राप्तौ (உலகத்தாரின் பார்வையில்) இஷ்டமானதோ இஷ்டமில்லாததோ பதார்த்தம் வந்து சேரும்போது समदर्शितया - (இது இஷ்டம் இது இஷ்ட மில்லாதது என்ற எண்ணமேற்படாமல் இரண்டையும்) ஸமமாகப் பார்க்கும் தன்மையினால் उभयत्र - (இஷ்டம் அநிஷ்டம் ஆகிய) இரண்டு ஸந்தர்ப்பத்திலும் आत्मनि- தன் இடத்தில் (மனஸில்) अविकारित्वं- (ஸந்தோஷம் வெறுப்பு முதலிய எவ்வித) விகாரமுமற்றிருக்கும் தன்மை जीवन्मुक्तस्य-ஜீவன் முக்தருடைய लक्षणं- லக்ஷணம். (486)

ब्रह्मानन्दरसास्वादासक्तचित्ततया यतेः ।
अन्तर्बहिरविज्ञानं जीवन्मुक्तस्य लक्षणम् ॥ ४३७ ॥

यतेः-ஸந்யாஸிக்கு ब्रह्मानन्दरसास्वादासक्तचित्ततया- பிரஹ்மானந்த ரஸத்தின் அனுபவத்தில் ஈடுபட்டிருக்கிற மனஸுள்ளவராயிருக்கும் தன்மை இருப்பதினால் अन्तर्बहिः अविज्ञानं உள்ளேயும் வெளியிலும் (வேறு எதையும்) அறியாமலிருப்பது जीवन्मुक्तस्य - ஜீவன் முக்தருடைய लक्षणं-லக்ஷணம். (437)

देहेन्द्रियादौ कर्तव्ये ममाहंभाववर्जितः ।
औदासीन्येन यः तिष्ठेत् स जीवन्मुक्त इष्यते ॥ ४३८ ॥



कर्तव्ये-செய்யவேண்டியதாக ஏற்பட்ட காரியத்திலும் देहेन्द्रियादौ-தேஹம், இந்திரியம் (மனஸ்) முதலியவைகளிலும் ममाहंभाववर्जितः - 'என்னுடையது', 'நான்' என்கிற எண்ணம் இல்லாதவராய் औदासीन्येन- பற்றுதலன்னியில் உதாஸீனத் தன்மையுடன் यः-எவர் तिष्ठेत्-இருப்பாரோ सः - அவர் जीवन्मुक्तः-ஜீவன்முக்தர் என்று इष्यते-கருதப்படுகிறார்.

என்றால் இந்த காரியம் செய்யப்பட்டது. என்னால் இந்த காரியம் செய்யத்தக்கது என்று கர்மாவில் மமகாரமும், நான் மனுஷ்யன், நான் பார்க்கிறேன் என்னுடைய சரீரம் என்னுடைய கண் என்று தேஹேந்திரியாதிகளில் அஹங்கார மமகாரமும் ஜீவன்முக்தனுக்கு இருக்காது. (488)

विज्ञात आत्मनो यस्य ब्रह्मभावः श्रुतेर्बलात् ।
भवबन्धविनिर्मुक्तः स जीवन्मुक्त इष्यते ॥ ४३९ ॥

यस्य-எவருக்கு आत्मनः-ஆத்மாவினுடைய ब्रह्मभावः- பிரஹ்மமாயிருக்கும் தன்மையானது श्रुतेः-- ('தத்த்வமஸி' முதலான) வேத வாக்யத்தின் बलात्-பலத்தினால் विज्ञातः-நன்கு அறியப்பட்டிருக்கிறதோ (எவர்) भवबन्ध- विनिर्मुक्तः - ஸம்ஸாரமாகிற பந்தத்திலிருந்து நன்கு விடுபட்டவராயிருக்கிறாரோ सः- அவர் जीवन्मुक्तः-ஜீவன் முக்தர் என்று इष्यते-கருதப்படுகிறார். (439)

देहेन्द्रियेषु अहंभावः इदंभावः तदन्यके ।
यस्य नो भवतः क्वापि स जीवन्मुक्त इष्यते ॥ ४४० ॥

देहेन्द्रियेषु - தேஹத்திலும் இந்திரியங்களிலும் अहं- भावः-"நான்" என்கிற எண்ணமும் तदन्यके - அதற்கு வேறான (வெளியிலுள்ள) பதார்த்தத்தில் इदंभावः- "இது" என்கிற எண்ணமும் यस्य-எவருக்கு क्वापि ஒரு பொழுதும் नो भवतः - ஏற்படுகிறதில்லையோ सः - அவர் जीवन्मुक्तः-ஜீவன்முக்தர் என்று इष्यते-கருதப்படுகிறார்.

பாஹ்யமான குடம் முதலானவைபோல் தேஹம் இந்திரியம் முதலானவையும் அநாத்மாதான் ஆத்மஸ்வரூபத்தில் கல்பிதம்தான். இரண்டும் ஸமமாயிருப்பதால், வித்யாஸம் இல்லாததால் ஒன்றை நான் என்றும் மற்றதை இது என்றும் சொல்வது சரியல்ல. ஆனாலும் அக்ஞானத்தால் பூர்வ வாஸநாபலத்தால் இவ்வாறு வியவஹாரம் செய்கிறார்கள். ஜீவன்முக்தனுக்கு அக்ஞானம் தொலைந்து வாஸனையும் நீங்கி விட்டபடியால் இம்மாதிரி எண்ணம் ஏற்படுகிறதில்லை. (440)

[1]जीवेशोभयसंसाररूपदुर्वासनोज्झिता ।
सा सर्वदा भवेत् यस्य स जीवन्मुक्त उच्यते ॥

'जीव ईश उभय संसार रूप दुर्वासना ஜீவன் ஈசுவரன் என்று இருவித ஸம்ஸார ரூபமாகிய கெட்ட வாஸனை எதுவோ सा - அது यस्य - எவருக்கு सर्वदा - எப்பொழுதும் उज्झिता - தள்ளப்பட்டதாக भवेत् - இருக்குமோ सः - அவர் जीवन्मुक्तः - ஜீவன் முக்தர் என்று उच्यते - சொல்லப் படுகிறார்.'

न प्रत्यग्ब्रह्मणोर्भेदं कदाऽपि ब्रह्मसर्गयोः ।
प्रज्ञया यो विजानाति स जीवन्मुक्त इष्यते ॥ ४४१ ॥

यः - எவர் प्रज्ञया - ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரமிருப்பதினால் प्रत्यग्ब्रह्मणोः - ஜீவாத்மாவிற்கும் ப்ரஹ்மத்திற்குமோ ब्रह्म-सर्गयोः - ப்ரஹ்மத்திற்கும் ஜகத்திற்குமோ भेदं - பேதத்தை कदा अपि - ஒருபொழுதும் கூட न विजानाति - அறிய மாட்டாரோ सः - அவர் जीवन्मुक्तः - ஜீவன்முக்தர் என்று इष्यते - கருதப்படுகிறார்.

ஜீவஸ்வரூபமும் ப்ரஹ்மஸ்வரூபமும் ஒரே சைதன்ய ஸ்வரூபமானாலும் அக்ஞானத்தால் உபாதிகளின் மூலம்

1. இந்த சுலோகம் பங்களூரில் அச்சிட்ட புஸ்தகத்தில் இருக்கிறது. ஸ்ரீரங்கம் புஸ்தகத்தில் இல்லை. ஸ்ரீமத் ஆசார்யாரவர்களும் வியாக்யானம் செய்யவில்லை. பங்களூர் புஸ்தகத்தில் சுலோகத்திற்கு லக்கமும் கொடுக்கவில்லை.



வேற்றுமை இதுவரை தோன்றிக்கொண்டிருந்தது. இப்பொழுது அக்ஞானம் நீங்கி உபாதிகள் விலகிவிட்டபடியால் வேற்றுமை தோன்றுவதில்லை. கயிற்றில் பாம்புபோல் ப்ரஹ்மத்தில் கல்பிதமான ப்ரபஞ்சம் அதிஷ்டானமான ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறு அல்லவானதால் அதிஷ்டானமான ப்ரஹ்மத்தையறிந்தவனுக்கு வேற்றுமை தோன்றுவதில்லை. இங்கு வேற்றுமை வாஸ்தவமாக இல்லை. அதனால் அதை முக்தன் அறியவில்லை. உலகில் வாஸ்தவமாக இருக்கும் பொருளை ஒருவன் அறியவில்லையென்றால் அவனை அக்ஞானி, சிற்றறிவு உள்ளவன் என்று சொல்வார்கள். முக்காலுமில்லாத முயல்கொம்பு முதலியவற்றை அறியவில்லையென்பதற்காக ஒருவனை ஸர்வஜ்ஞனில்லை என்று கூறுவதில்லை. இதுபோல் முக்காலுமில்லாத வேற்றுமை தெரியாததால் முக்தனுடைய ஞானத்திற்குக் குறைவு ஒன்றுமில்லை. (441)

साधुभिः पूज्यमानेऽस्मिन् पीड्यमानेऽपि दुर्जनैः ।
समभावो भवेत् यस्य स जीवन्मुक्त इष्यते ॥ ४४२ ॥

अस्मिन् - இந்த சரீரம் साधुभिः - ஸாது ஜனங்களால் पूज्यमाने பூஜிக்கப்பட்டாலும் दुर्जनैः - துஷ்ட ஜனங்களால் पीड्यमाने अपि - பீடிக்கப்பட்டாலும் கூட समभावः - (ஸந்தோஷம், கோபம் முதலியதில்லாமல்) ஸமமான நிலை यस्य - எவருக்கு भवेत् - இருக்குமோ सः - அவர் जीवन्मुक्तः ஜீவன்முக்தர் என்று इष्यते - கருதப்படுகிறார்.

यत्र प्रविष्टा विषयाः परेरिता नदीप्रवाहा इव वारिराशौ ।
लिनन्ति सन्मात्रतया न विक्रियामुत्पादयन्त्येष यतिर्विमुक्तः ॥ ४४३ ॥

परेरिताः - மற்றவர்களால் ஏவிவிடப்பட்டு यत्र - எவரிடம் प्रविष्टाः - சென்ற विषयाः - (அவர்கள் பார்வையில் நல்லதென்றோ கெட்டதென்றோ தோன்றும்) விஷயங்கள் वारिराशौ - ஸமுத்திரத்தில் प्रविष्टाः - நுழைந்த नदीप्रवाहाः - நதிகளின் பிரவாஹங்களை इव - போல सन्मात्रतया - ப்ரஹ்மமாகவே लिनन्ति - லயத்தை யடைந்துவிடுகின்றனவோ (அவைகள், வாஸனையும் மனமும் அழிந்துவிட்ட

படியால் எவரிடம்) विक्रियां – எவ்வித (ஸுகதுக்க) விகாரத்தையும் न उत्पादयन्ति உண்டுபண்ணுகிறதில்லையோ एषः இந்த यतिः–ஸந்யாஸி विमुक्तः–நன்கு முக்தியடைந்தவரே

பிறர் செய்யும் புகழ்ச்சியும் இகழ்ச்சியும்கூட ஞானியிடம் ஸந்தோஷத்தையோ துன்பத்தையோ உண்டுபண்ணுகிறதில்லை. (443)

## 37. கர்ம நாசம்

(அ) 'तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्ये अथ संपत्स्ये' என்ற சுருதியாலும் 'भोगेन त्वितरे क्षपयित्वा' என்ற ஸூத்ரத்தாலும் ஞானிக்கு ப்ராரப்தகர்மாவும் அதனால் சரீரமும் உண்டு என்று தெரிகிறது இது இருக்கும்வரை ஸுகதுக்கானுபவமும் இருக்கும். ஆகவே ஞானி 'நிர்விகார'மாய் எப்படியிருக்க முடியும்? என்று கேட்கலாம். நிதித்யாஸனம் செய்யும்போது ஏற்படக்கூடிய இடைவெளிகளில் சரீராதிகளில் கொஞ்சம் அத்யாஸம் இருந்தே தீருமாகையினால் அப்பொழுது ஸுகதுக்க அனுபவமும் இருக்கும். எப்பொழுதுமே ப்ரஹ்மாகார விருத்தியிலிருப்பவருக்கு அந்த அத்யாஸத்திற்கு இடமேயில்லாததினால் ப்ராரப்தத்தினால் ஏற்படும் ஸுகதுக்கானுபவம் அவருக்குக்கிடையாது என்பதே வாஸ்தவம் என்ற விஷயத்தை தெளிவுபடுத்துவதற்காக ஆத்ம ஞானத்தினால் எந்த எந்தவித கர்மாக்கள் எவ்விதம் நாசத்தையடைகின்றனவென்று பிரித்துக் காட்டுகிறார்:—

विज्ञातब्रह्मतत्त्वस्य यथापूर्वं न संसृतिः ।
अस्ति चेन्न स विज्ञातब्रह्मभावो बहिर्मुखः ॥ ४४४ ॥

विज्ञातब्रह्मतत्त्वस्य – ப்ரஹ்மத்தின் உண்மையான தன்மையை நன்கு அறிந்தவருக்கு यथापूर्वं–அறிவதற்கு முன்னால் இருந்ததுபோல संसृतिः–ஸம்ஸாரம் (ஸுகதுக்க அனுபவம்) न–இருக்காது. अस्ति चेत्–இருந்ததேயானால் सः–அவர் विज्ञातब्रह्मभावः–ப்ரஹ்மதத்வத்தை நன்கு அறிந்தவராக न–ஆகமாட்டார். बहिर्मुखः–வெளிப்பார்வையுள்ளவராகவேயிருப்பார்.



ப்ரஹ்மஞானிக்கு ப்ரபஞ்சம் பொய் என்ற தீர்மானம் இருப்பதால் ஒன்றிலும் அபிமானம் இருக்காது. அதனால் ஸுகத்தில் ஆசையும் துக்கத்தில் பயமும் இருக்காது. இது இருந்தால் அவன் ஞானியல்ல. (444)

प्राचीनवासनावेगादसौ संसरतीति चेत् ।
न सदेकत्वविज्ञानान्मन्दीभवति वासना ॥ ४४५ ॥

प्राचीनवासनावेगात् – (அனாதிகாலந்தொட்டு வந்திருக்கிற) முன்வாஸனையின் வேகத்தினால் असौ – அவர் संसरति – ஸம்ஸாரத்தையனுபவிக்கிறார் इति चेत्–என்றால் न – அப்படியல்ல. सत् एकत्व विज्ञानात् – ப்ரஹ்மத்தின் ஒன்றாயிருக்கும் தன்மை அறியப்பட்டு விட்டபடியால் वासना வாஸனையானது (அருணோதய காலத்தில் இருள் போல்) मन्दीभवति – மந்தமாய் (வெகு குறைந்து) ஆய்விடுகிறது. (445)

अत्यन्तकामुकस्यापि वृत्तिः कुण्ठति मातरि ।
तथैव ब्रह्मणि ज्ञाते पूर्णानन्दे मनीषिणः ॥ ४४६ ॥

अत्यन्त कामुकस्यापि–மிகவும் காமுகனாயிருப்பவனுக்குக்கூட मातरि–தாயாரிடத்தில் वृत्तिः–விருத்தி कुण्ठति–போவதில்லை. तथा एव–அதைப்போலவே ब्रह्मणि–ப்ரஹ்மமாகிய पूर्णानन्दे–பூர்ணமான ஆனந்தம் ज्ञाते–அறிந்து அனுபவிக்கப்படும் போது मनीषिणः–விவேகிக்கு (ஜகத்தில் விருத்தி மழுங்கும்.) (446)

निदिध्यासनशीलस्य बाह्यप्रत्यय ईक्ष्यते ।
ब्रवीति श्रुतिरेतस्य प्रारब्धं फलदर्शनात् ॥ ४४७ ॥

निदिध्यासनशीलस्य–நிதித்யாஸனத்தில் ஈடுபடுகிறவருக்கு (இடைவெளிகளில்) बाह्यप्रत्ययः–வெளிப்பதார்த்தங்களின் தோற்றம் ईक्ष्यते–காணப்படுகிறது. एतस्य–இவருக்கு फलदर्शनात्(ஸுகதுக்க ரூபமான) பலன்

இருப்பது தெரிவதால் प्रारब्धं-பிராரப்தம் (இந்த சரீரத்தை ஆரம்பித்து பலன் கொடுத்துவரும் கர்மா) உண்டு என்று श्रुतिः-வேதம் ब्रवीति-சொல்கிறது.

விபரீத பாவனை நீங்க நிதித்யாஸனம் (ஸவிகல்பஸமாதி) செய்பவன் அடிக்கடி மனதை ப்ரஹ்மத்தில் நிலைநிறுத்த முயற்சி செய்கிறான். இவனுக்கு த்யானம் இல்லாத ஸமயத்தில் பிராரப்த கர்மாதீனமான சரீரத்தின் தோற்றமும் ஸுக துக்கானுபவமும் இருக்கும். இவனுக்கு ப்ரஹ்மஸாக்ஷாத்காரம் ஏற்படவில்லை அத்யாஸம் நீங்கவில்லை. முன் சொன்ன சுருதியும் ஸூத்ரமும் இவனைப்பற்றியதுதான் நிர்குண ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் பெற்றவனுக்கு இது கிடையாது. (447)

(அ) இதையே விவரிக்கிறார்:—

सुखाद्यनुभवो यावत्तावत्प्रारब्धमिष्यते ।
फलोदयः क्रियापूर्वो निष्क्रियो न हि कुत्रचित् ॥ ४४८ ॥

सुखाद्यनुभवः ஸுகம் (துக்கம்) முதலானதின் அனுபவம் यावत् - எதுவரையிருக்கிறதோ तावत् - அதுவரை प्रारब्धं-பிராரப்த கர்மாவும் உண்டென்று इष्यते-ஒப்புக் கொள்ளப்படுகிறது. फलोदयः - (ஸுகதுக்கமாகிய) பலனுடைய உத்பத்தி क्रियापूर्वः (புண்ணிய பாபமாகிய) கர்மாவை முன்னிட்டுக்கொண்டு தான் ஏற்படும். कुत्रचित् - ஓரிடத்திலாவது निष्क्रियः-(முன்செய்த) கர்மாவில்லாமல் न हि-உண்டாகவே உண்டாகாது. (448)

(அ) பிராரப்த கர்மா உண்டென்று சொன்ன வேத வாக்கியத்திற்கும் அதையனுஸரித்துப் பிறந்திருக்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்திற்கும் என்ன தாத்பர்யம் என்று சொல்லும் முறையில் கர்மா மூன்றுவிதம். 1. ஸஞ்சிதம் (இப்பொழுது பலன்கொடுக்க ஆரம்பிக்காமல் முன் ஜன்மாக்களிலும் ஞானமேற்படுவதற்கு முன்னும் ஸம்பாதித்து சேகரிக்கப்பட்டிருக்கும் புண்ணிய பாப கர்மாக்கள்) 2. ஆகாமி (ஞானமேற்பட்ட பிறகு செய்யப்படும் கர்மாக்கள்) 3. பிராரப்தம் (இந்த ஜன்மாவைக் கொடுத்து பலன் கொடுக்க ஆரம்பித்திருக்கும் கர்மாக்கள்) என்று பிரித்துக்காட்டுகிறார்:—



अहं ब्रह्मेति विज्ञानात्कल्पकोटिशतार्जितम् ।
संचितं विलयं याति प्रबोधात्स्वप्नकर्मवत् ॥ ४४९ ॥

स्वप्नकर्मवत्-ஸ்வப்னத்தில் செய்த (புண்ணிய பாப) கர்மாக்கள் प्रबोधात् - (தூக்கத்திலிருந்து) விழித்துக் கொள்வதினாலேயே (எப்படி வாஸ்தவமில்லாததினால் பலன் கொடுக்க சக்தியற்று நாசத்தை அடைந்துவிடுகின்றனவோ) அதைப்போல कल्पकोटिशतार्जितं - நூறு கோடிக்கணக்கான ப்ரஹ்மகல்ப காலங்களில் ஸம்பாதிக்கப்பட்டு संचितं சேர்த்துவைக்கப்பட்டிருக்கும் கர்மாவானது अहं ब्रह्म-'நான் ப்ரஹ்மம்' इति-என்ற विज्ञानात्-அனுபவபுரஸ்ஸரமான ஞானத்தினால் विलयं-நன்கு லயத்தை याति-அடைந்துவிடுகிறது. (449)

(அ) ஸ்வப்ன திருஷ்டாந்தத்தை விவரிக்கிறார்:—

यत्कृतं स्वप्नवेलायां पुण्यं वा पापमुल्बणम् ।
सुप्तोत्थितस्य किं तत्स्यात्स्वर्गाय नरकाय वा ॥ ४५० ॥

स्वप्नवेलायां ஸ்வப்னம் காணும் ஸமயத்தில் पुण्यं वा- புண்ணியமோ उल्बणं-பெரியதாக पापं பாபமோ यत्- எது कृतं-செய்யப்படுகிறதோ तत्- அது सुप्तोत्थितस्य-தூங்கி எழுந்திருப்பவனுக்கு स्वर्गाय-ஸ்வர்க்கத்தைக் கொடுக்கும் பொருட்டாவது नरकाय वा-நரகத்தைக் கொடுக்கும் பொருட்டாவது किं स्यात्-(காரணமாய்) இருக்குமா?'

இதுபோல் அக்ஞானமாகிற தூக்க சமயத்தில் செய்யப்பட்ட புண்ய பாபகர்மாக்கள். ஆத்மஞானம் என்ற விழிப்பு ஏற்பட்ட பிறகு அக்ஞானத்தூக்கம் நீங்கிவிட்டதாலும் கர்த்ருத்வ புத்தி இல்லாததாலும் ஸுகதுக்கானுபவத்தைக் கொடுப்பதில்லை. (450)

स्वमसङ्गमुदासीनं परिज्ञाय नभो यथा ।
न श्लिष्यते यतिः किंचित्कदाचिद्भाविकर्मभिः ॥ ४५१ ॥

नभः-ஆகாசம் यथा-எப்படியோ (அப்படியே) स्वं-தன்னை असङ्गं-பற்றுதலற்றவனாய் ("நான்" செய்கிறேன் என்ற எண்ணமில்லாதவனாய்) उदासीनं-உதாஸீனனாய் (எவ்வித பலனிலும் ஆசையற்றவனாய்) परिज्ञाय-நன்கு அறிந்துகொண்டபிறகு. यतिः-(ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்ட) ஸன்னியாஸியானவர் किंचित् கொஞ்சமேனும் कदाचित्-ஒரு பொழுதும் भाविकर्मभिः-பின்னால் ஏற்படும் கர்மாக்களினால் न श्लिष्यते-ஒட்டப்படமாட்டார்.

ஞானம் ஏற்படுவதற்கு முன் अहं कर्ता (நான் செய்கிறேன்) என்ற எண்ணம் இருந்து கர்மாக்களைச் செய்கிறான். அந்த ஸஞ்சித கர்மாக்களும்கூட இப்பொழுது நான் அகர்தா, ப்ரஹ்மம் என்ற ஞானம் வந்தவுடன் நாசமடைகின்றன. இப்படி இருக்க நான் அகர்த்தா என்ற ஞானம் வந்தபின் செய்யும் ஆகாமி கர்மாக்கள் இவனிடம் எப்படி ஒட்டும். (451)

न नभो घटयोगेन सुरागन्धेन लिप्यते ।
तथात्मोपाधियोगेन तद्धर्मैर्नैव लिप्यते ॥ ४५२ ॥

नभः-ஆகாசமானது घटयोगेन-குடத்தின் ஸம்பந்தம் தோன்றுவது காரணமாக (அக்குடத்திலுள்ள) सुरागन्धेन-கள்ளினுடைய நாற்றத்தினால் न लिप्यते-பூசப்படுவதில்லை (ஆகாசம் நிர்மலமாயும் அமூர்த்தமாயுமிருப்பதால் நாற்றமுள்ளதாக ஆகிறதில்லை). तथा-அப்படியே आत्मा-ஆத்மாவும் उपाधियोगेन-(ஸ்தூலசரீரம் ஸூக்ஷ்ம சரீரம் முதலிய) உபாதிகளுடன் (அத்யாஸத்தினால்) சேர்ந்திருப்பதாகத் தோன்றினாலும் तत् धर्मैः-அந்த உபாதிகளின் தர்மங்களால் न एव लिप्यते-பூசப்படுவதே கிடையாது (ஸம்பந்தப்படுவதில்லை). (452)

## 38. பிராரப்த கர்மம்

(அ) तदधिगमे उत्तरपूर्वाघयोरश्लेषविनाशौ (அந்த பிரஹ்மத்தை அறிந்தபின் பின்னால் செய்யப்போகும் கர்மா ஒட்டுவதில்லை. முன் செய்த காமாக்கள் நசித்துவிடுகின்றன) என்ற



ப்ரஹ்ம ஸூத்ரத்திலும் क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे (எல்லா கர்மாக்களும் நாசம் அடைகின்றன) என்ற சுருதியிலும் சொன்னபடி ஸஞ்சித கர்மா நாசமடைந்துவிடுகிறதென்பதை இரண்டு சுலோகங்களாலும் ஆகாமி கர்மா ஒட்டவே ஒட்டாது என்பதை இரண்டு சுலோகங்களாலும் சொல்லிவிட்டு பிராரப்த கர்மா மாத்திரம் மிஞ்சியிருக்குமென்று இரண்டு சுலோகங்களால் சொல்கிறார்:—

ज्ञानोदयात्पुरारब्धं कर्म ज्ञानान्न नश्यति ।
अदत्वा स्वफलं लक्ष्यमुद्दिश्योत्सृष्टबाणवत् ॥ ४५३ ॥

ज्ञानोदयात्-ஞானம் உதயமாவதற்கு पुरा-முன்னால் आरब्धं-(பலன் கொடுக்க) ஆரம்பித்துள்ள कर्म-கர்மாவானது स्वफलं தனக்கேற்பட்ட பலனை अदत्वा-கொடுக்காமல் ज्ञानात्-ஞானத்தினால் न नश्यति-நசமடைவதில்லை लक्ष्यं-குறியை उद्दिश्य-குறிவைத்து उत्सृष्टबाणवत्-விடப்பட்ட அம்புபோல. (453)

व्याघ्रबुद्ध्या विनिर्मुक्तो बाणः पश्चात्तु गोमतौ ।
न तिष्ठति छिनत्त्येव लक्ष्यं वेगेन निर्भरम् ॥ ४५४ ॥

व्याघ्रबुद्ध्या-புலியென்று (இந்த துஷ்டப் புலியைக் கொல்லவேண்டுமென்று) நினைத்ததனால் विनिर्मुक्तः-(காதுவரை இழுத்து) நன்கு வேகமாய் விடப்பட்ட बाणः-அம்பானது, पश्चात् तु-(பாணத்தைவிட்ட) பின்னாலோ गोमतौ-(குறிவைத்தது) பசு என்று தெரிந்தபோது न तिष्ठति-நின்றுவிடாது; निर्भरं-அவசியம் लक्ष्यं-குறியை वेगेन-வேகத்துடன் छिनत्ति एव-பிளந்தே தீரும்.

இதுபோல் இந்த சரீரத்தைக்கொடுத்த கர்மா பலனைக் கொடுக்க ஆரம்பித்து விட்டபடியால் ஞானம் வந்தமாத்திரத்தில் நாசமடையாது. முழுவதும் பலனைகொடுத்தபின் தான நாசமடையும் இந்த விஷயத்தைத்தான் பின்வரும் சுருதியும் ப்ரஹ்மஸூத்ரமும் கூறுகிறது.

तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्ये अथ संपत्स्ये ।

ஞானிக்கு பிராரப்த கர்மாவினால் ஏற்பட்ட சரீரத்திலிருந்து விடுபடுகிற பர்யந்தம் தாமதம் அதன்பின் தான் விதேஹ கைவல்யம்

भोगेन त्वितरे क्षपयित्वा संपद्यते

பலனைக்கொடுக்க ஆரம்பித்த புண்யபாபங்களை அதன் பலனான ஸுகதுக்கங்களையனுபவித்துத் தீர்த்தபின்தான் விதேஹமுக்தியடைகிறான். இந்த சுருதி ஸூத்ரங்களை யனுசரித்து முன் சொன்ன 'तदधिगमे' 'क्षीयन्ते' என்ற சுருதிஸூத்ரங்களுக்கு பிராரப்தம் தவிர மற்ற ஸஞ்சிதகர்மாக்கள் நசிப்பதாக பொருள் கூறவேண்டும். (454)

(அ) ஆத்ம ஞானம் ஒரேமாதிரி இருந்தபோதிலும் அனுபவத்தில் தாரதம்யம் இருப்பதை யுத்தேசித்து ஞானிகளை நான்கு வகையாகப் பிரிப்பதுண்டு. 1. ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டு உலகம் மித்யை யென்று மாத்திரம் தோன்றிக் கொண்டிருப்பவர் பிரஹ்மவித். தான் ப்ரம்ம வித்தாக இருந்து கொண்டு பிறருக்கு உபதேசம் செய்து அவர்களையும் பிரம்ம வித்துக்களாக ஆக்குகிற ஆசார்ய ஸ்தானத்திலுள்ள யாக்ஞவல்க்யர் முதலானோர் இந்த வகையைச் சேர்ந்தவர்கள். 2. அவ்வனுபவம் பலப்பட்டு ஸமாதிநிலை நிலைத்தும்கூட சில சமயங்களில் தானாகவே வெளிப்பார்வை உள்ளவராகி உலகத்தை மித்யை யென்று பார்ப்பவர் பிரம்ம வித்வரர் எனப்படுவார். இவரைப்பற்றித்தான் ஸ்திதப்ரக்ஞர் என்று கீதையில் கூறப்படுகிறது 3. இன்னும் அனுபவம் பலப்பட்டு தானாக எழுந்திருப்பதில்லாமல் மற்றவர்களால் எழுப்பப்பட்டால்மாத்திரம் பஹிர்முகமாகி மித்யா உலகத்தைப் பார்ப்பவர் பிரஹ்ம வித்வரீயான் என்பார்கள். விஷ்ணுவின் பாஞ்சஜந்யத்வனி கேட்டு ஸமாதிகலைந்து எழுந்த பிரஹ்லாதர். 4. இதற்கு மேல்நிலைக்குப் போய் யார் எழுப்பினாலும் எழுந்திருக்காமல் பிரஹ்மத்திலேயே எப்பொழுதும் லயித்திருப்பதினால் உலகத்தோற்றமே யேற்படாமலிருப்பவர் பிரம்மவித் வரிஷ்டர் என்று சொல்வார்கள். பிராரப்த கர்மாவினால் ஏற்படக்கூடிய ஸுகதுக்க அனுபவம் உலகம் தோன்றாதவருக்கு இருக்க முடியாததினால், நான்காவதான பிரஹ்ம வித்வரிஷ்டருக்கு அவ்வனுபவம் கிடையாதென்றும், முதல் மூன்றுவித ஞானிகளுக்குத்தான் இருக்க முடியுமென்றும் தெளிவுபடுத்துகிறார் :—



प्रारब्धं बलवत्तरं खलु विदां भोगेन तस्य क्षयः

सम्यग्ज्ञानहुताशनेन विलयः प्राक्संचितागामिनाम् ।

ब्रह्मात्मैक्यमवेक्ष्य तन्मयतया ये सर्वदा संस्थिता-

स्तेषां तत्त्रितयं न हि क्वचिदपि ब्रह्मैव ते निर्गुणम् ॥ ४५५ ॥

विदां - ப்ரஹ்ம ஸாக்ஷாத்கார மடைந்தவர்களுக்கு प्रारब्धं - பிராரப்த கர்மாவானது बलवत्तरं - மிகவும் பலமுள்ளது. भोगेन - போகத்தினால (தான்) तस्य - அதற்கு क्षयः - நாசம் खलु என்பது பிரஸித்தம். सम्यक् ज्ञान हुताशनेन - நல்ல ஞானமாகிற அக்னியினால் प्राक् संचित आगामिनां - முன்னால் சேகரிக்கப்பட்ட (ஸஞ்சித) கர்மாக்களுக்கும் பின்னால் ஏற்படக்கூடிய (ஆகாமி) கர்மாக்களுக்கும் विलयः - நன்கு லயம் ஏற்படும். (ஆனால்) ब्रह्म आत्म ऐक्यं - ப்ரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும் உள்ள ஒன்றாயிருக்கும் தன்மையை अवेक्ष्य - அறிந்துகொண்டு तन्मयतया - அதாகவே (ப்ரஹ்மமாகவே) सर्वदा - (ஒருகாலும் உலகம் தோன்றாமல்) எப்பொழுதும் ये - எவர்கள் संस्थिताः - நிலைத்திருந்து விடுகிறார்களோ तेषां அவர்களுக்கு तत् - அந்த त्रितयं (பிராரப்தம், ஸஞ்சிதம், ஆகாமி ஆகிய) மூன்றுமே क्वचित् अपि ஒருஸமயத்திலும் न हि கிடையாது என்பது நிச்சயம். (ஏனென்றால்) ते - அவர்கள் (ப்ரஹ்மத்தை அறிந்தவர்கள் என்று மாத்திரமல்ல) निर्गुण - எவ்வித விசேஷமுமற்ற ब्रह्म एव - ப்ரஹ்மமேதான்.

(அ) பிரஹ்மவித்வரிஷ்டனுக்கு பிரஹ்மானந்த அனுபவத்தைத் தவிர வேறு அனுபவம் கிடையாதென்று 417-வது சுலோகத்தில் சொல்லியிருப்பதினாலேயே அவனுக்கு உலகத்தோற்றம் கிடையாது என்று ஏற்படுகிறது. உலகம் தோன்றாமல் பிராரப்த கர்மாவின் பலனாகிய ஸுகதுக்க அனுபவம் இருக்க நியாயமில்லையென்பதை 456 முதல் 463 வரை சுலோகங்களில் தெளிவுபடுத்துகிறார் :—

उपाधितादात्म्यविहीनकेवलब्रह्मात्मनैवात्मनि तिष्ठतो मुनेः ।

प्रारब्धसद्भावकथा न युक्ता स्वप्नार्थसंबन्धकथेव जाग्रतः ॥ ४५६ ॥

उपाधि तादात्म्य विहीन केवल ब्रह्म आत्मना – (ஆத்ம ஸ்வரூபம் தெரியாத தசையில் இருந்த) உபாதிகளோடு ஒன்றாயிருக்கும் தன்மை விலகி சுத்தமான ப்ரஹ்ம ஸ்வரூபமாக एव – மாத்திரம் आत्मनि – ஆத்மாவிடத்தில் तिष्ठत:– நிலைத்திருக்கும் मुने:– ஞானிக்கு प्रारब्ध सद्भाव कथा– பிராரப்தம் இருக்கிறதென்ற பேச்சு न युक्ता– நியாயமில்லை. जाग्रत:–(தூங்கி எழுந்திருந்து) விழித்துக்கொண்டிருப்பவனுக்கு स्वप्न अर्थ संबन्ध कथा ஸ்வப்னத்தில் கண்ட பதார்த்தங்களின் ஸம்பந்தம் உண்டென்று சொல்வது इव – (எப்படி நியாயமில்லையோ அதைப்) போல. முன்னால் உபாதிகளில் இருந்தான், இப்பொழுது அது இல்லை என்பதைக் காண்பிக்க आत्मनि–என்று கூறப்பட்டது. (456)

न हि प्रबुद्धः प्रतिभासदेहे देहोपयोगिन्यपि च प्रपञ्चे ।
करोत्यहंतां ममतामिदंतां किं तु स्वयं तिष्ठति जागरेण ॥ ४५७ ॥

प्रबुद्धः – (தூங்கி ஸ்வப்னம் கண்ட பிறகு) நன்கு விழித்துக் கொண்டிருப்பவன் प्रतिभास देहे – (ஸ்வப்ன ஸமயத்தில்) தோன்றின தேஹத்தில் देहोपयोगिनि– அந்த தேஹத்திற்கு உபயோகப்பட்ட பதார்த்தத்தில் अपि च– மேலும் प्रपञ्चे–(அப்பொழுது தோன்றின) உலகத்தில் (முறையே) अहंतां–"நான்" என்கிற எண்ணத்தையும் ममतां – "என்னுடையது" என்கிற எண்ணத்தையும் इदंतां – 'இது' என்கிற எண்ணத்தையும் न करोति– வைத்துக்கொள்வதில்லை हि–என்பது நிச்சயம். किं तु– ஆனால் स्वयं – (அவைகளுக்கு ஸம்பந்தமன்னியில்) தானாகமாத்திரம் जागरेण – விழிப்புடன் तिष्ठति – இருந்து விடுகிறான்.

ஸ்வப்னத்தில் தன்னையே பசுவாக பார்த்தவன் விழித்துக் கொண்ட பிறகு அதை நினைத்துக்கொண்டு புல்லைத்தின்பதில்லை. தான் பசு என எண்ணி மனிதனுக்குள்ள நியமத்தைக் கைவிடுவதில்லை. (457)



न तस्य मिथ्यार्थसमर्थनेच्छा न संग्रहस्तज्जगतोऽपि दृष्टः ।
तत्रानुवृत्तिर्यदि चेन्मृषार्थे न निद्रया मुक्त इतीष्यते ध्रुवम् ॥४५८॥

तस्य (ஸ்வப்னம் கண்டு விழித்துக்கொண்ட) அவனுக்கு मिथ्यार्थ समर्थनेच्छा – (ஸ்வப்னகாலத்தில் தோன்றின) பொய்யான பதார்த்தம் வாஸ்தவம் தான் என்று உறுதிப்படுத்த (அது வேண்டுமென்ற) விருப்பம் न–இருப்பதில்லை तत् जगतः – (ஸ்வப்னத்தில் கண்ட) அந்த ஜகத்தை संग्रहः–நன்கு ஏற்றுக்கொள்வதும் अपि– கூட न दृष्टः–பார்க்கப்படுகிறதில்லை तत्र-அந்த मृषार्थे– பொய்யான வஸ்துவில் अनुवृत्तिः–தொடர்ந்து மனவின் விருத்தி यदि चेत्–இருக்குமேயானால் (அவன்) निद्रया– நித்திரையினால் न मुक्तः–விடுபட்டவன் இல்லை इति–என்று इष्यते–நினைக்கப்படுவான் என்பது ध्रुवम्–நிச்சயம். (458)

तद्वत् परे ब्रह्मणि वर्तमानः सदात्मना तिष्ठति नान्यदीक्षते ।
स्मृतिर्यथा स्वप्नविलोकितार्थे तथा विदः प्राशनमोचनादौ । ४५९ ॥

तद्वत् – (தூங்கி விழித்துக்கொண்ட) அவனைப் போலவே परे மேலான ब्रह्मणि ப்ரஹ்மத்தில் वर्तमानः– இருப்பவன் सत् आत्मना–(என்றைக்கும் பாதிக்கப்படாத) ஸத் ஸ்வரூபமாகவே तिष्ठति–இருக்கிறான். अन्यत्–வேறு எதையும் न ईक्षते – (இல்லாததால்) பார்க்கிறதில்லை. (விழித்துக்கொண்டவனுக்கு) स्वप्नविलोकितार्थे-ஸ்வப்னத்தில் காணப்பட்ட வஸ்துக்கள் விஷயத்தில் स्मृतिः– ஞாபகம் மாத்திரம் यथा–எப்படியிருக்குமோ तथा–அப்படி विदः ஞானிக்கு प्राशनमोचनादौ – பிக்ஷை யருந்துவது, ஜலமலமோசனம் செய்வது முதலிய கார்யங்களில் (ஞாபகம் இருக்கும்.)

ப்ரஹ்மவித்தும் மற்றவர்களைப்போல் ஆஹாரம் உண்பது, மலஜல விஸர்ஜனம் செய்வது முதலிய காரியங்களைச்செய்கிறானே இது எப்படி என்ற கேள்விக்கு பதில் கூறுகிறார். எப்பொழுதும் சரீரம் தான் இந்தக் காரியங்களைச் செய்கிறது,

ஆனால் முன்னால் சரீரத்தில் நான் என்ற எண்ணம் இருந்ததால் தானே அந்தக்காரியங்களைச் செய்வதாக எண்ணினான். இப்பொழுது தன்னுடைய வாஸ்தவமான பிரம்ம ஸ்வரூபத்தை யறிந்து சரீரத்தில் நான் என்ற எண்ணம் நீங்கிவிட்டபடியால் விழித்தான தசையில் தன்னைக்காட்டிலும் வேறான சரீரம் ஆஹாராதி காரியங்களைச் செய்வதாகத்தான் தோன்றும். நான் செய்வதாகத் தோன்றாது. மேலும் பிரபஞ்சம் பொய் என்ற உறுதி ஏற்பட்டு விட்டபடியால் இவை தோன்றினாலும் இதில் உண்மை என்ற எண்ணம் இருக்காது. விழித்துக் கொண்ட பிறகு தான் ஸ்வப்னத்தில் புலியைக்கண்டது ஞாபகத்திற்கு வந்தாலும் அதை 'உண்மையென்று நினைப்பதில்லை. இதுபோல. (459)

(அ) ஞானிக்கு பிராரப்தம் உண்டுதான் என்று வைத்துக் கொண்டாலும், கர்மா செய்தவனுக்குத்தான் பலன் ஏற்படுவது நியாயம். கர்மாவை செய்தது தேஹமேயானதினால், அந்த தேஹத்திற்கு பிராரப்த கர்மாவினால் ஏற்படும் அனுபவமிருக்கட்டும். ஆத்மா ஒருநாளும் கர்மாவைச் செய்கிறவனில்லை, அதினால் கர்மபலனை அனுபவிக்க அவசியமுமில்லை. தேஹத்தில் 'நான்' என்ற எண்ணமுள்ளவனுக்குத் தான் அந்த அனுபவம் ஏற்படுமே தவிர, அவ்வெண்ணம் நீங்கி பிரஹ்ம ஞானியாயிருப்பவனுக்கு அவ்வனுபவம் ஏற்பட நியாயமேயில்லை, என்கிறார்:—

कर्मणा निर्मितो देहः प्रारब्धं तस्य कल्प्यताम् ।
अनादेरात्मनो युक्तं नैवात्मा कर्मनिर्मितः ॥ ४६० ॥

कर्मणा-(முன் செய்த) கர்மாவினால் निर्मितः ஏற்பட்டது देहः-சரீரம். तस्य-அதற்கு (சரீரத்திற்கு வேண்டுமானால்) प्रारब्धं பிராரப்தம் कल्प्यतां-கல்பிக்கப்படட்டும். अनादेः-ஆதியில்லாத आत्मनः-ஆத்மாவிற்கு (பிராரப்தத்தை கல்பிப்பது) न युक्तं-நியாயமில்லை. आत्मा-ஆத்மா कर्मनिर्मितः-கர்மத்தினால் ஏற்பட்டது न एव - இல்லவேயில்லை. (460)

अजो नित्यः इति ब्रूते श्रुतिरेषा त्वमोघवाक् ।
तदात्मना तिष्ठतोऽस्य कुतः प्रारब्धकल्पना ॥ ४६१ ॥



अमोघवाक्-வீண்போகாத (ஸத்யமாயுள்ள) வாக்கையுடைய एषा-இந்த श्रुतिः (கடோபநிஷத்தாகிய) வேதம் 'अजः नित्यः-பிறப்பற்றவன், என்றுமிருப்பவன்' इति ब्रु- என்றல்லவா ब्रूते - சொல்கிறது तदात्मना - அந்த (வாஸ்தவமான) ஸ்வரூபத்துடன் तिष्ठतः-இருக்கிற अस्य-இவனுக்கு (ஞானிக்கு) प्रारब्ध कल्पना - பிராரப்தத்தை கல்பிப்பது कुतः-எப்படி நியாயமாகும்? (461)

प्रारब्धं सिध्यति तदा यदा देहात्मना स्थितिः ।
देहात्मभावो नैवेष्टः प्रारब्धं त्यज्यतामतः ॥ ४६२ ॥

यदा-எப்பொழுது देहात्मना-தேஹமே 'நான்' என்ற स्थितिः - நிலை இருக்குமோ तदा-அப்பொழுது (தான்) प्रारब्धं-பிராரப்தம் என்பது सिध्यति-இருக்கமுடியும். (ஞானிக்கோ) देहात्मभावः-தேஹத்தில் 'நான்' என்ற எண்ணம் न एव इष्टः-அங்கீகரிக்கப்படுவதில்லை. अतः-ஆகையால் (அவனுக்கு) प्रारब्धं பிராரப்தம் உண்டு என்பது त्यज्यतां-விட்டுவிடவேண்டியதே. (462)

(அ) முன்னால் 460-வது ச்லோகத்தில் பிராரப்தம் சரீரத்திற்கு வேண்டுமானால் இருப்பதாக கல்பிக்கலாமென்று சொல்லப்பட்டது. வாஸ்தவத்தில் பிரஹ்மத்திற்கு வேறாக எவ்வித பதார்த்தமும் கிடையாததினால், சரீரமும் வாஸ்தவமில்லாததுதானே? அதற்கும் தான் பிராரப்தம் உண்டென்று எப்படி கல்பிக்க முடியும்? அப்படி கல்பனை செய்தால் அதுவும் ப்ராந்தியினால் தான், என்கிறார்:—

शरीरस्यापि प्रारब्धकल्पना भ्रान्तिरेव हि ।
अध्यस्तस्य कुतः सत्त्वं असत्त्वस्य कुतो जनिः ।
अजातस्य कुतो नाशः प्रारब्धं असतः कुतः ॥ ४६३ ॥

शरीरस्य - சரீரத்திற்கு अपि - கூட प्रारब्धकल्पना- பிராரப்தம் உண்டென்று கல்பிப்பது भ्रान्तिः एव हि- பிராந்தியே தான். अध्यस्तस्य-அத்யாஸத்தினால் ஏற்பட்ட

தற்கு सत्त्वं-இருக்கும் தன்மை कुतः-ஏது? असत्त्वस्य-இருக்கும் தன்மையற்றதற்கு जनिः-உத்பத்தி कुतः-ஏது? अजातस्य-உத்பத்தியில்லாததற்கு नाशः-நாசம் कुतः-ஏது? असतः வாஸ்தவமில்லாததற்கு प्रारब्धं-பிராரப்தம் कुतः-எங்கிருந்து வரும்? (463)

(அ) ஞானிக்கும் சரீரம் இருப்பதைப் பார்த்து இது எப்படி இருக்கமுடியும் என்று கேட்கும் ஸாமான்ய ஜனங்களுக்கு ஸமாதானம் ஏற்படுவதற்காகத்தான் உபநிஷத்தும், பிரஹ்மஸூத்ரமும் ஞானிக்கு பிராரப்தம் உண்டு என்று சொல்கிறதே தவிர வேறில்லை என்று கூறுகிறார்:—

ज्ञानेनाज्ञानकार्यस्य समूलस्य लयो यदि ।
तिष्ठत्ययं कथं देहः इति शङ्कावतो जडान् ।
समाधातुं बाह्यदृष्ट्या प्रारब्धं वदति श्रुतिः ॥ ४६४ ॥

ज्ञानेन-ஞானத்தினால் समूलस्य-வேருள்பட (காரணமான அக்ஞான முள்பட) अज्ञानकार्यस्य-அக்ஞானத்தினால் ஏற்பட்டவைகளுக்கெல்லாம் (வெளியில் உள்ள ஆகாசம் முதலியவற்றிற்கும் உள்ளுள்ள அஹங்காரம் முதல் தேஹம் வரையுள்ளவற்றிற்கும்) लयः-லயம் यदि-ஏற்படுமானால், अयं-இந்த देहः-(பாஞ்சபௌதிகமான) சரீரம் कथं-எப்படி तिष्ठति-(நாசமடையாமல்) இருந்து வருகிறது? इति-என்று शङ्कावतः-ஸந்தேகப்படுகிற जडान्-அறிவில்லாதவர்களை समाधातुं-ஸமாதானம் செய்வதற்காக बाह्यदृष्ट्या-(அவர்களுக்கு ஸஹஜமான) வெளிப் பார்வை முறையில் प्रारब्धं-பிராரப்தம (உண்டென்று) श्रुतिः-(तस्य तावदेव चिरं என்ற) உபநிஷத் वदति-சொல்கிறது. (464)

(அ) இவ்விதம் சொல்வதினால் தேஹம் வாஸ்தவமாக இருக்கிறதென்று ஆகாது என்கிறார்:—

न तु देहादिसत्यत्वबोधनाय विपश्चिताम् ।
यतः श्रुतेरभिप्रायः परमार्थैकगोचरः ॥ ४६५ ॥



श्रुतेः-வேதத்தினுடைய अभिप्रायः-தாத்பர்யம் परमार्थैकगोचरः-வாஸ்தவமாகவிருக்கும் பதார்த்தம் ஒன்றையே விஷயமாகவுடையது यतः-என்ற காரணத்தினால், (வேதம் மேலேகண்டபடி பிராரப்தம் உண்டென்று சொன்னது) विपश्चितां ஞானிகளுடைய (அல்லது ஞானிகளுக்கு) देहादि सत्यत्वबोधनाय-தேஹம் முதலானதிற்கு ஸத்யமாயிருக்கும் தன்மையுண்டென்று போதிப்பதற்காக न तु-இல்லவேயில்லை.

ஞானிக்கு ஞானத்தால் அக்ஞானம் நீங்கியபிறகு சரீரம் மட்டும் எப்படி மிஞ்சியிருக்கமுடியும்? எல்லாவற்றிற்கும் அக்ஞானம் தான் காரணம் என்ற ஸித்தாந்தத்தில் சரீரத்திற்கும் அக்ஞானம் தான் உபாதானகாரணம். காரணமான அக்ஞானம் நீங்கிய பிறகு காரியமான சரீரம் எப்படியிருக்க முடியும் என்று கேட்கிறார்கள். தார்கிகன் இம்மாதிரி கேள்வி கேட்கமுடியாது. யுக்திகளைக் கையாள்வதில் மிகத் திறமையுள்ள தார்கிகன் காரணம் நீங்கியபிறகும் காரியம் இருக்கும் எனபதை ஒப்புக்கொண்டிருக்கிறான். அதாவது உபாதான காரணம் அழிந்தபின் அடுத்த க்ஷணத்தில்தான் காரியநாசம் என்பது அவன் கொள்கை. முததின க்ஷணத்தில் உபாதான காரணமான தந்துவிற்கு நாசம், உபாதானமில்லாமல் ஒரு க்ஷணம் இருந்து அடுத்த க்ஷணத்தில் துணிக்கு நாசம். இதுபோல் உபாதானமான அக்ஞானம் நீங்கிய பிறகும் காரியமான சரீரம் உள்ளது என்று அத்வைதிகள் சொல்வதில் என்ன தவறு? சில தினங்களே இருக்கக்கூடிய தந்து முதலான காரணம் நீங்கியபிறகு ஒரு க்ஷணம் துணி முதலான காரியம் இருப்பதாகச் சொலகிறார்கள். எண்ணற்ற கல்பங்களாக இருந்துவரும் அக்ஞானம் நீங்கியபிறகு இதற்குத்தக்கபடி சிலகாலம் சரீரம் இருப்பதாகச்சொல்வதில் தவறிலலை. யுக்திக்கு விரோதமிலலை என்று காட்டுவதற்காக இம்மாதிரி சொல்லப்பட்டதே தவிர வாஸ்தவத்தில மந்தபுத்திகளுக்காகத் தான் பிராரப்தம் உண்டு என்று சுருதி கூறுகிறது பிராரப்தமோ இதன் காரியமான சரீரமோ வாஸ்தவம் என்பதில் தாத்பர்யமில்லை பரமார்த்தமான ப்ரஹ்மம் தவிர மற்றது எல்லாம் பொய் என்பதுதான் சுருதியின கருத்து. அக்ஞானிகள்தான் ஜீவன்முக்தனின் சரீரத்தை உண்மையென்று கருதுவார்களே தவிர ஞானிகள் பொய்யாகத்தான் நினைப்பார்கள். (465)

## 39. பரதத்வம்

(அ) அப்படியானால் வேதத்தின் வாஸ்தவமான தாத்பார்யம் என்ன? என்ற கேள்விக்கு வேதவாக்கியங்களையே அனுஸரித்து 7 சுலோகங்களால் பதில் சொல்கிறார்:—

परिपूर्णमनाद्यन्तमप्रमेयमविक्रियम् ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किंचन ॥ ४६६ ॥

परिपूर्णं - எங்கும் நிறைந்தது. अनाद्यन्तं - ஆதியும் அந்தமும் அற்றது. अप्रमेयं - ஒரு பிரமாணத்திற்கும் விஷயமாகாதது. अविक्रियं - எவ்வித விகாரமுமற்றது. एकं-(தனக்குள் வேறுபாடு யாதொன்றுமில்லாமல்) ஒன்றாகவேயிருப்பது, एव-(தன்னைப்போல் வேறு எதுவு மற்றதாய்) தனித்திருப்பது, अद्वयं-(தனக்கு மாறான லக்ஷணத்துடனும் வேறு எதுவும் இல்லாமல்) இரண்டாவதற்றது,. ब्रह्म-பிரஹ்மம். इह-இதில் (பிரஹ்மத்தனிடத்தில்) किञ्चन-கொஞ்சமேனும் नाना-வேற்றுமை न अस्ति-கிடையாது. (एकं एव अद्वयं-என்ற மூன்று பதங்கள் முறையே ஸ்வகதபேதம், ஸஜாதீயபேதம், விஜாதீய பேதம் இம்மூன்று பேதங்களும் அற்றது என்பதை குறிக்கின்றன.) (466)

सद्घनं चिद्घनं नित्यमानन्दघनमक्रियम् ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किञ्चन ॥ ४६७ ॥

सत् घनं-இருப்பு என்பதே ஸ்வரூபம், चित् घनं-ஞானமே ஸ்வரூபம், नित्यं-எப்பொழுதும் आनन्दघनं-ஆனந்தமே ஸ்வரூபம். अक्रियं-எவ்வித கிரியையுமில்லாதது. एकं-ஒன்றாகவே एव-தனித்து अद्वयं-இரண்டாவதற்றதாயிருப்பது ब्रह्म-பிரஹ்மம். इह-இதில் किञ्चन-கொஞ்சமேனும் नाना-வேற்றுமை न अस्ति-கிடையாது. (467)

प्रत्यगेकरसं पूर्णमनन्तं सर्वतोमुखम् ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किञ्चन ॥ ४६८ ॥



प्रत्यक्-எல்லாவற்றிற்கும் உள்ளேயிருப்பது, एकरसं-(மாறுதலின்றி) ஒரேவிதமாயிருப்பது, पूर्णं-நிறைந்தது अनन्तं-எல்லையற்றது, सर्वतोमुखं-எல்லா பக்கத்திலும் பார்வையுள்ளது. एकं-ஒன்றாக एव-தனித்து अद्वयं-இரண்டாவதற்றது, ब्रह्म-பிரஹ்மம். इह-இதில் किञ्चन-கொஞ்சமேனும் नाना-வேற்றுமை न अस्ति-கிடையாது.

अहेयमनुपादेयमनाधेयमनाश्रयम् ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किञ्चन ॥ ४६९ ॥

अहेयं - (தானாகவேயிருப்பதால், அல்லது, எவ்வித தோஷமுமில்லாததினால்) தள்ளக்கூடியதில்லை. अनुपादेयं-(தானாகவேயிருப்பதால், அல்லது, எவ்வித்குணமுமில்லாததினால்) எடுத்துக் கொள்ளக்கூடியதுமில்லை. अनाधेयं-(உலகம் மித்யையானதினால்) தன்னிடத்தில் எதுவும் வைக்கப்படாதது, अनाश्रयं-தனக்கு ஆதாரமாக வேறு எதுவுமில்லாதது. एकं-ஒன்றாகவே एव-தனித்து अद्वयं-இரண்டாவதற்று இருப்பது ब्रह्म பிரஹ்மம். इह-இதில் किञ्चन-கொஞ்சமேனும் नाना-வேற்றுமை न अस्ति-கிடையாது. (469)

निर्गुणं निष्कलं सूक्ष्मं निर्विकल्पं निरञ्जनम् ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किञ्चन ॥ ४७० ॥

निर्गुणं-குணமற்றதாய், निष्कलं-அவயவங்களற்றதாய் सूक्ष्मं-ஸூக்ஷ்மமாய், निर्विकल्पं-விகல்பமற்றதாய், निरञ्जनं-எவ்வித தோஷமுமற்றதாய், एकं - ஒன்றாகவே एव-தனித்து अद्वयं - இரண்டாவதற்றதாயுள்ளது ब्रह्म - பிரஹ்மம். इह - இதனிடத்தில் किञ्चन्-கொஞ்சமேனும் नाना-வேற்றுமை न अस्ति-கிடையாது. (470)

अनिरूप्यस्वरूपं यन्मनोवाचामगोचरम् ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किञ्चन ॥ ४७१ ॥

यत्-எது मनोवाचां-மனோவிருத்திகளுக்கோ, வாக்குகளுக்கோ अगोचरं-விஷயமாகாததாயும் (அதனால்) अनिरूप्यस्वरूपं-இன்னதென்று நிருபணம் செய்யமுடியாத ஸ்வரூபத்தையுடையதாயும் (தன் அனுபவம் ஒன்றினாலேயே அறியக்கூடியதாயும்) एकं-ஒன்றாகவே एव-தனித்து अद्वयं இரண்டற்றதாயும் இருக்கிறதோ (அது) ब्रह्म-பிரஹ்மம் इह-இதனிடத்தில் किञ्चन-கொஞ்சமேனும் नाना-வேற்றுமை न अस्ति-கிடையாது. (471)

सत्समृद्धं स्वतःसिद्धं शुद्धं बुद्धमनीदृशम् ।
एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किञ्चन ॥ ४७२ ॥

सत्-(ஒரு காலத்திலும் பாதிக்கப்படாமல்) எப்பொழுதுமிருப்பதாய் समृद्धं பூர்ணமாய் स्वतः-தானே (எவ்வித பிரமாணத்தையும் அபேக்ஷிக்காமல்) सिद्धं-நிலைத்திருப்பதாய், शुद्धं சுத்தமாய் बुद्धं-ஞானஸ்வரூபமாய் अनीदृशं-இவ்விதமென்று சொல்லமுடியாததாய் एकं ஒன்றாகவே एव-தனித்து अद्वयं-இரண்டாவதற்றதாயுள்ளது ब्रह्म-பிரஹ்மம் इह-இதனிடத்தில் किञ्चन-கொஞ்சமேனும் नाना-வேற்றுமை न अस्ति-கிடையாது.

(அ) இவ்விதமாக உபநிஷத்திலுள்ள வார்த்தைகளையோ அல்லது அவைகளின் தாத்பர்யத்தை குறிக்கும் வேறு வார்த்தைகளையோ உபயோகித்து முதல் இரண்டு பாதங்களிலும், சாந்தோக்ய உபநிஷத்திலுள்ள एकमेवाद्वितीयं என்பதை கொஞ்சம் மாற்றி மூன்றாவது பாதத்திலும் பிருஹதாரண்யக உபநிஷத்திலுள்ளதும் கடோபநிஷத்தில் உள்ளதுமான नेह नानाऽस्ति किञ्चन என்பதை அப்படியே நான்காவது பாதத்திலும், அமைத்து 7 சுலோகங்களால் பிரஹ்மதத்வத்தை விளக்கிவிட்டு அதையறியக்கூடியவர்கள் யாரென்று சொல்கிறார்:—

निरस्तरागा निरपास्तभोगाः शान्ताः सुदान्ता यतयो महान्तः ।
विज्ञाय तत्त्वं परमेतदन्ते प्राप्ताः परां निर्वृतिमात्मयोगात् ॥ ४७३ ॥



निरस्तरागाः-பாக்கியன்னியில் ஆசையை விட்டவர்களாய் (ஆசை இல்லாததால்) निरपास्तभोगाः-பாக்கியன்னியில் எவ்வித போகத்தையும் விட்டவர்களாய் (கிடைத்ததில் திருப்தியடைபவர்களாய் அல்லது குளிர் உஷ்ணம் முதலான த்வந்த்வங்களை பொறுத்துக் கொள்பவர்களாய்) शान्ताः-மனஸ் அடங்கினவர்களாய் सुदान्ताः-நன்கு இந்திரியங்களை நிக்கிரஹம் செய்தவர்களாய் यतयः-(மோக்ஷமார்க்கத்தில் தீவிரமாக) பிரயத்தினம் செய்பவர்களாய் உள்ள महान्तः-பெரியோர்கள் (மனதை அடக்காதவர்களுக்கு மனம் இந்திரியங்கள் மூலம் வெளியில் போய் அந்தந்த விஷயமாக மாறும் பொழுது அதனுடன் சேர்ந்த ஜீவனும் அல்பனாகி விடுகிறான் மனதை அடக்கியவர்கள் மஹான்கள்) एतत्-இந்த परं-உத்கிருஷ்டமான तत्त्वं-தத்வத்தை विज्ञाय-நன்கு அறிந்து अन्ते-கடைசியில் (ஞானம் ஏற்பட்ட பிறகு அல்லது பிராரப்தம் முடிந்து சரீரம் விலகின பிறகு) आत्मयोगात्-ஆத்மாவிலேயே மனதை ஈடுபடுத்தியிருந்ததினால் परां-உத்தமமான निर्वृतिं-ஆனந்தத்தை (மோக்ஷத்தை) प्राप्ताः-அடைந்திருக்கிறார்கள். (473)

## 40. குருவின் ஆசீர்வாதம்

(அ) ஸம்ஸாரக்கடலைக் கடப்பதற்கு பெரியோர்கள் சென்ற வழியை உனக்குக்கூறுகிறேன் (சு. 45) என்று ஆரம்பித்து இதுவரை மார்க்கத்தை விரிவாக உபதேசித்து அதேமாதிரி நீயும் பிரயத்தினம் செய்து தத்வ ஸாக்ஷாத்காரமடைந்து முக்தியடையவேண்டுமென்று ஆசீர்வதிக்கிறார்:—

भवानपीदं परतत्त्वमात्मनः स्वरूपमानन्दघनं निचाय्य ।
विधूय मोहं स्वमनःप्रकल्पितं मुक्तः कृतार्थो भवतु प्रबुद्धः ॥ ४७४ ॥

भवान् अपि-நீரும் கூட आत्मनः-தன்னுடைய स्वरूपं-ஸ்வரூபமாகிய आनन्दघनं-ஆனந்த ஸ்வரூபமான इदं-இந்த परतत्त्वं-உத்தமமான தத்வத்தை निचाय्य-

ஸாக்ஷாத்காரம் செய்து स्वमनः प्रकल्पितं-தன் மனஸினுல் கல்பிக்கப்பட்டிருக்கிற मोहं-(அனுத்மாக்களில் ஆத்மா என்ற) பிராந்தியை विधूय-நன்கு உதறித்தள்ளிவிட்டு मुक्तः-ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட்டவராய் प्रबुद्धः-(அக்ஞானமாகிற தூக்கத்திலிருந்து) நன்கு விழித்துக் கொண்டவராய் कृतार्थः-பரமபுருஷார்த்தத்தை யடைந்த வராய் भवतु-ஏற்படுவீராக! (474)

(அ) இவ்விதநிலை ஏற்படுவதற்கு நிர்விகல்பக ஸமாதி தான் ஸாதனமென்று முன் 367வது சுலோகத்தில் சொன்னபடி இங்கு மறுபடியும் ஞாபகப்படுத்துகிருர் :—

समाधिना साधु सुनिश्चलात्मना पश्यात्मतत्त्वं स्फुटबोधचक्षुषा ।
निःसंशयं सम्यगवेक्षितश्चेच्छ्रुतः पदार्थो न पुनर्विकल्पते ॥ ४७५ ॥

सुनिश्चल आत्मना-நன்கு அசைவற்ற மனதுடன் கூடிய தான समाधिना-ஸமாதியினுல் स्फुटबोधचक्षुषा-தெளி வடைந்த ஞானமாகிற கண்ணுல் आत्मतत्त्वं-ஆத்மாவி னுடைய வாஸ்தவஸ்வருபத்தை साधु-நன்ருக पश्य-பாரும். श्रुतः-(குருவினுல் உபதேசிக்கப்பட்டு) கேட்கப் பட்டிருக்கும் पदार्थः-விஷயம் (ஆத்மதத்வம்) निस्संशयं-எவ்வித ஸந்தேஹமுமன்னியில் सम्यक्-நன்ருக अवेक्षितः चेत्-ஸாக்ஷாத்காரம் செய்யப்பட்டு விட்டதேயானுல் पुनः-மறுபடியும் न विकल्पते-(அப்படியோ இப்படியோ என்றே வேறுவிதமாகவோ) வாஸ்தவத்திற்கு மாறுத லாகத் தோன்ருது. (475)

(அ) இவ்வித ஞானமேற்படுவதற்கு சாஸ்திரம், யுக்தி, குருவின் உபதேசம் இவை மிகவும் அவசியமென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனுல் இவைகளால் ஏற்படும் ஞானம் பரோக்ஷமாயிருக்குமே தவிர, அபரோக்ஷமாய் நேரில் அனுப விப்பதற்கு மேல்கண்டபடி நிர்விகல்ப ஸமாதிவரையிலுள்ள சிஷ்யனுடைய பிரயத்தினம் இல்லாமலிருந்தால் ஸாத்தியப் படாது என்பதை வற்புறுத்துகிருர் :—



स्वस्याविद्याबन्धसंबन्धमोक्षात्सत्यज्ञानानन्दरूपात्मलब्धौ ।
शास्त्रं युक्तिर्देशिकोक्तिः प्रमाणं चान्तःसिद्धा स्वानुभूतिः प्रमाणम् ॥

स्वस्य-தனக்கு अविद्याबन्धसंबन्धमोक्षात् அக்ஞானமாகிற கட்டின் ஸம்பந்தத்திலிருந்து விடுபடுவது மூலமாய் सत्यज्ञानानन्दरूपात्मलब्धौ-எப்பொழுதும் இருப்பதாய் ஞான ஸ்வருபமாய் ஆனந்தஸ்வருபமாயுள்ள ஆத்மாவை அடைகிற விஷயத்தில் (ஸாக்ஷாத்காரம செய்வதற்கு) प्रमाणं-பிரமாணமாயிருப்பது शास्त्रं-வேதவாக்கியம் युक्तिः-(அதையனுஸரித்த) யுக்தி देशिकोक्तिः-குருநாதருடைய உபதேசம். च-அவைகளுடன் अन्तः सिद्धा-தனக் குள்ளேயே ஸ்திரமாய் ஏற்பட்டிருக்கும் स्वानुभूतिः-(சாஸ்திரம, யுக்தி, உபதேசம் இவைகளையொட்டி ஏற்படும்) தன்னுடைய அனுபவமும் प्रमाणम्-பிரமாணம்.

(அ) தனக்கிருந்துவரும் அக்ஞானம் நிவிருத்தியாக வேண்டுமானுல் தானேதான் அதைப் போக்கடிக்கக்கூடிய அபரோக்ஷ ஞானத்தை ஸம்பாதிக்கவேண்டும். பிறருடைய ஞானமோ; பரோக்ஷஞானமோ போக்காது என்று ஆரம்பத் துலேயே 58 முதல் 68 முடிய சுலோகங்களில் வற்புறுத்தி யிருப்பதை இங்கேயும் ஞாபகப்படுத்தி ஸ்வானுபவம் வேண்டு மென்று சொல்கிருர் :—

बन्धो मोक्षश्च तृप्तिश्च चिन्तारोग्यक्षुधादयः ।
स्वेनैव वेद्या यज्ज्ञानं परेषामानुमानिकम् ॥ ४७७ ॥

बन्धः-(அறியாமையினுல் ஏற்படும்) பந்தம். मोक्षः च-(அந்த பந்தத்திலிருந்து) விடுபட்டிருத்தல் तृप्तिः च-(போதும் என்ற) திருப்தி चिन्ता-கவலை आरोग्य-ஆரோக்யத்துடனிருப்பது क्षुधा-பசி आदयः-(தாஹம் வியாதி) முதலியவைகள் எலலாம स्वेन एव-தன்னுலேயே தான் वेद्याः-அறியத்தக்கவைகள். यत्-ஏனென்ருல் परेषां-மற்றவர்களுக்கு (இவைவிஷயமாயேற்படும்) ज्ञानं-ஞானமானது आनुमानिकम्-அனுமானத்தினுல் மாத்திரம் ஏற்படுமே தவிர (நேரில் அனுபவிக்கமுடியாது) (477)

तटस्थिता बोधयन्ति गुरवः श्रुतयो यथा ।
प्रज्ञयैव तरेद्विद्वानीश्वरानुगृहीतया ॥ ४७८ ॥

गुरवः-ஆசார்யர்களும் श्रुतयः-வேதங்களும் तटस्थिताः-கரையில் இருப்பவர்களாக यथा-எவ்விதம் बोधयन्ति-அறிவூட்டுகிறார்களோ (அதை யனுஸரித்து) ईश्वरानुगृहीतया-பகவானால் அனுக்ரஹிக்கப்பட்டிருக்கும் प्रज्ञया-அறிவினால் (ஸாக்ஷாத்காரத்தினால்) एव-தான் विद्वान्-வித்வானாயிருப்பவர் तरेत् (ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தை) தாண்ட வேண்டும். (478)

(அ) கரையில் நிற்கிறவர்கள் பிரவாஹத்திலுள்ள படகை இப்படி ஓட்டு, அப்படி ஓட்டு என்றோ, பிரவாஹத்தில் தத்தளிக்கும் மனிதனை இப்படி நீந்திவா, அப்படி நீந்திவா என்றோ, சொல்லி எப்படி கரைசேரும்படிச் செய்வார்களோ அதேமாதிரிதான் சாஸ்திரமும் குருவும் உதவுவார்கள். படகை ஓட்டுவதோ, நீந்திவருவதோ, கரையையடையவேண்டும் என்ற ஆவலுள்ளவனால் செய்யவேண்டிய பிரயத்தனமே யாகும். இவனால எவ்வளவு பிரயத்தனம் செய்தாலும் அது நன்கு பிரயோஜனப்படவேண்டுமானால் ஈசுவரனுடைய பிரஸாதம் இருக்கவேண்டுமென்று வேது சுலோகத்திலேயே சொன்னதை இந்த சுலோகத்திலும் ஞாபகப்படுத்துகிறார். இந்த அனுபவம் ஏற்பட்ட பிறகு செய்யவேண்டியகார்யம் ஒன்றும் இல்லையென்று சொல்லி, குருவானவர் தன் உபதேசத்தை முடிக்கிறார் :—

स्वानुभूत्या स्वयं ज्ञात्वा स्वमात्मानमखण्डितम् ।
संसिद्धः सुसुखं तिष्ठेन्निर्विकल्पात्मनात्मनि ॥ ४७९ ॥

स्वं-தன் आत्मानं-ஆத்மாவை अखण्डितं-பரிபூர்ணமானது (துண்டுபடாதது) என்று स्वानुभूत्या-தன் அனுபவத்தினால் स्वयं-தானே ज्ञात्वा-அறிந்துகொண்ட பிறகு संसिद्धः-நன்கு ஸித்தியடைந்தவனாய் (செய்யவேண்டியதையெல்லாம் பாக்கியன்னியில் செய்து முடித்தவனாய்) निर्विकल्पात्मना-விகல்பமற்ற ஸ்வரூபத்துடன் आत्मनि-தன்னிடத்திலேயே (ஆத்மதத்வநிலையில்) सुसुखं-நன்கு ஆனந்தமாய் तिष्ठेत्-நிலைத்திருக்க வேண்டும். (479)

वेदान्तसिद्धान्तनिरुक्तिरेषा ब्रह्मैव जीवः सकलं जगच्च ।
अखण्डरूपस्थितिरेव मोक्षो ब्रह्माद्वितीयं श्रुतयः प्रमाणम् ॥ ४८० ॥

वेदान्तसिद्धान्तनिरुक्तिः-உபநிஷத்துக்களினால் தீர்மானிக்கப்பட்டிருக்கிற விஷயத்தின் சுருக்கமான நிர்வசனம் एषा-இதுதான். (அதாவது) जीवः-ஜீவன் என்பது ब्रह्म एव-(வாஸ்தவஸ்வரூபத்தில்) பிரஹ்மமேதான். सकलं-எல்லா जगत् च-ஜகத்தும் (பிரஹ்மமேதான்). अखण्डरूपस्थितिः-துண்டுபடாத (பரிபூர்ணமான) ஸ்வருபத்திலேயே இருந்துவிடுவது एव-தான மோக்ஷ-மோக்ஷம் என்பது. ब्रह्म-பிரஹ்மம அத்விதீயம் இரண்டாவது அற்றது. (இவ்விஷயத்தில்) प्रमाणं-பிரமாணம் श्रुतयः-வேதவாக்கியங்களே.

உபநிஷத்துக்கள் பலவாக விரிந்துள்ளபோதிலும் எல்லா உபநிஷத்துக்களாலும் ஏற்படும் தத்வஞானம் ஒன்றேயான படியால் 'प्रमाणं' என்று ஒருமையில உபயோகபபடுத்தப் பட்டுள்ளது. (480)

## 41. சிஷ்யனின் அனுபவம்

(அ) இவ்விதம் குருவினிடமிருந்து உபதேசம் பெற்ற சிஷ்யன் அவர் சொன்னபடியே ஸாதனங்களையனுஷ்டித்து வந்து ஆத்மதத்வஞானம் ஏற்பட்டு அதிலேயே மனதை நிலைபெறச் செய்து ஏகாந்தமாக ஓரிடத்திலிருந்து நிர்விகல்பக ஸமாதி நிலையையடைந்தான் என்று ஆசார்யார் வர்ணிக்கிறார்

इति गुरुवचनाच्छ्रुतिप्रमाणात्परमवगम्य सतत्त्वमात्मयुक्त्या ।
प्रशमितकरणः समाहितात्मा क्वचिदचलाकृतिरात्मनिष्ठितोऽभूत् ॥

इति-இவ்விதமாக (இதுவரை சுருக்கமாகவும விரிவாகவும் சொல்லிக்கொண்டுவந்த ரீதியாக) गुरुवचनात्-

குருவின் உபதேசத்தினாலும் श्रुतिप्रमाणात् - வேதத்தின் பிரமாணத்தினாலும் आत्मयुक्त्या-தன்னுடைய யுக்தியினாலும் (அல்லது மனஸை பிரஹ்மததிலேயே வைதததினாலும்) परं-மேலான सतत्त्वं-தத்வத்தை (பிரஹ்மத்தை) अवगम्य-அறிந்துகொண்டு प्रशमितकरणः - இந்திரியங்களை நன்கு அடக்கினவராக समाहित आत्मा - ஒரே நிலையில் வைக்கப்பட்ட (ஸமாதிநிலையில் நிறுத்தின) மனஸுள்ளவராக अचलाकृतिः -மலைபோல் அசைக்கமுடியாதவராக क्वचित्-ஏதோ ஒரு இடத்தில் आत्मनिर्वृतः-ஆத்மநிஷ்டையடைந்தவராக अभूत्-இருந்துவந்தார்.

இங்கு வேதத்தை பிரமாணமாகக்கொண்ட ஆசார்ய உபதேசத்தால் என்றும், ஆசார்ய உபதேசத்தாலும் வேத பிரமாணத்தாலும் என்றும் இருவிதமாகப் பொருள் கூறலாம். 'आत्मयुक्त्या' என்பதற்கு குருமூலமாகவும் உபநிஷத்துகளாலும் அறியப்பட்ட விஷயத்தை சிந்திப்பதினால் என்று பொருள். அல்லது ஆத்மா என்ற சொல் மனதையும் யுக்தி என்ற பதம் யோகத்தை அதாவது அடக்கத்தையும் குறிக்கும். மனதை அடக்குவதால் புலன்கள் அடக்கப்பட்டது என்றும் பொருள் கூறலாம். மனதையும் புலன்களையும் அடக்குவதால் மட்டும் பிரயோஜனமில்லை என்பதால்தான் समाहितात्मा என்று மனதை ஆத்மாவில் நிலைநிறுத்தியவன் என்று கூறப்பட்டது.

(அ) கொஞ்சநாள் சென்று ஸமாதி கலைந்தவுடன் குருவிடம் வந்து தனக்கு ஏற்பட்டிருக்கும் அனுபவத்தையும் அவரிடம் தனக்குள்ள நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறார்:—

क्ञ्चित्कालं समाधाय परे ब्रह्मणि मानसम् ।
व्युत्थाय परमानन्दादिदं वचनमब्रवीत् ॥ ४८२ ॥

(அந்த சிஷ்யர்) कञ्चित्-சில कालं-காலம் परे-உத்தமமான ब्रह्मणि - பிரஹ்மத்தினிடத்தில் मानसम् - மனஸை समाधाय-நிலை நிறுத்திவிட்டு व्युत्थाय-எழுந்திருந்து परमानन्दात् - உத்கிருஷ்டமான ஆனந்தத்தின்பேரில் इदं - இந்த (இனி சொல்லப்போகிற वचनं - வார்த்தையை अब्रवीत्-சொன்னார். (482)



बुद्धिर्विनष्टा गलिता प्रवृत्तिर्ब्रह्मात्मनोरेकतयाधिगत्या ।
इदं न जानेऽप्यनिदं न जाने किं वा कियद्वा सुखमस्य पारम् ॥

ब्रह्मात्मनोः-பிரஹ்மத்தையும் ஆத்மாவையும் एकतया-ஒன்றுயிருக்கும் தன்மையுடன் अधिगत्या-அறிந்தமையால் बुद्धिः-(உபாதியாயுள்ள) புத்தி विनष्टा-நன்கு மறைந்துவிட்டது प्रवृत्तिः-(அதனால் ஏற்படும்) பிரவிருத்தியும் गलिता-நழுவி விட்டது इदं-இது (பிரத்யக்ஷம்) என்பதை न जाने-நான் அறியேன் अपि-அப்படியே अनिदं இது அல்லாதது (பிரத்யக்ஷமில்லாதது பரோக்ஷமாயிருப்பது) என்பதையும் न जाने-நான் அறியேன். सुखं ஆனந்தம் என்பதோ किं वा-अस्य-அந்த ஆனந்தத்தின் पारं-எல்லையென்பதோ என்ன என்பதையும் कियत् वा-எவ்வளவு என்பதையும் (நான் அறியேன்) (483)

वाचा वक्तुमशक्यमेव मनसा मन्तुं न वा शक्यते
स्वानन्दामृतपूरपूरितपरब्रह्माम्बुधेर्वैभवम् ।
अम्भोराशिविशीर्णवार्षिकशिलाभावं भजन्मे मनो
यस्यांशांशलवे विलीनमधुनानन्दात्मना निर्वृतम् ॥ ४८४ ॥

यस्य-எந்த ஆனந்தத்தின் अंश - அம்சத்தின் अंश-அம்சத்தின் लवे-திவலையில் विलीनं - நன்கு லயமடைந்திருக்கும் मे-என்னுடைய मनः - மனஸானது अधुना-இப்பொழுது अम्भोराशि-ஸமுத்திரத்தில் विशीर्ण-கரைந்துபோன वार्षिकशिला-ஆலங்கட்டியின் भावं-தன்மையை भजत्-அடைந்து आनन्दात्मना - ஆனந்த ஸ்வரூபமாகவே निर्वृतं-ஸுகமாக விருக்கிறதோ (அவ்வித) स्वानन्दामृत पूर पूरित-தன் ஆனந்தமாகிற அமிருத வெள்ளம் நிறைந்த परब्रह्माम्बुधेः - பரப்ரஹ்மமாகிற ஸமுத்திரத்தின் वैभवं-

பெருமையானது वाचा-வாக்கினால் वक्तुं-சொல்வதற்கு अशक्यं एव-சாத்தியமேயில்லை. मनसा वा மனதினாலும் मन्तुं-நினைத்துப்பார்க்க न शक्यते-முடியாது. (484)

क्व गतं केन वा नीतं कुत्र लीनमिदं जगत् ।
अधुनैव मया दृष्टं नास्ति किं महदद्भुतम् ॥ ४८५ ॥

इदं-இந்த जगत् உலகம் क्व-எங்கே गतं-போய் விட்டது? केन वा-யாரால் தான் नीतं-கொண்டுபோகப் பட்டது? कुत्र-எங்கே लीनं-மறைந்துவிட்டது? अधुना एव-இப்பொழுது தான் मया-என்னால் दृष्टं-பார்க்கப் பட்டது न अस्ति-காணவில்லை. (இதைவிட) महत्-பெரிய अद्भुतं-ஆச்சர்யமானது किं-என்ன இருக்கிறது?

किं हेयं किमुपादेयं किमन्यत्किं विलक्षणम् ।
अखण्डानन्दपीयूषपूर्णे ब्रह्ममहार्णवे ॥ ४८६ ॥

अखण्डानन्द-பரிபூர்ணமான ஆனந்தமாகிற पीयूषपूर्णे-அமிருதம் நிறைந்த ब्रह्ममहार्णवे-பிரஹ்மமாகிற பெரிய ஸமுத்திரத்தில் किं-எது हेयं-தள்ளத்தகுந்தது? किं-எது उपादेयं-எடுத்துக் கொள்ளத்தகுந்தது? किं-எது अन्यत्-வேருயிருப்பது? किं-எது विलक्षणं-வேறு விலக்ஷணத்தையுடையது? (486)

न किंचिदत्र पश्यामि न शृणोमि न वेद्म्यहम् ।
स्वात्मनैव सदानन्दरूपेणास्मि विलक्षणः ॥ ४८७ ॥

अत्र-இங்கே किंचित्-எதையும் न पश्यामि-நான் பார்க்க வில்லை. न शृणोमि-நான் கேட்கவில்லை. अहं-நான் न वेद्मि-அறிவது இல்லை. सदानन्दरूपेण-ஸத்தாயும் ஆனந்தமாயும் உள்ள ஸ்வரூபத்தையுடைய स्वात्मना एव-என் ஆத்ம ஸ்வரூபமாகவே विलक्षणः-(ஐந்து கோசங் களுக்கும்) வேறுபட்டவனாக अस्मि-இருக்கிறேன். (487)



(அ) அத்வைத ஞானம் பூர்ணமாக ஏற்பட்டபோதிலும் குருவும் நானும் ஒன்றுதான் என்று எண்ணிவிடக்கூடாதென்ற நியாயத்தையனுசரித்து குருவை வணங்குகிறார் :—

नमो नमस्ते गुरवे महात्मने विमुक्तसङ्गाय सदुत्तमाय ।
नित्याद्वयानन्दरसस्वरूपिणे भूम्ने सदापारदयाम्बुधाम्ने ॥ ४८८ ॥

विमुक्तसङ्गाय-எவ்வித பற்றுதலிலிருந்தும் விடுபட்ட வராய் सदुत्तमाय-ஸாதுக்களுக்குள் (ஞானிகளுக்குள்) உத்தமராய் नित्याद्वयानन्द रस स्वरूपिणे-நித்யமாய் இரண்டற்றதாயுள்ள ஆனந்த ரஸத்தையே ஸ்வரூப மாக உடையவராய் भूम्ने-மிகப்பெரியவராய் (பிரஹ்மத் தைக் காட்டிலும் வேறு விஷயத்தைப்பற்றிய பார்வை கேள்வி முதலிய யாதொரு அறிவுமற்றவராய்) सदा-எப்பொழுதும் अपार दयाम्बु धाम्ने-எல்லையற்ற தயையாகிற ஜலத்திற்கு இருப்பிடமாய் (கடலாய்) உள்ள महात्मने-மஹாத்மாவான गुरवे-குருவாகிய ते-தங்களுக்கு नमः-நமஸ்காரம் नमः-நமஸ்காரம். (488)

यत्कटाक्षशशिसान्द्रचन्द्रिकापातधूतभवतापजश्रमः ।
प्राप्तवानहमखण्डवैभवानन्दमात्मपदमक्षयं क्षणात् ॥ ४८९ ॥

यत्कटाक्षशशिसान्द्रचन्द्रिका-எவருடைய கடைக்கண்ணாகிற சந்திரனுடைய நல்ல சந்திரிகை (நிலா) पातधूत-भवतापजश्रमः-விழுவதினால் போக்கடிக்கப்பட்ட ஸம்ஸார மாகிற வெப்பத்தால் ஏற்படும் சிரமத்தை உடையவனாய் अहं-நான் अखण्डवैभवानन्दं-பரிபூர்ணமான மேன்மை யுடைய ஆனந்தமாயும் अक्षयं-எப்பொழுதும் குறைவோ நாசமோ இல்லாததாயும் உள்ள आत्मपदं-ஆத்மதத்வ பதவியை क्षणात्-ஒரு க்ஷணத்தில் प्राप्तवान्-அடைந்து விட்டேனோ (அந்த குருவாகிய தங்களுக்கு நமஸ்காரம்).

धन्योऽहं कृतकृत्योऽहं विमुक्तोऽहं भवग्रहात् ।
नित्यानन्दस्वरूपोऽहं पूर्णोऽहं त्वदनुग्रहात् ॥ ४९० ॥

त्वदनुग्रहात् - தங்களுடைய அனுக்ரஹத்தினால் अहं-நான் धन्यः-பாக்கியசாலியானேன் अहं-நான் कृतकृत्यः-செய்ய வேண்டியதையெல்லாம் செய்தவனாக (இனி எதுவும் செய்யவேண்டியதில்லாதவனாக) ஆனேன். भवग्रहात् - ஸம்ஸாரமாகிற கிரஹத்திலிருந்து (அல்லது ஸம்ஸாரத்தின் பிடிப்பிலிருந்து) अहं-நான் विमुक्तः-நன்கு விடுபட்டவன் अहं-நான் नित्यानन्दस्वरूपः-நித்யமான ஆனந்தமே ஸ்வரூபமாயுள்ளவன் अहं-நான் पूर्णः-நிறைந்தவன் (எவ்வித குறைவுமற்றவன்) (490)

असङ्गोऽहमनङ्गोऽहमलिङ्गोऽहमभङ्गुरः ।
प्रशान्तोऽहमनन्तोऽहमतान्तोऽहं चिरंतनः ॥ ४९१ ॥

अहं-நான் असङ्गः-எவ்வித பற்றுமற்றவன் (சரீராதிகளில் 'நான்' என்றோ 'என்னுடையது' என்றோ எண்ணமில்லாதவன்), अहं-நான் अनङ्गः-அங்கமில்லாதவன் (ஸ்தூல சரீரம் விலகினவன்) अहं-நான் अलिङ्गः - அடையாளமில்லாதவன் (லிங்கம் என்கிற ஸூக்ஷ்ம சரீரம் விலகினவன்) अभङ्गुरः-நாசமடையும் தன்மையில்லாதவன் अहं-நான் प्रशान्तः-நன்கு அடங்கினவன் (எவ்வித விருத்தியுமற்றவன்) अहं-நான் अनन्तः-(தேசத்தினாலோ, காலத்தினாலோ, வஸ்துவினாலோ) எல்லையென்பது அற்றவன் अतान्तः-எவ்வித சிரமுமற்றவன் अहं-நான் चिरंतनः-வெகுகாலம் (நித்யமாய்) இருப்பவன். (491)

अकर्ताहमभोक्ताहमविकारोऽहमक्रियः ।
शुद्धबोधस्वरूपोऽहं केवलोऽहं सदाशिवः ॥ ४९२ ॥

अहं-நான் अकर्ता-எதையும் செய்யாதவன் (செய்கிறவன் இல்லை) अहं-நான் अभोक्ता-எதையும் அனுபவிக்காதவன் (அனுபவிப்பவன் இல்லை) अहं-நான் अविकारः-எவ்வித விகாரமும் (மாறுதலும்) இல்லாதவன் अक्रियः-எவ்வித கிரியையும் இல்லாதவன் अहं-நான் शुद्धबोधस्वरूपः-நிர்மலமான ஞானஸ்வரூபன் अहं-நான் केवलः-(எவ்வித சம்பந்தமும் இல்லாமல்) தனித்திருப்பவன் सदाशिवः-எப்பொழுதும் மங்கள ஸ்வரூபன். (492)



द्रष्टुः श्रोतुर्वक्तुः कर्तुर्भोक्तुर्विभिन्न एवाहम् ।
नित्यनिरन्तरनिष्क्रियनिःसीमासङ्गपूर्णबोधात्मा ॥ ४९३ ॥

द्रष्टुः - பார்க்கிறவனிலிருந்து श्रोतुः - கேட்கிறவனிலிருந்து वक्तुः-பேசுகிறவனிலிருந்து कर्तुः-செய்கிறவனிலிருந்து भोक्तुः - அனுபவிக்கிறவனிலிருந்து (உபாதி ஸம்பந்தததனால் இவ்விதமாயெல்லாம் இருக்கும் ஜீவனிலிருந்து) विभिन्नः-வேறுபட்டவன் एव-தான் अहं-நான். (நான்) नित्यनिरन्तर निष्क्रिय निस्सीम असङ्ग पूर्णबोध आत्मा-நித்யமாய் இடைவெளியற்றதாய் கிரியையற்றதாய் எல்லையில்லாததாய் பற்றற்றதாய் நிறைந்ததாய் ஞானமாய் இருக்கும் தன்மையுள்ளவன். (493)

नाहमिदं नाहमदोऽप्युभयोरवभासकं परं शुद्धम् ।
बाह्याभ्यन्तरशून्यं पूर्णं ब्रह्माद्वितीयमेवाहम् ॥ ४९४ ॥

अहं-நான் इदं-'இது' न-அல்ல अहं-நான் अदः अपि-'அது'வும் न-அல்ல. उभयोः-'அது' (பிரத்யக்ஷமில்லாதது) 'இது' (பிரத்யக்ஷமாயுள்ளது) இரண்டையும் अवभासकं-பிரகாசிக்கும்படிச் செய்வதான परं-மேலான शुद्धं-சுத்தமான बाह्य अभ्यन्तर शून्यं-வெளியே உள்ளே என்ற வியவஹாரமில்லாததான पूर्णं-நிறைந்த अद्वितीयं - இரண்டாவதற்றதான ब्रह्म-பிரஹ்மம் एव-தான் अहं-நான். (494)

निरुपममनादितत्त्वं त्वमहमिदमद इति कल्पनादूरम् ।
नित्यानन्दैकरसं सत्यं ब्रह्माद्वितीयमेवाहम् ॥ ४९५ ॥

निरुपमं-உபமானமற்றதாய் अनादि तत्त्वं-ஆதியற்று என்றைக்கும் வாஸ்தவமாயிருக்கும் தத்வமாய் त्वं-'நீ' अहं-'நான்' इदं-'இது' अदः-'அது' इति-என்ற कल्पनादूरं-கல்பனைக்கு வெளிப்பட்டதாய் नित्य आनन्द एक रसं-நித்யமான ஆனந்தம் ஒன்றையே ரஸமாயுடையதாய் सत्यं-என்றைக்கும் இருப்பதாய் अद्वितीयं-இரண்டாவதற்றதாய் உள்ள ब्रह्म-பிரஹ்மம் एव-தான் अहं-நான். (495)

नारायणोऽहं नरकान्तकोऽहं पुरान्तकोऽहं पुरुषोऽहमीशः ।
अखण्डबोधोऽहमशेषसाक्षी निरीश्वरोऽहं निरहं च निर्ममः ॥ ४९६ ॥

नारायणः-நாராயணர் अहं-நான் தான். नरकान्तकः-நரகாஸுரனை ஸம்ஹாரம் செய்த மஹாவிஷ்ணு (கிருஷ்ணன்) अहं-நான்தான் पुरान्तकः-திரிபுர அஸுரர்களை ஸம்ஹாரம் செய்த பரமசிவன அहं-நான் தான். पुरुषः-புருஷன் अहं-நான் தான (ஹ்ருதய புண்டரீகத்தில இருக்கும் பரமாத்மா நான் தான்). ईशः-ஈசுவரன் (எல்லாவற்றையும் ஆளுகிறவன்) (நான தான்). अखण्ड बोधः-துண்டு படாத அறிவு ஸ்வரூபம் अहं-நான अशेष साक्षी-எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாயிருந்து பார்த்துக் கொண்டிருப்பவர் (நான் தான்). निरीश्वरः-எனக்கு மேலிருந்து ஆளுபவர் அற்றவன் अहं-நான் निरहं-அஹம் "நான்" என்பது இல்லாதவன் (நான்). निर्ममः च-மம 'என்னுடையது' என்பது இல்லாதவனும (நான்) (496)

सर्वेषु भूतेष्वहमेव संस्थितो ज्ञानात्मनान्तर्बहिराश्रयः सन् ।
भोक्ता च भोग्यं स्वयमेव सर्वं यद्यत्पृथग्दृष्टमिदंतया पुरा ॥ ४९७ ॥

सर्वेषु-எல்லா भूतेषु-உண்டானவைகளிலெல்லாம் अहं एव-நான் தான் ज्ञातृ आत्मना-அறிகிறவன் என்ற தன்மையுடன் अन्तः बहिः आश्रयः-உள்ளேயும் வெளியிலும்



ஆசிரயமாய் सन्-இருந்து संस्थितः-நன்கு இருக்கிறேன். यत् यत्-எது எது पुरा-(ஞானம ஏற்படுவதற்கு) முன்னால் इदंतया-'இது' என்று पृथक्-தனித்தனியாக दृष्टं-காணப்பட்டதோ (அந்த) भोक्ता-அனுபவிப்பவன் भोग्यं च-அனுபவிக்கப்படும் பதார்த்தம் கூட सर्वं-எல்லாம் स्वयं एव-நானே தான். (497)

मय्यखण्डसुखाम्भोधौ बहुधा विश्ववीचयः ।
उत्पद्यन्ते विलीयन्ते मायामारुतविभ्रमात् ॥ ४९८ ॥

अखण्ड सुख अम्भोधौ-எல்லையற்ற ஆனந்த ஸமுத்திரமாகிய मयि-என்னிடத்தில் माया मारुत विभ्रमात् மாயையாகிற காற்று சுழற்றுவதால் विश्व वीचयः-உலகங்கள் என்ற அலைகள் बहुधा-பலவிதமாக उत्पद्यन्ते-உண்டாகின்றன विलीयन्ते-லயமடைகின்றன. (498)

स्थूलादिभावा मयि कल्पिता भ्रमादारोपितानुस्फुरणेन लोकैः ।
काले यथा कल्पकवत्सरायणर्त्वादयो निष्कलनिर्विकल्पे ॥ ४९९ ॥

निष्कल निर्विकल्पे-அவயவங்களில்லாத, பலவிதமான மாறுபாடுகளில்லாத काले-காலம் என்பதில் कल्पक वत्सर अयन ऋतु आदयः-கல்பம் வருஷம் அயனம் ருது (பக்ஷம் தினம் நாழிகை) முதலியவைகள் यथा-எப்படி (கல்பிக்கப்படுகின்றனவோ) (அவ்விதமே அவயவங்களில்லாத பலவித மாறுபாடுகளில்லாத) मयि-என்னிடத்தில் भ्रमात्-பிராந்தியினால் आरोपित अनुस्फुरणेन-கல்பிக்கப்பட்டிருக்கிற தோற்றத்தைக் காரணமாக வைத்துக்கொண்டு लोकैः-உலகத்தார்களால் स्थूलादि भावाः-ஸ்தூல சரீரம் (ஸூக்ஷ்மசரீரம் காரணசரீரம்) முதலான பதார்த்தங்கள் कल्पिताः-கல்பிக்கப்பட்டிருக்கின்றன. (499)

(அ) அவ்விதம் கல்பிக்கப்படும் பதார்த்தங்களினால் கல்பனைக்கு ஆசிரயமாயிருக்கும் என் ஆத்மஸ்வரூபத்திற்கு

எவ்வித பாதகமுமில்லையென்று திருஷ்டாந்தத்தினால் விளக்குகிறார் :—

आरोपितं नाश्रयदूषकं भवेत्कदापि मूढैर्मतिदोषदूषितैः ।
नार्द्रीकरोत्यूषरभूमिभागं मरीचिकावारिमहाप्रवाहः ॥ ५०० ॥

मति दोष दूषितैः-புத்தியின் தோஷத்தினால் கெட்டிருக்கிற मूढैः-மூடர்களால் आरोपितं-ஆரோபிக்கப்பட்டது (கல்பிக்கப்பட்ட பதார்த்தம்) कदा अपि-ஒரு ஸமயத்திலும்கூட आश्रय दूषकं-(அதிஷ்டானமில்லாமல் ஆரோபம் ஏற்படாதபடியால் ஆரோபத்தின்) ஆச்ரயமான அதிஷ்டானத்தைக் கெடுக்கக்கூடியதாக न भवेत्-ஏற்படாது. मरीचिका वारि महाप्रवाहः-கானல் ஜலத்தின் பெரிய வெள்ளம் (அதன் ஆசிரயமான) ऊषर भूमि भागं-பொட்டல் பூமி பிரதேசத்தை न आर्द्रीकरोति-ஈரமாகச் செய்வது கிடையாது. (500)

आकाशवत्कल्पविदूरगोऽहमादित्यवद्भास्यविलक्षणोऽहम् ।
अहार्यवन्नित्यविनिश्चलोऽहमम्भोधिवत्पारविवर्जितोऽहम् ॥ ५०१ ॥

अहं-நான் आकाशवत्-ஆகாசத்தைப் போல कल्प विदूरगः-கல்பகாலங்களுக்கும் அப்பாற்பட்டவன் (நித்யன்) अहं-நான் आदित्यवत्-ஸூர்யனைப்போல भास्य विलक्षणः-பிரகாசப்படுத்தப்படும் பதார்த்தத்திலிருந்து வேறுபட்டவன். अहार्यवत्-மலையைப்போல नित्यविनिश्चलः-எப்பொழுதும் நன்கு அசைவற்றிருப்பவன் अहं நான். अम्भोधिवत्-ஸமுத்திரத்தைப்போல पार विवर्जितः-கரை (எல்லை) அற்றவன் अहं-நான். (501)

न मे देहेन संबन्धो मेघेनेव विहायसः ।
अतः कुतो मे तद्धर्मा जाग्रत्स्वप्नसुषुप्तयः ॥ ५०२ ॥

विहायसः-ஆகாசத்திற்கு मेघेन-மேகத்துடன் (எப்படி ஸம்பந்தம் கிடையாதோ அதை) इव-போல मे-எனக்கு



देहेन-தேஹத்துடன் न संबन्धः-ஸம்பந்தம் கிடையாது. अतः-அப்படியிருக்கையில் तत् धर्माः-அந்த தேஹத்தின் தர்மங்களாகிற जाग्रत् स्वप्न सुषुप्तयः விழிப்பு கனவு நல்ல தூக்கம் என்கிறதெல்லாம் मे-எனக்கு कुतः-எவ்விதம் ஸம்பந்தப்பட்டவையாகும்?

ஆகாசம் ஒன்றுடனும் ஒட்டாது. அஸங்கஸ்வபாவமுள்ளது. அதற்கு உருவமுமில்லை. ஆகையால் ஆகாசத்தில் எத்தனை மேகங்கள் ஸஞ்சரித்தாலும் அவைகள் ஆகாசத்துடன் ஒட்டுவதில்லை. மேகம் மழையைப் பொழிவதால் ஆகாசம் நனைவதில்லை அதுபோல் அஸங்கமாயும், அமூர்த்தமாயும் உள்ள ஆத்மாவும் தேஹத்துடன் ஒட்டாததால் தேஹ தர்மங்களான விழிப்பு, கனவு, தூக்கம் என்ற நிலைகளும் ஆத்மாவுக்குக்கிடையாது. (502)

उपाधिरायाति स एव गच्छति स एव कर्माणि करोति भुङ्क्ते ।
स एव जीवन्म्रियते सदाहं कुलाद्रिवन्निश्चल एव संस्थितः ॥ ५०३ ॥

उपाधिः-உபாதியாகிய தேஹம் முதலானது தான் आयाति-வருகிறது. स एव-அதுவேதான் गच्छति-போகிறது. स एव அதுவேதான் कर्माणि-(புண்ணிய பாபம் முதலான கர்மாக்களை) करोति-செய்கிறது. (அக்கர்மாக்களின் பலனாகிய ஸுகதுக்கங்களை) भुङ्क्ते-அனுபவிக்கிறது. स एव-அதுவேதான் जीवन्-உயிரோடு இருந்து म्रियते-சாகிறது. अहं-நானோ सदा-எப்பொழுதும் कुलाद्रिवत्-குலபர்வதம்போல निश्चलः एव-அசையாமலே संस्थितः-இருந்துவருகிறேன். (503)

न मे प्रवृत्तिर्न च मे निवृत्तिः सदैकरूपस्य निरंशकस्य ।
एकात्मको यो निबिडो निरन्तरो व्योमेव पूर्णः स कथं नु चेष्टते ॥

सदा-எப்பொழுதும் एक रूपस्य-ஒரே ஸ்வரூபத்தையுடையவனும் निरंशकस्य-அவயவங்களில்லாதவனுமான मे-எனக்கு प्रवृत्तिः-பிரவிருத்தி न-கிடையாது. मे-எனக்கு निवृत्तिः च-(பிரவிருத்தியிலிருந்து) திரும்புவது என்பதும்

ந-கிடையாது. एकरसः - ஒரே ஸ்வபாவமுள்ளதாய் निबिडः - கெட்டியாய் निरन्तरः - இடுக்கற்றதாய் व्योम - ஆகாசம் इव - போல पूर्णः - நிறைந்ததாய் यः - எது இருக்கிறதோ सः - அது कथं नु - எப்படித்தான் चेष्टते - சேஷ்டிக்க முடியும். (504)

(அ) ஆத்மா கர்மாவை செய்கிறதுமில்லை, அதன் பலனை அனுபவிக்கிறதுமில்லை என்று சொல்லப்பட்டது. அது நேரில் செய்யவோ அனுபவிக்கவோ முடியாமலிருக்கலாம். சரீரத்துடன், மனஸுடன், இந்திரியங்களுடன், சேரும்போது கிரியை, போகம் இரண்டும் ஸாத்தியம்தானே? என்று தோன்றலாம். அதற்காக இம்மூன்றுடனும் ஆத்மாவிற்கு வாஸ்தவத்தில் ஸம்பந்தம் கிடையாதென்கிறார். தவிரவும், எங்கே கிரியையோ போகமோ இருக்கிறதோ அங்கு அவைகளின் ஆச்ரயமாயிருப்பதை அவை கொஞ்சமேனும் மாறுபடுத்தாமல் இராது. ஆத்மாவோ எவ்வித மாறுதலுக்கும் உட்படாத பதார்த்தமானதினால், அது க்ரியைக்கு ஆச்ரயமாகவோ, போகத்திற்கு ஆச்ரயமாகவோ இருக்கமுடியாது என்பதையும் காட்டுகிறார்:—

पुण्यानि पापानि निरिन्द्रियस्य निश्चेतसो निर्विकृतेर्निराकृतेः ।
कुतो ममाखण्डसुखानुभूतेर्ब्रूते ह्यनन्वागतमित्यपि श्रुतिः ॥ ५०५ ॥

निरिन्द्रियस्य - இந்திரியங்களில்லாதவனாய் निश्चेतसः - மனமில்லாதவனாய் निर्विकृतेः - விகாரமற்றவனாய் निराकृतेः - ரூபம் (சரீரம்) இல்லாதவனாய் अखण्डसुखानुभूतेः - பூர்ணமான ஸுக அனுபவமாகவேயிருக்கும் मम - எனக்கு पुण्यानि - புண்யங்களோ पापानि - பாபங்களோ (அவைகளை உண்டு பண்ணும் கர்மாக்களும் அவைகளின் பலனாகிய ஸுகதுக்கங்களும்) कुतः - எந்தக் காரணத்தினால் (ஏற்பட முடியும்)? श्रुतिः - (பிருஹதாரண்யக உபநிஷத்தாகிய) வேதம் अपि கூட "अनन्वागतं - (புண்ணிய பாபங்களால்) தொடரப்படாதது" इति - என்று हि - அல்லவா ब्रूते - சொல்கிறது.



வேதத்தில் 'செய்யவேண்டும்' என்று விதிக்கப்பட்ட கர்மாக்களைச் செய்வதால் ஏற்படுவது புண்யம். 'செய்யாதே' என்று தடுக்கப்பட்ட கர்மாக்களைச் செய்வதால் ஏற்படுவது பாபம். புண்யத்தைத் தரும் கர்மாக்களுக்கும் புண்யம் என்று பெயர். பாபத்தைத் தரும் கர்மாக்களுக்கும் பாபம் என்று பெயர். இந்தப் புண்ய-பாப கர்மாக்கள் சாரீரம் (சரீரத்தால் செய்யக்கூடியவை), வாசிகம் (வாக்கால் ஏற்படுபவை), மானஸம் (மனதால் ஏற்படுபவை) என்று மூன்றுவிதம். மஹாநதிகளில் ஸ்நானம் செய்வது, தேவர்களையும், விப்ரர்களையும் பிரதக்ஷிணம் செய்வது முதலானவை சாரீரமான புண்யகர்மாக்கள். மஹாமந்திரஜபம், பகவந்நாம ஸங்கீர்த்தனம், பகவத் குணங்களைச் சொல்வது முதலானவை வாசிகமான புண்யங்கள். ஈசுவரத்யானம், தனக்கும் பிறருக்கும் ஹிதத்தையே நினைப்பது முதலானவை மானஸ புண்யங்கள். பிறர் மனைவியைச் சேருவது முதலானவை சாரீர பாபம். பிறரைத் தூஷிப்பது, பொய் பேசுவது முதலியவை வாசிக பாபம். எண்ணத்தகாததை நினைப்பது மானஸ பாபம். சாரீரமான பாபங்களால் ஸ்தாவரமாகவும், வாசிக பாபங்களால் பசு பக்ஷிகளாகவும், மானஸ பாபங்களால் கீழ்ப்பிறவிகளையும் அடைகிறான்.

கண், காது முதலான புலன்களால் செய்யப்படும் புண்ய பாப கர்மாக்களும் வாசிகம் என்ற பிரிவில் சேரும். அல்லது கர்மேந்திரியங்களால் ஏற்படும் புண்ய பாபங்களை வாசிகம் என்ற பிரிவிலும், மனதாலும் ஞானேந்திரியங்களாலும் ஏற்படும் புண்யபாபங்களை மானஸம் என்ற பிரிவிலும் சேர்க்கலாம். ஆகையால் ஸ்தூல சரீரத்தாலும் வாக், கை, கால் முதலிய கர்மேந்திரியங்களாலும் கண், காது, மூக்கு முதலான ஞானேந்திரியங்களாலும் மனதாலும் புண்ய பாபங்கள் ஏற்படுகின்றன. ஆகவே, ப்ரஹ்மம் தவிர வேறொன்றும் வாஸ்தவமாக இல்லாவிட்டாலும், அக்ஞானத்தால் எல்லாவற்றையும் உண்மை என்று எண்ணி சரீரம், இந்திரியம், மனம் இவைகளைத் தன்னுடையது என்று அபிமானம் கொள்பவனுக்கு அவைகள் செய்யும் காரியங்களால் புண்ய பாபங்கள் ஏற்படுகின்றன.

ப்ரஹ்மஸாக்ஷாத்காரத்தால் அக்ஞானம் நீங்கி அத்யாஸமும் விலகியபின் ஞானிக்கு மனம், இந்திரியம், சரீரம் ஒன்றும்

இல்லாததால் அவனுக்குப் புண்ய பாபங்கள் கிடையாது. இந்த ச்லோகத்தில் 'निरिन्द्रियस्य' என்ற பதத்தால் இந்திரியங்களில்லாத ஞானிக்கு வாசிகமான புண்ய பாபங்கள் இல்லை என்றும் 'निश्चेतसः' என்பதால் மனமற்றவனுக்கு மாநஸ புண்ய பாபங்கள் இல்லை என்றும் 'निराकृतेः' என்பதால் ஸ்தூலசரீரமற்றவனுக்கு சாரீர புண்ய பாபங்கள் இல்லை என்றும் காட்டப்பட்டது. பிறர் பார்வையில் ஞானிக்கு சரீரம் இருப்பதுபோல் தோன்றினாலும் ஞானிக்குப் பொய்யாகத் தோன்றும் சரீரத்தில் ஸம்பந்தமில்லாததால் இல்லை என்று கூறப்பட்டது.

தார்கிகர்கள் புண்ய பாபங்கள் ஆத்மாவைச் சேர்ந்ததாகச் சொல்கிறார்கள். இது சரியல்ல. அநித்யமான புண்ய பாபங்கள் ஆத்மாவிடம் சேர்ந்திருக்குமானால் ஆத்மாவையும் அநித்யமாக ஆக்கிவிடும். அநித்யமான சப்தத்திற்கு ஆச்ரயமாயிருப்பதால் ஆகாசம் அநித்யம். ஆத்மாவோ எவ்வித மாறுதலும் அற்றது. ஆகவே, அநித்யமான புண்யபாபங்கள் ஆத்மாவைச் சேர்ந்ததல்ல. 'निर्विकृतेः' என்ற பதம் இவ்விஷயத்தைக் குறிக்கிறது.

ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் ஸுஷுப்திநிலையைக் கூறுமிடத்தில் "अनन्वागतं पुण्येन अनन्वागतं पापेन" 'புண்யம், பாபம், துக்கம் ஒன்றும் கிடையாது' என்று கூறப்பட்டுள்ளது. ஸுஷுப்தியில் அக்ஞானம் இருந்தபோதிலும் மனம் அடங்கிவிட்டபடியால் அத்யாஸம் இல்லாததால் புண்ய பாபம் கிடையாது என்றால் ஞானிக்கு அக்ஞானமும் அடியோடு நீங்கிவிட்டபின் புண்ய பாபமில்லை என்பதைச் சொல்லவும் வேண்டுமா. புண்ய பாபங்கள் ஆத்மாவைச் சேர்ந்ததானால் ஸுஷுப்தியில் புண்ய பாபங்களும் அதன் பலமான ஸுக துக்கானுபவமும் ஏற்படவேண்டும். ஸுஷுப்தியில் அனுபவிக்கப்படுவது ஸ்வரூபானந்தமே தவிர புண்ய பலனான விஷயஸுகமல்ல. அப்போது விஷயங்கள் ஒன்றுமில்லை. ஸுஷுப்தியில் பாப பலனான துக்கானுபவம் யாருக்குமில்லை.

छायया स्पृष्टमुष्णं वा शीतं वा सुष्ठु दुष्ठु वा ।
न स्पृशत्येव यत्किंचित्पुरुषं तद्विलक्षणम् ॥ ५०६ ॥



छायया – நிழலினால் स्पृष्टं – தொடப்பட்ட उष्णं वा – உஷ்ணமோ शीतं वा – குளிர்ந்ததோ सुष्ठु நல்லதோ दुष्ठु वा – கெட்டதோ यत्किञ्चित् – எதுவும் तत् विलक्षणं – அந்த நிழலிலிருந்து வேறுபட்டதான पुरुषं – மனிதனை (அவன் சரீரத்தை) न स्पृशति एव தொடவே தொடாது. (506)

न साक्षिणं साक्ष्यधर्माः संस्पृशन्ति कदाचन ।
अविकारमुदासीनं गृहधर्माः प्रदीपवत् ।
देहेन्द्रियमनोधर्मा नैवात्मानं स्पृशन्त्यहो ॥ ५०७ ॥

साक्ष्य धर्माः – பார்க்கப்படுகிறவைகளின் தர்மங்கள் साक्षिणं – பார்க்கிறவனை कदाचन ஒருபொழுதும் न संस्पृशन्ति – தொடாது (பாதிக்காது). गृह धर्माः வீட்டினுடைய தர்மங்கள் प्रदीपवत् – (அவ்வீட்டைப் பிரகாசப்படுத்தும்) தீபத்தை (எப்படித் தொடாதோ அதே) போல देह इन्द्रियमनोधर्माः – சரீரம், இந்திரியங்கள், மனஸ் இவைகளின் தர்மங்கள் अविकारं – எவ்வித விகாரமுமற்றதாய் उदासीनं – எவ்விதப் பற்றுதலுமன்னியில் உதாஸீனமாய் இருக்கும் आत्मानं – ஆத்மாவை न एव स्पृशन्ति – தொடவே தொடாது. अहो – ஆச்சர்யம்!

நம் உடம்பின் நிழல் நெருப்பில் விழுந்ததால் நெருப்பின் சூடு உடம்புக்கு வருவதில்லை. இதுபோல் நம் நிழல் குளிர்ந்த ஜலத்திலும், சுத்தமான வஸ்துவிலும், அசுத்த வஸ்துவிலும் விழுந்ததால் சரீரத்திற்குக் குளிர்ச்சியோ, சுத்தமோ, அசுத்தமோ ஏற்படுகிறதில்லை. இதுபோல அந்தஃகரண ப்ரதிபிம்பமான ஜீவனுக்கு அந்தஃகரண தர்மமான புண்ய பாப ஸுக துக்கங்கள் ஏற்பட்டாலும ஞானிக்கு அக்ஞானம் விலகி, ஜீவத்தன்மை நீங்கி ப்ரஹ்மபாவம் ஏற்பட்டபின் அந்தஃகரண தர்மமான புண்ய பாபங்கள் அவனுக்குக் கிடையாது. வீட்டிற்குள் தீபம் எரிந்துகொண்டு, வீட்டைப் பிரகாசப்படுத்துகிறது. ஆனால் அவ்வீட்டிலுள்ள விசேஷங்கள் ஒளியுடன் சேருவதில்லை. இதுபோல தேஹம் முதலானவற்றை பிரகாசப்படுத்திக்

கொண்டு அவைகளுக்கு ஸாக்ஷியாகவுள்ள ஆத்மாவில் தேஹாதி தர்மங்கள் ஒட்டாது. (507)

(அ) ஆத்மா பற்றுதலற்றவர் என்பதை இன்னம் மூன்று திருஷ்டாந்தங்களைச் சொல்லி தெளிவுபடுத்துகிறார் :—

रवेर्यथा कर्मणि साक्षिभावो वह्नेर्यथा वाऽयसि दाहकत्वम् ।
रज्जोर्यथारोपितवस्तुसङ्गस्तथैव कूटस्थचिदात्मनो मे ॥ ५०८ ॥

रवेः - ஸூர்யனுக்கு कर्मणि (பிராணிகள் செய்யும்) கர்மாவில் यथा-எப்படி साक्षि भावः-ஸாக்ஷியாய் இருக்கும் தன்மையோ (மாத்திரமே தவிர அந்தக் கர்மாவில் பற்றுதல் கிடையாதோ) वह्नेः-அக்நியினுடைய दाहकत्वं-சுடும் தன்மை यथा वा-எப்படி अयसि-(பழுக்கக் காய்ச்சின) இரும்பிலுள்ளதாகக் (கல்பிக்கப்படுகிறதோ) रज्जोः - கயிற்றிற்கு आरोपितवस्तुसङ्गः (பிராந்தியினால்) கல்பிக்கப் பட்ட (பாம்பு முதலான) பதார்த்தத்துடன் (ஒன்று யிருக்கும் தன்மையாகிற) ஸம்பந்தம் यथा-எப்படி (கல்பிக்கப்படுகிறதோ) तथा एव-அதைப்போலவே कूटस्थचिदात्मनः - எவ்வித மாறுதலுமற்று ஞானஸ்வரூபியா யிருக்கும் मे-எனக்கு (ஸாக்ஷியாயிருக்கும் தன்மை, செய்கிறவனாயிருக்கும் தன்மை, ஒன்றாயிருக்கும் தன்மை எல்லாம் கல்பிக்கப்படுகின்றன.) (508)

कर्तापि वा कारयितापि नाहं भोक्तापि वा भोजयितापि नाहम् ।
द्रष्टापि वा दर्शयितापि नाहं सोऽहं स्वयंज्योतिरनीदृगात्मा ॥

अहं-நான் कर्ता अपि वा-செய்கிறவனாகவாவது कारयिता अपि - செய்விக்கிறவனாகவாவது न-இல்லை. अहं-நான் भोक्ता अपि वा-அனுபவிக்கிறவனாகவாவது भोजयिता अपि-அனுபவிக்கும்படி செய்பவனாகவாவது न-இல்லை. अहं-நான் द्रष्टा अपि वा-பார்க்கிறவனாகவாவது दर्शयिता अपि-பார்க்கும்படிச் செய்கிறவனாகவாவது न-இல்லை. सः-அந்த आत्मा-ஆத்மாவாகிய अहं-நான் स्वयंज्योतिः-(வேறு



எதையும் எதிர்பாராமல்) தானே பிரகாசிக்கிறவன் अनीदृक् (செய்கிறவன் முதலானதான) இவ்விதம் இல்லாதவன். (509)

(அ) அவ்விதமிருந்தால் உலகத்தில் ஜனங்கள் தங்களை செய்கிறவன், அனுபவிக்கிறவன், என்று ஏன நினைக்கிறார்கள்? என்று கேட்டால் "தத்வமறியாமல் பிராந்தியினால் தான்" என்று தான் பதில் சொல்லவேண்டும் ஜலத்தில் ஸூர்யன் பிரதிபிம்பிக்கும்போது ஜலத்தின் அசைவினால் பிரதிபிம்பம் அசைவதைப் பார்த்து பிராந்தியினால ஸூரியனே அசைவதாக எண்ணுவதில்லையா? அதுபோலத்தான் ஆத்மாவிடத்தில் செய்யும் தன்மை, அனுபவிக்கும் தன்மை, முதலியது இருப்பதுபோல நினைப்பது பிராந்தியினால் என்கிறார் — வாஸ்தவத்தில் பிரதிபிம்பம் அசைவதாக எண்ணுவதே பிராந்திதான். அப்படியிருக்க பிம்பம் அசைவதாக எண்ணுவது பிராந்தி என்பதைச் சொல்லவும வேண்டுமா? :—

चलत्युपाधौ प्रतिबिम्बलौल्यमौपाधिकं मूढधियो नयन्ति ।
स्वबिम्बभूतं रविवद्विनिष्क्रियं कर्तास्मि भोक्तास्मि हतोऽस्मि हेति ॥

उपाधौ - (புத்தி, சரீரம் முதலிய) உபாதியானது चलति-சலிக்கும்போது औपाधिकं-அந்த உபாதியினால் ஏற்பட்ட (வாஸ்தவமில்லாத தோற்றமான) प्रतिबिम्ब-लौल्यं-(அந்த உபாதியில் தோன்றும ஜீவனுகிய) பிரதி பிம்பத்தில தெரியும சலனத்தை मूढधियः மயாஹத்தை யடைந்த புத்தியுள்ளவர்கள் रविवत्-ஸூர்யனிடம்போல विनिष्क्रियं-எவ்வித விகாரமுமில்லாத स्वबिम्बभूतं-தனக்குப பிம்பமாயுள்ள ஆத்மாவினிடம 'कर्ता செய்கிறவனாக अस्मि-இருக்கிறேன். भोक्ता - அனுபவிக்கிறவனாக अस्मि-இருக் கிறேன், हतः अस्मि-அடிபட்டுவிட்டவனாக இருக்கிறேன். हा-ஐயோ!' इति-என்று नयन्ति-கொண்டுபோயச் சேர்க் கிறார்கள். (510)

(அ) ஸ்தூலசரீரத்திற்கு ஏற்படும் தர்மங்கள் சுத்தமான ஆத்மாவில் ஒட்டாது என்கிறார் :—

जले वापि स्थले वापि लुठत्वेष जडात्मकः ।
नाहं विलिप्ये तद्धर्मैर्घटधर्मैर्नभो यथा ॥ ५११ ॥

जले वा अपि-ஜலத்திலே தானே स्थले वा अपि தரையிலே தானே एषः-இந்த जडात्मकः-ஜடஸ்வரூபமான சரீரம் लुठतु-புரளட்டும். नभः-ஆகாசமானது घट धर्मैः-(அதிலுள்ள) குடத்தின் தர்மங்களால் (அல்லது, குடத்திலுள்ள ஆகாசமானது குடத்தின் தர்மங்களால்) यथा-எப்படி (ஒட்டுவதில்லையோ அப்படியே) अहं-நான் तत् धर्मैः-அந்த சரீரத்தின் தர்மங்களால் न विलिप्ये-ஒட்டப்படுவதில்லை. (511)

(அ) அவ்விதமே ஸூக்ஷ்ம சரீரத்தில் ஸம்பந்தித்த தர்மங்களும் ஆத்மாவில் ஒட்டாது என்கிறார் :—

कर्तृत्वभोक्तृत्वखलत्वमत्ताजडत्वबद्धत्वविमुक्ततादयः ।
बुद्धेर्विकल्पा न तु सन्ति वस्तुतः स्वस्मिन्परे ब्रह्मणि केवलेऽद्वये ॥

कर्तृत्व-செய்கிறவன் என்ற தன்மை भोक्तृत्व-அனுபவிக்கிறவன் என்ற தன்மை खलत्व-துஷ்டன் எனகிற தன்மை मत्तता-மதம் பிடித்தவன் என்ற தன்மை जडत्व-புத்தி ஒட்டமில்லாதவன் என்ற தன்மை बद्धत्व-கட்டுபபட்டவன் என்ற தன்மை विमुक्तता-விடுபட்டவன் என்ற தன்மை आदयः-முதலானவைகள் बुद्धेः-புததியினால் (புத்தியை 'நான்' என்று எண்ணின தினால்) ஏற்படும் विकल्पाः-பலவித கற்பனைகள்; அவைகள் वस्तुतः-வாஸ்தவத்தில் केवले-சுத்தமாய் अद्वये-இரண்டற்றதாய் परे-மேலானதாய் ब्रह्मणि-பிரஹ்மமாய் இருக்கும் स्वस्मिन्-தன்னிடத்தில் न तु सन्ति-கிடையவே கிடையாது. (512)

सन्तु विकाराः प्रकृतेर्दशधा शतधा सहस्रधा वापि ।
तैः किं मेऽसङ्गचितेर्न ह्यम्बुदडम्बरोऽम्बरं स्पृशति ॥ ५१३ ॥



प्रकृतेः-மாயையினுடைய विकाराः-மாறுபாடுகள் दशधा-பத்துவிதமாக शतधा-நூறு விதமாக सहस्रधा वा अपि-ஆயிரவிதமாகத்தான் सन्तु இருக்கட்டுமே असङ्गचितेः-எவ்வித பற்றுமில்லாத ஞானஸ்வரூபியான मे-எனக்கு तैः-அவைகளினால் किं-என்ன (ஏற்பட முடியும்)? अम्बुद डम्बरः-மேகத்தினுடைய (இடி மின்னல் முதலிய) ஆடம்பரம் अम्बरं-ஆகாசத்தை न हि स्पृशति-தொடுவதில்லையே (ஒன்றும் செய்யாதே)! (513)

अव्यक्तादि स्थूलपर्यन्तमेतद्विश्वं यत्राभासमात्रं प्रतीतम् ।
व्योमप्रख्यं सूक्ष्ममाद्यन्तहीनं ब्रह्माद्वैतं यत्तदेवाहमस्मि ॥ ५१४ ॥

अव्यक्तादि स्थूल पर्यन्तं-அவ்யக்தமென்ற மாயை முதல் (பஞ்சீகிருத) ஸ்தூல பதார்த்தம் வரையிலுள்ள एतत्-இந்த विश्वं-ஜகத் (எல்லாம்) यत्र-எதினிடத்தில் आभास मात्रं-(கல்பிக்கப்பட்டு) தோற்றம் மாத்திரமாக प्रतीतं-தென்படுகிறதோ यत्-எது व्योम प्रख्यं-ஆகாசத்தைப் போலுள்ளதாய் सूक्ष्मं-ஸூக்ஷ்மமாய் आदि अन्तहीनं-ஆதியும் அந்தமும் அற்றதாய் अद्वैतं-இரண்டற்றதாய் இருக்கிறதோ तत्-அந்த ब्रह्म एव-பிரஹ்மமாகவேதான் अहं-நான் अस्मि-இருக்கிறேன். (514)

सर्वाधारं सर्ववस्तुप्रकाशं सर्वाकारं सर्वगं सर्वशून्यम् ।
नित्यं शुद्धं निष्कलं निर्विकल्पं ब्रह्माद्वैतं यत्तदेवाहमस्मि ॥ ५१५ ॥

यत् எந்த ब्रह्म-பிரஹ்மமானது सर्वाधारं-எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் सर्ववस्तु प्रकाशं-எல்லா பதார்த்தங்களையும் விளங்கச் செய்வதாய் सर्वाकारं-எல்லா ரூபமாய் सर्वगं-எல்லாவற்றிலும் இருப்பதாய் सर्वशून्यं-எல்லாம் அற்றதாய் नित्यं-நித்யமாய் शुद्धं-நிர்மலமாய் निष्कलं-அவயவங்களில்லாததாய் निर्विकल्पं-எவ்வித கற்பனையுமற்றதாய் अद्वैतं-இரண்டற்றதாய் இருக்கிறதோ तत् एव-அந்த பிரஹ்மமாகவே अहं-நான் अस्मि-இருக்கிறேன்.

यस्मिन्नस्ताऽशेषमायाऽविशेषं प्रत्यग्रूपं प्रत्ययागम्यमानम् ।
सत्यज्ञानानन्तमानन्दरूपं ब्रह्माद्वैतं यत्तदेवाहमस्मि ॥ ५१६ ॥

यस्मिन्-எதனிடத்தில் अशेष माया-எல்லா மாயையும் अस्त-கிடையாதோ यत्-எது अविशेष-எவ்வித விசேஷமுமில்லாததாய் प्रत्यग् रूपं பிரத்யகாத்ம ஸ்வரூபமாய் प्रत्यय अगम्यमानं -(பிரஹ்மாகார விருத்தியைத்தவிர வேறு) எந்த விருத்தியினாலும் அறியமுடியாததாய் सत्य ज्ञान अनन्त-ஸத்தியம் ஞானம் எல்லையற்றதென்ற ஸ்வரூபமாய் आनन्द रूपं-ஆனந்த ஸ்வரூபமாய் अद्वैतं-இரண்டற்றதாய் இருக்கிறதோ तत्-அந்த ब्रह्म-பிரஹ்மமாகவே एव-தான் अहं-நான் अस्मि-இருக்கிறேன். (516)

निष्क्रियोऽस्म्यविकारोऽस्मि निष्कलोऽस्मि निराकृतिः ।
निर्विकल्पोऽस्मि नित्योऽस्मि निरालम्बोऽस्मि निर्द्वयः ॥ ५१७ ॥

निष्क्रियः - எவ்வித கிரியையுமில்லாதவனாக अस्मि-இருக்கிறேன். अविकारः - எவ்வித மாறுபாடுமில்லாதவனாக अस्मि-இருக்கிறேன். निष्कलः-எவ்வித அவயவங்களுமில்லாதவனாக अस्मि இருக்கிறேன் निराकृतिः-எவ்விதரூபமும் இல்லாதவனாக (இருக்கிறேன்). निर्विकल्पः-எவ்வித விகல்பமும் இல்லாதவனாக अस्मि இருக்கிறேன். नित्यः-நித்யமாய் (என்றைக்கும் உள்ளவனாய்) अस्मि இருக்கிறேன். निरालम्बः-வேறு எவ்வித பிடிப்பும் இல்லாதவனாய் अस्मि இருக்கிறேன். निर्द्वयः-இரண்டாவது எதுவுமில்லாதவனாய் (இருக்கிறேன்). (517)

सर्वात्मकोऽहं सर्वोऽहं सर्वातीतोऽहमद्वयः ।
केवलाखण्डबोधोऽहमानन्दोऽहं निरन्तरः ॥ ५१८ ॥

सर्व आत्मकः-எல்லா ஸ்வரூபமாயிருப்பது अहं-நானே. सर्वः-எல்லா பதார்த்தங்களும் अहं-நானே सर्व अतीतः-எல்லாவற்றையும் கடந்திருப்பவன் अहं-நான். अद्वयः-



இரண்டற்றிருப்பவன் (நான்). अहं-நான் केवल अखण्ड-बोधः-(வேறு எதுவும் ஸம்பந்தப்படாமல்) தனித்திருக்கும் பூர்ணமான அறிவு ஸ்வரூபன். अहं - நான் आनन्दः-ஆனந்த ஸ்வரூபன். निरन्तरः-இடைவெளியில்லாதவன்.

(அ) இவ்விதமாக சிஷ்யன் தனக்கேற்பட்டுள்ள பிரஹ்மானந்த அனுபவத்தை குருவினிடம் தெரிவித்துவிட்டு இவ்வனுபவம் ஏற்படும்படி அனுக்ரஹித்த குருவினிடம் தனக்குள்ள நன்றியையும் தெரிவித்துக்கொண்டு நமஸ்கரிக்கிறார் —

स्वाराज्यसाम्राज्यविभूतिरेषा भवत्कृपाश्रीमहितप्रसादात् ।
प्राप्ता मया श्रीगुरवे महात्मने नमो नमस्तेऽस्तु पुनर्नमोऽस्तु ॥५१९॥

भवत् कृपा श्रीमहित प्रसादात्-தங்களுடைய கருணையாகிற ஸம்பத்தினால் பெருமைவாய்ந்த பிரஸாதத்தினால் मया-என்னால் एषा-இவ்விதமான स्वाराज्य साम्राज्य विभूतिः-தனக்குத்தானே அரசனாயிருக்கும் தன்மை (தனக்கு மேலாக எவரும் இல்லாதிருக்கும் தன்மை) உத்தமமான ராஜத்தன்மை (எல்லாவற்றையும் ஆளக்கூடிய தன்மை) ஆகிய வைபவமானது प्राप्ता - அடையப்பட்டுவிட்டது. महात्मने - மஹாத்மாவாய் श्रीगुरवे எல்லா ஸம்பத்தும் பொருந்திய குருவாய் இருக்கும் ते-தங்களுக்கு नमः-நமஸ்காரம். नमः-(என்) நமஸ்காரம் अस्तु-இருக்கட்டும். पुनः-மறுபடியும் மறுபடியும் नमः-நமஸ்காரம் अस्तु-இருக்கட்டும். (519)

महास्वप्ने मायाकृतजनिजरामृत्युगहने
भ्रमन्तं क्लिश्यन्तं बहुलतरतापैरनुकलम् ।
अहंकारव्याघ्रव्यथितमिममत्यन्तकृपया
प्रबोध्य प्रस्वापात्परमवितवान्मामसि गुरो ॥ ५२० ॥

महास्वप्ने-(அவித்தையாகிற) பெரிய ஸ்வப்னத்தில் मायाकृत - மாயையினால் ஏற்படுத்தப்பட்ட जनि - பிறப்பு

जरा-மூப்பு मृत्यु-இறப்பு ஆகிய गहने-அடர்ந்த காட்டில் भ्रमन्तं-அலைகிறவனாய் बहुलतरतापैः-மிகவும் அதிகமான தாபங்களினால் अनुकलं-ஒவ்வொரு க்ஷணமும் क्लिश्यन्तं-துன்பமடைகிறவனாய் अहंकार व्याघ्रव्यथितं-(நான் என்று எண்ணுவதாகிய) அஹங்காரம் என்ற வேங்கையினால் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த इमं-இந்த मां-என்னை गुरो-ஹே குரோ! (தாங்கள்) अत्यन्त कृपया-எல்லை மீறின கருணையினால் प्रस्वापात्-நல்ல தூக்கத்திலிருந்து प्रबोध्य-நன்கு எழுப்பி விழிப்பு வரும்படிச்செய்து परं-நன்றாக अवितवान् ரக்ஷித்துக் கொடுத்தவராக असि-இருக்கிறீர்கள்.

नमस्तस्मै सदेकस्मै नमश्चिन्महसे मुहुः ।
यदेतद्विश्वरूपेण राजते गुरुराज ते ॥ ५२१ ॥

सत् एकस्मै-எப்பொழுதும் இருப்பதாயும் ஒன்றாகவே இருப்பதுமாகிய तस्मै-அந்த (தங்களுக்கு) नमः-நமஸ்காரம். यत्-எது एतत् विश्व रूपेण இந்த உலகம் என்ற ரூபத்துடன் राजते-பிரகாசிக்கிறதோ (அந்த) चित् महसे-ஞானமாகிற தேஜஸையுடைய ते-தங்களுக்கு गुरुराज-ஹே குருராஜனே! मुहुः-அடிக்கடி नमः-நமஸ்காரம்.

## 42. ஜீவன்முக்திநிலை

(அ) இவ்விதம் சிஷ்யன் சொன்னதைக்கேட்டு, தான் உபதேசித்த தத்வத்தை சிஷ்யன் அனுபவத்திற்குக் கொண்டு வந்திருப்பதைப் பார்த்து, குருவும் மிகவும் ஸந்தோஷமடைந்து மேலால் சில உபதேச வாக்கியங்களைச் சொல்லி விசேஷமாக அனுக்ரஹிக்கிறார் —

इति नतमवलोक्य शिष्यवर्यं समधिगतात्मसुखं प्रबुद्धतत्त्वम् ।
प्रमुदितहृदयः स देशिकेन्द्रः पुनरिदमाह वचः परं महात्मा ।५२२॥

इति-இவ்விதம் சொல்லி नतं-நமஸ்கரித்த शिष्यवर्यं-உத்தமமான சிஷ்யன் प्रबुद्ध तत्त्वं-நன்கு தத்வத்தை



அறிந்தவனாக समधिगत आत्म सुखं-நன்கு ஸாக்ஷாத்காரம் செய்யப்பட்ட ஆத்ம ஆனந்தமுள்ளவனாக (இருக்கிறான் என்பதை) अवलोक्य-பார்த்து सः-அந்த महात्मा-மஹாத்மாவான देशिकेन्द्रः குரு சிரேஷ்டர் प्रमुदित हृदयः-மிகவும் ஸந்தோஷமடைந்த ஹ்ருதயமுள்ளவராய் पुनः-மறுபடியும் इदं-இந்த परं-உத்தமமான वचः-வார்த்தையை आह-சொன்னார். (522)

ब्रह्मप्रत्ययसंततिर्जगदतो ब्रह्मैव सत्सर्वतः
पश्याध्यात्मदृशा प्रशान्तमनसा सर्वास्ववस्थास्वपि ।
रूपादन्यदवेक्षितुं किमभितश्चक्षुष्मतां विद्यते
तद्वद्ब्रह्मविदः सतः किमपरं बुद्धेर्विहारास्पदम् । ५२३ ॥

जगत्-உலகம் என்பது ब्रह्म प्रत्यय सन्ततिः-பிரஹ்மத்தை விஷயீகரிக்கும் அறிவின் தொடர்ச்சி (தான்). अतः-ஆகையினால் सर्वतः-எங்கேயும் सर्वासु-எல்லா अवस्थासु நிலைகளிலும் अपि-கூட प्रशान्त मनसा-(சித்தவிருத்திகளெல்லாம்) நன்கு அடங்கின மனஸுடன் अध्यात्म दृशा-ஆத்ம விஷயமான பார்வையினால் ब्रह्म एव-பிரஹ்மம் தான் सत्-(என்றைக்கும் எங்கும் எல்லாவற்றிலும்) இருக்கும் வஸ்து என்று पश्य-பார் (அனுபவி). चक्षुष्मतां-நன்கு கண் உள்ளவர்களுக்கு अवेक्षितुं-பார்ப்பதற்கு रूपात्-ரூபத்தைத்தவிர अन्यत्-வேறு किं-எது अभितः-நாலா பக்கத்திலும் विद्यते-இருக்கமுடியும்? तद्वत्-அதைப் போலவே ब्रह्मविदः-பிரஹ்மத்தை அறிந்தவருடைய बुद्धेः புத்திக்கு विहार आस्पदं-வியவஹரிப்பதற்கு (செல்லுவதற்கு) விஷயம் सतः-ஸத்தாகிய பிரஹ்மத்தைத்தவிர अपरं வேறு किं எது? (523)

(அ) பிரஹ்மவித்தினுடைய புத்தி வேறு விஷயத்தில் செல்லுவதற்கு நிமித்தமேயில்லையென்பதையும் காட்டுகிறார் :—

कस्तां परानन्दरसानुभूतिं उत्सृज्य शून्येषु रमेत विद्वान् ।
चन्द्रे महाह्लादिनि दीप्यमाने चित्रेन्दुमालोकयितुं क इच्छेत् ॥ ५२४ ॥

तां-அந்த पर आनन्द रस अनुभूतिं-உத்தமமான ஆனந்தத்தின் ரஸத்தை அனுபவிப்பதை उत्सृज्य-விட்டு விட்டு विद्वान्-அறிவாளியான कः-எவன் शून्येषु-எவ்வித பிரயோஜனமுமற்ற பதார்த்தங்களில் रमेत-ரமிப்பான்? महाह्लादिनि-வெகு ஸந்தோஷத்தைக் கொடுக்கக் கூடிய चन्द्रे-சந்திரன் दीप्यमाने-நன்கு பிரகாசித்துக்கொண்டிருக்கும்போது चित्र इन्दुं-சித்திரத்தில் காணும் சந்திரனை आलोकयितुं-பார்ப்பதற்கு कः-எவன் தான் इच्छेत्-விரும்புவான்? (524)

असत्पदार्थानुभवेन किञ्चित् न ह्यस्ति तृप्तिः न च दुःखहानिः ।
तदद्वयानन्दरसानुभूत्या तृप्तः सुखं तिष्ठ सदात्मनिष्ठया ॥ ५२५ ॥

असत्-(வாஸ்தவமில்லாத அல்லது) ஸத்தான பிரஹ்மத்தை விட்டு வேறுபட்டதான पदार्थ-பதார்த்தத்தின் अनुभवेन-அனுபவத்தால் किञ्चित्-கொஞ்சமேனும் तृप्तिः-போதுமென்கிற திருப்தி न अस्ति-கிடையாது என்பது हि-பிரஸித்தம் दुःख हानिः च-துக்கத்திற்கு நாசமும் न-ஏற்படாது. तत् ஆகையினால் अद्वय आनन्द रस अनुभूत्या-இரண்டற்ற ஆனந்த ரஸத்தின் அனுபவத்தினால் तृप्तः-திருப்தியடைந்தவனாக सत् आत्म निष्ठया-ஸத்தாகிய ஆத்மாவிடத்திலேயே நிலைத்திருந்து கொண்டு (அல்லது सदा-எப்பொழுதும் आत्मनिष्ठया-ஆத்ம நிஷ்டையுடன்) सुखं-ஆனந்தமாக तिष्ठ-இருந்துவா.

स्वमेव सर्वतः पश्यन् मन्यमानः स्वं अद्वयम् ।
स्वानन्दं अनुभुञ्जानः कालं नय महामते ॥ ५२६ ॥

महामते-ஹே உத்தமமான புத்தியுள்ளவனே सर्वतः-எல்லா பக்கத்திலும் (எல்லாவற்றிலும்) स्वं एव-தன்னையே (ஆத்ம ஸ்வரூபத்தையே) पश्यन्-பார்த்துக் கொண்டு स्वं-தன்னை अद्वयं-இரண்டாவதற்றதாக मन्यमानः-அறிந்துகொண்டு स्व आनन्दं-தன் ஸ்வரூப ஆனந்தத்தை अनुभुञ्जानः-இடைவிடாது அனுபவித்துக்கொண்டு कालं-வாழ்நாளை नय-நடத்து. (526)



अखण्डबोधात्मनि निर्विकल्पे विकल्पनं व्योम्नि पुरः प्रकल्पनम् ।
तदद्वयानन्दमयात्मना सदा शान्तिं परामेत्य भजस्व मौनम् ॥ ५२७ ॥

अखण्ड बोध आत्मनि எல்லையற்ற ஞான ஸ்வரூபமாய் निर्विकल्पे-எவ்வித கல்பனையுமற்றதாயுள்ளதில் (ஆத்மாவிடத்தில்) विकल्पनं-பலவிதமாய் கல்பனை செய்வது व्योम्नि ஆகாசத்தில் पुरः-நகரத்தை प्रकल्पनं-கல்பனை செய்வது (போலத்தான்) तत्-ஆகையினால் अद्वय आनन्द मयात्मना-இரண்டற்ற ஆனந்த மயமான ஆத்ம ஸ்வரூபமாக (இருந்துகொண்டு) सदा-எப்பொழுதும் परां-உத்தமமான शान्तिं சாந்தியை एत्य-அடைந்து मौनं-மௌனத்தை भजस्व-கைக்கொள். (527)

(அ) முன் சுலோகத்தில் கூறிய மௌனத்தை விளக்குகிறார்:—

तूष्णीमवस्था परमोपशान्तिः बुद्धेरसत्कल्पविकल्पहेतोः ।
ब्रह्मात्मनो ब्रह्मविदो महात्मनो यत्राद्वयानन्दसुखं निरन्तरम् ॥ ५२८ ॥

असत्कल्पविकल्पहेतोः-அஸத்போலவேயுள்ள விகல்பங்களுக்கு காரணமான बुद्धेः-புத்திக்கு परमा-உத்தமமான उपशान्तिः-உபசாந்தி तूष्णीमवस्था-மௌனநிலை. यत्र-எந்த மௌனநிலையில் ब्रह्मविदः-பிரஹ்மத்தையறிந்த ब्रह्मात्मनः-பிரஹ்மஸ்வரூபமாயிருக்கிற महात्मनः-மஹாத்மாவிற்கு निरन्तरं-இடைவெளி இல்லாமல் अद्वयानन्दसुखम्-இரண்டற்ற ஆனந்தானுபவத்தின் ஸுகம் (இருக்குமோ).

முயல் கொம்பு, மலடிமகன் முதலியவை அஸத் வஸ்துக்கள் இவைகளுக்கு தோற்றமும் மறைவும் கிடையாது. பிரபஞ்சத்திற்கு தோற்றமும் மறைவும் உள்ளன. ஆகையால் பிரபஞ்சம் அஸத்து அல்ல அஸத் கல்பம். (528)

(அ) இங்கு வாக்கினுல் பேசாமலிருக்கும் மௌனத்தை சொல்லவில்லை. மனஸினுல் பிரஹ்மத்திற்கு வேருன எதையும் நினைக்காமலிருப்பது தான் நல்ல மௌனம். அதில்தான் பிரஹ்மானந்த அனுபவம் ஏற்படும் என்பதை விளக்குகிருர்:—

नास्ति निर्वासनात् मौनात् परं सुखकृदुत्तमम् ।
विज्ञातात्मस्वरूपस्य स्वानन्दरसपायिनः ॥ ५२९ ॥

विज्ञात आत्म स्वरूपस्य – ஆத்மாவின் ஸ்வரூபத்தை நன்கு அறிந்தவராய் स्व आनन्द रस पायिनः – தன் ஸ்வரூப ஆனந்தத்தின் ரஸத்தை பருகிக்கொண்டிருப்பவருக்கு निर्वासनात् – எவ்வித வாசனையுமற்ற मौनात् – மௌனத்தை விட परं – வேறு (மேலான) उत्तमं – உத்தமமான सुखकृत् – ஸுகத்தைக்கொடுப்பது न अस्ति – எதுவும் கிடையாது.

गच्छन् तिष्ठन् उपविशन् शयानो वाऽन्यथाऽपि वा ।
यथेच्छया वसेत् विद्वान् आत्मारामः सदा मुनिः ॥ ५३० ॥

गच्छन् – போய்கொண்டும் तिष्ठन् – நின்றுகொண்டும் उपविशन् – உட்கார்ந்து கொண்டும் शयानो वा – படுத்துக் கொண்டாலும் अन्यथा अपि वा – வேறு விதத்தில் இருந்தாலும் विद्वान् – ஞானியானவன் आत्म आरामः – ஆத்மாவிடத்திலேயே ரமித்தவனாக सदा – எப்பொழுதும் मुनिः – முனியாக (மௌனத்துடனிருந்து கொண்டு) यथेच्छया – இஷ்டப்படி वसेत् – இருந்துவரலாம். (530)

(அ) ஜபம் பூஜை முதலானவைகளுக்கு ஏற்பட்டிருக்கும் நியமங்கள் யாதொன்றும் ஆத்ம ஸாக்ஷாத்கார விஷயத்தில் கிடையாது என்பதைக் குறிப்பிடுகிருர் மூன்று சுலோகங்களால்:—

न देशकालासनदिग्यमादि लक्ष्याद्यपेक्षा प्रतिबद्धवृत्तेः ।
संसिद्धतत्त्वस्य महात्मनोऽस्ति स्ववेदने का नियमाद्यवस्था ॥ ५३१ ॥

प्रतिबद्ध वृत्तेः – எல்லா மனோவிருத்திகளையும் நன்கு தடுத்து संसिद्ध तत्त्वस्य – நன்கு அடைந்துள்ள தத்வ



ஞானத்தையுடைய महात्मनः – மஹாத்மாவிற்கு देश काल आसन दिग्यमादि लक्ष्यादि अपेक्षा – இடம் நேரம் ஆஸனம் திக் வியவஸ்தை யமம் முதலியது குறி முதலியதின் அபேக்ஷை न – கிடையாது. स्व वेदने – தன்னைத்தான் அறிந்துகொள்வதில் नियमादि अवस्था – நியமம் முதலான நிலை का – எது अस्ति – இருக்கமுடியும்? (531)

घटोऽयमिति विज्ञातुं नियमः को न्वपेक्ष्यते ।
विना प्रमाणसुष्ठुत्वं यस्मिन् सति पदार्थधीः ॥ ५३२ ॥

यस्मिन् – எது सति – இருந்ததேயானல் पदार्थधीः – பதார்த்தத்தின் ஞானம் (ஏற்பட்டுவிடுமோ அந்த) प्रमाण सुष्ठुत्वं – (ஞானஸாதனமான) பிரமாணம் நன்ருயிருப்பதை विना – தவிர (முன்னுல் வெளிச்சமும் தனக்கு கண்ணும் இருந்ததேயானுல்) अयं – இது घटः – குடம் इति – என்று विज्ञातुं – அறிந்துகொள்வதற்கு को नु – என்னதான் नियमः – நியமம் अपेक्ष्यते – தேவைப்படுகிறது? (532)

अयमात्मा नित्यसिद्धः प्रमाणे सति भासते ।
न देशं नापि वा कालं न शुद्धिं वाप्यपेक्षते ॥ ५३३ ॥

अयं – இந்த आत्मा – ஆத்மா नित्य सिद्धः – எப்பொழுதும் ஸித்தமாயிருப்பவர். प्रमाणे – பிரமாணம் (வாஸனையற்று சுத்தமான அந்தக்கரணம்) सति – இருக்குமேயானல் भासते – (தானே) பிரகாசிக்கும் देशं இடத்தை न – அபேக்ஷிக்காது कालं वा अपि – காலத்தையும் न – அபேக்ஷிக்காது. शुद्धिं वा अपि – சுத்தியையும் கூட न – अपेक्षते – அபேக்ஷிக்காது (வெளிசுத்தியை என்று தாத்பர்யம்). (533)

(அ) 531-வது சுலோகத்தில் தன்னைத்தான் அறிய நியமம் எதற்கு என்று சொன்னதை விளக்கிக்காட்டுகிருர்:—

देवदत्तोऽहमित्येतद्विज्ञानं निरपेक्षकम् ।
तद्वद्ब्रह्मविदोऽप्यस्य ब्रह्माहमिति वेदनम् ॥ ५३४ ॥

